## 6 மருதம்

அரிபெய் சிலம்பி னாம்பலந் தொடலை
யரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
யிழையணி பணைத்தோ ளையை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் டித்தன்
5 பிண்ட நெல்லி னுறந்தை யாங்கட்
கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்
குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்
10 கேந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே யின்றுவந்
தாக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
15 முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
20 பல்வேன் மத்தி கழாஅ ரன்னவெம்
மிளமை சென்று தவத்தொல் லஃதே [கே.
யினிமையெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்

என்பது: பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி கூறியது.

— பரணர்.

வரி

2 வளைப்பொலிந்த - வளையாற் பொலிந்த.

3 ஐயை - ஒரு கற்புடைய மகள்; இவள் தந்தை என்றது இவள் கற்புடைமை நோக்கி.

4 மழைவளம் போலத்தரும் பெரிய வண்மை; 3 தந்தை யாகிய தித்தன். 6 கழை - ஓடக்கோல். 7 குழை முதலான மாட்சிமையை யுடைய இழை; நீ விரும் பின பரத்தை. 8 வேழமாகிய தெப்பம்.

9 யானை எனவே பிடியும் அடங்கிற்று. இன் - உவமம்; ஆங்கு - அவ்விடத்து. 10 குழைய - பொலிவழிய. 13 கற்பின் தாய் எனக. 14 மாயம் - வஞ்சனை; தம் மிடத்திற் சாய்ந்து; பயிற்றி - பலகாலிற் சொல்லி.

15 முதுமை எள்ளல் - முதுமை எள்ளாதே கொள். அஃது அமைகும் - அம்முதுமைக்கு நாங்கள் பொருந்துவேம்; அன்றியும் நீ செய்கின்றதற்கு அமைவேம் என்றுமாம்; 'புதல்வன்தா யென்றதுகொண்டு முதுமை எள்ளல்' என்றாள். இல் - விழைவு.

16 சுடர் - நெருப்பு; 19 அரில் - பிணக்கம்.

20 கழாஅர் - ஓர் ஊர்.

21 இளமை கழிந்து மிகப் பழைது.

22 நின் பொய்ம்மொழி எங்களுக்கு இனிமை செய்வது எவனென்றாள்.

இதன் உள்ளுறை: நீர்நாய் வாளைக்குக் காவலாகிய வள்ளை யினது நிலையை நெகிழ்த்து, இழிந்ததாகிய வாளையை நுகர்ந்து, பிரம்பாகிய முதிய தூற்றிலே தங்கினாற்போல, நீயும் பரத்தை யர்க்குக் காவலாகிய தாய்முதலாயினாரது நிலைமையை நெகிழ்த் துக், குலமகளிரல்லாத விலைமகளிரை நுகர்ந்து, முன்பு நமக் குண்டாகிய எங்கள் பழைமையைப் பற்ற ஒரு பயன் கருதாது தங்குதன் மாத்திரத்திற்கு எம்மில்லில் வந்தீரென்றாளாம்.

## 7. பாலை

முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
யலமர லாயமொ டியாங்கணும் படாஅன்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
5 காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்

பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென
ஒண்சுடர் நல்லி லருங்கடி நீவித்
தன்சிதை வறித லஞ்சி யின்சிலை
10 யேறுடை யினத்த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையிற் போகி யீங்கோர்
தொலைவில் வெள்வேல் விடலையொ டென்மக
ளிச்சுரம் படர்தந் தோளே யாயிடை
யத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
15 பிற்படு பூசலின் வழிவழி யோடி
மெய்த்தலைப் படுதல் செல்லே னித்தலை
நின்னொடு வினவல் கேளாய் பொன்னொடு
புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்கு
20 லாய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉங்
கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே.

என்பது : மகட்போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப்பின் சென்று நவ்விப் பிணைக்கண்டு சொல்லியது.

— கயமனார்.

வரி

1 முகம் செய்தல் - நிரம்புதல் ; இலங்குதல் - விழுந்தெழுந்து ஒளிவிடுதல்.

2 சான்ற - அமைந்தன ; பன்மை கூறிற்று - முடிப்பன்மை நோக்கி ; தண்டலையை உடையாக வுடையை.

3 யாங்கணும் - எவ்விடத்தும் ; படால் - படாதே கொள்.

4 மூப்பு - பழைமை. முதுபதி - பெயர் ; தாக்கணங்குடைய- வருத்தும் தெய்வமுடைய.

5 பூண்டி - பூண்டாய் ; சின் - அசை ; இவையெல்லாம் கூறி, ஆதலால் காவலும் பூண்டாய் ; இனி வாயிலிடத்துப் போகாதேகொள், 6 அறிவுடைய இளமகளே ! பேதை யல்லை, 7 பெதும்பைப் பருவத்துப் புறத்து ஒதுங்கினை என - புறப்படாத பருவத்தேபோனாய் எனச் சொல்ல ; அது கேட்டு.

8 சுடர் - விளக்கு. 9 தன் சிதைவு - தான் செய்த குற்றம்; என்றது - களவொழுக்கத்தை; அறிதல் அஞ்சி - யான் அறிகின்றேனென்று அஞ்சி; இன்சிலை-இனிய சிலைப்பு; உபகாரம் கூறிற்று.

10 நாறு உயிர் - தோன்றுகின்ற உயிர்ப்பு; என்றது இளமை யான் அதன் இளைப்புக்கூறியவாறு; நவ்வி, விளி. நவ்வி 13 படர்தந்தோள் என்க. நவ்வி 17 நின்னொடு வினவுவல் என்க.

12 தொலைவு - தோல்வி; ஏகாரம் - ஈற்றசை; 13 படர் தந்தோள் ஒரு சொல்; ஆயிடை - அப்பொழுது.

14 அருஞ்சுரத்துக் கள்ளர்; ஆ தொழு அறுத்தென - ஆவைத் தொழுவினின்றும் நேராகக் கொண்டுவந்தார்களென்று.

15 பிற்படு பூசல் - பிற்படச்சென்று மீட்கும் காந்தையார் பூசல்; இன் - பொரு. வழிவழி ஓடி - பின்றேடி.

16 மெய்த்தலைப்படுதல் செய்யேன் - அவள் மேனியை அணுகு தல் செய்யப்பெற்றிலேன். இத்தலை - இவ்விடத்து. 17 வினவல்கேள் - நின்னொடு வினவுதற்குக் காரணம் கேள். 18 பொன்னுற் செய்த புலிப்பல்லோடு கோத்த தனிமணித்தாலி. 19 ஒலித்தல் - தழைத்தல்; குழைச் செயலை - அசோகந்தளிர்; உடை - தழையுடை. அல்குல் 22 மகள் என்க. 20 கலை - முசு. 21 துய் - தலையில் ஆர்க்கு.

22 அவள் கானக மகளாதலால் நினக்கும் ஓர் அடைவுண்டு; இனி எங்ஙனம் செய்வேனென்று கேட்கிறாள் செவிலி.

பி - ம். 11. பிணையிணொதுங்கி. 16. செய்யேன்

## 8. குறிஞ்சி

ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த
குரும்பி வல்சிப் பெருங்கை யேற்றை
தூங்குதோற் றுதிய வள்ளுகிர் கதுவலிற்
பாம்புமத னழியும் பானாட் கங்குலு
5 மரிய வல்லம னிகுளை பெரிய

கேழ லட்ட பேழ்வா யேற்றை
பலாவம லடுக்கம் புலா வீர்க்குங்
கழைநரல் சிலம்பி னுங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் ணசும்பிற்
10 படுகடுங் களிற்றின் வருத்தஞ் சொலியப்
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பு மவர்நாட்
டெண்ணரும் பிறங்கன் மானதர் மயங்காது
மின்னுவிடச் சிறிய வொதுங்கி மென்மெலத்
15 துளிதலைத் தலைஇய மணியே ரைம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயி ரிச்சுர
மறிதலு மறிதிரோ வென்னுநர்ப் பெறினே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.

— பெருங்குன்றூர் கிழார்.

வரி

3 நான்ற தோல்வளையில் அடங்கின வலிய உகிராலே கதுவுதலின்; துதிய உகிர் - உறைபுக்க உகிர்.

4 பானாட் - பாதிநாளாகிய; இரவு. 6 ஏற்றை - புலியேறு. 9 அசும்பு - மலையின் நீர் அறாத குழி. 11 படி - படியாக; பூசல் - மரத்தோசை; 12 விடரகம் - மலைமுழை; இயம்பும் - ஆண்டுப்போய் ஒலிக்கும்.

13 பிறங்குகல் - பிறங்கல் என விகாரம்; வழியுயர்ச்சியுமாம்; ஒரு சொல்; மான் அதர் - மான்போம்வழி.

14 மின்னுவிட - மின்வழிவிட; சிறிய ஒதுங்கி - மெத்தென நடந்து; ஒதுங்க எனத்திரிக்க.

14 ஒதுங்க 5 அரியவல்ல என முன்னே கூட்டுக. ஒதுங்கிச் செல்ல எனச் சொல் லெச்சமுமாம். மென்மெல என்பது தொடங்கி வேறு பிரித்துரைக்க.

16 புதைய - மறைய ; வாரி - கோதி ; குரல் - மயிர்க் கொத்து.

17 வழி, செலவுகெட விலங்கிய சுரம் என்க. ..............

18 என்னுநரை - என்று சொல்லுவாரை ; பெறிற் 4 பாணுட்கங்குலும் 14 சேறற்கு 5 அரியவல்ல என்ற பொருளுரைக்க. 5 மன் - கழிவு ; சொல்லுவா ரில்லை என்றவாறு.

இப் பாட்டினுள் ஏற்றையினது வள்ளுகிர் கதுவலின் பாம்பு மதனழியும் என்ற இறைச்சிப் பொருள் :—ஏற்றையானது பாம்பை வருத்தவேண்டும் என்னும் கருத்தில்லையாயினும், அது தன் காரியஞ் செய்யவே வள்ளுகிர் படுதலாகிய அவ்வளவிற்குப் பாம்பு வலியழிந் தாற்போல, அவர் நம்மை வருத்தவேண்டுமென்னும் கருத்தில்லை யாயிருக்கவே, தமது காரியமாகிய களவின்பத்திலே ஒழுகவே, ஆறின்னுமை ஊறின்னுமை முதலாகிய இவ்வளவிற்கே நாம் வருந் தும்படியாய் விட்டது என்றவாறு.

'பெரிய கேழலட்ட' என்பது முதலாகப் 'புலரவீர்க்கும்' என்பதிறுதியாக நின்ற உள்ளுறைப் பொருள் :— புலியானது தான் நுகர்தற்பொருட்டுக் கேழலையட்டுப் பழ நாற்றத்தையுடைய பலாவ மலடுக்கம் புலர வீர்த்தாற்போல, அவரும் இன்பந் துய்த்தற் பொருட்டு வந்து நம்மைக்கூடி, அக் கூட்டத்தாலே புகழ்ச்சியை யுடைத்தாகிய நம் குடியை இகழ்ச்சியுடைத்தாம்படி பண்ணிஞர் என்றவாறு.

'வழையொடு வாழையோங்கிய' என்பது முதலாக 'விண் டோய் விடரகத் தியம்பும்' என்பதிறுதியாக நின்ற சொற்களின் உள்ளுறைப் பொருள் :—வாழை நுகர வந்த யானை அதன் அயலதா கிய அசும்பின் குழியிலே விழுந்ததாகப், பின்பு அக்குழியினின்றும் ஏறமாட்டாது வாழையாகிய உணவையும் இழந்துழிப், பிடி அது ஏறுதற்குப் படியாக மா முறிக்கின்ற ஓசை விண்டோய் விடரகத்து இயம்பிஞற்போல, அவரும் நமது நலம் நுகரவந்து களவொழுக்க மாகிய குழியிலே விழுந்து, இக்கள வொழுக்கமாகிய இதனைவிட்டு வரையவுமாட்டாது நமது காவலருமையால் இக்கள வொழுக்கினை நுகரவுமாட்டாது துயரப்படுகின்றுழி, அறத்தொடு நிலை முதலாகிய இவற்ருல் மகளிராகிய நாமே வரைய முயலும் வழி, அம் முயற்சி யானே ஊரெல்லாம் அறியும்படி பண்ணிஞர் என்றவாறு.

பி - ம் : 2. வள்ளுகிர்க்காலிற். 10. படிகடுங். 11. பிடி யடி. 15. மழையேரைம்பால்,

## 9. பாலை

கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின் *
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
வப்புறுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்படர் ரன்ன செங்குழை யகந்தோ
5 றிழுதி னன்ன தீம்புழற் றுய்வா
யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவி
னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
10 மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளி ரோக்கிய
தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபின் னொழியப் போகி யுரந்துரந்து
15 ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவி
னெம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா
ணோங்கிய நல்லி லொருசிறை நிலைஇப் †
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
20 கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
25 லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் ‡ பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே.

என்பது : வினைமுற்றிமீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

— கல்லாடனார்.

* புழுகின் ; பெஃகின். † நிலைஇய. ‡ றோணைசைஇ.

வரி

1 கொல்வினை - கொற்றொழில்; புழுகாகிய 3 அப்பென்றது மல்லிகை மொட்டை.

5 இன் - அல்வழிக்கண் வந்தது.

4 செப்பு அடர் - செப்புத் தகடு.

5 தூய்வாய் என்றதனைப் பெயர்ப்படுத்து ஆகுபெயராற் பூ என்க. வாயையுடையது, வாய் என்றாயிற்று. தூய்-பஞ்சு; தீம் பூ என்று சேரும்; புழல் - துளை.

6 உழுது காண்டல் - துளை தாள் நீக்கிக்காண்டல்; ஆர் - ஆர்க்கு. 7 ஆலிவானின் - வானின்று விழும் ஆலி போல; காலொடு - காலாற்; சிதறி.

8 கோடு - மேடு; இயவு - வழி; 11 கொடுநுண்ஓதி - வளைந்தபனிச்சை; ஒக்கிய - எடுத்த. 12 தூண்டுதல் - குத்துதல். 14 உரந்துரந்து - வலியாற் செலுத்தி. 16 துனைபரி - விரைந்து செல்லுங் குதிரை; தூரத்தல்- பின்னும் முடுக்குதல்.

16 துஞ்சாச் செலவினையுடைய 17 எம் என்க.

17-18 பன்மாணல்லில் - பலகட்டு மாட்சிமைப் பட்ட மாளிகை. 19 பாங்கர் - நல்ல பக்கம். 21 குறுகிக் கண்புதைத்து என்க; 22 பின்னகம் - பின்னின மயிர்; முறுக்கி முடித்த கொண்டை; 23 தோய்ந்தன்றுகொல் - தழுவிற்று கொல்.

பி - ம்: 18. ஞெங்குயர். (தேர்ப்பாகற்குச் சொல்லியது.)

## 10. நெய்தல்

வான்கடற் பரப்பிற் றாவற் கெதிரிய
மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த
முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்
புள்ளிறை கூரு மெல்லம் புலம்ப
5 நெய்த லுண்கண் பைதல கலுழப்

பிரித லெண்ணினை யாயி னன்று
மரிதுற் றனையாற் பெரும வுரிதினிற்
கொண்டாங்குப் பெயர்தல் வேண்டுங் கொண்டலொடு
குரூஉத்திரைப் புணரி யுடைதரு மெக்கர்ப்
10 பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமணை லடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி யன்னவிவ ணலனே.

என்பது : இரவுக்குறிவந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனை யெதிர்ப்பட்டுநின்று தோழி சொல்லியது.

— அம்மூவனார்.

வரி

1 தாவல் - துவலையை ; துவலையை யேற்ற 3 புன்னை.

2 மீன் - வானமீன் ; ஊழ்த்த - புறப்படவிட்ட 3 முடவு - முடத்தன்மை. 4 இறைகூரும் - தங்குதன் மிகும்.

5 பைதல கலுழ - வருத்தமுடையவாய் அழ.

7 அரிதுதுற்றனை - அரியதனைச் செலுத்துதலுற்றாய் ; உரிதினின் - இவளுக்கே உரித்தாக.

8 ஆங்கு - நின்னூரிடத்து ; கொண்டலொடு - கீழ் காற்றால்.

10 கொன்ற - அழிவு கோத்த.

12 பகுத்தல் - பலர்க்குங் கொடுத்தல்.

13 நலம் இவட்கு 7 உரித்தாகக் 8 கொண்டுபோகவேண்டு மென்றது, வரைந்துகொண்டு போகவேண்டும் என்ற வாறு ; அன்றாயின் இவள் இறந்துபடுமென்பது தோன் றக் கூறியவாறு.

புன்னையது கொம்பிலே புள்ளிறைகூரும் என்றது புள்ளுக்குப் புன்னை இருப்பிடமாயினாற்போல எங்களுக்கு ஆதாரமாகி நீ ஆயிற்றில்லை என்றவாறு.

'பழந்திமில் கொன்ற' என்பது முதலாகக் 'கொண்டி' என்பது ஈறாக நின்ற சொற்கு இறைச்சிப்பொருள் : பரதவர் தாம் அழிவு

கோத்த * திமிலானும் பண்ணின வலையானும் தமது தொழிலாகிய வேட்டைமேற் செல்லாது, தேடாமல்வந்த இழிந்த சுறுமீனை அகப்படுத்து, அதனை அழித்துக் கூறுவைத்து எல்லாரையும் அழைத்தாற்போல, நீயிரும் நமக்கு உறுதியாக ஆக்கிக்கொள்ளப் பட்ட நன்மைகளான் நமக்கு ஒழுக்கமாகிய நல்வழியின் ஒழுகாது, கண்டோ ரிகழ்ந்த களவொழுக்கிலே ஒழுகி, இக் களவினைப் பரப்பிப் பலரும் அலர் கூறும்படி பண்ணுகின்றீர் என்றவாறு.

பி - ம் : 5 பைதலுழப்ப. 7 மரிதுதுற்றனே. 9 குரூஉக்கிளை ; குழூஉத்திரை ; யடைதரு. 10 திமில்சென்ற.

## 11. பாலை

வான மூர்ந்த வயங்கொளி மண்டில
நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்
டிலையில மலர்ந்த முகையி லிலவங்
கலிகொ ளாய மலிபுதொகு பெடுத்த
5 வஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்துக ளாகிய பயந்தபு கான
மெம்மொடு கழிந்தன ராயிற் கம்மென
வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயிலிணா ரெக்கர்
10 மெய்புகு வன்ன கைகவர் முயக்க
மவரும் பெறுகுவர் மன்னே நயவர
நீர்வார் நிகர்மலர் கடுப்ப வோமறந்
தறுகுள நிறைக்குந போல வல்கலு
மழுதன் மேவல வாகிப்
15 பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே.

என்பது : தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகள் வேறுபாடுகண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

— ஔவையார்.

---

* சோர்ந்த என்றும் பாடம்.

வரி

2 சிவத்தல் - கோபித்தல். உருப்பு வெப்பம். 3 இலையில வாய்; 4 ஆயம் - மக்கள்தொகுதி. விருப்பமிக்கு. 5. சுடர் நெடுங்கொடி - விளக்கின் ஒழுங்கு; என்றது, கார்த்திகை விளக்கை. தோன்றி - தோன்ற. 7 கம்மென - விரைய; தேய வழக்கு. 9 படுசினை - பெரிய கொம்புகள்; எக்கரிடத்துக் 10 கைகவர் - கைவிரும்புகின்ற முயக்கினை 11 நயவரப் பெறுகுவர்.

12 நிகர் - ஒளி: ஓ மறந்து - ஓவுதன் மறந்து. 14 மெலிவான் அழுதல்; மேவலவாய் - பொருந்தாவாய்.

7 கொண்டு கழிந்தோராயிற் கம்மென 11 அவரும் பெறுகுவர் 15 கண்ணும்படும்: அது செய்கின்றிலர் என்றவாறு. மன் - கழிவு.

காரியவாய்பாடு சொல்லுதலால் ஆற்றுதல் பெற்றும்.

பி - ம்: 1. வயங்கொளிர். 3. டிலையின். 8. விரிந்தன்ன. 13. வைகலும்.

## 12. குறிஞ்சி

யாயே கண்ணினும் கடுங்கா தலளே
யெந்தையு, நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப
வெவனில குறுமக ளியங்குதி யென்னும்
யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி
5 னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே
யேனலங் காவல ராஅ தார்த்தொறுங்
கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோட் பலவின் பழுப்பயங் கொண்மார்
குறவ ரூன்றிய குரம்பை புதைய
10 வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலிசெத்து வெரீஇய புகர்முக வேழ
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரு

நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோருந் தான்வாழலளே.

என்பது : பகற்குறிவாராநின்ற தலைமகன் தோழியாற் செறிப் பறிவுறுக்கப் பட்டு இரவுக்குறிவாரா வரைவல் என்றாற்கு அதுவும் மறுத்து வரைவுகடாயது இப்பாட்டினுள் நீவரின் என்றது வரவு மறுத்தது. சிறடி சிவப்ப என்றது செறிப்பறிவுறீஇயது.

— * கபிலர்.

வரி

3 எவனியங்குதி - என் செய்யப் போகின்றாய்? இல - ஏடீ, குறுமகள், விளி ; 4 துவரா - உவரா ; நட்பின் - நட் பினால். 5 புள்ளின் - புட்போல ; யாங்கள் ஒருயிரம் ; யாங்கணட்டவிடத்து ஓருயிரம் என்றுமாம்.

8 கோள் காய் ; பழு - பழுப்பு ; தொழிற்பெயர் ; கனியின் பயன் என்றவாறு.

9 ஊன்றிய - நாட்டிய ; தோற்றம் - தோற்றத்தை ; 12 கழை பட - மூங்கில் காலிலே மடிய ; 14 ஓரும் - அசை.

13 வரின் 14 மெல்லியல் வாழாள் என்க. 10 தேசம் - தேன்.

யானையானது வெருவத்தகாத குரம்பையை வெருவத்தக்க புலியென்று கருதித் தனக் குணவாகிய கழை முறியப் பாய்ந்தாற் போல வெருவத்தகாத எங்கள் தமரை வெருவி வரைய முயலாது திரியவே, நாங்களே இறந்துபடும்படியாயிற்று என்றவாறு.

பி - ம் : 2. பெறு அச்சிறடி. 8. பழுஉப்பயன். 10 வேங்கை பாய 14. லொருநாள்.

## 13. பாலை

தன்கடற் பிறந்த முத்தி னாரமு
முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத்
தெறலரு மரபிற் கடவுட் பேணிக்
குறவர் தந்த சந்தி னாரமு
5 மிருபே ராரமு மெழில்பெற வணியுந்
திருவீழ் மார்பிற் றென்னவன் மறவன்

---

* தொல்கபிலர் என்றும் பாடம்.

குழியிற் கொண்ட மராஅ யானை
மொழியி னுணர்த்துஞ் சிறுவரை யல்லது
வரைநிலை யின்றி யிரவலர்க் கீயும்
10 வள்வா யம்பிற் கோடைப் பொருநன்
பண்ணி தைஇய பயங்கெழு வேள்வியின்
விழுமிது நிகழ்வ தாயினுந் தெற்கேர்பு
கழிமழை பொழிந்த பொழுதுகொ ளமையத்துச்
சாய லின்றுணை யிவட்பிரிந் துறைபி
15 ஞெயின் ருக செய்பொருள் வயிற்பட
மாசி றூமடி விரிந்த சேக்கைக்
கவவின் புரூமைக் கழிக வளவய
லழனுதி யன்ன தோகை யீன்ற
கழனி நெல்லீன் கவைமுத லலங்க
20 னிரம்பகன் செறுவின் வரம்பணையாத் துயல்வரப்
புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை
யிலங்குபூங் கரும்பி னேர்கழை யிருந்த
வெண்குருகு நரல வீசு
நுண்பஃ றுவலைய தண்பனி நாளே.

என்பது : பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செல வழுங்குவித்தது உடம்பட்டதூஉமாம்.

— பெருந்தலைச் சாத்தனுர்.

வரி

1 முத்தின் - இன் அல்வழிச் சாரியை ; முத்தாரம்; 2 துப்பினை யுடையதான என்க. 2 பிறராற் றெறுதலரிய கடவுள் ; பேணி - பூசை பண்ணி ; 6 மறவன் - படைத் தலைவன் ; மறவனுகிய 11 பண்ணி என்க.

7 மராஅ - மருவாத ; 8 மொழியினுணர்த்தும் - மொழியினுற் றெழிலறிவிக்கும் ; சிறுவரை யல்லது - சிறிது பொழுதல்லது ; 9 வரைநிலை யின்றி - தனக்கென வரைந்து நிறுத்தும் நிலைமையின்றி ; 10 கோடை - கோட்டூர். 11 தைஇய - செய்த ; வேள்வி - களவேள்வி ; 12 விழுமிது நிகழ்வதாயினும் - அப் பொருளான் அறமுதலாயின விழுமிய நடக்குமாயினும்.

13. பொழுது - காலத்தன்மை ; அமையம் - கூதிர். இக்காலத்து 14. இன் துணையாகிய இவள் என்று தேர்ந்து, இவளைத் 24 தண்பனி நாளிடத்துப் 14. பிரிந்து உறைவராயின் என்று பொருள் உரைக்க. 14 சாயலிவள் என்றது, கூதிர்க்குத் துணையாகிய இவளென்று உதவிகூறி, அதற்கு அனந்தரமாகிய 24 பனிக்காலத்துப் பிரியாமற் கூறினாள். 24. பனிநாள் 17 அகத்தீடு இன்புறுமற் கழிவதாக ; 15. நீ தேடுகின்ற பொருட்கும் ஓர் குறை பிறவாதொழிக வென்றாள், நோயுறுமென்று நினைத்து அதுபடா தொழிக என்றாள். 17. இன்புறப்ப என்னும் பாடத்திற்குக் குறிப்புரையாக்கிப் பொருளுரைக்க. அதுவும் இன்புறுமைக் கழிக என்னும் பொருளைக் கொள்ளும். 18. அழல் நுதி - அழற்கோடு; தேசுகை - நெற்றேடு. கடைகூர்த்துச் சிவந்திருத்தலான் அவ்வாறு கூறினார். 19. அலங்கல் - ஆகுபெயரான் அசைகின்ற கதிர்; 20. நிரம்பகன் செறு - ஒத்து அகன்ற செறு. துயல்வர - புடை பெயர; பெயர வந்தலைக்கும் 21. வாடை. 22. ஏர் கழை - ஓங்கின கழை ; 23. நரல - கதற; 19. செய்ந்நெல் லீன்ற முதலினொருகதிர். தோகைக்கதிராவது, அதனை முற்பட ஈனுமாதலின், அதனை ஈன்ற செய்ந்நெல் என்பாருமுளர்.

பி - ம். 1. தண்கடல். 2. முறைதிறை. 3. தொல்லரு. 13. மொழிந்த.

## 14. முல்லை.

அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாஞ் செம்ம லாஅய்ப் பலவுட
னீயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய
5 வங்காட் டாரிடை மடப்பிணை தழீஇத்
திரிமருப் பிரலை புல்லருந் துகள
முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்
குறும்பொறை மருங்கி னறும்பூ வயரப்
பதவுமேய லருந்து மதவுநடை நல்லான்
10 வீங்குமாண் செருத்த றீம்பால் பிலிற்றக்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு

மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்காகு வங்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்
15 செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்க்கிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே
விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுகக்
கல்பொரு திரங்கும் பல்லார் நேமிக்
20 கார்மழை முழக்கிசை கடுக்கு
முனைநல் லூரன் புனைநெடுந் தேரே.

என்பது: பாணன் தனக்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

—ஒக்கூர் மாசாத்தனார்.

வரி

2. தாய் - தாவ; 9. மேயலருந்து - மேயலாக ஆர்ந்த. மேயல்-உணவு. மதவு - வலி; 10. செருத்தல் - ஆமடி; பிலிற்ற - புறப்படவிட; 12. மாலையும் என்ற உம்மை சிறப்பு; காலை - இக்காலத்து. 14. சொல்லல் செல்லேன் என்றான், கூறுதலருமையான்; என்றது, தலைவி ஆற்றாமை கூறிய வாறு. 16. பையுண்மெய் - நோய்மெய்; 19. நேமித் 21 தேர் என்க. 3 - 4 பவளமொடு மிடைந்தாலொத்த குன்றமென்க. 4. ஒத்த 7. புலம் என்றுமாம். 4. குன்றங் கவைஇய என்பதே தொடங்கி 7. முல்லையின் புலத்திற்கு அடை.

பி - ம். 3. பரப்ப. 6. புல்லருந் துகளு 8. மருங்கினிறும்பூ துயரப். 10 பிலிற்றி.

## 15. பாலை

எம்வெங் காம மியைவ தாயின்
மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாக லார்கைப் பறைக்கட் பீலித்

5 தோகைக் காவிற் றுளுநாட் டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மன் மூதூ
ரறிந்த மாக்கட் டாகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
10 சூழி யானைச் சுடர்ப்பூ ணன்னன்
பாழி யன்ன கடியுடை வியனகர்ச்
செறிந்த காப்பிகந் தவனொடு போகி
யத்த விருப்பை யார்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகணிலம் பரக்கக்
15 கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை யெண்கின் வயநிரை பரக்கு
மின்றுணைப் படர்ந்த கொள்கையொ டொராங்குக்
குன்ற வேயிற் றிரண்டவென்
மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே.

—மாமூலனார்.

என்பது: மகட்போக்கிய தாய் சொல்லியது.

வரி

1. எம் வெம் காமம் இயைவதாயின் 8. அறிந்த மாக்களை யுடைத்தாக என்க. யாம் வேண்டின காரியம் முடியுமாயின் அப்படியாக என்றாள். 2. கோசர் 4. துளுநாடு. 3. கொம்மை - பெருமை. அம் - சாரியை; குடுமி - தலையில் ஆர்க்கு. குடுமியை யுடையது குடுமி; காயாகிய குடுமி; அது விளைந்த பாகல் என்றது பாகற் பழத்தை; விளைதல் - முற்றுதல். 4. ஆர்கைத் 5. தோகை என்க. 4. பறைக்கண் - வட்டமான கண்; 8. அறிந்த மாக்கள் - முகமறிந்த மாக்கள்; 7. மூதூர் 8. உடைத்தாக என்க. பாழி - ஊர்; நகர் - மாளிகை. 14. வாய - வாயவாய்; துகள் நிலத்திலே பரக்க. 19. அஞ்ஞை - அம்மை; 9. புலம்பப் 12. போகிச் 19. சென்ற வழி என்று சேர்க்க. 10. சூழி - முகபடாம்; பட்டயானை.

இப் பாட்டினுள் இறைச்சிப் பொருள்: கரடி ஆர்கழல் புதுப்பூவை நுகர்ந்த வாயையுடையவாய், அதிலே நிறைந்து கொன்றைப் பழத்தைக்

கோதிப்போனாற்போல, அவளுந் தலைவனோடு கூடிய இன்பத்திலே நிறைந்த செருக்கினாலே கூடிவளர்ந்த தோழிமாரையும், பெற்று வளர்த்த என்னையும் புறக்கணித்துப் போனாள் என்றவாறு.

பி - ம். 12. காப்பிறந். 14. பரிப்ப. 19. மஞ்ஞை.

## 16. மருதம்

* நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதி னல்லி யயலிதழ் புரையு
மாசி லங்கை மணிமரு ளவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
5 யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே
கூரெயிற் றரிவை குறுகினள் யாவருங்
காணுந ரின்மையிற் செத்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை
10 வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டன ளின்றோட் கண்டுநிலைச் செல்லேன்
மாசில் குறுமக ளெவன்பே துற்றனை
நீயுந் தாயை யிவற்கென யான்றற்
கரைய வந்து விரைவனென் கவைஇக்

* மனையறத்திற் குரியளாக வரைந்துகொண்ட காமக்கிழத்தி, தலைவி புதல்வன் மனைப்புறத்து விளையாடுகின்றவனைத் தழுவிக்கொண்டு தான் எழுமுறுதற்குக் காரணமான விளையாட்டின் முடிவின்கண் தலைவிகூற்று நிகழும் என்பதற்கு மேற்கோள் இப்பாட்டு. பரத்தையை எத்தவே, தலைவன் கட் காதலின்மை காட்டி வழுவாயிற்றேனும், உள்ளத்து ஊடலுண்மையின் அமைக்கவென்றார் என்று கொண்டு, "நாணிநின் றோளிலைகண்டி... தாங் கெனவே" என்ற பகுதியினைக் காட்டுவர். இனிப் பேரா. "களவுடம்படு நரிற் கவிழ்ந்து நிலங் கிளையா" என்பது நகையுவமம்; என்னை ? தலைமகனைக் கண்டறியாதாள்போலக் கரந்தொழுகுகின்ற பரத்தை அவனோடு ஒப்புமைகண்டு, தனி நின்று விளையாடும் புதல்வனைக்கொண்டு மகிழ்கின்றாளை வாயிற் கதவம் மறைந்துநின்ற தலைமகள், 'நீயும் அம்மகவிற்குத் தாயை

15 களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோ ணிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவுள னோணின்
மகன்று யாதல் புரைவதாங் கெனவே.

என்பது : பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைமகன் யாரையும் அறியே னென்றாற்குத் தலைமகள் சொல்லியது.

—சாகலாசனார்.

---

காண் 'என்றவழி, களவு கண்டபொருளோடு கையகப்பட்ட கள்வர்போலச் செய்வதறியாது தடுமாறி முகம்வேறுபட்ட நிலைமையை உவமித்துச் சிரித் தமையின் நகையுவம மாயிற்று என்றும், ' கண்டோர்க் கெல்லாம் பெரு நகையாகக் களவுண்டாகப் படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளையா' வென உற்ற துணரக் கூறியதிலனாயினும், கையொடுபட்ட களவுடையார்போல நின்று ளென்னும் உவமைப் பொருளானே எள்ளுதற்பொருள் தோன்றி நகை புலப்படுவதாயிற்று என்றும், களவுடன்படுநர்க்குள்ள வேறுபாடு உலகத்து அடிப்படவந்த வழக்காதலின், அஃது ஏதுவாக அதனையும் அறிந்து கொள்ளப்படும் என்றவாறு என்றும், தனக்கு நிகராகாமல் இழித்துரைத் தமையின் சிறுமை பற்றிவந்தது என்றும், " மகன்றுயாதல் புரைவதாங் கெனவே " என்பது பயவுவமத்திற்கு உதாரணமென்றும் கூறுவர்.

சேனா. " நாணிநின்றோள்......கடவுளன்னோ...கெனவே " என்புழி ' வானத்தணங்கருங் கடவுளன்னோள் ' என்பது மகளிர்க்கெல்லாம் பொது வாய் நாணிநின்றோளை வரைந்துணர்த்தாதாயினும், சொல்லுவான் குறிப் பால் அவளையே யுணர்த்திற்று என்று கூறுவர்.

இனி நச். 'நாணிநின்றோள்' என்னும் பொருட்பெயர் தன்றொடர்ப் பொருளைக்கொண்டு முடிந்தபின்னர், அப்பொருட்பெயர்மேல் ஒரு காரி யம் கூறவேண்டியவழி, அவள் எனச் சுட்டிக்கூறுதல்வேண்டும்; அங்ஙனம் கூறாது, 'வானத் தணங்கருங்கடவு ளன்னோள்' என எல்லார்க்கும் பொது வாயதோர் பெயராற் கூறினாளாயினும், கூறுகின்றாள் பரத்தையைக் கருதி யே கூறுதலின், அக் 'கடவுளன்னோள்' என்ற பெயரும் சுட்டுப் பெயர்த் தன்மையாய் நின்றவாறு காண்க என்பர். (தொல் பொருள். 147; 233; 289; 294; 295; 296, சொல். 37, 460;

வரி

3. மணி - பவளமணி; 4. நவிறல் - பழகுதல்; நகை - மகிழ்ச்சி; 5. யாவரும் - பகைவரும்; 6. தேர் - சிறுதேர்; தனியனாய்க் கண்டே. 8. செத்தனள் பேணி - கருதிப் பேணி; செத்து - ஒப்புமாம்; ஒப்பு - தலைவனை ஒப்பு. 9. முலை - முலையிடத்து, 11. முலையிடத்துக் கொண்டு நின்றாள் என்க. 10. மான - அசை; 11. நின்ற நிலையினின்றும் போகேனாய்; 12. என்ன மயக்கமுற்றாய்? 13. விரையவந்து தழுவி; 15. களவு; உடம்படுதல் - இசைதல்; 17. பேணுதல் - விரும்புதல்; 18. கடவுள் - அருந்ததி; உன்னையொழிய அறியாதவள் என இகழ்ந்து கூறியவாறு. 19. புரைவதென்று மேல்நிற்றலின் 17. பேணினெனல்லனோ என்றாள். ஆங்கு அசை. அவள் பதற்றங்கண்டு 12. எவன் பேதுற்றாயென்றாள். அணங்கருங் கடவுள் என்பதற்குப் பிறரை வருத்துகின்ற எய்தற்கரிய தெய்வமகள் என்றுமாம். 3. மாசில் அங்கை - இலக்கணக் குறையற்ற கை.

பி - ம். 4. கிளவி. 6. கண்ட. 7. குறுகியாவரும். 8. சேர்த்தனள். 11. சொல்லேன். 19. புரைவதா லெனவே.

## 17. பாலை

வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினு
மிளந்துணை யாயமொடு கழங்குட னாடினு
முயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ
மயங்குவியர் பொறித்த நுதல டண்ணென
5 முயங்கினள் வதியு மன்னே யினியே
தொடிமாண் சுற்றமு மெம்மு முள்ளா
ணெடுமொழித் தந்தை யருங்கடி நீவி
நொதும லாள னெஞ்சறப் பெற்றவென்
சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
10 வல்லகொல் செல்லத் தாமே கல்லென
வூரெழுந் தன்ன வுருகெழு செலவி
னீரி லத்தத் தாரிடை மடுத்த
கொடுங்கோ லுமணர் பகடுதெழி தெள்விளி
நெடும்பெருங் குன்றத் திமிழ்கொள வியம்புங்
15 கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கற்

பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்
தருஞ்சுரக் கவலைய வதர்படு மருங்கி
னீளரை யிலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறன் மூதூர்
20 நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனிற் றோன்று
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

என்பது : மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

—கயமனார்.

வரி

1. சிறிது - சிறிதுபொழுது ; 3. அசைஇ - வருத்தி ; 4. செறி வியர். தண்ணென - குளிர ; 5. என்னைத் தழுவி ; மன் - கழிவு. 8. அற - தனக்கென ; 9. சிறுமுதுக் குறைவி - இளமையிலே அறிவு முதிர்ந்தவள் ; 11. ஊர் குடியாக எழுதல் ; உரு - உட்கு ; 13. தெழித்தல் - உரப்புதல் ; 12. மடுத்த 13. பகடு ; 14. இமிழ் - இசை ; 15. ஆதித்தன் ஒளி முடுகிய; 15. திருகிய 22. மலை ; 15.பிறங்கல் 22. மலை. 16. மண்ணரை (யா) - மாரிக் காலத்துண்டான சேறு உலர்ந்து விறுவிறுத்த உடலை உரோசுதலால் மண்ணையுடைய அரை. 17. கவலையவதர் - கவர்த்த வழி. 20. கால் பொருகையாலே நெய்யுமிழ் சுடர்போல 18. ஊழ்கழி பன் மலர் 20. பின்பு சில்கி 21. மீனிற்றோன்றும் என்க. 18. ஊழ்கழி - முறைமை மிக்க ; என்றது, நாட்புக்கு முதிர்ந்த பூவை நெய்யுமிழ் சுடர்போல விழும்படி காற்றுப் பொருதலாலே நின்றவை சில்கி, விடிகின்ற காலத்து மீன்போலத் தோன்றும் என்றுமாம். 9-10. சிறடிதாஞ் செல்லவல்லவோ எனக் கூட்டுக. 11. செலவின் - செலவிடத்து. 15. திருகிய 17. அருஞ்சுரம் எனவுமாம்.

பி - ம். 3 முன்னே. 17. கவலையதர். 18. தூழ்படு.

## 18. குறிஞ்சி

நீர்நிறங் கரப்ப வூழுறு புதிர்ந்து
பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்றுக்
கராஅந் துஞ்சுங் கல்லுயர் மறிசுழி
மராஅ யானை மதந்தப வொற்றி
5 யுராஅ வீர்க்கு முட்குவரு நீத்தங்

கடுங்கட் பன்றியி னடுங்காது துறந்து
நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்
தீங்கும் வருபவோ வோங்கல் வெற்ப
வொருநாள் விழுமமுறினும் வழிநாள்
10 வாழ்குவ ளல்லளென் றோழி யாவது
மூறில் வழிகளும் பயில வழங்குநர்
நீடின் றாக விழுக்குவ ரதனா
லுலமரல் வருத்த முறாதுமெம் படப்பைக்
கொடுந்தே னிழைத்த கோடுயர் நெடுவரைப்
15 பழந்தூங்கு நளிப்பிற் காந்தளம் பொதும்பிற்
பகனீ வரினும் புணர்குவை யகன்மலை
வாங்கமைக் கண்ணிடை கடுப்பயா
யோம்பினை ளெடுத்த தடமென் றோளே.

என்பது: தோழி இரவுவருவானைப் பகல்வர வென்றது.

—கபிலர்.

வரி

3. கல்லுயர் மறிசுழி - உயர்ந்த கல்லிலே மோதி மறிந்த சுழியெனக் கூட்டுக. 4. மராஅ யானை - மதத்தானே பிடியொடுங் கன்றொடும் மருவாத யானை. 3. முதலை துஞ்சுஞ் சுழி என்க. மறிசுழியையுடைய 5. நீத்தம்; நீத்தத் 7. துறையைப் பேர்ந்து. 9. விழுமம் - இடர்; வழிநாள் - பின்னாள்; என்றது, விழுமம் அறிவது பின்னாளென்று. 12. நீடின்று - நீடுதலில்லையாக; இழுக்குவர் - குற்றப்படுவர்; 15. நளிப்பு - செறிவு; 17. கண்ணிடை - இரண்டு கண்ணுக்கும் நடுவு; 18. எடுத்த - எடுத்து வளர்த்த; 18. தோள். 16. பகலும் புணர்குவை எனக் கூட்டுக. 14. தேனிழைத்த என்றதனானே தேனழிக்க வருவாராலும், 15. பழந்தூங்கு நளிப்பென்றதனானே பழமெடுக்க வருவாராலும், காந்தளம் பொதும் பென்றதனானே பூப்பறிக்க வருவாராலும் பகற்குறியும் அரிதென்று குறிப்பான் மறுத்தாளாம்.

பி - ம். 3. மறுசுழி. 6. துணிந்து.

## 19. பாலை

அன்றவ ணொழிந்தன்று மிலையே வந்துநனி
வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை
யுருடுடி மகுளியிற் பொருடெறிந் திசைக்குந்
5 கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்ற
மெம்மொ டிறத்தலுஞ் செல்லாய் பின்னின்
றொழியச் சூழ்ந்தனை யாயிற் றவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே
மறவ லோம்புமதி யெம்மே நறவின்
10 சேயிதழ் அனைய வாகிக் குவளை
மாயிதழ் புரையு மலிர்கொ ளீரிமை
யுள்ளகங் கனல வுள்ளுதொ றுலறிப்
பழங்கண் கொண்ட கலிழ்ந்துவீ ழவிரறல்
வெய்ய வுகுதர வெரீஇப் பையெனச்
15 சில்வளை சொரிந்த மெல்விறை முன்கை
பூவீ கொடியிற் புல்லெனப் போகி
யடர்செ யாயகற் சுடர்துணை யாக
வியங்காது வதிந்தநங் காதலி
யுயங்குசாய் சிறுபுற முயங்கிய பின்னே.

என்பது: நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் தலைமகள் நலனயர்ந்துள்ளிய நெஞ்சினைக் கழறியது*.

—†பொருந்தில் இளங்கீரனார்.

வரி

1. வந்து - போந்து; 4. உருள் துடி - கடிப்பு உருளுகின்ற இழுகு பறை. மகுளி - ஓசை; இன் - பொரு; ஒப்புரைத்தது ஓசை மாத்திரம் பற்றி; பொருடெறிதல் குடிஞை யோசைக்குள்ளது;

---

* பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்திற் றன் னெஞ்சிற்குச் சொல்லியது என்றும், †உலோச்சனார் என்றும் பாடம்.

'குத்திப் புதை' என்றதோர் பொருள் தோன்ற இசைக்கும். தெரிய எனத் திரிக்க. பொருள் - போவார் காரியம்; பொரு ளும் ஆம். 7. ஒழிப்பு - ஓகையை ஒழிப்பு. 8. செல் - திரியப் போ ; உள்ளம் - நெஞ்சினது உள்ளம்; சிறத்தல் - நினைத்தது பெறுதல். 9. எம்மைக் கடுக மறப்பை, மறவாதொழியவேண் டும் என்றான்.

9 - 14. 'நறவின் சேயிதழ்...........பையென' என்றது, உள்ளுந்தொறும் உள்ளகங்கனலுகையாலே குவளையினது கரிய இதழை ஒக்கும் நீர்மிகுதல்கொண்ட கரிய இமை பின்பு நறவின் சேயிதழனைய வாகி உலறிப் பழங்கண் கொண்ட விரைந்துவிழுகின்ற அவிர றல் வெய்யவாகச் சொரிய என்க. நறவின் சேயிதழ் செவ்வரிக்கு உவமமாகவும், குவளை கண்வடிவிற்கு உவமமாகவும் உரைப்பா ரும் உளர்.

12. உள்ளகம் - நெஞ்சு ; உலறி - வற்றி ; 13. பழங்கண் - புன்கண் ; அறல் - இமையிடத்து அற்று வீழுகின்ற நீர் ; கொண்ட அவிர றல் - கோடற்கு ஏதுவான அவிரறல்; 14. வெரீஇ - பிறர் காண்பரென்று அஞ்சிப் பையெனப் 16. போகி என்க.

15. சில்வளை சொரிந்த என்றது பல்வளையெல்லாம் முன்பே கழன் றோடின ; சில்வளைகள்தாமும் போயின என்றவாறு. 15. முன் கைக் 18. காதலி என்க.

17. அடர் - பொன்னடர். அகல் - விளக்கு அகல்; 18. வலியின் மையின் உலவமாட்டாது ஓரிடத்தே இருந்த ; 19. உயங்குபுறம் - மெலிந்த புறம். சிறுபுறம் முயங்கிய என்றான், மறையாநின்று பின்னே கட்டுதலான் ; இதுவும் ஓர் செய்தி.

19. முயங்கியபின் 9. மறவலோம்பு எனக் கூட்டுக.

பி - ம். 2. நெஞ்சம். 11. யாயிதழ்; மலர்கொள். 12. உள்ளம். 13. கதழ்ந்து. 18. வதிந்தவெம்.

## 20. நெய்தல்

பெருநீ ரழுவத் தெந்தை தந்த
கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி
யெக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇச்
செக்க ரெஞ்டின் குண்டளை கெண்டி
5 ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற் றூச றூங்கிக்
கொண்ட லிடுமணற் குரவை முனையின்
வெண்டலைப் புணரி யாயமொ டாடி
மணிப்பூம் பைந்தழை தைஇ யணித்தகப்
10 பல்பூங் கான லல்கினம் வருதல்
கவ்வை நல்லணங் குற்ற விவ்வூர்க்
கொடிதறி பெண்டிர் சொற்கொண் டன்னை
கடிகொண் டனளே தோழி பெருந்துறை
யெல்லையு மிரவு மென்னாது கல்லென
15 வலவ னாய்ந்த வண்பரி
நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே.

என்பது: பகற்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய், தலைமகன் கேட்பச் சொல்லியது.

—*உலோச்சனார்.

வரி

1. அழுவம் - பரப்பு. 2-3. நிழலிடத்துத் தங்கி ஓப்பி என்க.
4. செக்கர் - சிவந்த; ஞெண்டு. 16. கொட்கை - பரந்து திரிய விடுதல்; 5 - 6. ஞாழலொடுந் தாழையொடும் பிணித்த ஊசல் என்க. 10. அல்கினம் வருதல் - தலைவனொடு தங்கிவருதல்; அல்கினம் வருதலைப் 12. பெண்டிர் சொற்கொண்டு அன்னை 13. காவல் கொண்டாள் என்க. 12. கொடிது - கொடுமைத் தொழில்.

11. கவ்வை நல்லணங்குறுதல் - அலராகிய பேய் பிடித்தல்.

பி - ம். 5. லொடுங்குசினை. 9. அணித்தகைப். *பொருந்தில் இளங்கீரனார்

## 21. பாலை

மனையிள நொச்சி மௌவல் வான்முகைத்
துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்ப
லவ்வயிற் றகன்ற வல்குற் றைஇத்
தாழ்மென் கூந்தற் றடமென் பணைத்தோண்
5 மடந்தை மாணலம் புலம்பச் சேய்நாட்டுச்
செல்ல லென்றியான் சொல்லவு மொல்லாய்
வினைநயந் தமைந்தனை யாயின் மனைநகப்
பல்வேறு வெறுக்கை தருகம் வல்லே
யெழுவினி வாழியெ னெஞ்சே புரியிணர்
10 மெல்லவி ழஞ்சினை புலம்ப வல்லோன்
கோடறை கொம்பின் வீயுகத் தீண்டி
மராஅ மலைத்த மணவாய்த் தென்றல்
சுரஞ்சென் மள்ளர் சுரியற் றூற்று
மென்றூழ் நின்ற புன்றலை வைப்பிற்
15 பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை
யிருங்கல் விடரகத் தீன்றிளைப் பட்ட
மென்புனிற் றம்பிணவு பசித்தெனப் பைங்கட்
செந்நா யேற்றை கேழ லுக்க
விரியற் பிணவ றீண்டலிற் பரீஇச்
20 செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்
பரன்மட் சுவல முரணில முடைத்த
வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவல
ரூறு திட்ட வுவலைக் கூவல்
வெண்கோடு நயந்த வன்பில் கானவ
25 ரிகழ்ந்தியங் கியவி னகழ்ந்த குழிசெத்
திருங்களிற் றினநிரை தூர்க்கும்
பெருங்க லத்தம் விலங்கிய காடே.

என்பது: பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்து நின்று மீளலுற்ற நெஞ்சினைக் கழறியது.

—காவன்முல்லைப் பூதனார்

வரி

1. நொச்சியிள மௌவல் ; 2. மா - வண்டு ; திருவுமாம். 3. அவ் வயிறு - ஐதான வயிறு ; தைஇ - கைசெய்து ; 6. ஒல்லாய் - அதற்குப் பொருந்தாய் ; அங்கே நான் சொல்லவும் அதற்குப் பொருந்தாயாய் 7. வினையை விரும்பி யவ்வினைக்கமைந்து போந்தாயாயினென்க ; மனை - தலைவி ; நக - மகிழ ; இல் விளங்க என்றுமாம். 8. பல கூறுபட்ட வெறுக்கை ; தருகம் - தருவேம்.

9. இணி-இப்போது ; புரியிணர்-வலஞ் சுரிந்த பூங்கொத்து. 10. அது மெத்தென மலர்கின்ற கொம்பு ; புலம்ப - கொம்பே கொம் பாய்த் தனிப்ப ; 10. வல்லோன் - பூக்கொள்ள வல்லவன் ; 11. கோடு - பெருங்கொம்பு ; கொம்பு - அடிக்குங் கோல். 13. சுரி யல் - குழன்ற மயிர் ; 14. வைப்பு - ஊர்.

20 - 21. ஈந்தின்பரலொடுகூடிய மண்ணையுடைய மேடு ; முரணிலம் - வன்னிலம் ; 22. கணிச்சி - குந்தாலி; 23. ஊறுதிட்ட - ஊறுமை யாலே அவர் விட்டுப்போன; உவலைக்கூவல், உண்டாயின் உள் ளது சுருகென்றவாறு.

25. இகழ்ந் தியங் கியவென்றது - இங்கோரேத மில்லையென்று மதி யாது திரியும் வழி. குழியென்று கூவலருடைத்த குழியைக் கருதித் தூர்க்கும் காடென்க.

13. தூற்றும் 14. வைப்பு.

15 - 16. ஓமையையுடைய கன் முழையில் காவற்பட்ட 17. பிணவு என்க. 27. காட்டிலே 9. எழு என்க.

பி - ம். 1. மனைவளர் 4. நகைமென், 6. செல்லலமென்றியான்.

## 22. குறிஞ்சி

அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங்
கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்
இதுவென வறியா மறுவரற் பொழுதிற்

5 படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென
முதுவாய்ப் பெண்டி ரதுவாய் கூறக்
களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
10 துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா
ளார நாற வருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
• களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கி
15 னொளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத்
தன்னசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப
வின்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கனெ னல்லனோ யானே யெய்த்த
20 நோய்தணி காதலர் வரவீண்
டேதில் வேலற் குலந்தமை கண்டே.

என்பது: 1. வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்துத் தலைமகள் ஆற்றா ளாகத் தோழி தலைமகனை இயற்பழிப்பத் தலைமகள் இயற்பட மொழிந்தது. 2. தலைமகன் இரவுக்குறிவந்து சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல் லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

—வெறிபாடிய காமக்கண்ணியார்.

வரி

4. இதுவென வறியாமை - மார்பு வருத்தமென் றறியாமை. மறு வரல் - சுழற்சி; 5. படியோர் என்றது பிரதியோர் என்னும் வடமொழித் திரிவு; பல் புகழ் - வென்றியுந் தியாகமுமுதலா யினவற்றானாய புகழ்; 6. தணிதல் - செல்லல் தணிதல்; 7. வாய்கூற - மெய்யாக்கூற; 8. சூட்டி - சூட்ட; என்றது வேலி ற்கு. அவ்வேலன் முருகனை இங்ஙனஞ் செய்து ஆற்றுப் படுத்தா னென்க. 11. ஆற்றுப் படுத்தல் - மனையிற்கொண்டு புகுதல்.

14. ஒதுக்கின் - ஒதுக்கொடு; 17. தன்னசையுள்ளம்-தன்னை நச்சுதலையுடைய உள்ளமென்று உள்ளத்திற்கு அடை; அதில் நம்முடை நசை யென்றது வேட்கையை. 19-20. எய்த்த நோய் - இளைத்தற்குக் காரணமாகியநோய். 21. உலந்தமை கண்டு 19. நக்கனெனல்லனோ என்க.

வெறியெடுத்துத் தீராதவழியில் அலர்கியாராலே வந்ததென்றயிராதபடி வரையவந்த பெருதவியினுரைப் பொல்லாங்கு சொல்லக் கடவையோ என இயற்பட மொழிந்தது.

4. இதுவென வறியாமை - இதுவென்று துணிந்து தமரறியாப் பொழுதென்றுமாம்.

பி - ம். 8. சூடி. 16. காவலறியாமை. 18. குழைய்ப.

## 23. பாலை

மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்
பாடுலந் தன்றே பறைக்குர லெழிலி
புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை
நெருங்குகுலைப் பிடவமொ டொருங்குபிணி யவிழக்
5 காடே கம்மென் றன்றே யவல
கோடுடைந் தன்ன கோடற் பைம்பயிர்ப்
பதவின் பாவை முனைஇ மதவுநடை
யண்ண லிரலை யமர்பிணை தழீஇத்
தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டனவே
10 யனையகொல் வாழி தோழி மனைய
தாழ்வி னொச்சி சூழ்வன மலரு
மௌவன் மாச்சினை காட்டி
யவ்வள வென்ற ராண்டுச்செய் பொருளே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

—ஔரோடோகத்துக் கந்தரத்தனர்.

வரி

1. மண்கண் - மண்ணிடம்; வீசுதல் - கொடுத்தல்; மழையை வீசி.

2. பாடு - ஒலி; உலத்தல்-ஓசை அறுதல்; 5. கம் - அநுகரணம். 6. கோடு - சங்கு; கோடலாகிய பயிர். கோடலைக் களையாகவுடைய வரகு முதலாகிய பயிர் என்றுமாம். 9. தாழ்ந்துபடுதல் - ஓரிடக் தே சேர்ந்து தங்குதல்; தாழ்வி ஞெச்சி - குறுமையினையுடைய நொச்சி; 12. மாச்சினை - மௌவல் சூழ்ந்த நொச்சிக் கருங் கொம்பு. 13. என்றுரென்பது முற்று.

10. அனையகொல் - அது மலர்ந்த மாத்திரையோ மேலே போய்த் தோ என்றாள். மேலே போனபடி கூறுவாள்; பொருள் அங்ஙனம் சிறந்ததோ என்றுமாம்.

பி - ம். 4 பிடவொடு. 8. யமர்துணை.

## 24. முல்லை

வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்தி னன்ன
தளைபிணி யவிழாச் சுரிமுகப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலருந்
5 தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குன் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்
10 தம்மூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து
நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா வொண்மணி
கழிப்பிணிக் கறைத்தோற் பொழிகணை யுதைப்புத்
15 தழங்குகுரன் முரசமொடு முழங்கும் யாமத்துக்

கழித்துறை செறியா வாளுடை யெறுழ்த்தோ
ளிரவுத்துயின் மடிந்த தானை
யுரவுச்சின வேந்தன் பாசறை யேமே.

என்பது: 1. தலைமகன் பருவங்கண்டு சொல்லியது. 2. வினைமுற்றுந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

—ஆலூர் மூலங்கிழார்.

உரி

1. வேளாப் பார்ப்பான்-யாகம்பண்ணாத ஊர்ப்பார்ப்பான்; இவர்களுக்குச் சங்கறுக்கையுந் தொழில்; 2. வளையாக் களைந்தொழிந்த; கொழுந்து - சங்கின் தலை; 4. சிதா லந்துவலை - சிதறுகின்ற துவலை; 5. தைஇநின்ற - தைத்தன்மை நின்ற; 6. கதிர்காந்த வைகறை; 8. மங்குல் - இருள். 5. கடைநாளாகிய 9. பனிக்காலம் என்றது அற்சிரத்தை. 13. மணி - மணியோசை; 14. உதைப்பு - உதைப்பாலுளதாகிய ஓசையை; கறைத்தோல் - கருங்கடகு; 16. கழித்து - உருவி. 12 - 13. கோட்டியானை என்க. 10. யாம் 18. பாசறையேம். 7. விசும்பு தோலுரிவது போலு மென்க; 12. மண்ணை வெண்கோடு - மழுமட்டையான கோடு; 16. வாளுடை 18. வேந்து என்க.

பி - ம். 2. தொழித்த. 12. மழுங்கிய.

## 25. பாலை

நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅ
யவிரறல் கொண்ட விரவுமணலகன்றுறைத்
தண்கய நண்ணிய பொழிலொறுங் காஞ்சிப்
பைந்தா தணிந்த போதுமலி யெக்கர்
5 வதுவை நாற்றம் புதுவது கஞல
மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்
படுநா விளியா னடுநின் றல்கலு

முரைப்ப போல வூழ்கொள்பு கூவ
வினச்சித ருருத்த விலவத் தாங்கட்
10 கிளைப்பூங் கோங்கி னுண்டாது பகர்நர்
பவளச் செப்பிற் பொன்சொரிந் தன்ன
விகழுந ரிகழா விளநா ளமையஞ்
செய்தோர் மன்ற குறியென நீநின்
பைத லுண்கண் பனிவார் புறைப்ப
16 வாரா மையிற் புலந்த நெஞ்சமொடு
நோவல் குறுமக ணோயியரென் னுயிரென
மெல்லிய வினிய கூறி வல்லே
வருவர் வாழி தோழி பொருநர்
செல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்
20 பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதிய
னின்னிசை யியத்திற் கறங்குங்
கன்மிசை யருவிய காடிறந் தோரே.

என்பது: பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

—ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்.

2. அறலாந்தன்மை கொண்ட. 3. கயம்-மடு; 4. தாதுமலர்ந்த போது; பூவுதிர்ந்த எக்கர். 5. நாற்றம் மிக: புதுவதாகிய வதுவை நாற்றம் என்க; 7. படுதல் - ஒலித்தல்; அடு நின்று - வருத்தா நின்று; நடுச் சொல்லுதலிலே நின்று என்றுமாம். 8. உரைப்பபோல - கிலவார்த்தை சொல்லுவனபோல; ஊழ் - முறைமை; பேடைகூவச் சேவல் கூவ என்க.

9. சிதர் - வண்டு; இனச் சிதரானது 10. கோங்கின் கண்ணே இருந்து 9. இலைத்தாங்கணுதிர்த்த 10. கோங்கின் தாது என்க.

10. பகர்நர் - விற்பார்; 12. இகழ்ந்து பிரிவோரும் பிரிய ஒண்ணாத இளவேனிற் காலம்; 15. அவர் வாராமையின் அவரைப் புலந்த

நெஞ்சத்தொடு; 16. என்னுயிர் நோவதாகவென்று நீ நோவா தேகொள் என்று ஆற்றுவித்தாள். உடலையன்றி உயிருநோவதாக வெனச் சொல்லி, 17. மெல்லிய இனியகூறி, வல்லே 18. வருவரென்று வேறுறுத்துரைக்க

20. பொதியில் மலை.

பி - ம். 7. பாடுசோ, னீடுகின். 8. நுவல. 18. வருப. 22. சுன்முகை.

## 26. மருதம்

கூர்முண் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் ளன்ன வெண்கான் மாமலர்
பொய்தன் மகளிர் விழவணிக் கூட்டு
மவ்வய னண்ணிய வளங்கே ழூரனைப்
5 புலத்தல் கூடுமோ தோழி யல்கற்
பெருங்கதவு பொருத யானை மருப்பி
னிரும்புசெய் தொடியி னேர வாகி
மாக்க ணடைய மார்பகம் பொருந்தி
முயங்கல் விடாஅ லிவையென மயங்கி
10 யானோ மென்னவு மொல்லார் தாமற்
றிவைபா ராட்டிய பருவமு முளவே, யினியே,
புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்
திதலை யணிந்த தேங்கொண் மென்முலை
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்
15 வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுத முமஞ் சினரே, யாயிடைக்,
கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க் கொத்தனிர் நீயி ரிஃதோ
20 செல்வற் கொத்தனம் யாமென மெல்லவென்
மகன்வயிற் பெயர்தந் தேனே யதுகண்
டியாமுங் காதல மவற்கெனச் சாஅய்ச்

சிறுபுறங் கவையின னாக வுறுபெயற்
றண்டுளிக் கேற்ற பலவுழு செஞ்செய்
25 மண்போ னெகிழ்ந்தவற் கலுழ்ந்தே
நெஞ்சறை போகிய வறிவி னேற்கே.

என்பது : தலைமகன் தோழியை வாயில்வேண்டி, அவளால் தான் வாயில் பெறாது ஆற்றாமையே வாயிலாகப்புக்குக் கூடிய தலைமக னீக்கத்துக்கண் புக்கதோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—பாண்டியன் கானப்பேரெயில்தந்த உக்கிரப்பெருவழுதி.

வரி

2. கால் - காம்பு ; 3. விழவிற்கு அணியாகக் கூட்டும் ; 5. கூடுமோ - பொருந்துமோ : அல்கல் - இரவு. 7. தொடியினோராகி என்றது - தொடியினது அழகையுடையவாகி யென்றவாறு.

8. அடைய - பொருந்த ; மாக்கண் 9. இவை ; 6. கிம்புரிக்குவமை 9. கண்.

9. மயங்கி - வருந்தி ; 10. ஓ மென்னவும் - ஒழியும் என்னவும் ; இடைக் குறைந்தது. 11. இவை என்றது முலையை ; 10. மற்று-அசை ; 11. பருவம் - காலம். 12. தடைஇ-இளைந்து ; சரிந்து என்றபடி ; 13. தேங்கொள் - இடங்கொள் ; பால்பற்றி இனிமையுமாம்.

13. முலை 15. வீங்க முயங்கல் என்க. ஒழுகும் பொழுது விம்முதல்.

17. ஆயிடை - அவ்விடை ; கவவுக்கை - அகத்திட் டொழுக்கம். நெகிழ்தல்-நழுவுதல் ; போற்றி - கருதி.

17. மதவு நடைப் 18. புதல்வன்.

18. செவிலிகை-செவிலியிடம் ; 19. புதல்வனைப் பார்த்துச் சொல்லுகின்றாள்: நல்லோர்க்கு ஒத்தனிர் என்று ; நல்லோர் - அழகியரான பரத்தையர். 19 - 20 இஃதோ செல்வன் - இந்தச் செல்வன் ;........என்னுமிடைச்சொல் இஃதோ எனத் திரிந்தது.

20. செல்வன் - பிள்ளை. 22. சாஅய் - என்னிடத்தே தாழ்ந்து. 23. என் முதுகைக் கட்டிக் கொண்டானாக; 24. பலபடியாக உழுத செம்பாட்டு நிலத்திற் செய்யின்மண்.

25 - 26. அவன்கண் கண்கலங்கிக் கிழற்ற அறிவினேற்குப் 5. புலத்தல் கூடுமோ தோழி என்க. 5 அல்கல் 26. அறைபோன என்க.

இதனுள்ளுறை: முள்ளியின் பக்கலிலே தோற்றிவாழும் பூ அதனைவிட்டுப் பிறர்க்குப் பயன்பட்டவாறுபோல நம்முடன் பிறந்த நெஞ்சு அவருடன் ஏகுகையாயிற்று. அவருடைய வதுவை விழவிற்கும் உடலாய்த் திரியாநின்றால் புலத்தல் கூடுமோ என்க.

பி - ம். 14. நறுஞ்சாந்து புலர்ந்த 23. விகுபெயற். 25. கலுழ்ந்தென்.

## 27. பாலை

கொடுவரி யிரும்புலி தயங்க நெடுவரை
யாடுகழை யிருவெதிர் கோடைக் கொல்குங்
கானங் கடிய வென்னார் நாமழ
நின்றதில் பொருட்பிணிச் சென்றிவட் டருமார்
5 செல்ப வென்ப வென்போய் நல்ல
மடவை மன்ற நீயே வடவயின்
வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர்ப் பாண்டிய ரறத்திற் காக்குங்
கொற்கையம் பெருந்துறை முத்தி னன்ன
10 நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்
தகைப்பத் தங்கல ராயினு மிகப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே தேம்படத்
தெண்ணீர்க் கேற்ற திரள்காற் குவளைப்
பெருந்தகை சிதைத்து மமையா· பருந்துபட

15 வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்
குருதியொடு துயல்வந் தன்னநின்
னரிவே யுண்க ணமர்த்த நோக்கே.

என்பது: செலவுணர்ந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

— மதுரைக் கணக்காயனார்.

வரி

1. தயங்க - விளங்க; 2. கழை - தண்டு; வெதிர் - திணிமூங்கில். கோடை - மேல்காற்று. ஒல்கும் - ஒடுங்கும். வெதிர் சாய்ந்தால் உள்ளுக்கிடந்த புலி தோன்றுமென்று கூறிற்று.

4. நின்றதில் - இன்னவிடத்திலே நின்றதென்று சொல்லுதலில்லாத, பொருள்; பிணி - பிணிப்பு. 5. போவர் என்று சொல்லாநின் றார்கள் என்று எனக்குச் சொல்லுவாய். 7. வேங்கடம் பயந்த - அங்குள்ள அரசர் திறையிட்ட. 9. முத்தினன்ன 10. எயிறு; நகையொடு பொலிந்திலங்கும் பல். 11. தங்கலராயினும்; இக ப்ப-போக, யாங்ஙனம் விடும்? விடாதுகாண். 14. அமையா - அதனொடு விடாவாய்; 15. வேந்து - வேத்தென விகாரம். 16. துயல்வருதல் - அசைவருதல்.

17. கண்ணின் மலர்ந்த நோக்கு 12. எங்ஙனம் விடு மென்க. 3. கடிய வென்றாய்த் 4. தரவேணடிச் 5. செல்வ ரென்றுநின்று ரென்க.

பி - ம். 1. தடக்கு. 11. தாங்கல.

## 28. குறிஞ்சி

மெய்யிற் றீரா மேவரு காமமொ
டெய்யா யாயினு முரைப்ப றோழி
கொய்யா முன்னுங் குரல்வார்பு தினையே
யருவி யான்ற பைங்கா றோறு

5 மிருவி தோன்றின பலவே நீயே
முருகுமுரண் கொள்ளுந் தேம்பாய் கண்ணிப்
பரிய னொடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலொ டமைந்தனை யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து
10 கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி
யாங்காங் கொழுகா யாயி னன்னை
சிறுகிளி கடிதல் றேற்று ளிவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவ ளாயி
னுறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவா ளாய்த் தோழி சொல்லியது.

இது பகலே சிறைப்புறம்.

— பாண்டியன் அறிவுடைநம்பி.

வரி

1. காமமொடு - காமத்தால். 4. கால்-முதல்; 6. முரண் கோடல் - பல பூவாதலாற் பலநாற்றமா யிருத்தல். 8. அமைந்தனை - அமைந் தாய். 9. எழுந்து நின்று; 10. கிள்ளைத் தெள்விளி - கிள்ளைகளை ஓட்டுகிற ஓசை; இடையிடை - அவற்றின் பேச்சுக் கிடை யிடையே; பயிற்றி - பலகாற் சொல்லி; 11. அப்படியே அப் படியே; அவ்வவ்விடங்களிலே யென்றுமாம்; 12. தேற்றாள் - தெளிய அறியாள்.

13. பிறரைக் காக்கக்கொடுவந்து நிறுத்துவளாயின் 14. அவன் மார்பு உறுதற்கு அரிது என்க.

1. மெய்யிற்றீரா மேவரு காமம் - ஒருவர் மெய்யினின்றும் ஒருவர் தீராமைக்குக் காரணமாகிய காமம்.

பி - ம். 4 அருவியார்ந்த. 7. பரிப்பன்னொடு 8. டமர்ந்தனை. 9. வெ ழுந்து.

## 29. பாலை

தொடங்குவினை தவிரா வசைவி னோன்றாட்
கிடந்துயிர் மறுகுவ தாயினு மிடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த
தாழ்வி லுள்ளந் தலைத்தலைச் சிறப்பச்
5 செய்வினைக் ககன்ற காலை யெஃகுற்
றிருவே றாகிய தெரிதகு வனப்பின்
மாவி னறுவடி போலக் காண்டொறு
மேவ றண்டா மகிழ்நோக் குண்க
ணினையாது கழிந்த வைக லெனையதூஉம்
10 வாழலென் யானெனத் தேற்றிப் பன்மாண்
டாழக் கூறிய தகைசா லன்மொழி
மறந்தனிர் போறி ரெம்மெனச் சிறந்தநின்
னெயிறுகெழு துவர்வா யின்னகை யழுங்க
வினவ லானாப் புனையிழை கேளினி
15 வெம்மை தண்டா வெரியுகு பறந்தலைக்
கொம்மை வாடிய வியவுள் யானை
நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி
யறுநீ ரம்பியி னெறிமுத லுணங்கு
முள்ளுநர்ப் பனிக்கு மூக்கருங் கடத்திடை
20 யெள்ள னோனாப் பொருடரல் விருப்பொடு
நாணுத் தளையாக வைகி மாண்வினைக்
குடம்பாண் டொழிந்தமை யல்லதை
மடங்கெழு நெஞ்ச நின்னுழை யதுவே.

என்பது: வினைமுற்றி மீண்ட தலைமகன் எம்மையும் நினைத்தறிதிரோ என்ற தலைமகட்குச் சொல்லியது.

—†வெள்ளாடியனார்.

வரி

1. நோன்றாட் 3. புலி என்க; தாளது என்றும் பாடம். 2. கிடந்து. 3. மிசையா.
2. மறுகுதல் - வருந்துதல்; இடம்படின் - இடத்தேவீழின். 5. எஃகு - கத்தி; 6. தெரிதகு - ஆராயத்தக்க; 8. மேவறண்டா-

பொருந் துதலைமையா ; 9. எனையதூஉம் சிறிதும் ; 12. எம்மெனா - எம்மிடத்தென்று ; 14. வினவுதலைமையாத. 15. பறந்தலை - பாழ் ; 16. கொம்மை - பெருமை ; இயவுள் - தலைமை ; வழியிடத்தியானையுமாம். 17. நீருள்ள இடங்காணுது ; 18. அறநீரம்பி - நீரற்ற யாற்றி லம்பி.

20. எள்ளல் நோனு விருப்பெனக் கூட்டிப் பிறரிகழ்தலைப் பொறுத விருப்பென்க.

21. தொடங்கின காரியம் முடியவேண்டு மென்னும் மானம் தனையாக வைகி ; 23. மடங்கெழு நெஞ்சென்றுன், கூடாமன்றே என்ற றமை அறிவியா நெஞ்சு என்று. நின்னுழையது என்பது முற்று.

5. செய்வினைக்கு அகன்றகாலை 12. மறந்தனிர் என்க. 19. கடத்திடத்துத் 21. தங்கி 22. யொழிந்தமை யல்லது என்க.

வி - ம். 1 வசையினேன்றுட். 7. னவ்வடி. 13. இன்னகையிலங்க. 22. யல்லது. † வெண்வட்டியார். வேளாவெட்டனன்.

## 30. நெய்தல்

நெடுங்கயிறு வலந்த குறுங்க ணவ்வலைக்
கடல்பா டழிய வினமீன் முகந்து
துணைபுண ருவகையர் பரத மாக்க
ளிளையரு முதியருங் கிளையுடன் றுவன்றி
5 யுப்பொ யுமண ரருந்துறை போக்கு
மொழுகை நோன்பக டொப்பக் குழீஇ
யயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்
பெருங்களந் தொகுத்த வுழவர் போல
விரந்தோர் வறுங்கல மல்க வீசிப்
10 பாடபல வமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ
பெருமை யென்பது கெடுமோ வொருநாண்
மண்ணு முத்த மரும்பிய புன்னைத்

தண்ணறுங் கானல் வந்துநும்
15 வண்ண மெவனோ வென்றனிர் செலினே.

என்பது : பகற்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

—†முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்.

வரி

1. நெடுங்கயிறு - வலையிறுக்கும் பெருங்கயிறு; வலத்தல் - அக்கயிறு கட்டப்படுதல் ; வலை - வலையால் ; 2. பாடு-பெருமை. 6. ஒழுகை-சகடம். 7. ஒலிப்ப வாங்கி - இழுத்தலருமையால் ஆரவாரித்து வாங்கி யென்றாள். கரையிடத்து வலித்து. 8. தொகுத்த - ஒருப்படுத்தின. 10. பாடு-கூறு; தங்களிற் கூடுதல் சாற்றி ; அமைத்து. 12. என்பது - என்று சொல்லப்படுகின்ற அது. 13. முத்தம் - முத்தம்போல; 14 - 15. வாராநின்றீர், வந்தால் இது கேட்கின்றிலீர் என்றாள்.

15. உங்களழகு செய்த தென்னென்று சொல்லி வினவிப்போகிற் பெருமை கெடுமோ என்றாள், வண்ணங்கேட்கில் வரைவ ரென்று: வண்ணத்திற்கு அழிவல்ல தில்லாமையால்.

4. துவன்றி 6. குழீஇ 7. வாங்கி 9. வீசி 10. அமைத்து 11. மணற் கண்ணே துஞ்சு மென்க.

இதனுள்ளுறை : பெருங் கடலுட் சிக்கிக் கிடக்கின்ற மீனை நுளையர் அதனினின்று நீக்கி உயிர்செகுத்துக் கண்டாரெல்லார்க்குங் கூறுவைத்துப் பரப்பிப் பின்பு உயிர்வருத்தினோ மென்னு மிரக்கமின்றி, மணற்குன்றிலே யுறங்கினாற்போல, பெருங்குலத்துப் பிறந்த இவளை நீயிர் நும்வசமாக நீக்கி வருத்தி, வேறுபாட்டா னெல்லாரு மிவளைச் சூழும்படி அலராக்கிப் பின்பு நீர் துயரமின்றி உறங்குகின்றீர் என்றவாறு.

13. புன்னை அரும்பிய என்றதனாலும், பகற்குறி யிடையீடு குறியாதாகும்.

15. வண்ண மெவனோ வென்றது, இனிநீ ரென்செய்தீரென் றகேட்குமளவல்ல, நும்மழகு என் செய்தது என்று கேட்கவேண்டு மென்றவாறு.

பி - ம். † முடங்கிடந்த, முடக்கிடந்த.

## 31. பாலை

நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் மண்டிலம்
புலங்கடை மடங்கத் தெறுதலின் ஞொள்கி
நிலம்புடை பெயர்வ தன்றுகொ லின்றென
மன்னுயிர் மடிந்த மழைமா றமையத்
5 இலையில வோங்கிய நிலையுயர் யாஅத்து
மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்குக்
கல்லுடைக் குறும்பின் வயவர் வில்லிட
நிணவரிக் குறைந்த நிறத்த வதர்தொறுங்
கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன
10 புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்
கண்ணுமிழ் கழுகின் கான நீந்திச்
சென்று ரென்பிலர் தோழி வென்றியொடு
வில்லலைத் துண்ணும் வல்லாண் வாழ்க்கைத்
தமிழ்கெழு மூவர் காக்கு
15 மொழிபெயர் தேஎத்த பன்மலை யிறந்தே.

என்பது: பிரிவிடை ஆற்றளாயினளென்று பிறர்சொல்லக்கேட்டு வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

— மாமூலனார்

வரி

1. சிவந்த - கோபித்த ; 2. புலக்கடை புலங்கடையென நின்றது ; புலத்திட மென்றவாறு ; மடங்க - பயிரெல்லாம் தீய ; ஞொள்கி- குறைவுபட்டு. 3. இன்று நிலம் புடைபெயர்வ தல்லவோ எனச் சொல்லி ; 4. மன்னுயிர் - ஆண்டு வாழும் மக்கள். 9. கணவிரம்- செவ்வரலி ; இடூஉக் கழிந்தன்ன - விழவிட்டு. 10. குருதி பரிப்ப - குருதி விழுந்தோரைச் சூழ.

4. மடிதல் - மரித்தல் ; 7. குறும்பு - குறும்பரிடம் ; வயவர் - அக் குறும்பில் வீரர் ; வில்லிட - விற்கள் விட ; 8. நிணவரி - நிண வொழுங்கு ; குறைந்த - அற்ற ; நிறத்தவதர், அதர்க்கு அடை.

10. புண்ணுமிழ்குருதி வாய்க்கொண்டுபோய்ப் 6. பார்ப்பிற்கு 11. உமிழ்ந்து கொடுக்குங் கானமென்க.

12. வென்றியொடு - வென்றியால். என்பிலர் - என்பு அளவு இலர்; என்றுசொல்லும் வார்த்தையளவு இலர் என்று பெயர்ப் படுத்துக. 13. வில்லா லலைத்துண்ணும் 14. மூவர் காக்கும் தமிழ்கெழு 15. மொழிபெயர்ந்த தேசமென்க; அந்நாட்டுப் பல மலைகளைக் கடந்து தூரப் போனார் என்க.

4. அமையத்துச் 12. சென்றாரென்க.

12. சென்றாரென்று சொல்லுதலிலர், பிரிவாற்றாமை வருந்துகின்றாளென்று சொல்லுவ ரென்றாள்.

பி - ம். 8. நிறைத்த.

## 32. குறிஞ்சி

நெருந லெல்லை யேனற் றோன்றித்
திருமணி யொளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலுந் தோற்ற முறழ்கொள
விரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றிச்
5 சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்
குளிர்கொ டட்டை மதனில புடையாச்
சூரர மகளிரி னின்ற நீமற்
றியாரை யோவெம் மணங்கியோ யுண்கெனச்
சிறுபுறங் கவையின னாக வதற்கொண்
10 டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென்
னுள்ளவ னறித லஞ்சி யுள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ
வெரூஉமான் பிணையி னொரீஇ நின்ற
வென்னுரத் தகைமையிற் பெயர்த்துப்பிறி தென்வயிற்
15 சொல்ல வல்லிற்று மிலனே யல்லாந்
தினந்தீர் களிற்றிற் பெயர்ந்தோ னின்றுந்
தோலாவா றில்லை தோழிநாஞ் சென்மோ

சாயிறைப் பணைத்தோட் கிழமை தனக்கே
மாசின் றாதலு மறியா னேசற்
20 றென்குறைப் புறனிலை முயலு
மண்க ணாளனை நகுகம் யாமே.

என்பது : 1. பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. 2. தோழிக்குத் தலைமகள் சொற்றதூஉமாம்.

—†நல்வெள்ளியார்.

வரி

3. புரவலன் - புரப்பவன்; தோற்றம் - பொலிவு; உறழ்கொள - மாறு கொள. 6. குளிர் - ஈரம். மதனில - வலியிலாதன; தன்று வெடிக்கலாவன. 7. சூரர்மகளிரைப்போல வென்றான், தன்னை வருத்துதலான். 8. யாரையோ - யாரோ; ஐ - அசை. உண்கென - உண்பேனெனச் சொல்லி; 9. அதற்கொண்டு - அதனை மனத்தாலே கருதி; 11. உள்ளறிதல் - நெகிழ்ந்தமை யறிதல். 12. கடியவை என்றாள், முன்சொல்லக் கடவனவாகச் சொன்னவை யல்ல என்று. கையைப் பிணிப்பு விடா. 17. சென்மோ - செல்வேம். அது 14. கழித்து; இன் - அசை;

18. சாயிறை - வளைந்த சந்து. 19. மாசின்றாதலும் - குற்றமின்றித் தனக்கே யாதலும். எசற்று-வருத்தமுற்று; 20. என் குறைக்கு - என்னுற் பெறுங் காரியத்திற்கு, என் பின்னிற்றலிலே முயலும். புறனிலை - பின்னிலை. 21. அண்கண் - கண் அண் என்க.

பி - ம். 14. வென்னூர்த். 15. சொல்லல்.

—† நல்லொளியார்.

## 33. பாலை

வினைநன் றாதல் வெறுப்பக் காட்டி
மனைமாண் கற்பின் வாணுத லொழியக்
கவைமுறி யிழந்த செந்நிலை யாஅத்
தொன்றோங் குயர்சினை யிருந்த வன்பறை

5 வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்
வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரு
மிளிதேர் தீங்குர லிசைக்கு மத்தஞ்
செலவருங் குரைய வென்னாது சென்றவண்
மலர்பா டான்ற மையெழின் மழைக்கண்
10 டெளியா நோக்க முள்ளினை யுளிவாய்
வெம்பர லதர குன்றுபல நீந்தி
யாமே யெமிய மாக நீயே
யொழியச் சூழ்ந்தனை யாயின் முனாஅது
வெல்போர் வானவன் கொல்லி மீமிசை
15 நுணங்கமை புரையும் வணங்கிறைப் பணைத்தோள்
வரியணி யல்குல் வாலெயிற் றோள்வயிற்
பிரியா யாயி னன்றுமற் றில்ல
வன்றுநம் மறியா யாயினு மின்றுநஞ்
செய்வினை யாற்றுற விலங்கி
20 னெய்துவை யல்லையோ பிறர்நகு பொருளே.

என்பது : தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார்.

வரி

1. வெறுப்ப - மிக: மிகவென்றது செறிய; என்றது - அறப்பொரு ளாயிற்று.

2. மனையில் வாணுதல் ஒழிய; 4. ஒன்றோங்குயர் சினை - கப்பின்றி ஒன்றோங்கு உயர்சினை; ஓங்கின கொம்பு. 5. வீளை - சின்னென்ற ஓசை; பருந்தின் சேவல்; இரை கொள்ளவல்ல சேவல்; 6. வருந் திறத்திலே யழைக்கும்; 7. இளியென்னும் பண்ணென்று கேட் டார் விசாரிக்கும் குரல்; மெத்தெனப் பேடையை அழைத்த லால் இளிபோன்றது.

8. அவள் 9. கண்; மலர் பெருமையழிதற்குக் காரணமாகிய கண். 10. தெளியா நோக்கம் - வெருவின பார்வை.

10. உள்ளினையாயின் 12. நீயே 13. ஒழியச் சூழாநின்றாயாயின்.

13. ஒழிய - ஊங்கே போக ; முறைஅது-பழைதாக. 16. வரி - திதலை ; 17. பிரியாயாயின் நன்று; மன் - அது மாட்டாயன்றே என்றான். தில் - அசை.

18. அன்று - பிரிகின்ற அன்று ; நம்மை அறியாயாயினும் என்றது, நாம் முடியப் போகமாட்டேமென்று உள்ளபடி அறியாதே பிரிந்தாயாயினும் என்றவாறு.

18 - 19 நம்வினை - அதுதான் செய்யும் வினை ; வினை - காரியம் ; ஆற்றுற விலங்கின் - செய்வினையை வழியுற்றவளவிலே விலக்குவை யாயின். 20. பிறர் நகு பொருள் - பிறர் சிரிக்கத் தகுங் காரியம்.

இங்கு வந்து மீள நம்மாலாகாதுகாண் என்று நெஞ்சினை மீளாதபடி கூறினான்.

1. காட்டிச் 8. சென்று ; என்றது, போந்து என்றவாறு.

5. பருந்து 6. துணைப்பயிரும் 7. காட்டில் 8. அடைந்து துணைப் பிரிந்தார்க்குப் 8. போதலரி தென்றது என்றவாறு.

12. யாமே, நீயே என்னும் ஏகாரம் பிரிநிலை.

பி - ம். 3. வீழ்ந்த. 4. வண்பறை. 7. மிளிரியேய். 8. செல்லருங். 1. வெம்பராஅய. 12. தமியமாக. 14. வெவ்வேல்.

## 34. முல்லை

சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்
கண்ணியின் மலருந் தண்ணறும் புறவிற்
றொடுதோற் கானவன் கவைபொறுத் தன்ன
விருதிரி மருப்பி னண்ண லிரலை
5 செறியிலைப் பதவின் செங்கோல் மென்குரன்
மறியாடு மருங்கின் மடப்பிணை யருத்தித்
தெள்ளற றழீஇய வார்மண லடைகரை
மெல்கிடு கவுள துஞ்சுபுறங் காக்கும்
பெருந்தகைக் குடைந்த நெஞ்ச மேமுறச்

10 செல்க தேரே நல்வலம் பெறுந
பசைகொன் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி
துறைவிட் டன்ன தூமயி ரெகினந்
துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பிற்
செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி
15 யின்றுவர லுரைமோ சென்றிசினோர் திறத்தெனா
வில்லவ ரறித லஞ்சி மெல்லெனா
மழலை யின்சொற் பயிற்று
நாணுடை யரிவை மாணலம் பெறவே.

என்பது: வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது

— மதுரை மருதன் இளநாகனார்.

வரி

1. வெண்டலையாயிற்று பூவால். 2. கண்ணியின் - தொடைபோல. 3. கவை - கவைக்கோல்; பொறுத்தல் - சுமத்தல். 8. அசைவிடுகின்ற கவுளவாய் உறங்குபுறத்தைப் பாதுகாக்கும் 9. பெருந்தன்மை. 10. வலம் - கடுக விடவல்ல வெற்றி. 11. பசை - கஞ்சிப் பசை; கொல்லுதல் - உதிரம் அறப் பண்ணுதல்; 12. விட்டன்ன......; எகினம் - அன்னம்; 13. திளைத்தல் - விளையாடல். வரைப்பு - மாளிகை; ஆகுபெயர்.

15. சென்றிசினோர் திறத்து ஒன்று உரைப்பையாகில் அவர் இன்று வருவர் என்னும் உரையை உரை என்றவாறு. திறத்தென்புழி உரைக்கில என ஒரு சொல் வருவிக்க.

18. பெறச் 10. செல்க தேர் என்க.

2. புறவில் 6. அருத்திக் 8. காக்கும் என்க.

6. மறியாடு மருங்கின் மடப்பிணை - மறி வயிற்றிலே முழுகி விளையாடும் பக்கத்தையுடைய பிணை.

நம்மை இங்கே கலையும் பிணையும் வருத்த, அவளை அங்கே அன்னமும் துணையும் வருத்த என்றவாறு.

பி - ம். 5. புதவின்.

## 35. பாலை

ஈன்று புறந்தந்த வெம்மு முள்ளாள்
வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி யிரட்டுந் தாளுடைக் கடிகை
நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
5 முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
10 போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிற ளாயின ளாயினு மணிந்தணிந்
தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇத்தன்
மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா முழவிற் கோவற் கோமான்
15 நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறற் கடுக்கு
நெறியிருங் கதுப்பினென் பேதைக்
கறியாத் தேஎத் தாற்றிய துணையே.

என்பது: மகட்போக்கிய நற்றாய் தெய்வத்திற்குப் பராஅயது.

—†குடவாயிற் கீரத்தனார்.

வரி

3. தாள் - மூட்டுவாயில் விலங்கச் செறிக்கும் கடையாணி; கடிகை - காம்பு. 4. குறும்படை - கோட்டை; மழவர் - வீரர்; குறும் படைத்த வீரர் என்றுமாம். 5. முனை ஆ - பகைப் புலத்தவாய நிரை.

5 - 7. 'முனைதந்து........பேண்மார்' - என்றது முனையிடத்து ஆவை மீட்டு, முரம்பின்கண்ணே வெட்சியாரை வீழ்த்த மறவரது பதுக்கையெனக் கூட்டுக; வலிய ஆண்மையாலிட்ட பதுக்கை; பதுக்கைக் கடவுள் என்றான், பதுக்கைக் கல்லிற் கடவுளுறை தலான்.—

9. தோப்பிக் கள் - நெல்லாற்செய்யுங் கள்; துரு - செம்மறிக்குட்டி. 10. கவலைய சுரம் - அருவழிகளையுடைய நெறி; 11. துணிந்து- போக்கை நிச்சயித்து.

14. கோவல் - திருக்கோவலூர். 15. கொடுங்கால் என்னும் ஊர். கொடுங்காலிற் 16. பெண்ணையாற்றின் 15. முன்றுறை.

18. ஆற்றிய - செலுத்திய; துணை - தலைவன்.

1. உள்ளாளாய்ப் 11. பிறளாயினளாயினும் என்க. 2. புலம்பும்படி 11. பிறளாதல்.

4. மழவர் - மழநாட்டார். 17. பேதைக்குத் 18. துணை என்க.

பி - ம். 8. துடிபடத். †அம்மூவனார். அவர்.

## 36. மருதம்

பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்
கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி
யாம்பன் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்
5 தரில்படு வள்ளை யாய்கொடி மயக்கித்
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு
நாட்கய முழக்கும் பூக்கே ழூர
வருபுனல் வையை வார்மண லகன்றுறைத்
10 திருமரு தோங்கிய விரிமலர்க் காவி
னறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு
வதுவை யயர்ந்தனை யென்ப வலரே
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய
னாலங் கானத் தகன்றலை சிவப்பச்
15 சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி
நாரரி நறவி னெருமை யூரன்
றேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி
னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென்

20 றெழுவர் நல்வல மடங்க வொருபகன்
முரசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீர ரார்ப்பினும் பெரிதே.

என்பது: †தலைமகள் பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனொடு புலந்து சொல்லியது.

—மதுரை நக்கீரர்.

வரி

2. கோளிரை - அதற்குக் கூற்றமாகிய இரை; 17. நார்-பன்னாடை; நறவினையுடைய எருமையூர். 20. ஓர்நாள் ஒரு பகலிலே பொருதுழக்கு மென்ப.

12. அலர் 23. ஆர்ப்பினும் பெரிது என்க.

3. ஆம்பன் மெல்லடை கிழியவும் குவளை மலர் 4. சிதையவும் எழுந்து பாய்ந்து எனக் கூட்டி, மெல்லடை கிழிய எழுந்து, குவளைமலர் சிதையப் பாய்ந்தென அறுக்க.

வேட்டுவன் தூண்டிலிற் கோத்த இரையை இலையின்கீழ்க் கிடந்த வாளை நுகர்ந்து, தூண்டிற்றுவக்கு விடாது இலைகிழிய எழுந்து குவளைப்பூ முறியப் பாய்ந்து அக்குவளையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி, நாட்காலத்தே எல்லாரும் காணக் கயத்தை உழக்குகின்றாற்போல, நின்பாணனுடைய நெஞ்சுவலிதாய்ப் புறம்பு மெல்லிதாயிருக்கின்ற இன்சொல்லாலே அப்பரத்தையர் நலத்தை நுகர்ந்து, அப்பரத்தையர் தாய்மார் நெஞ்சுவருந்த அவ்விடத்தை விடாத அன்புடனே போந்து, நாங்கள் நுமது திறங் கண்டு வருந்த இங்கே வந்து, குவளைமலர் சூழ்ந்த வள்ளைபோலும் எங்கள் சுற்றத்தார் மயங்க அவர்களை வருத்தி, ஊரை யெல்லாம் இப்படி எல்லாரு மறியக் கலக்குவாயொருவனல்லையோ என்றவாறு.

பி - ம். 10. வரிமலர். 11. மகளிரொடு. †தலைமகன் பரத்தையிற் பிரிந்து வரத் தலைமகள் புலந்து சொல்லியது.

## 37. பாலை

மறந்தவ ணமையா ராயினுங் கறங்கிசைக்
கங்கு லோதைக் கலிமகி ழுழவர்
பொங்கழி முகந்த தாவி னுண்டுகள்

மங்குல் வானின் மாதிர மறைப்ப
5 வைகுபுலர் விடியல் வைபெயர்த் தாட்டித்
தொழிற்செருக் கனந்தர் வீட வெழிற்றகை
வளியொடு சினைஇய வண்டளிர் மாஅத்துக்
கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்
புளிப்பத னமைத்த புதுக்குட மலிர்நிறை
10 வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடைக்
கயமண்டு பகட்டிற் பருகிக் காண்வரக்
கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்
கோல்வரைந் தன்ன வாலவிழ் மிதவை
வாங்குகை தடுத்த பின்றை யோங்கிய
15 பருதியங் குப்பை சுற்றிப் பகல்செல
மருத மரநிழ லெருதொடு வதியுங்
காமர் வேனின் மன்னிது
மாணல நுகருந் துணையுடை யோர்க்கே.

என்பது: 1. தலைமகள் தோழிக்கு வன்புறையெதிரழிந்து சொல்லியது.
2 பிரிவுணர்த்திய தோழி சொல்லியதூஉமாம்.
பொங்கழி யென்பது தூற்றுப்பொலி.

—விற்றூற்று மூதெயினனார்.

வரி

1. மறந்து அவ்விடத்துத் தங்காராயினும் என்றது, அங்கு மறந்து அமைகுவர் என்பது கொண்டு. 1 - 2 கறங்கிசைக் கங்குல் - பள்ளியெழுச்சிக் காலம். ஒதை - ஆளழைக்கு மாரவாரம். 3. பொங்கழி - தூற்றுப்பொலி; தாவில் - வலியில்லாத; துகள் - கூளம்: 4. மங்குல்வானின் - இருண்ட மேகம்போல. 5. வைகு புலர்விடியல் - இராப்பொழுது வைகின இருள்புலர்கின்ற விடியல்; ஆட்டி - அலைத்து; கடாவிடுதல்.

6. தொழிற் செருக்கால் வந்த மயக்கம். எழிற்றகையையுடைய வாய். 7. மா - அத்துச்சாரியை; மாவில். 8. வடித்தல் - உறந் திடுதல். 9. புளிப்பதன் - மாதுளங்காய் முதலாகிய சில்பதம்: அமைத்தல்: புளிக்குஞ் செவ்வி புண்டாக்கப்பட்ட என்றுமாம் ; புதுக்குடங்களின் மிகுகின்ற நிறை - ஆகுபெயர் : ஊறினசாரம் என்றவாறு.

10. வெயிலிடத்து மூதுகு புறந்தோன்ற நட்ட: இதழ் - தோடு; பகக் குடை - செவ்வியிலாக்கின பனையோலைக்குடை.

10 - 11. குடையாற் பருகி.

12. விரவி - விரவ; 13. கோல்வரைந்தா லொத்த என்க. மிதவை - கூழ்; 14. வாங்கு கை - வலித்துண்ணுங் கை; தேர்ந்துண்டல் விலக்குதல்.

15. பருதிபோன்ற செந்செந்நறுபை; சுற்றி - கூடாகச சுற்றி; 16. எருதொடுவெதிதல், * சாதி கூறியது.

18. நலத்தை யனுபவிக்குந் துணையுடையோர்க்கு 17 நல்ல வேனில்: மன் - அது கழிந்ததென்றாள்; என்றது நம் காதலர் மறந்து அமையாராயினும் இதுதான் துணையுடையோர்க்கு நல்ல காலம்; அது நமக்கென் என்றாள். 2. உழவர் 5. ஆட்டிப் 11. பருகி 15. சுற்றி என்க.

11. பருகி 14. உண்டபின் என்க.

ம். 1. ணமைகுவ. 13. கோலமை. * அசதி கூறியது.

## 38. குறிஞ்சி

விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
றெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தார
னஞ்சிலை யிடவ னாக வெஞ்செலற்
கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி
5 வருதல் வாய்வது வான்றோய் வெற்பன்
வந்தன னாயி னந்தளிர்ச் செயலைத்
தாழ்வி லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்
றூசன் மாறிய மருங்கும் பாய்புட
னாடா மையிற் கலுழ்பில தேறி
10 நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலங்
கண்ணென மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்
குலவுப்பொறை யிறுத்த கோற்றலை யிருவி

கொய்தொழி புனமு நோக்கி நெடிதுநினைந்து
15 பைதலன் பெயரலன் கொல்லோ மைதோய்
கயவெள் ளருவி சூடிய வுயர்வரைக்
கூஉங்க ணஃதெம் மூரென
வாங்கதை யறிவுறன் மறந்திசின் யானே.

என்பது: 1. தோழி தலைமகன்குறை கூறியது.
2. பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியதூஉமாம்.*
3. தோழி குறிபெயர்த்திட்டுச் சொல்லியதூஉமாம்.

— வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

வரி

2. தெரிதல் - தீதுகழித்தல்.

4. வலந் தெரிந்து - வலத்தை ஆராய்ந்துகொண்டு. துணை - தலைவி; படர்ந்துள்ளி - வருந்திநினைந்து. 5. வாய்வது - வாய்ப்புடையது; மெய்யென்றபடி. 6. வந்தனனாயின் - அங்ஙனம் வந்தானாயின். 7. வீழ்கயிறு - தாழ்கயிறு.

8. மாறுதல் - ஆடாதொழிதல். மருங்கும் - பக்கத்தையும்.

10. இதழ் நெருங்கிக் கலந்த நீலம்.

12. எடுத்தல் செல்லாதென்றான் கனத்தால்; தடக்குரல்-பெரிய கதிர்.

13. குலவுப்பொறை - வளைந்தபாரம்; இறுத்த - முறித்த; கெடுத்தலுமாம்; கதிர்த்தலைபோய்க் கோற்றலையாயிற்று.

*"தன்குறி தள்ளிய தெருளாக் காலை, வந்தனன் பெயர்ந்த வறுங்கள நோக்கித், தன்பிழைப் பாகத் தழீஇத் தேறல்" என்ற துறைக்கு உதாரணமாகக் காட்டி, "இதனுள் ஊசன் மாறுதலும், புனமும் தன்குறி தள்ளிய இடன்; மறந்திசின் என்றது தெருளாக்காலை; கூங்கண்ணது ஊரென உணர்த்தாமையின் இடையீடுபெடுவதன்றி அவன்கண் தவறுண்டோவெனத் தன் பிழைப்பாகத் தழீஇயினாள். இது சிறைப்புறமாக வரைவுகடாயது" என்றார் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். களவி. 20)

பாங்கியாடிடம் விடுத்துக்கொண் டகற்றற்கு உதாரணமாகக் காட்டினார் அகப்பொருள் விளக்க உரைகாரர். (சூத். 156.)

13 - 14. இருவிப்புனம்: புனத்தையும் பார்த்து. நெடிது - பெரிதாக; நினைந்தெனவே எல்லாம் கூறியவாறு.

15. பைதலனாய்ப் போகமாட்டாது வருந்துகின்றான் அவன்றே என்றாள். பெயரலன் என்று அங்கே அறுத்து, பின் தோழி தன்னுள்ளே * யரற்றல் கூறிற்றாக்குக.

16. அயவெள்ளருவி - சுனையினின்றும் தாழ்ந்து விழுகின்ற வெள்ளருவி.

18. ஆங்கு - அவ்விடத்து; அது அதை என்று ஈறு திரிந்தது. அதனை என விரியும். அதனை அறிவுறுத்துதல் மறந்தேன், அதனால் 15. தேய்வோனாக என்றாள். 4. தலைவி நோவாளாக* 6. வந்தனனாயின் 15. பெயரலன் என்க.

பி - ம். 7. காவிலோங்கு. 3. பாய்புடை. 15. போகுவன்.

## 39. பாலை

ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்
துள்ளியு மறிதிரோ வெம்மென யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவ லழுங்க
நோய்முந் துறுத்து நொதுமன் மொழியனின்
5 னுப்கல மறப்பினோ மற்றே சேணிகந்
தொலிகழை பிசைந்த வொலிசொரி யொண்பொறி
படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுன் மீமிசை வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயி னோடலி
10 னதர்கெடுத் தலறிய சாத்தொ டொராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்
தினந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு
ஞான்றுதோன் றவிர்சுடர் மான்றுற் பட்டெனக்
கட்பட ரோதி நிற்படர்ந் துள்ளி
15 யருஞ்செல வாற்றா வாரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாய னவ்வி பட்டென

* 'யாற்றல்' என்றும் படிக்கலாம்.

விலங்குவளை செறியா விருத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்
டின்னகை யினைய மாகவு மெம்வயி
20 னூடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவி
னேற்றேக் கற்ற வுலமரல்
25 போற்றா யாகலிற் புலத்தியா லெம்மே.

என்பது: பொருண் முற்றிய தலைமகன் தலைமகளைக்கண்டு சொல்லி யது. இப்பாட்டு நிலத்தாற் பாலை.

—மதுரைச் சேங்கண்ணனார்.

வரி

1. ஒழித்தது - ஸ்திரீ விஸநம்பண்ணலாகாதென்று முன்னோர் கழித்தது. பழித்தல் - அதனை இகழ்தல். இரவலர்க்கு இட இல்லாமல் அவரை யொழித்ததனைப் பழித்தவென்றுமாம். வழியிலே போந்து.

4. முந்துறுத்து - தோற்றுவித்து; நொதுமல் மொழியல் - எதின்மை சொல்லாதேகொள்.

5. ஆய்நலம் - ஆயத்தாரால் ஆராயப்பட்ட அழகு; ஆயத்தார்க்கு விநோதமிது; மற்று - வினைமாற்று.

6. பிசைதல் - ஒன்றோடொன்று தேய்த்தல்; ஞெலி - கடையப்பட்ட மூங்கில்; ஆகுபெயர். 7. ஞெமல் - சருகு.

6 - 7. ஒண்பொறி மறையப்பொத்தி என்க. பொத்த எனத் திரிக்க.

8. முளி புல் - உலர்ந்த ஊகம் புல்; மூங்கிலுமாம்; என்னை: 'புறக்காழனவே புல்லெனப் படுமே' (தொல். பொருள். மாபு. 85.) என்றாராகலின். உறூஉ - உறுத்தி; உறுத்த என்க.

9. ஓடுவயின் ஓடல் - காற்றோடின இடமெங்கும் ஓடுதல்.

10. அதர் கெடுத் தலறிய சாத்தொடு - வழியற்றுக் கூப்பிட்ட சாத்தொடே; சாத்தரொடு 15. ஒருரோஎன 16. பரந்துபட்ட பாயல் - ஒருரோவென்னும் அநுகரணத்துடன் சாத்தரொடு பரந்து கண்படுபாயல் எனக் கூட்டுக. 16. படுதல் - கண்படுதல்; பாயல் - சயனம்.

13. ஞான்று தோன்று அவிர் சுடர் - வீழ்கின்றபோது தாழ்ந்து தோன்றுகின்ற சுடர்; மயங்கிப் பட்டதாக: ஆல்-அசை. கள் - வண்டு; படர்தல் - வந்து படிதல்; படர்ந்துள்ளி - நினைந்து நினைந்து.

15-16. காட்டில் அருவழியில் பரந்துபட்ட பாயல். ஒருரோஎன - பொதுக்கென; குறிப்புமொழி; அநுகரணமுமாம்; பரத்தல் - வேண்டினபடி கிடத்தல்; பாயலிடத்து 18. நின்னைக் கண்டெனக. 16. நவ்வியைப் பட்டா லொப்பத் 17. தாழ்ந்த நோக்கத்துடனே.

17-18. மெலிவாற் கழன்று விழுகின்ற வளையை யேறத் தடுக்கி, நிலத்தைக் காலாற் கிறுகின்ற வருத்தமுடையையாய் நின்ற நின்னை யென்க. கவிழ்ந்து நிற்றலாற் றாழ்ந்த நோக்கமாயிற்று.

19. * இன்னகாய்! இனையமாகவும் - நாங்கள் இப்படிப் போந்து தனித்து வருந்தவும்.

19-20. எம்மிடத்து நீ ஊடுகின்ற ஊடல் யாங்கு வந்ததென்க, எனச் சொல்லி, என்று சொல்லெச்சமாக்கி ஒரு சொல் வருவிக்க யாழ - அசை.

21. கோடு - பக்கம்; குவவுதல் - திரண்டு சிறுகுதல்; நீவி - துடைத்து. உளரிய - கோதிய; நன்னர் அமையம் - நல்ல பொழுது; என்றது கனவிற்கண்ட பொழுதாகலான்.

---

* இவ்வடிமுதலாக 'வாயல்கன' வென்பதீறாக நின்ற அடிகளைக் "கனவு முரித்தா லவ்விடத் தான" என்ற சூத்திரத்திற்கு உதாரணமாகக் காட்டினர் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். பொருளி. 3)

23. *வறுங்கை காட்டிய கனவாவது - புணர்ச்சி போலேயிருந்து பொய்படுத்தின கனவு; கையில் ஒன்றுள்ளது போலப் பிடித்துப் பின் வறுங்கை காட்டுதல் வழக்கு.

23-24. கனவிடத்துத் துயிலேற்றுக் காணாது ஏக்கற்ற துயரம்.

25. போற்றா யாகலின் - நீ புத்திபண்ணா யாகலின்; எம்மைப் புலக்கின்றா யன்றே யென்றான்.

20-21. புலவி தீர அவள் அளகமும் நுதலும் நீவினான்.

பி - ம். 6. மிசைந்த. 8. றுறு அவிழ். 13. மான்றாழ்பட்.

## 40. நெய்தல்

†கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
5 வசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தாழை தளரத் தூங்கி மாலை
யழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்துநம் மருளா ராயினு
10 மறாஅ லியரோ வவருடைக் கேண்மை
யளியின் மையி னவணுறை முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ணாரை
15 செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை

---

*"இதனுள் 'வறுங்கை காட்டிய வாயல் கனவி' னென நனவின்றிச் சென்றவற்றைத் தலைவன் கூறியவாறு காண்க." என்றார் நச்சினார்க்கினியரும் (தொல். பொருள். கற்பு. 5.)

† 'நெய்தற்கு மாலையும் வந்த' தென இவ்வடியினைக் காட்டாகக் காட்டினர் நச்சினார்க்கினியர் (தொல். பொருள். அகத்திணை. 8.)

யகமடற் சேக்குந் துறைவ
னின்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே.

என்பது: தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழிக் கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

—குன்றியனார்.

வரி

2. பாடெழுந்து - ஒலி மிக்கு. 3. தொழுதி - தொகுதி. 4. குவை - திரட்சி. 5. அசைவண்டென்பது, தாமிருந்த நீர்ப்பூவை விட்டுக் கோட்டுப்பூவேறப் போவோமோ இல்லேமோவென்று அசைதல். அல்குறு காலை - எல்லாம் தம் பதிகளிலே சென்று தங்கும் அந்திக்காலம். 6. தளர - ஒல்க; தூங்கி - அசைந்து. அல்குறு காலை என்றதற்கு ஈங்கே 6. மாலையென்று பெயரிட்டார்.

7. பிரிந்திருப்பார் அழிதற்கு வந்த கீழ்காற்று; 6. தூங்கிவந்த 7. கொண்டல்; கொண்டலொடு - கொண்டலான். 9. நம்-நம்மை. 11. உறை - உறைதல். 13. ததும்பும் - ஒலிக்கும். 15. மடை - மூட்டுவாய்; கொம்பிற் றலையில் இரும்பாலும் செம்பாலும் பண்ணித் தைத்தலான் மூட்டாயிற்று. பிளிற்றி - ஒலித்து.

12. வாரற்க என்றான், இங்கு வந்தால் என்னெஞ்சிடந்து துயருறு மென்று. 4. சேர 5. அல்குறுகாலை என்க.

வெண்ணெல் அரிநர் தங் காரியஞ் செய்யப் பறைகொட்டுவிக்க, நாரை வேற்றுநிலத்ததாகிய பெண்ணையிலே சென்று தங்கித் தான் வாழுமிடமாகிய மருதநிலத்தை மறந்தாற்போலத் தங்காரியஞ் செய்ய நம்மைப் பிரிவார் இல்லைப் பிரிந்தவழி நம்முடைய நெஞ்சு நம்மை விட்டுத் தனக்கு அந்நியமாகிய மார்பிலே சென்றது என்றவாறு.

பி - ம். 6. தூக்கி. 11. னவனுறைவு.

---

* "இது பொருட்பிரிவிடைத் தோழிக் குரைத்தது. இக்களிற்றியானைநிரையுள் நெய்தற்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது" என்றார் நச்சினார்க்கினியரும். (தொல். பொருள். அகத்திணை. 3.)

## 41. பாலை

வைகுபுலர் விடியன் மைபுலம் பரப்பக்
கருநனை யவிழ்ந்த வூழுறு முருக்கி
னெரிமருள் பூஞ்சினை யினச்சிதா ரார்ப்ப
நெடுநெ லடைச்சிய கழனியேர் புகுத்துக்
5 குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
வரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவ
ரோதைத் தெள்விளி புலந்தொறும் பரப்பக்
கோழிண ரெதிரிய மரத்த கவினிக்
காடணி கொண்ட காண்டகு பொழுதி
10 னாம்பிரி புலம்பி னலஞ்செலச் சாஅய்
நம்பிரி பறியா நலனொடு சிறந்த
நற்றோ ணெகிழ வருந்தினள் கொல்லோ
மென்சிறை வண்டின் தண்கமழ் பூந்துணர்
தாதின் றுவலை தளிர்வார்ந் தன்ன
15 வங்கலுழ் மாமை கிளைஇய
நுண்பல் தித்தி மாஅ யோளே.

என்பது: தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்துக் கிழத்தியை நினைந்து சொல்லியது.

—†குன்றியனார்.

வரி

1. மை - எருமை: 8. விளங்கி. மரத்த 9. காடு. 10. அழகு கெட மெலிந்து, 11. நம்பிரிபறியா 12. நற்றோள். 13. வண்டின் - வண்டினையுடைய; வண்டினையுடைய பூங்கொத்து. 14. தாதிலுண்டான மதுத்துவலை தளிரிலொழுகினு லொத்த 15. கலுழ்மாமை; ஒழுகினுலொத்த மாமை நிறம். 15. கிளைஇய - தோற்றின.
10. சாய் 12. வருந்துகின்றாளேறே * என்க. 11. பிரிபறியாது என்று வேறறுத்து, அது 12. நெகிழ என்க.

பி - ம். 2. கருநுனை. 4. அடக்கிய. † சேரமானந்தையார்.

---

* இது, வைஷ்ணவ சம்பிரதாய நூல்களில், பிரசித்தி, தெளிவு முதலிய பொருளுடையதாய் வாக்கியவிறுதியில் வழங்கும் 'இறே' என்னுஞ் சொல்லோடு ஒப்பிடத்தக்கது. ஒரு முற்றுச்சொல் போலும்.

## 42. குறிஞ்சி

மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக்
கொயலரு நிலைஇய பெயலேர் மணமுகைச்
செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டளிரோர் மேனி மாஅ யோயே
5 நாடுவறங் கூர நாஞ்சி றுஞ்சக்
கோடை நீடிய பைதறு காலைக்
குன்றுகண் டன்ன கோட்ட யாவையுஞ்
சென்றுசேக் கல்லாப் புள்ள வுள்ளி
லென்றாழ் வியன்குள நிறைய வீசிப்
10 பெரும்பெயல் பொழிந்த வேம வைகறைப்
† பல்லோ ருவந்த வுவகை யெல்லா
மென்னுட் பெய்தந் தற்றே சேணிடை
யோங்கித் தோன்று முயர்வரை
வான்றோய் வெற்பன் வந்த மாறே.

என்பது : தலைமகன் வரைவுமலிந்தமை தோழி தலைமகட்கூச் சொல்லியது.

— கபிலர்.

வரி

1. பெயலால். 2. கொய்யலருமை பூவின் மிகுதியால்; பெயலுக்கு எழுச்சி பெற்ற முகைவெரிந் கண்ணுக்கு உவமை. 5. தொழி லின்றித் துஞ்சும் நாஞ்சில். 6. நீரில்லாத. 9. வீசி - உதவி. 13. தோன்றும் 14. வெற்பன். 13. வரை - பக்கமலை.

14. வந்தமாறு - வரையவந்தபடி சொல்லில் 11. பல்லோ ருவந்த உவகை யெல்லாம் 12. என்னுட் பெய்தந்தற்று எனக் கூட்டி, 3. மழைக்கண்ணும் 4. தளிர்மேனியும் வேறுபட்டு நீ வருந்தாமல்

* 'சென்றுசேக் கல்லாப் புள்ள...குளம்' என்பது 'அருங்கேடன்' என் பதுபோல நின்றது என்றார் பரிமேலழகர். (குறள் 210).

† இவ்வீரடியினையும் பயனிலை யுவமத்திற்கு உதாரணமாகக் காட்டி னார் பேராசிரியர். (தொல். பொருள். உவமை. 14)

வரைவொடு வந்தார்; அவ்வுவகை எனக்கு இவ்வாறிருந்த தென்றவாறு.

பி-ம். 1. மழைபெயக் 2. முன்முகை. 8. சேர்கல்லா.

## 43. பாலை

கடன்முகந்து கொண்ட கமஞ்சூன் மாமழை
சுடர்நிமிர் மின்னொடு வலனேர் பிரங்கி
யென்றூ ழுழந்த புன்றலை மடப்பிடி
கைமாய் நீத்தங் களிற்றொடு படீஇய
5 நிலனு விசும்பு நீரியைந் தொன்றிக்
குறுநீர்க் கன்ன லெண்ணுந ரல்லது
கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்
தளிமயங் கின்றே தண்குர லெழிலி, யாமே,
கொய்யகை முல்லை காலொடு மயங்கி
10 மையிருங் கான நாறு நறுநுதற்
பல்லிருங் கூந்தன் மெல்லியன் மடந்தை
நல்லெழி லாகஞ் சேர்ந்தன மென்று
மளியரோ வளியர் தாமே யளியின்
றேதில் பொருட்பிணிப் போகித்த
மின்றுணைப் பிரியு மடமை யோரே.

என்பது : தலைமகன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

—மதுரையாசிரியர் நல்லந்துவனார்.

வரி

2. சுடர் - ஒளி. 4. யானை யெடுத்த கை. 5. ஒன்றி - ஒன்ற. 6. குறுநீர் - நாழிகை வட்டிலில் அளவுபட்ட நீரால். கன்னல் - கன்னலே. 7. கதிர்மருங் கறியாமல் - ஆதித்த னின்னவளவிலே சென்றானென் றறியாமல்; உலகமஞ்ச. 8. தளி - தளியொடு; எழிலி - ஆகுபெயராற் காலம். 9. கொய் முல்லை, அகைத்த முல்லை. காற்றுன். மயங்குதல் - ஒன்றோடொன்று நெருங்குதல். 10. மை - பசுமை. 12. சேர்ந்தனம் - முற்று. 13. அளியர் அளியர் என்பது விரைவு.

14. முன்போகி, இக் காலத்தைக் கண்டு ஒரு வினையாது 15. பிரிந்தோர் 13. அளியரெனக் கூட்டுக. அளியரென்றது அறிவில்லாதோ ரென்றவாறு. ஓகாரம் அசை, குறிப்புமாம்.

பி - ம். 4. கழைமாய். 8. மின்குர.

## 44. பாலை.

வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவருந்
தந்திறை கொடுத்துத் தமரா யினரே
முரண்செறிந் திருந்த தானை யிரண்டு
மொன்றென வோர்ந்தன படையே நின்றோர்
5 முன்னியங் கூர்தி பின்னிலை யீயா
* தூர்க பாக வொருவினை கழிய
நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி
பொன்னணி வல்விற் புன்றுறை யென்றாங்
10 கன்றவர் குழீஇய வளப்பருங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனா னாகித் திண்டேர்க்
கணைய னகப்படக் கழுமலந் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி
15 யழும்பி லன்ன வறாஅ யாணர்ப்
பழம்பன் னெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி படிகய மண்டிய பசுமிளைத்
தண்குட வாயி லன்னோட்
பண்புடை யாகத் தின்றுயில் பெறவே.

என்பது: வினைமுற்றிமீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—†குடவாயிற் கீரத்தனார்.

---

* இவ்வடியினைப் "பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்" என்ற துறைக்கு உதாரணமாகக் காட்டி, "இதுதானு மற்ற இன்பத்தினைப் பாகற்குக் கூறியது" என்றார் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். கற்பு. 5.)

வரி

1. வினை முடித்தல் - வினையை ஆக்குதல். 2. தந்திறை - தமக்கு நிச்சயித்திருந்த திறை; தமராயின ரென்றது-பரிகரமாயினா ரென்றவாறு. 4-5. படையின் முன்னே இயங்குகின்ற நின்றோராகிய ஊர்தி; பின்னிலை யியாதென்றது, இனிப் பின்னிற்றலைக்கூடாதென்றவாறு. 6. ஒருவினை யென்றது, மீண்ட நேர்களை ஒரு வினையாய் என்க; கழிய வென்றது, இச் சுரத்தை நாம் கழிய என்றவாறு.

7. நன்னன் முதலாயினார், சேரன்படைத்தலைவர். 11. பருந்துபலவு முண்டாகப் பண்ணிப் போர் செய்து; பழையன், சோழன் படைத்தலைவன். 13. கணையன், சேரன் படைமுதலி; முன் சொன்னவர்க்குப் பிரதானி; கழுமலம் - ஓர் ஊர்; 14. பிணையலங் கண்ணி - கட்டின கண்ணி; அல், அம்-சாரியை. சென்னி 18. குடவாயில் என்க. 15. அழும்பிலன்ன என்றதே தொடங்கிக் 18. குடவாயிற்கு அடை. அழும்பில்-பாண்டிநாட்டூர்.

15. அழும்பிலன்ன 17. காட்டுப் 15. புதுவருவாயுடைய குடவாயில். 16. பரவை - குடிப்பரப்பு. 17. பொங்கடி - யானை கயம்-கயத்தையும்: நெருங்கிய மிளையையும். மண்டுதல் - நெருக்கம்.

19. துயில்பெற 6. ஊர்க பாக எனக் கூட்டுக. 9. ஆங்கு - அசை. 'என்று' என்றது, 'என்று சொல்லப்பட்ட' என்று ஒரு சொல்லை ஏற்கும். 19. பண்புடையாகம், நாம் செல்லுமளவும் இறந்துபடா தாற்றியிருந்த பண்பு.

பி - ம். 4. உறைந்தன. பணையே. 6. கழீஇய. 10. கடமூர். † உறையூர்ச் சல்லியங்குமரனார்.

## 45. பாலை

வாடா வூழுஞ்சில் விளைநெற் றந்துணை
ராடுகளப் பறையி னரிப்பன வொலிப்பக்
கோடை நீடிய வகன்பெருங் குன்றத்து
நீரிலா ராற்று நிவப்பன களிறட்
டாளி லத்தத் தழுவை யுகளுந்

காடிறந் தனரே காதலர் மாமை
யரிநுண் பசலை பாஅய்ப் பீரத்
தெழின்மலர் புரைதல் வேண்டு மலரே
யன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
10 றொன்னிலை முழுமுத றுமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரிய
ரின்னிசை யார்ப்பினும் பெரிதே யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்
தாதி மந்தி போலப் பேதுற்
15 றலந்தனெ னுழல்வென் கொல்லோ பொலந்தார்க்
கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வான வரம்ப னடன்முனைக் கலங்கிய
வுடைமதி லோரரண் போல
வஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே.

என்பது: வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—வெள்ளிவீதியார்.

வரி

1. துணர் - நெற்றின் கொத்து. 2. பறை - கரடிகை; அரிப்பன ஒலிப்ப - விட்டுவிட்டு இசைப்ப. 4. ஆராறு - போதற்கரிய வழி; நிவப்பன களிறு - ஓங்கின களிறு. 5. உகளுதல் - திரிதல். 7. அரிநுண் பசலை - ஐதாய நுண்ணிதான பசலை. 13. கெடுத்தல் - காணுதொழிதல். 15. உழறல் - தேடித் திரிதல்; உழல்வேனோ வென்றாள், இறந்துபடுதலை நினைந்து. 16. கடல்கால் கிளர்தல் என்பது, கடலிடம் கிளர்தல் என்றவாறு. வேலாற் கடலோட்டினானாதலால், கிளர்ந்த என்றார்; கிளர்தல் - புடைபெயர்தல்.

17-18. முனையாற் கலங்கிய மதிலாகிய ஓரரண் என்க. 18-19. அரண் போலத் துஞ்சாதுழல்வேனோ என்றாள், இறந்துபடுதலை நினைந்து; அரண் - ஆகுபெயர்.

பி - ம். 3. வியன்பெருங்.

## 46. மருதம்

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
5 வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறரு மொருத்தியை நம்மனைத் தந்து
10 வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென்
15 னொண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ.*

என்பது: வாயில்வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயின்மறுத்தது. †

— அள்ளூர் நன்முல்லையார்.

வரி

7. புலக்கேம் - புலப்பேம்; அதற்கு யாரோ நீ யென்க. ஐகாரம் இடைச் சொல்; என்ன உறவினை நீ என்றபடி; வாருற்று நீட்சியுற்று. 8. உறை யிறந்து-மழைக்கால்வீழ்ச்சியைக் கடந்து. 9 - 10. பிறரு மொருத்தியை வதுவையயர்ந்தாய் என்றுநின்றார்கள்; என்று சொல்லுகின்றவர்கள் நம் மனையிலே கொண்

* ஆசிரியம் ஓகாரத்தான் இற்றமைக்கு இதனையே காட்டாகக் காட்டினர் உரையாளர் பலரும். † "இது வாயின் மறுத்தது" என்றும், 'வண்டூது பனிமல' ரெனவே வைகறையும் வந்த தென்றும், "செல்லாக் காலைச் செல்கென விடுத்தது" என்றும், "உறுகண் காத்தற்பொருட்டாகத் தலைவி வருந்தினும் நீ செல்லென்றாள், தலைவன் செல்லாமை அறிதலின்" என்றும் கூறினர் நச். "வண்டூது பனிமல' ரெனப் பிறர்க்குரிய மகளிரென

வந்து சொல்லாநின்றார்கள் என்றவாறு; தருதல் - அவளைச் சொல்லும்பொழுது அவளைப் புகுதவிட்டுச் சொல்லுதல். 11. கூறேம் - நீ யயர்ந்தா யென்று யாங்கள் சொல்லேம். 12. ததைய நூறும் - போர் சிதையக் கெடுக்கும். 14. அள்ளூர் - அள்ளியூர்; அன்ன என்னுடைய. 15. நெகிழ்தல் - கழறல். 14. 'என்' என்றாள் தானவளென்னும் வேற்றுமை யின்மையால். 15. ஒண்டொடி என்று ஆகுபெயரால் தலைவியை ஆக்கி அவள் மெலியினும் மெலிக வென்பாரு முளர். 16. சென்றீ - செல்; ததைக்குநர் - விலக்குவார்.

6. வண்டூது பனிமல ரென்றது, இராக்கால மானபடியாலே வண்டு உள்ளே ஊதும் மலர்.

ஊரான் தனக்கு நிலையென்று புகுதப்பட்ட கொட்டிலை நீராலுஞ் சாணகத்தாலுந் தானே சேறாக்கிக்கொண்டு, தளையையு மறுத்துக்கொண்டு, பழனத்துக்குக் காவலாகிய வேலியையுங் கோட்டா லெடுத்து, மீன்க ளிரியத் தாமரையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி, மலர்ச்சி யின்றி வண்டொடு குவிந்த தாமரையை ஆர்ந்தாற்போல, நீயே ஆதரித்துக் கொள்ளப்பட்ட இவளை நீ தானே வேறுபடுத்தி நாணமாகிய தளையையு மறுத்துக்கொண்டு, பரத்தையர்க்குக் காவலாகிய விறலியையும் பாணனாகிய கோட்டாலே நீக்கி, அப் பரத்தையருடனுறையும் தோழிமாரிய அப்பரத்தையருடைய தாய்மாரையும் மயக்கி, அகமலர்ந்துன்னை எதிரேற்றுக் கொள்ளாத மகளிரை நுகர்வானொருத்த னல்லையோ என்றவாறு.

பி - ம். 9. யெம்மனை. 13. கொற்கைச். 14. ரன்ன வெம்மொ.

## 47. பாலை

அறிவி னுள்ளம் வழிவழிச் சிறப்ப
வினையிவண் முடித்தன மாயின் வல்விரைந்
தெழுவினி வாழிய நெஞ்சே யொலிதலை

வும், அவரை நயப்பா யெனவும் உள்ளுறையுவமம் மருதத்துக்கண் வந்தது" என்றார் பேரா. (தொல். பொருள். 3, 147, 239, 304.)

யலங்குகழை நரலத் தாக்கி விலங்கெழுந்து
5 கடுவளி யுருத்திய கொடிவிடு கூரெரி
விடர்முகை யடுக்கம் பாய்தலி னுடனியைந்
தமைக்கண் விடுநொடி கணக்கலை யகற்றும்
வெம்முனை யருஞ்சுர நீந்திக் கைம்மிக்
ககன்சுடர் கல்சேர்பு மறைய மனைவயி
10 னொண்டொடி மகளிர் வெண்டிரிக் கொளாஅலிற்
குறுநடைப் புறவின் செங்காற் சேவல்
நெடுநிலை வியனகர் வீழ்துணைப் பயிரும்
புலம்பொடு வந்த புன்கண் மாலை
யாண்டுளர் கொல்லெனக் கலிழ்வோ ளெய்தி
15 யிழையணி நெடுந்தேர்க் கைவண் செழியன்
மழைவிளை யாடும் வளங்கெழு சிறுமலைச்
சிலம்பிற் கூதளங் கமழும் வெற்பின்
வேய்புரை பணைத்தோட் பாயு
நோயசா வீட முயங்குகம் பலவே.

என்பது: தலைமகன் இடைச்சுரத்து அழிந்த நெஞ்சிற்குச் சொல்லியது.

— ஆலம்பேரிச்சாத்தனார்.

வரி

1. வழிவழி - மேன்மேலும். 3. தழைத்த தலை. 4. விலங்கு - பக்கம். 5. கடுவளி - சூறுவளி. உருத்திய - வெப்பமுறப் பண்ணிய. 6 - 7. பரத்தலான், அமையிற் கண்விடுகின்ற ஓசை. 8. முனை - போர் செய்யுமிடம். 10. திரிக் கொள்ளுதலால், 12. பயிரு மென்க. 16 - 17. சிறுமலை யென்னும் பெயரினையுடைய வெற்பு; சிலம்பு - பக்கமலை. 18. தோளிடத்துப் பரந்த நோய். 19. அசா - நோயான் வரும் வருத்தம்.

2. வினை முடித்தனமாயின் 19. பலபடியாக முயங்குவேம் 3. எழு நெஞ்சே என்றான். 8. நீந்தி 14. எய்தி என்க.

பி - ம். 5. யருத்திய. 7. கலைக்கணம். 12.ரிளந்துணை.

## 48. குறிஞ்சி

அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
* பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி யதன்றிறம்
யானுந் தெற்றென வுணரேன் மேனாண்
5 மலிபூஞ் சாரலென் றோழி மாரோ
டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யென்னும் பூசறோன்ற
வொண்செங் கழுநீர்க் கண்போ லாயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
10 பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்
டியாதோ மற்றம் மாதிறம் படரென
வினவி நிற்றந் தோனே யவற்கண்
15 டெம்முள் ளெம்முண் மெய்ம்மறை பொடுங்கி
நாணி நின்றனெ மாகப் பேணி
ஐவகை வகுத்த கூந்த லாய்நுதன்
மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யு முளவோ வென்றனன் பையெனப்
20 பரிமுடுகு தவிர்த்த தேர னெதிர்மறுத்து
‡ நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
பகன்மா யந்திப் படுசுட ரமையத்

---

* இது "பசியட நிற்றல்" என்றும், செவிலி கூற்றென்றும் கூறுவர் பேரா. (தொல். பொருள். 270, 510.)

† "இது புலிகாத்தற்கு வந்தானென இட்டுரைத்தது" என்பர் நச். (தொல். பொருள். 207.)

‡ இது "உருவு நிறுத்த காமவாயில்" என்பர் பேரா. (தொல் பொருள். 273.)

தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
25 * மகனே தோழி யென்றனள்
அதனள வுண்டுகோண் மதிவல் லோர்க்கே.

என்பது: செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடுநின்றது. †

—தங்கால் முடக்கோற்றனார்.

வரி

1 வேண்டு - நான் சொல்லுகின்றதனை விரும்பு. 4. தெற்றெனத் - தெளிய; தோன்ற; 7. பூசல் தோன்ற - தோன்றிற்றாக. 8. கண் - மகளிர் கண். இதழ்-பூ. 9. ஊசியாற் கோத்துச் சுற்றின பூமாலை; ஊசி போறலான் அல்லி யென்று போகல்; அது கழித்துத் தொடுத்த என்றுமாம். 11. குயம் - முலை. குயமண் டாகம், மார்பிற் கடை; நீவி - பூசி உதிர்த்து. 12. வரி - சித்திரம்; வரிதலுமாம். 13. மா படர் திறம் யாது? திறம்-வழி; 14. நிற்றந்தோன்-நின்றேன். 15. மெய்ம்மறை பொடுங்கி - முதுகிலே மறைந் தொடுங்கி.

16. பேணி 17. வகுத்த கூந்தல்.

18. மைமீரோதி மகளீர் என்று ஒரு பெயர்ப்படுத்தி ஒன்றுக்குக. 19. என்றனளுய். 20. எதிர் மறுத்து நோக்குதல் - எதிர்த்துப்பார்த்துப் பார்த்துவிட்டபின் பார்த்தல். 21-22. நோக்கிச் சேறல் - நோக்கா நின்று போதல். 23. பகற் பொழுது மாய்கின்ற அந்திப் பொழுது; படு சுடரை யுடைய பொழுது. 14. தேஎம் - திக்கு; மகனே - ஒரு புருஷனே: என்று வியந்து கூறிற்று; புலி யென்னுங் காட்டிலே வந்து உதவினன் என்றவாறு. 26. அதனளவாக வுண்டோர் கோட்பாடு விசாரிப்பார்க்கு. ‡ கோள் - விசாரம்.

* இது தலைவனை ஏத்தல் என்றும், † "இது செவிலி கூற்றினைத் தோழி கொண்டு கூறியது" என்றும், ‡ "அதனளவுண்டு கோல்,' என்று பாடங்கொண்டு "துணிவின்கண் ஐயஞ் சிறிதுநினைத்தல்" என்றும் கூறுவர் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். 115, 207.)

7. புலி யென்பது, வேங்கை மலர் கொய்யத் தாழ்ந்து கொடுக்கு மென்றோர் பேதைத் தன்மை. அதுவும் மலையில் வாழ்வார்க்கு உள்ளதோர் பண்பு.

பி - ம். 9. மூசு போகிய. 18. மகளிர். 26. இதனள வுண்டுகொல்.

## 49. பாலை

கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோ
ளளியு மன்புஞ் சாயலு மியல்பு
முன்னாட் போலா ளிறீஇயரென் னுயிரெனக்
கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
5 கடுங்கட் கறவையிற் சிறுபுற நோக்கிக்
குறுக வந்து குவவுநுத னீவி
மெல்லெனத் தழீஇயினே னாக வென்மக
ளன்ன ளாகத் திடைமுலை வியர்ப்பப்
பல்கான் முயங்கினண் மன்னே யன்னோ
10 விறன்மிகு நெடுந்தகை பலபா ராட்டி
வறனிழ லசைஇ வான்புலந்து வருந்திய
மடமா னசாவினந் திரங்குமரல் சுவைக்குங்
காடுடன் கழிதல றியிற் றந்தை
யல்குபத மிகுத்த கடியுடை வியனகர்ச்
15 செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழற் போலக்
கோதை யாயமொ டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்பவவ
ளாடுவழி யாடுவழி யகலேன் மன்னே.

என்பது : உடன்போயின தலைமகளை நினைந்து செவிலித்தாய் மனையின்கண் வருந்தியது.*

—† வண்ணப்புறக் கந்தரத்தனார்.

---

* இப் பாட்டினை இத்துறைக்கே உதாரணமாகக் கொண்டு "'அல்குபத மிகுத்த கடியுடை வியனகர்' என செல்வுடைமை கூறியவதனானே வேளாண் வருணமென்பது பெற்றாம்" என்றார் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். 15. 42.)

வரி

1. வெய்யோன் - பெயர். 2. இயல்பு - செய்தி. 3. முன்னாட் போலாமை, அவனொடு கூட்டத்தாலே வேறுபட்டிருத்தல்; என-எனச் சொல்லி. 4. கொடுங்தொடை - வளைந்த கால்; வயின்மரம் - மரத்துவயினென்க. ஓரிடத்து மரம் என்றுமாம். 5. கடுங்கட் கறவை - விரைந்து விரைந்து கன்றைப் பார்க்கின்ற பசு; இன்-உவமம்; சிறுபுறம் - முதுகு. 8. இடை முலை - முலையிடை. 9. முயங்குதல் - தழுவுதல்; மன் - கழிவு; அதனை அறியப்பெற்றிலேன் என்றவாறு. போக்கை நினைந்து, வியர்த்தும் பல்கால் முயங்கிற்று. அன்னோ - ஐயோ! 10. பாராட்டி - தன்னைக் கொண்டாடி. 11. வற்கடமா யுலறின நிழலிலே தங்கிக் 13. கழித லறியின் என்க. 11. மேகத்தை வெறுத்து வருந்திய மடமானாகிய இனம். 13. உடன் - அவளும் அவனுங் கூட. 14. பதம் - சோறு. 15. மெய்ந்நிழல் - அவள் மெய்யினிழல்......... 17. திரட்சி; 15. மெய்ந்நிழல் போல 18. அகலேன் என்க.

பி - ம். 1. குறுகச் சென்று. † வண்ணப்புறக்கல்லாடனார்.

## 50. நெய்தல்

கடல்பா டவிந்து தோணி நீங்கி
நெடுநீ ரிருங்கழிக் கடுமீன் கலிப்பினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கெளவை தூற்றினும்
மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப்
5 பகலு நம்வயி னகலா னாகிப்
பயின்றுவரு மன்னே பனிநீர்ச் சேர்ப்ப
னினியே, மணப்பருங் காமந் தணப்ப நீந்தி
வாரா தோர்நமக் கியாஅ ரென்னாது
மல்லன் மூதூர் மறையினை சென்று
10 சொல்லி னெவனோ பாண வெல்லி
மனைசேர் பெண்ணை மடிவா யன்றி
றுணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்

கண்ணிறை நீர்கொடு கரக்கு
மொண்ணுத லரிவையா னென்செய்கோ வெனவே.*
என்பது: தோழி பாணனுக்குச் சொல்லியது.

—† கருவூர்ப் பூதஞ்சாத்தனுர்.

வரி

1-2. 'அவிந்து' 'நீங்கி' என்று நின்ற செய்தெ னெச்சங்களைத் திரித்துச் செயவெனெச்சமாக்கக், கடலோசையவிந்தாற் றோணியுள்ளே புகுமென்றபடியாம்; நீங்க என்றார் அக்காலம் பார்த்துக், கடுமீன்-சுறு முதலியன, கவித்தல் - செருக்கொடு திரிதல். அவிய - அவிந்த காலத்திலே. 4. பாணி - தாமத காலம். 5. பகலும் என்ற உம்மை ...........; 6. பயின்று - அடுத்து; மன், அது கழிந்தது; ஏகாரம் ஈற்றசை; வரும் என்பது முற்று. 7. மணப்பருங் காமம்-களவுக்காலத்துக் கூடுதற்கரிய வேட்கை; தணப்ப - இது தமக்கு நீங்குகையாலே; நீந்தி - கழித்து. 8. யாரென்னுது - என்ன உறவினரென்னுது. 12. ஒன்று துணை என்க; ஒன்றுதல் - கூடுதல்; பிரியினும் என்ற உம்மை எச்சவும்மை, நெடும் பிரிவின்றி இணைந்து ஒன்றுதலை பிரியினுமென்றமையான். துஞ்சா என்று பன்மை கூறினர், இப்படியே அவ்வினங்கள் செய்வனவென்று. 13. ஆற்றுத்தன்மை பிறரறியாமை மறைத்துச் செலுத்தும்.

* இப்பாட்டினை "மெல்லியற் பொறையும் நிறையும்" என்ற துறைக்கு உதாரணமாகக் காட்டி, "இதனுட் காம மிகுதியால் கண்தாமே அழவும், கற்பிற் கரக்குமெனத் தலைவி பொறையும் நிறையும் தோழி பாணற்குக் கூறினள், அவன் தலைவற்கு இவ்வாறே கூறுவனெனக் கருதி. "இனி' என்றதனுல் கற்பும் பெற்றும்" என்றார் நச்சினர்க்கினியர் (தொல். பொருள். 152)

"எவ்வி, மனைசேர்......வெனவே" என்பது துன்பத்துப் புலம்பல்; என்பது, பிரிவாற்றுது துன்புறுங்காலை, அவ்வாற்றுமை தலைமகற்கின்றித் தானே துன்புறுகின்றுளாகச் சொல்லுதல். அவை கூட்டத்தை வெறுத்த குறிப்பாயினும் அக்கூட்டத்திற்கே நிமித்தமாகும், ஆராய்ந்துணரி னென்றவாறு' என்பர் பேரா. (தொல். பொருள். 270.)

கூடி நீங்கிப்போம் வழியிலே தாம் வருங்காலத்தும் அலர் தூற்றினரா யினும் பயின்றுவரும் முன்; இப்பொழுது வேட்கை நீங்குதலான் வரு கின்றிலர்; அங்ஙனம் வாராதோர் நமக்கு என்ன உறவினரென்றது, துஞ்சாகாணென்று சொல்லி, கண்ணிறை நீர்கொடு கரக்கும்: யான் இதற்கு என் செய்வேனென்று நீ இதனைச் சொல்லின் என்னும் பாணனே எனப் பாணனுக்குத் தோழி கூற்றுக்குக. 13. இதற்கென்றது அன்றில் துஞ்சா வருத்தத்தை நோக்கி. 11. மடிவாய் - வளைந்த வாய்.

பி - ம். 11. மடல்வா. †கருவூர்ப் பூதனார்மகனார் கொற்றனார்.

## 51. பாலை

ஆள்வழக் கற்ற சுரத்திடைக் கதிர்தெற
நீளெரி பரந்த நெடுந்தா ளியாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லெ னுயர்சினை
முடைநசை யிருக்கைப் பெடைமுக நோக்கி
5 யூன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
யெருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனி லீடிய வேயுயர் நனந்தலை
நீயுழந் தெய்துஞ் செய்வினைப் பொருட்பிணி
பல்லிதழ் மழைக்கண் மாஅ யோள்வயிற்
10 பிரியிற் புணர்வ தாயிற் பிரியா
தேந்துமுலை முற்றம் வீங்கப் பல்லூழ்
சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளு
மனைமுதல் வினையொடு முவப்ப
நினைமா ணெஞ்ச நீங்குதன் மறந்தே.

என்பது: பொருள்வயிற் பிரிவுகடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

—† பெருந்தேவனார்.

வரி

2. மிக்க உஷ்ணம். 9. வயின் - இடத்தினின்றும். 10-11. தம்மிற் பிரியா தேந்தின முலை. முற்றம் - பரப்பு. 13. மனைமுதல் - தலைவி; வினை - இல்வாழ்க்கை.

8. அப்பொருட் கூட்டம் 10. பிரிவாயிற் புணர்வது. அங்ஙனம் பிரிய நினையாது 13. இல்வாழ்க்கைத் தொழிலொடு நிகழும்படி 14. நினையாய் நெஞ்சே என்றான். என்றது, பிரியில் இவள் இறந்து படும் என்பது கருதி.

பி - ம். 10. பிரியப்புணர்வ. †கடுகு பெருந்தேவனார்.

## 52. குறிஞ்சி

வலந்த வள்ளி மரனோங்கு சாரற்
கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமக
ளின்னா விசைய பூசல் பயிற்றலி
5 னேக லடுக்கத் திருளளைச் சிலம்பி
னாகொள் வயப்புலி யாகுமஃ தெனத்த
மலைகெழு சீறூர் புலம்பக் கல்லெனச்
சிலையுடை யிடத்தர் போதரு நாட
னெஞ்சமர் வியன்மார் புடைத்தென வன்னைக்
10 கறிவிப் பேங்கொ லறியலங் கொல்லென
விருபாற் பட்ட சூழ்ச்சி யொருபாற்
சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
யின்னுயிர் கழிவ தாயினு நின்மக
ளாய்மல ருண்கட் பசலை
15 காம நோயெனச் செப்பா தீமே.

என்பது: தலைமகள் வேறுபட்டமை யறிந்த செவிலித்தாய்க்குத் தோழி யறத்தொடுநிற்குமெனத் தலைமகள் சொல்லியது. *

—†நொச்சிநியமங்கிழார்.

வரி

1-2. மரனோங்கு சாரலிடத்து வலந்த வள்ளியையுடைய கிளர்ந்த வேங்கை யென்க. 9. நெஞ்சமர் வியன் மார்பு - நம்முடைய நெஞ்சம் மேவினவனுடைய பெரிய மார்பைக் காரணமாக

* "இது சிறைப்புறமாக "விட்டுயிர்த் தழுங்கல்" என்றும், "செறிவு நிறையுஞ் செம்மையுஞ் செப்பு, மறிவு மருமையும் பெண்பாலான" என்ற

வுடைத்து 14. உண்கட்பசலை என்க. 10. அறியலங்கொல் லெனை - அறிவியாதொழியக் கடவேமோ என. 11. ஒருபாற் 12. சேர்ந்தன்று - சொல்லக்கடவதான ஒரு கூற்றிலே சேர்ந் தது. 15. சொல்லுமிடத்துக் காமநோயென்று இங்ஙனம் விளங் கச் சொல்லாது கூட்டமின்றிட்டத்தாற் சொல்லுக வென்றவாறு.

வேங்கையைக் கொடிசூழ அவ்வேங்கையிலே அலருண்டான அளி வில் ஆண்டுவாழுமறவர் புலி புலி என்று பூப்பறித்தற்குச் சொன்ன அர வத்தாலே ஊரெல்லாம் ஆரவாரித்தாற்போல அவரை நாம் தலைப்பெய்த வளவிலே அலர் பிறந்ததாக அவ்வலர் முதற்சீராலே முகிழ்முகிழ்த்துப் பின்னை யெல்லாரு மறிந்தது என்றவாறு.

பி - ம். 10. அறிவியேங்கொல். †மாற்றூர் கிழார்மகனார் கொற்றங் கொற் றனார்.

## 53. பாலை

அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளங்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி ரெறித்த விடுவாய் நிறைய
நெடுங்கான் முருங்கை வெண்பூத் தாஅய்
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சில்
உள்ளுநன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
10 விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோ

---

இலக்கணத்தோ டொத்தமைந்தது "இன்னுயிர் கழிவ...... தீமே" என்றது என்றும் கூறுவர், நச். இனிப் பேரா. இவ்வடிகளை "வாழ்க்கை முனிந்து தலைமகள் சொல்லியது" என்பர். (தொல். பொருள். 111, 209, 271.)

'ஏகலடுக்கம்' என்பதில் 'ஏ' பெருக்கத்தையும் அடுக்குதலையும் உணர்த்திற்று என்றார் நச். (தொல். சொல். 305.)

ரெழுத்துடை நடுகல் லின்னிழல் வதியு
மருஞ்சுரக் கவலை நீந்தி யென்று
மில்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
15 பொருளே காதலர் காத
லருளே காதல ரென்றி நீயே.

என்பது : வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

— சீத்தலைச்சாத்தனார்.

வரி

1. அறியாய் காண். 2. திகிரி - ஆதித்தன் 3. எறித்தலாற் பிளந்த பிளப்பு. 4. தாஅய் - தாவ. 5. நிரம்பா - தொலையாதாய் 6. அப்பிண வொடு 11. வதியும் 12. சுரம். 7. கோழரையுழிஞ்சில். 9. பொரியரை புதைத்துப் பற்றிக் கிடக்கிற. 10. விழுத்தொடை- தப்பாத தொடை. 14. வல்லா - மாட்டா; 15. காதலர் காதல் பொருளே.

14. நம்மேல் அருளே காதலரென்று நின்று யாதலால். 1. அறியாய் காண் என்க.

12. நீந்திக் 15. காதலித்தது என்க.

வேறு நிழலில்லாமையால் 11. கல்லின் நிழல் இனிய நிழலாயிற்று.

## 54. முல்லை.

விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் றீம்பெயற்
காரு மார்கலி தலையின்று தேரு
மோவத் தன்ன கோபச் செந்நிலம்
5 வள்வா யாழி யுள்ளுறு புருளக்

* இப்பாட்டினை இத்துறைக்கே உதாரணமாகக் கொண்டு, பிரிதல் நிமித்தமென்றும், தலைவன்கண் நிகழ்ந்தது தலைவி நினைந்து தோழிக்குக் கூறியது என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 14, 43.)

* கடவுக காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயங்
10 கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனைமனைப் படரு நனைநகு † மாலைத்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
15 புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி
‡ முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மக னொற்றி
வருகுவை யாயிற் றருகுவென் பாலென
20 விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குலெங் காதலி
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே.

என்பது: வினைமுடித்து மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—†மாற்றூர்கிழார் மகனார் கொற்றங்கொற்றனார்.

உரை

1. (விருந்து-) புதுமை; தெறுப்ப - குவிப்ப. 2. வேந்தன் - தான் துணையாகப் போன வேந்தன். 3. ஆர்கலி தலையின்று - ஆரவாரத் தோடு பெய்தது; தலையிற்று என்பது தலையின்று என மெலிந்

---

* "இது பாகற் குரைத்தது" என்றும் † "முல்லைக்கட் காரும் மாலையும் வந்தது" என்றும், ‡ "கார்காலத்து மீள்கின்றான் முகிழ் நிலாத் திகழ்தற்குச்சிறந்த வேனிலிறுதிக்கண் தலைவிமாட்டு நிகழ்வனகூறி,அவை காண்டற்குக் கடிது தேரைச் செலுத்தென்றது" என்றும், "முல்லைக் கண் வேனில் வந்தது" என்றும், வேந்தன் பகைமையைத் தான்தணிவித்தமை கூறலின் அந்தணன் தூதிற் பிரிந்தமை பெற்றாம்" என்றும் கூறினர். நச். (தொல். பொருள். 6, 12, 26.)

தது. 4. ஓவம் போன்ற நிலம்; ஓவம் - சித்திரம். 5. உள்ளூற் றுருள; உள்ளூறுதல் - பெயலால் நனைதல்.

7. தாம்பாற்கட்டின குழவியிடத்தே தன் வீங்கின சுரை மடியவேண் டிக் 8. கனைக்கின்ற குரலவாய்க் கற்செலவைப் பயிலச்செய்து 12. மனைதோறும் படரும் என்க.

9. பயநிரைக் 7. குழவியையுடைய 12. மனை எனச் சேர்ப்பாருமுளர்; 9. பாற்பசுவினம்.

10. கொடுமடி - அடகுபறித்திடுதற்குக் குழியக்கோலின மடி. 11. பின்றை - ஆயத்தின்பின்; தூங்க - மெத்தென நடக்க. 12. நனை நகுமாலை - மொட்டு மலரும் மாலைக் கண்ணே. 16. இனிதாக வார்த்தை சொல்லி.

17. முகிழ்நிலா - முகிழ்க்கின்ற... திங்கள் - விளி. 18. பொன்னுடைய புலிப்பற்றாலி; * ஒற்றி - நினைந்து. 20. ஒருக்கடித்துப் பார்க் கும் கண்ணளாய்; விரலால் அழைத்து.

22. பூங்கொடிநிலை 6. காண்குவம் கடவுக என்க.

பி - ம். கடவிக் காண்குவம். 19. பயனிரையாயம். 15. புன்கானெல்லி. †நொச்சி நியமங்கிழார் மகனார்.

## 55. பாலை

காய்ந்துசெலற் கனலி கல்பகத் தெறுதலி
னீந்து குருகுருகு மென்றாழ் நீளிடை
யுளிமுக வெம்பா லடிவருத் துறலின்
விளிமுறை யறியா வேய்கரி கானம்
5 வயக்களிற் றன்ன காளையொ டென்மகள்
கழிந்ததற் கழிந்தன்றோ விலளே யொழிந்தியா
னூதுலைக் குருகி னுள்ளுயிர்த் தசைஇ
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு

---

* "வருவதொற்றி" என்னுமிடத்தும் 'ஒற்றல்-நினைதல்' என்றார் அடியார்க்கு நல்லார். (சிலப். அரங்கேற். 65.)

* கண்படை பெறேன் கனவ வொண்படைக்
10 கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண் ணாணிய சேர லாத
னழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
வின்னா வின்னுரை கேட்ட சான்றோ
ரரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர்
15 பெரும்பிறி தாகி யாங்குப் பிறிந்திவட்
காதல் வேண்டியெற் றுறந்து
போதல் செல்லாவென் னுயிரொடு புலந்தே.

என்பது: புணர்ந்துடன்போன தலைமகட்கிரங்கிய தாய் தெருட்டுமயலி லாட்டியர்க்கு உரைத்தது.

— மாமூலனார்.

வரி

3. உளிபோன்ற முகத்தையுடைய பரல். 4. விளிமுறையறியா-இன்ன விடத்தில் இன்ன கேடுவருமென்று அறியாத; காடு; 6. ஒழிந்து-விட்டிருந்து. 9. கனவ - தாய்வெருவ. 11. புண் - புண்ணுக்குத் தானழிந்தமை. 12. வாள் - வாளொடு. 13. இன்னா இன்னுரை யாவ்து - மரிக்கின்றானென்ற இன்னாமையும், புறப்புண் பட்ட பழிதீர இருந்து உயிர்விடுகின்றானென்கிற இனிமையுமுடைய உரை. 14. உலகம்-வீரசுவர்க்கம் 15. இவட்காதல் வேண்டி - இவ்வுலகி லிருந்த ஆசையால். 16. என்னைப் பிரிந்துவிட்டுப் போதல்.

17. புலந்து - புலந்தேனெனத் தன்மை வினையாக்குக. உயிரொடு புலந்து 6. அழிந்ததென்பாருமுளர். 6. ஒகாரம் - ஒழியிசை: 9. கணைக் கண்டு வருந்தும்படி. 17. போகாதிருக்கின்ற என்னுயிரொடென்க.

சான்றோர்தங்களுக் கவ்வன்னியனாகியவன் வடக்கிருந்த வழி அச்சான்றோர் உயிர்துறந்தமாத்திரமும் யான் மாட்டிற்றிலேன் என் மகளுக்கு என்று அதற்கு நோகின்றேன் என்றவாறு.

பி - ம். 8. போலுமவல நெஞ்சமொடு.

---

* "தாய்க்கு முரித்தாற் போக்குடன் கிளப்பின்" என்ற சூத்திரத்திற்கு இவ் வடியை உதாரணமாகக் காட்டினர் நச். (தொல்.பொருள். 198.)

## 56. மருதம்.

நகையா கின்றே தோழி நெருநன்
மணிகண் டன்ன துணிகயந் துளங்க
விரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை
யாம்பன் மெல்லடை கிழியக் குவளைக்
5 கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்டா தீர்ம்புறத் துறைப்ப
மெல்கிடு கவுள வல்குநிலை புகுதருந்
தண்டுறை யூரன் றிண்டா ரகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
10 பரிவொடு வருஉம் பாணன் றெருவிற்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யாழிட்
டெம்மனைப் புகுதந் தோனே யதுகண்டு
மெய்ம்மலி யுவகை மறையினெ னெதிர்சென்
றிம்மனை யன்றஃ தும்மனை யென்ற
15 வென்னுந் தன்னு நோக்கி
மம்மர் நெஞ்சினோன் றொழுதுநின் றதுவே.

என்பது: பரத்தைமனைக்குச் செல்கின்ற பாணன் தன்மனைக்கு வந்தானைத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—† மதுரை அறுவைவாணிக னிளவேட்டனார்.

வரி

2. மணி - பளிக்கு மணி. 3. இரும்பாற் செய்தா லொத்த கருங்கோடு. 7. மெல்கிடுதல் - அசையிடுதல். அல்கு நிலை - தங்குமிடங்களிலே. 8. அகலம் 9. புணர வேண்டி 9. வதுவை ஒப்பனை யுடைய, புதுவோர் - பரத்தையர். 13. மெய்மலி உவகை - உடம்பு பூரிக்கும்படி யெழுந்த உவகை. 15. நோக்கி - விசாரித்து.

இரும்பியன்றன்ன கருங்கோட் டெருமை கயங் கலங்க ஆம்பன் மெல்லடை கிழியக் குவளைக் கூம்பிவிடு பன்மலரை மாந்திக் காஞ்சி நுண்

* இது "பிறன் பேதைமை பொருளாக நக்கது" என்றார் பேரா. (தொல். பொருள். 252.)

டாது புறத்துறைப்ப மெல்கிடு கவுளவாய்த் தங்குநிலைக்கட் புகுதரு மென்றது, இரும்பு போன்ற நெஞ்சினை யுடையராகிய பரத்தையர் ஊர்முழுதுங் கலங்கத் தான் முன்பு கூடின பரத்தையர்தாய்மார் கலங்க, அப்பரத்தையர் அவ்வாம்பற்பூப்போலக் குவியக், குவிதல்விட்ட குவளை மலர் போலும் பூப்பெய்து கொள்ளப்பட்ட பரத்தையரை நுகர்ந்து வருகின்ற காலத்து, வழியிலகப்பட்ட சேடியர் முதலாயினரை நுகர்ந்து, பின்னுஞ் சிலரைக் கூடக் கொடுநாக்கெதிர்ந்துகொண்டு, நம்மனையிலே தங்குதற் பொருட்டு வருகின்றான் என்று தோழிக்கு வாயின்மறுத்தது.

4. குவளைக் 5. கூம்புவிடு பன்மலரென்றதனானே, ஆம்பற்பூக் குவிதல் கொள்க. பூ ஆண்டுக் கூறிற்றிலரேனும் குறிப்பினாற் கொள்க.

15. என்னுந் தன்னும் நோக்கி என்றது, எனது இகழ்ச்சியும் தனது இளிவரவும் நோக்கி என்க.

பி. ம். † அறுவை வாணிக னிளவேட்டனார்.

## 57. பாலை

* சிறுபைந் தூவிச் செங்காற் பேடை
நெடுநீர் வானத்து வாவுப்பறை நீந்தி
வெயிலவி ருருப்பொடு வந்துகனி பெறாஅது
பெறுநாள் யாண ருள்ளிப் பையாந்து
5 புகலேக் கற்ற புல்லெ னுலவைக்
குறுங்கா லிற்றிப் புன்றலை நெடுவீழ்
திரும்பிணர்த் துறுகற் றீண்டி வளிபொரப்
பெருங்கை யானை நிவப்பிற் றூங்குங்
குன்ற வைப்பி னென்றாழ் நீளிடை
10 யாமே யெமிய மாகத் தானே
பசுநிலா விரிந்த பல்கதிர் மதியிற்
பெருநல் லாய்கவி னொரீஇச் சிறுபீர்
வீயேர் வண்ணங் கொண்டன்று கொல்லோ
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
15 முதுநீர் முன்றுறை முசிறி முற்றிக்
களிறுபட வெருக்கிய கல்லென் ஞாட்பின்

னரும்புண் ணுறுநரின் வருந்தினள் பெரிதழிந்து
பானாட் கங்குலும் பகலு
மானா தழுவோ ளாய்சிறு நுதலே.

என்பது; பொருள்வயிற் பிரிந்த தலைமகன் கிழத்தியை நினைந்து சொல்லி யது.

—நக்கீரர்.

வரி

2. நெடுநீர் - நெடியதன்மை; பறையால் நீந்தி; அவ்வானத்தை நீந்தித் 4. தான் முன்பு களிபெறுநாளின் வளனை நினைந்து. 5. புகுதலுக்கேக்கற்ற - பயனில்லாமையின் மரங்களைப் புகுதலின் எக்கற்ற; உலவையை உடைய 6. இற்றி; உலவை - கொம்பு. 8. நிவப்பு-ஒக்கம்;...யானை நிவப்பை ஒத்த 6. விழுது 7. கல்லைத் தீண்டி வளி பொருதலால் 8. அசையும் என்க. 9. குன்றவைப்பு- மலைகளையுடைய ஊர். 11. பசுநிலா - குளிர்ந்த நிலா; கதிர் - கிரணம்; மதியின் - மதிபோன்ற; 15. முதுநீர் - கடல்; 16. எருக் கிய - கெடுத்த; 17. அரும்புண் - தீர்தற்கரிய மருமத்திற்புண். 19. நுதல் 13. வீயோர் வண்ணம் கொண்டு பரந்ததோ, பரந் திலதோ என்க.

பி - ம். 4. பெயர்ந்து. 8. ஞேன்றுங். 16. வருத்திய.

## 58. குறிஞ்சி

இன்னிசை யுருமொடு கனைதுளி தலைஇ
மன்னுயிர் மடிந்த பானாட் கங்குற்
காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறாஅது
வரியதட் படுத்த சேக்கைத் தெரியிழைத்
5 தேனாறு கதுப்பிற் கொடிச்சியர் தந்தை
கூதிரிற் செறியுங் குன்றநாட
வனைந்துவர லிளமுலை ஞெமுங்கப் பல்லூழ்
விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே
10 நும்மில் புலம்பினும் முள்ளுதொறு நலியுந்
தண்வர லசைஇய பண்பில் வாடை

பதம்பெறு கல்லா திடம்பார்த்து நீடி
மனைமர மொசிய வொற்றிப்
பலர்மடி கங்கு னெடும்புற நிலையே. *

என்பது: சேட்படுத்துவந்த தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

— மதுரைப் பண்டவாணிக னிளந்தேவனார்.

வரி

1. தலைஇ.........3. வேட்டத்து - வேட்டையிடத்து; விளிவிடம்-. உறங்குமிடம்; முடிவிடமுமாம். 4 வரியதள் - புலித்தோல்; சேக்கையிடத்துக் 6. கூதிர்க்காலத்து இல்லிலேவந்து செறியும். 7. பண்ணினாற்போலே வருதலையுடைய மூலை. பல்லூழ் 8. புறஞ்சுற்ற 9. அடையுமநனினும். 10. புலம்பின் - புலம்பால். 11. குளிர்ந்த வரவோ டசைகிற; பண்பு-குணம். 12....காலம்; நீடி-தாழ்த்து; தன் வருத்தந் தோன்ற. 13. மனைமரம் முறிய வளைத்து 14. எல்லாரும் உறங்கவும் தான் உறங்காது நெடுங்காலம் நிற்கிற புறநிலை. 9. இனிதாயிற் றென்க.

சேட்படுத்து வருதல்......தான் செய்தொழிற்கு இடம்பெறாது கூதிர்க்காலத்து இல்லிலே செறியும் குன்றநாட என்றதனாற்பயன், புறத்து வினையில்லாக்காலத்து எம்மை நினைக்கின்றாய் என்றாளாம்.

---

* இப்பாட்டினைப் "பெற்றவழி மலியினும்" என்ற சூத்திரத்திற்கு உதாரணமாகக் காட்டி, "முயக்கம் இனிதென மகிழ்ந்து கூறுவாள் நம்மில் புலம்பால் வாடைக்கு வருந்தினேம் என்றலி னிரண்டுங்கூறினாள்" என்றார் நச். (தொல். பொருள். 111)

இனிப் பேராசிரியர் 'வினைந்துவரவிள மூலை......கின்றே' என்ற அடிகளை உதாரணமாகக் காட்டி, "இவை களவியலுள் உயிர்மெலிந்தவிடத்துப் புணர்ச்சிநிமித்தமெனக் கூறப்பட்டவையின்றியும் புணர்ச்சி நிகழ்ந்தவாறு" என்றும், இது கண்டவழி உவத்தலாகாதோ எனின், ஆண்டுத் தன் உவகை கூறாளன்றே கரந்திடத் தொழிந்தாளாகலின் என்பது என்றும், இது கிழத்திகூற்று என்றும், அதனைத் தலைமகன் கேட்டது என்றும் கூறுவர். (தொல். பொருள். 268, 502, 508.)

## 59. பாலை

தண்கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்ப்
பெருந்தகை யிழந்த கண்ணினை பெரிதும்
வருந்தினை வாழியர் நீயே வடாஅது
*வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
5 யண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போலப்
புன்றலை மடப்பிடி யுணீஇய ரங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட்
படிஞிமிறு கடியுங் களிறே தோழி
10 சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்
சினமிகு முருகன் றண்பரங் குன்றத்
தந்துவன்† பாடிய சந்துகெழு நெடுவரை
யின்றீம் பைஞ்சுனை யீரணிப் பொலிந்த
தண்ணறுங் கழுநீர்ச் செண்ணியற் சிறுபுறந்
15 தாம்பா ராட்டிய காலையு முள்ளார்
வீங்கிறைப் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்
டருஞ்செயற் பொருட்பிணி முன்னிநப்
பிரிந்துசே ணுறைநர் சென்ற வாறே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்குத் தோழி சொல்லியது.

—மதுரை மருதனிளநாகன்.

---

* “ நீனிற வண்ண னன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ண னோக்கிற் பழியுடைத் தென்று கண்டாய்
வேனிறத் தானை வேந்தே விரிபுனற் றொழுனை யாற்றுட்
கோனிற வளையி னார்க்குக் குருந்தவ னொசித்த தென்றான்.”

எனச் சிந்தாமணியினும் (209) இக் கதை கூறப்பட்டுள்ளது.

† இவர் ‘நல்லந்துவனார்’ என்னும் புலவர். “கையாற் றலை தொட்டேன் தண்பரங் குன்று” என்பது இவர் வாக்கு. “திறைகடன் முகந்து” என்று தொடங்கும் பரிபாடலிற் காண்க.

வரி

1. மலரினுடைய 2. பெருந்தன்மை. 5. அண்டர் - இடையர். 6. மரஞ்செல மிதித்த மால்:—ஆயர்பெண்கள் குளியாநின்றார் களாக, அவர் இட்டுவைத்த துகிலெல்லாம் பின்னை எடுத்துக் கொண்டு குருந்தமரத்தேறினாராக, அவ்வளவில் நம்பிமூத்த பிரான் வந்தாராக, அவர்க்கு ஒருகாலத்தே கூடமறைதற்கு மற்றொரு வழியின்மையின் ஏறிநின்ற குருந்தமரத்துக் கொம் பைத் தாழ்த்துக்கொடுத்தார், அதற்குள்ளே அடங்கி மறைவா ராக. அவர் போமளவுந் தானையாகவுடுக்கத் தாழ்த்தா ரென் பாரு முளர்.

7. குழை - தழை. 8. ஒற்றி - விளைத்து; மதத்தானனைந்த கவுளிற் 9. படிகிற ஞிமிற்றைக் கடியும் களிறே 18 கணவர் சென்ற ஆற்றின்கண்; அவர் இது கண்டு வருவரென்று ஆற்றுவித்தாள். 10. மருங்கு - சுற்றம். 11 - 12. குன்றமாகிய வரை. அந்து வன் - ஒரு புலவன். அத்து, சாரியை. சந்து - சந்தனம். 13-14. பைஞ்சுனையிற் கழுநீர். சூட்டணிப் பொலிந்த - பெரிய ஒப்பனையாற் பொலிவுபெற்ற. சென்னுதல் - கைசெய்தல்; சென்னுதலாற் சென்னென்று கொண்டைக்குப் பெயராயிற்று. இயறல் - அசைவருதல். 15. உள்ளாராய்ப் 18. பிரிந்து தாழ்க்க உறைகின்றவர் போனவழி என்க.

பி - ம். 7. வங்குழை. 9. படுஞிமிறு. 11. சீர்மிகுமுருகன். 13. சுண் டிப் பொலிந்த.

## 60. நெய்தல்

பெருங்கடற் பரப்பிற் சேயிறா நடுங்கக்
கொடுந்தொழின் முகந்த செங்கோ லவ்வலை
நெடுந்திமிற் றொழிலொடு வைகிய தந்தைக்
குப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோ
5 றயிலை துழந்த வம்புளிச் சொரிந்து
கொழுமீன் றடியொடு குறுமகள் கொடுக்குந்
திண்டேர்ப் பொறையன் றொண்டி யன்னவெ

பொண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய
வூதை யீட்டிய வுயர்மண லடைகரைக்
10 கோதை யாயமொடு வண்ட றைஇ
யோரை யாடினு முயங்குநின் னொளியெனக்
கொன்னுஞ் சிவப்போள் காணின் வென்வேற்
கொற்றச் சோழர் *குடந்தை வைத்த
நாடுதரு நிதியினுஞ் செறிய
15 வருங்கடிப் படுக்குவ ளறனில் யாயே.

என்பது: தலைமகற்குத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

—குடவாயிற் கீரத்தனார்.

வரி

2. கோல் - வலையிற்கட்டின கோல்; வலையை யுடைய 3. திமில், தொழிலொடு - தொழிலால். 5. அயிலை - ஒருமீன்; அயிலை யொடு வலந்த புளி; புளி யென்றூர் புளியிட்ட கறியை. 6. தடி - கருவாடு; கொடுக்கும் 7. தொண்டி. 8. ஞெமுக்குதல் - வளைதா னிட்டுத் தழும்பாதல்; பரப்புதலுமாம். ஒண்டொடியென்று தலைவியையாக்கி யவளை நெருக்காதேகொள் என்பாருமுளர். 11. உயங்கும் - மடங்கும். 12. கொன்னும் சிவப்போள் - ஒரு பயனின்றியுங் கோபிக்கு மவள்: காணின் - இவளைக் காணில். 15. காவற் படுத்துவளாதலான், 7. ஞெமுக்காதே கொள் என்றூள்.

திமிற்றொழிலொடு வைகிய தந்தைக்கு இளமகளானவள் மீன் கொண்டு வருதற்கு முன்னே தான் உப்பு விற்ற நெல்லாலே ஆக்கப்பட்ட மூரல்வெண் சோற்றையும் புளிக்கறியையும் சொரிந்து கொழுமீன் தடி யொடு கொடுத்தாற் போலத் தாம் வரைதற்குத் தாமும் புறம்பே முயல, நாங்களும் அறத்தொடுநிலை வகையால் ஈங்கே முயல்வேம் எனச் சொல் லியவாறுக்குக.

பி - ம். 5. அயிரை. 8. ஞெமுங்கா.

* குடவாயில் என்பதனைக் குடந்தை யென மேலையோர் திரித்தார் என்பர் பேராசிரியர். (தொல். பொருள். 392.)

## 61. பாலை

*நோற்றோர் மன்ற தாமே கூற்றங்
கோளுற விளியார்பிறர் கொளவிளிந் தோரெனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்
நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்
5 தாழல் வாழி தோழி தாழா
துருமெனச் சிலைக்கு மூக்கமொடு பைங்கால்
வரிமா ணோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
யருநிறத் தழுத்திய வம்பினர் பலருட
னண்ணல் யானை வெண்கோடு கொண்டு
10 நறவுநொடை நெல்லி னாண்மகி ழயருங்
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ வரிதே முனாஅது
15 முழவுறழ் திணிதோ ணெடுவே ளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி யன்னநின்
னொண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூ ணாகம் பொருந்துதன் மறந்தே.

என்பது: தலைமகன் பொருள்வயிற்பிரிய வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

—மாமூலனார்.

வரி

1-2. கூற்றங் கோடலுற விளிதல் - உபகாரமின்றி வெறிதே மரித்தல்; பிறர் கொள விளிதல் - பிறர் தம் கைப்பொருள் கொள்ளும்படி மரித்தல்; என்றது, உபகாரத்தோடே மரித்தல். 3. தாள் - உற்சாகம். 4. இழைத்தல்-கீறுதல். 5. ஆழல்-அழுந்தாதே. 12. மழ-

* "இப்பாட்டின் மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தாரே துறக்கம் பெறுவரெனத் தன் சாதிக்கேற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலைத் தோழி கூறினள்" என்றார் நச்சினார்க்கினியர். (தொல். பொருளதி. 44.)

புலம் வணக்குதல் - மழவர்தேயத்தை வணக்கி, அவரைத் திறை கோடல். 14. அங்கே பழகவிருத்த லரிது. முனது - பழைய தான. 16. பொதினி - ஊர். 18. மறந்து 13. வேங்கடம் பெறினும் 14. பழகுவராதல் அரிதென்க.

பி - ம். 7. வரிமரனேன்ஞாண் வார்சிலை.

## 62. குறிஞ்சி

* அயத்துவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வா
யாகத் தரும்பிய முலையள் பணைத்தோண்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
5 மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயு மறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிற் புணர்வுபிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்செலற் கருமையிற்
கடும்புனன் மலிந்த காவிரிப் பேரியாற்று
10 நெடுஞ்சுழி நீத்த மண்ணுநீர் போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருந
லாக மடைதந் தோளே வென்வேற்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
யொளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
15 கடவு ளெழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே.

என்பது : அல்லகுறிப்பட்டுழித் தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது

—பரணர்.

வரி

1. முருந்து - வேரின்மேற்றண்டு. 2. நகை - ஒளி. 3. பேயுமறியா மறையமை புணர்ச்சி - களவின்கட் புணர்கிறபோது பேயு மியங்

* "களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்' என்பதனல் தலைவியாற் குறிபெற்றும் தோழியை இரக்கும்" என்று கொண்டு அதற்கு இப் பாட்டினை உதாரணமாகக் காட்டுவர் நச். (தொல் பொருள். 102)

காது வைகு காலத்துப் புணர்ச்சி. மறை - இரகசியம். 7. பூசற் றுடியின் - துடிபோல; புணர்வு பிரிந்திசைப்ப - தங்களிற் கூடியும் தனித்தும் அயலார் சொல்லுவன; புணர்ந்தகாலத்து மேனி அழகாலும், பிரிந்தகாலத்து மேனி வேறுபாட்டாலும் அறிவிக்க என்றுமாம். இப் பொருட்குப் புணர்தலினும் பிரிதலினும் இசைப்ப என்க.

10-11. நீத்தம் மண்ணுநீர் போல முயங்கி - நீத்தத்திற் குளிக்குமிடத்துக் குளிருமாறுபோலக் குளிர முயங்கி என்றவாறு.

5. மழைக்கண் மாயோளென்றது, குளிர்ந்த கண்கரியோளெனக் கண்ணிற் கேற்றுக, 16. மாயோளெனப் பின்னுங் கூறுகின்றுஞ தலின்.

பி - ம். 5. வாயிதழ். 10. மண்ணுநள். அல்லகுறிப்பட்டழிந்த.

## 63. பாலை

* கேளாய் வாழியோ மகளைநின் றோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப வவனொடு
பெருமலை யிறந்தது நோவே னோவல்
கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
5 முடங்குதா ளுதைத்த பொலங்கெழு பூழி
பெரும்புலர் விடியல் விரிந்துவெயி லெறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையொடு குடையு மாங்க
ணஞ்சுவரத் தகுந கான நீந்திக்
10 கன்றுகா லொதுபுல் கண்ண செவிசாய்த்து
மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்
கறவை தந்த கடுங்கான் மறவர்
கல்லென் சீறூ ரெல்லியி னசைஇ
முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை
15 மடமயி லன்னவென் னடைமெலி பேதை

* இப் பாட்டு அச்சங் கூறிற்று என்றார், நச்சினார்க்கினியர். (தொல். பொருள். 36.)

தோட்டுணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட்
சேக்கோ ளறையுந் தண்ணுமை
கேட்குநள் கொல்லெனக் கலுழுமென் னெஞ்சே.

என்பது: தலைமகள் புணர்ந்துடன் செல்லச் செவிலி தன் மகளுக்குச் சொல்லியது.

—கருவூர்க் கண்ணம் புல்லனார்.

வரி

1. ஓ - அசை; ஐகாரம் அசை; மகளே 3. போகின்றதற்கு நோகின்றேனல்லேன், 19. கலங்கின நெஞ்சை 3. நோகின்றேன் என்க. 5. பூழியிடத்தே 8. குடையும்; 6. விடிந்தகாலத்து வெயிலெறிக்கக் *குள்ளக் குடையுமென்க. 8. குடையாநின்ற அவ்விடத்தையுடைய 9. கானநீங்கி 13. இரவின்கண் அசைந்து.

11. மன்றுநிறைதலோடு பைதல் கூரும்படி 12. கறவைக்கணம் கொண்டுபோந்த மறவர். அம் மறவர் 13. சீறூரிலே இரவுதங்கிச் 14. சோர்ந்த காலையுடைய குடிலிடத்து 16. அவன் தன் தோளே துணையாக வுறக்க வுறங்காது. 17 - 18. கடுங்கண் தண்ணுமை, சேக் கொள்ளும்பொழுது அறையும் பறை.

பி - ம். 5. புலங்கெழு. 11. கூடி 12. கடுங்கண். 14. முதுகாற்.

## 64. முல்லை

களையு மிடனாற் பாக வுளையணி
வுலகுகடப் பன்ன புள்ளியற் கலிமா
வகையமை வனப்பின் வள்புநீ தெரியத்
தளவுப்பிணி யவிழ்ந்த தண்பதப் பெருவழி
5 ஐதிலங் ககலிலை நெய்கனி நோன்காழ்
வென்வே லிளையர் வீங்குபரி முடுகச்
செலவுநா மயர்ந்தன மாயிற் பெயல
கடுநீர் வரித்த செந்நில மருங்கின்
விடுநெறி யீர்மணல் வாரணஞ் சிதரப்

* 'குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே' என்பது திருப்பாவை (13.)

10 பாம்புறை புற்றத் திர்ம்புறங் குத்தி
மண்ணுடைக் கோட்ட வண்ணல் லேஎ
றுடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
யூர்வயிற் பெயரும் பொழுதிற் சேர்புடன்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு
15 மாபூண் டெண்மணி யைதியம் பின்னிசை
புலம்புகொண் மாலை கேட்டொறுங்
கலங்கின ளுறைவோள் கையறு நிலையே.

என்பது: வினைமுற்றிமீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—ஆர்க்காடுகிழார்மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்.

வரி

3 வள்பு - வாய்க்கயிறு. தெரிய - ஆராய; போகின்ற கடுமையால் உறுமெனா றவுறுத புரவி..................தெரிந்திட என்றவாறு.

4. தண்பதம் - செவ்வி. 5. நெய் - எண்ணெய்; காழ் - வேற்றண்டு. 6. இளையர் தாளான்.........

9. நெறி - வழி; வாரணம் - காட்டுக்கோழி; சிதர - கிளர. 14. நிறை - நிறையாக. 15. ஐதியம்புதல - நடக்க நடக்க விட்டிசைக்கு மோசை 3. தெரிய நீ 7. நாஞ்செலவை விரும்பினேமாயின் 17. அவள் கையறுநிலை 1. களையுமிடமிது என்க. 9. வாரணஞ் சிதர செய்தே 15. ஆ 18. ஊர்வயிற் பெயரும்பொழுது என்க.

3. வகையமை வனப்பின் வள்பு - செலுத்துங் கூறுபாடமைந்த வனப்பினை யுடைய வார்.

பி - ம். 3. தெரிந்த. 4. பெருவளி. 13. சோர்வு. 15. ஐதியங்கின்.

## 65. பாலை

உன்னங் கொள்கையொ டுளங்கரந் துறைபு
மன்னா சொல்லு முய்க மென்னதூஉ
மீரஞ் சேரா வியல்பிற் பொய்ம்மொழிச்

* சேரியம் பெண்டிர் கௌவையு மொழிக
5 நாடுகண் ணகற்றிய வுதியஞ் சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல
வுவவினி வாழி தோழி யவரே
பொம்ம லோதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரா லின்றே மலைதொறு
10 மால்கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமி னளிசுடர்
வான்றோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅவுயர் நனந்தலை
† யுயவல் யானை வெரிநுச்சென் றன்ன
15 கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்த
லாறுகடி கொள்ளு மருஞ்சுரம் பணைத்தோ
ணறைங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிரையிதழ் பொலிந்த மழைக்கண் மகளிர்க்
20 கரிய வாலென வழுங்கிய செலவே. ‡

என்பது : வேறுபட்ட தலைமகட்குத் தலைமகன் உடன்போக்கு வலித்தமை தோழி சொல்லியது.

— மாமூலனார்.

1 - 2. உன்னங் கொள்கையொடு-நம்மனக்கருத்தை யறிந்த அறிவோடே, தானறிந்தவற்றைக் கரந்து சொல்லாதே செலுத்துகிற அன்னை; அறிந்தவை - இக்கூட்டங்காரணமாக அறிந்தவை.

---

* இது "'பாராட்டெடுத்தல், மடந்தப வுரைத்தல்' என்புழி அடங்கும் என்பது" என்றும், "பாடிச்சென்ற......வாழி' என்பது உவமை யுவமம்' என்றும் கூறுவர் பேரா. நச்சினார்க்கினியர், † "யானையின் முதுகின் மேற் சென்றன்ன என விரிக்க" என்றும், (தொல். எழுத்து. 299.) ‡ "இதனுள் அன்னைசொல்லும் பெண்டிர் கௌவையும் தலைவரும் விழுமம் என்று தலைவிக்குத் தோழி கூறினாள்" என்றும், "அம்பலும் அலரும் அஞ்சிப் போக்குடன்பட்டது" என்றும் கூறுவர். "உடன்போக்கு நயப்பித்தது" என்பர் இளம்பூரணவடிகள். (தொல். பொருள். 267, 294, 39, 225, 42.)

1-2. அன்னை மனத்திலே சிலவற்றை நினைந்து அது தோன்றாமற் சில சொல்லுகின்றவற்றையும் தப்புதும். 5. நாடு கண்ணகற்றுதல்- பிறர் நாடுகொண்டு தனதாக்குதல். 9. அவர் நம்மொடு செலவை விரும்பினர்; 7. இனி உவவாய் என்றாள். 10. மால் - மயக்கம்; காற்று வாய்த்த மிக்க எரி. எரி தோன்றும் 17. அருஞ்சுரம் 19. மகளிர்க்கு 20. அரியவெனச் சொல்லி அழுங்கின செலவு 8. நம்முடன் 9. செல்ல இன்று விரும்பினர் எனக் கூட்டுக.

16. காட்டை மேம்படச் சொல்லுதற்குக் காரணமான யானையின் 17. வழியைக் காவல்கொள்ளுஞ் சுரம். 19. மகளிர் என்றாள் பொது வகையாக.

பி - ம். 14. உறுவல்யானை. வெருவச்செலன்.

## 66. மருதம்.

இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமு மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
5 பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனந் தோழி
* நிரைதார் மார்ப னெருந லொருத்தியொடு
வதுவை யயர்தல் வேண்டிப் புதுவதி
னியன்ற வணிய னித்தெரு விறப்போன்
10 மாண்டொழின் மாமணி கறங்கக் கடைகழிந்து
காண்டல் விருப்பொடு தளர்புதளர் போடும்
பூங்கட் புதல்வனை நோக்கி நெடுந்தேர்
தாங்குமதி வலவவென் றிழிந்தனன் றாங்காது
மணிபுரை செவ்வாய் மார்பகஞ் சிவணப்

* இதனைத் தலைவி புலவிக்கட் புகழ்ந்ததற்கு உதாரணமாகக் காட்டுவர் நச். (தொல். பொருள். 228.)

15 புல்லிப் பெருமசெல்லினி யகத்தெனக்
கொடுப்போற் கொல்லான் கலுழ்தலிற் றடுத்த
மாநிதிக் கிழவனும் போன்மென மகனொடு
தானே புகுதந் தோனே யானது
படுத்தனெ னாகுத னாணி யிடித்திவற்
20 கலக்கினன் போலுமிக் கொடியோ னெனச்சென்
றலைக்குங் கோலொடு குறுகத் தலைக்கொண்
டிமிழ்கண் முழவி னின்சீ ரவர்மனைப்
பயிர்வனப் போலவந் திசைப்பவுந் தவிரான்
* கழங்கா டாயத் தன்றநம் மருளிய
25 பழங்க ணோட்டமு நலிய
வழுங்கின னல்லனோ வயர்ந்ததன் மணனே.

என்பது : பரத்தையிற்பிரிந்த தலைமகற்கு வாயிலாய்ப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—† செல்லூர்க் கோசிகன் கண்ணனார்.

வரி

2. எய்துப - சேர்வர். 3. காட்சி - அழகு. 6. வாய்த்தனம் - மெய்த்தனம், உண்மையாகக் கண்டனம். 9. தெருவைக் கடப்போன் 10. கறங்குகையாலே அவ்வோசையைக் கேட்டுக் கடையைக் கழிந்து. 13. தாங்கு - பிடித்துக்கொள்; இழிந்தனன் - இழிந்து; தாங்காது - தாமதியாது. 14. மணி - பவளம். 16. கொடுப்போன் - தலைவன். 16. தடுத்த 17. மகனொடென்க. 17. நிதிக்கிழவன் - அளகேசுவரன். 16 - 18. தடுத்த மாநிதிக்கிழவனும் போலுமென்று கண்டார் சொல்லும்படி மகனொடு புகுந்தா

* 'மெய்யே என்றல்' "கழங்கா......மணனே" என்பது, "தானே தன்மகனை வாயில்கொண்டு புக்கானாயினும், அதனைப் பழங்கணோட்டமும் நலிதரப் பொய்யே புகுந்தானென்று மெய்யாகத் துணிந்து கோடலால் அப் பெயர்த்தாயிற்று" என்பர் பேரா. இனி நச். 'உரிய' என்றதனால் தோழி வாயிலாகச் சென்றுழித் தலைவி வெளிப்படக் கூறுதலுங் கொள்க. அஃது 'இம்மையுலகு' என்னும் அகப்பாட்டினுட் காண்க" என்பர். (தொல். பொருள். 241. 270.)

னென்றுமாம். மகனேயன்றி இவ்வாறுஞ் சொல்ல நின்றமை யால் எச்சவும்மை. 19. செல்வித்தே மாதற்கு நாணி. 21. தலைக் கொண்டு - பிள்ளையைத் தன்னிடத்தே எடுத்துக்கொண்டு. 22. சீர் - ஓசை. 23. தவிரான் - அழுத............தவிரானாய். 24. அன்று - இயற்கைப் புணர்ச்சிக்காலத் தொருநாள். 26. தான் விரும்பின மணத்தைத் தவிர்ந்தனனென்க. 9-10. மாண்டொ ழின்மா என்க.

பி - ம். 1. யுலகமுமி 5. பயமொ. † செயலூர்க்கோசங் கண்ணனார்.

## 67. பாலை

* யானெவன் செய்கோ தோழி பொறிவரி
வானம் வாழ்த்தி பாடவு மருளா
துறைதுறந் தெழிலி நீங்கலிற் பறைபுடன்
மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை
5 யரம்போழ் நுதிய வாளி யம்பி
னிரம்பா நோக்கி னிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை யெல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடு மெழுதி யதர்தொறும்
10 பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
மொழிபெயர் தேஎந் தருமார் மன்னர்
கழிப்பிணிக் கறைத்தோ னிரைகண் டன்ன
வுவலிடு பதுக்கை யாளுகு பறந்தலை
15 யுருவில் பேஎ யூராத் தேரொடு
நிலம்படு மின்மினி போலப் பலவுட
னிலங்குபர லிமைக்கு மென்பநந்
நலந்துறந் துறைநர் சென்ற வாறே.

என்பது : பொருள்வயிற் பிரிந்தவழி வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—நோய்பாடியார்.

* "இது மண்டிலத்தருமை தலைவன்கூறக் கேட்ட தோழி கூறியது" என்பர், நச். (தொல். பொருள். 44.)

வரி

2. வானம் வாழ்த்தி - வானம்பாடிப் புள். 3. இலை பறந்து. 5 போழ்தல் - அராவுதல் ; வாளியம்பு - எயிற்றம்பு.

6. நிரம்பா நோக்கு - ஆட்குறித்துப் பார்க்கும் பொழுது இடுக்கிப் பார்க்கும் பார்வை ; நிரயங்கொண்மார் - நரகம் புகுவார் ; கொள்ளவேண்டி என்றுமாம்.

4. நனைத்தலை யுடைய 7. நீளிடை எல்லியிடத்து மண்டி 8. அமர் கடந்த மறவர். 9-10. எழுதி நடுகல். வேலை நட்டு அதன் கண் ணே பலகை சார்த்துதல் மரபு. வேற்று முனையிடத்து வேலூன்று பலகையைப் போர்க்கு நடுகல்லென்க. 11. கடுக்குந் 12. தேம்.

11. வேற்றுமுனை கடந்தென்னும் பாடத்திற்கு நடுகலிடத்தவன் பிடித்த கருவிகளாய் ஊன்றியும் சார்த்தியும் வைக்கப்பட்ட வேலையும், பலகையையுமுடைய வேற்றுமுனை என்க; அதனைக் கடந்து என்றுரைக்க.

13. கழியாற் பிணிக்கப்பட்ட கருங்கடகு ; மன்னர் கடகுக்காரரை அழைத்துப் படைகாண்டல். 14. உவலிடு பதுக்கை கருகின வை கருங்கடகிற்கு உவமை. ஆளுகுதல் - ஆள்படுதல்; 15. உரு வில் பேய் - பேய்த்தேர்; கடுக்கும் தேசத்தைக் கொள்ளவேண்டி மன்னர் தோற்படையைக் கண்டாலொத்த பதுக்கையென்க.

11. கடந்து 18. சென்ற ஆறு 15. தேரொடு 11. பரலிமைக்கு மென் றுநின்றூர்கள், 1. யானெவன் செய்வேன் தோழி யென்று 4. காட்டை நினைத்து ஆற்றுளாயினுள்.

8. நாணுடை மறவர் - கரந்தையார்.

பி - ம். 3. உறையிறந். பறையுடன் 11. கடந்து. 12. மள்ளர் 14. அழி ருபதுக்கை. † நொய்ப்பாடியார்.

## 68. குறிஞ்சி

அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தண்ணயத் தமன்ற கூதளங் குழைய
வின்னிசை யருவிப் பாடு மென்னதூஉங்
கேட்டியோ வாழிவேண் டன்னைநம் படப்பை

5 * யூட்டி யன்ன வொண்டளிர்ச் செயலை
யோங்குசினைத் தொடுத்த வூசல் பாம்பென
முழுமுத லறிய வுருமெறிந் தன்றே
பின்னுங் கேட்டியோ வெனவுமஃ தறியா
என்னையுங் களைதுயின் மடிந்தன ளதன்றலை
10 மன்னுயிர் மடிந்தன்றாற் பொழுதே காதலர்
வருவ ராயிற் பருவ மிதுவெனச்
சுடர்ந்திலங் கெல்வளை நெகிழ்ந்த நம்வயிற்
படர்ந்த வுள்ளம் பழுதன் றாக
வந்தனர் வாழி தோழி யந்தரத்
15 திமிழ்பெய றலைஇய வினப்பல கொண்மூத்
தவிர்வில் வெள்ளந் தலைத்தலை சிறப்ப
† கன்றுகா லொய்யுங் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவு
20 மகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலு மஞ்சும் பனிக்கடுஞ் சுரனே.

என்பது: தலைமகன் இரவுக்குறி வந்தமையறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. ‡

வரி ஊட்டியார்.

3. அருவிப்பாடு மென்னதூஉம் என்றது, இவ்வோசையு மேதே னுங் கேட்டாயோ என்றவாறு. 4. பின்னையும் வேண்

---

* "'ஊட்டி...செயலை' என்புழி இன்னதனை யென்று தெரித்து மொழியாமையின் வழுவாம்பிற வெனின்—உவமை யென்னு மலங்காரமா பினன்றே இன்ன தொன்றனையெனல் வேண்டுவது; செயலையந் தளிரினது செய்யாத நிறத்தைச் செய்ததுபோலக் கூறுங் கருத்தினுதலிற் பிறிதோ ரலங்காரமாம்" என்பர் சேனாவரையர். "ஊட்டாததனை ஊட்டியது போலக் கூறலின் வேறோர் உவமை யிலக்கணமாம்" என்பர் நச். (தொல். சொல். 56.) † இது 'யானையுங் குதிரையும்......ரிய' என்றதனால் அமைந்தது. (தொல் பொருள். 571.) ‡ "இது தாயது துயிலுணர்ந்து தலைவன் வந்தமை தோழி தலைவிக்குக் கூறிக் குறிவயிற்சென்றது" என்றார் நச். (தொல். பொருள். 114.)

டென்றாள், மறித்தொன்று சொல்லுவாளாக. 5. ஊட்டுதல் - அரக்கூட்டுதல். 7. முதல் - செயலை முதல். 11. பருவமிது - பொழுதிது. 12. சுடர்ந்திலங்குதல் - விட்டு விளங்குதல். 15. கொண்மூப்பெய்த 16. தவிர் வில் வெள்ளம். தலைத்தலை சிறப்ப- மேன்மேலும் மிக. 17. ஒய்யும் - இழுக்கிற. நீத்தந் 19. துழவும். 18. பிடிப்பூசல் பலவுடன் யானைவிளியு முண்டாகத் துழவு மென்க. 20. பாந்தட்படார் - பாம்புச்செடி. 21. சுரத்தை 14. வந்தனரெனக் கூட்டுக.

யானைகளுங் கன்று காரணமாகப் பிடி வருந்தியபின்பு எடுக்க முயன் றாற்போல, அவரும் அலரானும் வழியதருமையானும் நாம் நலனழிந்த பின்பு வரைய முயலுமதல்லது முன்பு முயலாரென்பது கருத்து.

பி - ம். 2. தண்கயத்.

## 69. பாலை

ஆய்நலந் தொலைந்த மேனியு மாமலர்த்
தகைவனப் பிழந்த கண்ணும் வகையில
வண்ணம் வாடிய வரியு நோக்கி
யாழ லான்றிசி னீயே யுரிதினி
5 னீத லின்பம் வெஃகி மேவரச்
செய்பொருட் டிறவ ராகிப் புல்லிலைப்
பராரை நெல்லி யம்புளித் திரள்காய்
கான மடமரைக் கணநிரை கவரும்
வேனி லத்த மென்னு தேமுற்று
10 விண்பொரு நெடுவரை யியறேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
வறையிறந் தகன்றன ராயினு மெனையதூஉ
நீடலர் வாழி தோழி யாடியன்
மடமயி லொழித்த பீலி வார்ந்துதஞ்
15 சிலைமாண் வல்விற் சுற்றிப் பலமா
ணம்புடைக் கைய ரரண்பல நூறி
நன்கலந் தரூஉம் வயவர் பெருமகன்
சுடர்மணிப் பெரும்பூ ணாஅய் கானத்துத்

தலைநா ளலரி நாறுநின்
னலர்முலை யாகத் தின்றுயின் மறந்தே.

என்பது: பொருள் வயிற்பிரிந்து நீட்டித்தான் தலைமகனெனக் கவன்ற தலைமகட்கு வருவரென்பதுபடச் சொல்லித் தோழி யாற்றுவித்தது.

—† உமட்டூர்கிழார்மகனார் பரங்கொற்றனார்.

வரி

2. வகையிலவாய் 3. அழகு வாடின திதலை. 4. உரித்தாக 5. ஈதவான் வரும் இன்பத்தை விரும்பிச் 6. செய்கிற பொருட்கூற்ற ராய். 9. எமுற்று - மயக்கமுற்று.

10. நெடுவரை - பெருமலை; 14. வார்ந்து - உரித்து; 15. சிலை - ஓசை; ஒரு மரமுமாம். 6. செய்பொருட் டிறவராய் அத்தமென்று பாராது மயங்கி, 12. அறையிறந் தகன்றாராயினும் சிறிதும் 13. நீடலர் என்க. 16. கையராய்ப் பகைவர் அரண்களைப் பொடியாக்கி.

பி - ம். 10. நெடுங்குடை. 18. † சுடர்மலி. உருஉரேர்கிழார்மகனார் பரங் றனார்.

## 70. நெய்தல்

கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
விரும்புலாக் கமழுஞ் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்க ணவ்வலைப் பயம்பா ராட்டிக்
கொழுங்க ணயிலை பகுக்குந் துறைவ
5 னம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே
யலர்வாய்ப் பெண்டி ரம்ப றூற்றப
பலருமாங் கறிந்தனர் மன்னே யினியே
வதுவை கூடிய பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்குங்
10 கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்
பாசடைக் கலித்த கணைக்கா னெய்தல்
விழவணி மகளிர் தழையணிக் கூட்டும்
வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை

16 வெல்போ ரிராம னருமறைக் கவித்த
பல்வீ ழாலம் போல
வொலியவிந் தன்றிவ் வழுங்க லூரே.

என்பது : தலைமகன் வரைவுமலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

—மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன்மள்ளனார்.

வரி

3. வலையின் பயம் பின்பு கொண்டாடி; பாராட்டி 4. அயிலை யென்னும் மீனைக் கூறிடும் துறைவன் 5. கேண்மையைப் 7. பலர் அறிந்தார். உம்மை - அசைநிலை; ஆங்கு அவ்விடத்து; மன் - கழிவு.

9. வரிக்கும் - சித்திரமெழுதினாற்போல உதிர்ந்து அழகு செய்யும். 10. கழனி 11. தழைத்த நெய்தல். 13. கவுரியர் - பாண்டியர். 13. கோடி - திருவணைக்கரை; 15. மறை - அவ்விடத்துத் தாமும் பரிகரமும் விசாரிக்கப்புக்க மறை. மறை சொல்லுதல் காரணமாக, அவித்தல் - அல் 16. ஆலிற் புட்கள் சுத்தமவி அவித்தல். 6. அவர் முன்பு பலரறிந்தது; அவன் 8. வரைய வருகின்றபொழுது இப்படியே 17. அவிந்ததென்றாள்.

8-9. புதுவதாக வரிக்கும்; 12-13. தழையணிக்குக் கூட்டும் கோடி.

பரதவர் தம் முயற்சியானே வேட்டை வாய்த்ததாகிலும் குறுங்கண் வலையைப் பாராட்டி அம்முயற்சியாலுண்டான அயிலையைக் கடலினின்றும் நீக்கி, எல்லார்க்கும் பகுத்துக்கொடுத்து மகிழ்வித்தாற்போல, அவரும் தம்முடைய முயற்சியானே வதுவை கூடிற்றாயினும் அதற்குத் துணையாக நின்ற என்னைக் கொண்டாடி, நின்னைப் பெரிய இச்சுற்றத்தினின்றுங் கொண்டு போய்த் தம்மூரின்கண்ணே நின்னைக்கொண்டு விருந்து புறந்தந்து தம்மூரையெல்லாம் மகிழ்விப்பர் என்றவாறு.

நெய்தற்பூவானது, ஞாழலும் புன்னையுங் கரையிலே நின்று தாதை யுதிர்த்துப் புறஞ்சூழ, நீரிடத்துத் தன்னை விடாதே அலைகள் சூழ நடுவே நின்று செருக்கி வளர்ந்து பின்னை விழவணி மகளிர் அல்குலுக்குத் தழையாய்ப் பயன்பட்டாற்போல, இருமுதுகுரவர் புறங்காப்ப ஆயவெள்ளத்தார்

மெய்யை விடாதே சூழ்ந்து புறங்காப்ப, இப்படிச் செல்வத்தால் வளர்ந்த நீயும் நம்பெருமானுடைய இல்லறமாகிய பிரிவிற்குத் துணையாகப் போகா நின்றாயன்றோ வென்று வியந்துகூறியவாறு கண்டு கொள்க.

பி - ம். 13. கவிரியர்.

## 71. பாலை

நிறைந்தோர்த் தேரு நெஞ்சமொடு குறைந்தோர்
பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉ
நயனின் மாக்கள் போல வண்டினஞ்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
5 மையின் மானின மருளப் பையென
வெந்தாறு பொன்னி னந்தி பூப்ப
வையறி வகற்றுங் கையறு படரோ
டகலிரு வான மம்மஞ் சினப்
பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை
10 காதலர்ப் பிரிந்த புலம்பி னோதக
வாரா ருறுந ரருநிறஞ் சுட்டிக்
கூரெஃ கெறிஞரி னலைத்த லானா
தெள்ளற வியற்றிய நிழல்காண் மண்டிலத்
துள்ளூ தாவியிற் பைப்பய நுணுகி
15 மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்
திதுகொல் வாழி தோழி யென்னுயிர்
விலங்குவெங் கடுவளி யெடுப்பத்
துளங்குமரப் புள்ளிற் றுறக்கும் பொழுதே. *

என்பது : பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகட்குத் தோழி சொல்லியது.

— † அந்தியிளங்கீரனார்.

வரி

1. நிறைந்தோர் - செல்வமுடையோர். 6. அந்தி - செக்கர்; ஒரு பூவு மாம். 7. வியக்கத்தக்க அறிவைப் போக்குகின்ற செயலறவைச்

* இப்பாட்டினை, "வேட்கை யொருதலை......" என்னுஞ் சூத்திரத்தினுள் சாக்காட்டிற்கு உதாரணமாகக் காட்டுவர் நச். (தொல். பொருள். 100.) † அந்திலிளங்கீரனார்.

செய்யும் படர்; கூரிய அறிவென்றுமாம். 8. வானம் அம்மஞ் சினை வென்றது, அக்காலத்துப் பல நிறத்தையுடைய மேகத் தைத் தரும் வானம் என்றவாறு. 7 - 8. பிரிந்திருப்பார்க்கு நோவையும் மேகத்தையுந்தர என்றபடி.

10. காதலரைப் பிரிந்த புலம்பான் நோகச் செய்தே 9. மாலை 12. யலைத்தலைமையாதென முற்றுவிக்க. 11. சுட்டி - கருதி. 13. மண்டிலம் - கண்ணாடி, அதில் 14. ஆவி முன்பு பசந்து பின்பு சுருங்கினாற்போலக் காணக் காணச் சுருங்கி 15. என் வலிதான் மாய்தல் வேண்டியிராநின்றது. 17. விலங்குவளி - சூறாவளி; எடுப்ப - எழுப்ப; 16. உயிர் 18. புட்போலப் போம்பொழுது இதுவோ தோழி என்க.

## 72. குறிஞ்சி

இருள்கிழிப் பதுபோன் மின்னி வானந்
துளிதலைக் கொண்ட நளிபெய னடுநாள்
மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்
5 குரும்பி கெண்டும் பெருங்கை யேற்றை
யிரும்புசெய் கொல்லெனத் தோன்று மாங்க
ணாறே யருமர பினவே யாறே
சுட்டுநர்ப் பனிக்குஞ் சூருடை முதலைய
கழைமாய் நீத்தங் கல்பொரு திரங்க
10 வஞ்சுவந் தமிய மென்னாது மஞ்சுசுமந்
தாடுகழை நரலு மணங்குடைக் கவாஅ
னீருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
விருங்களி றட்ட பெருஞ்சின வுழுவை
நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த
15 மேய்மணி விளக்கிற் புலர வீர்க்கும்
வாணடந் தன்ன வழக்கருங் கவலை
யுள்ளுந ருட்குங் கல்லடர்ச் சிறுநெறி

*யருள்புரி நெஞ்சமொ டெஃகுதுணை யாக
வந்தோன் கொடியனு மல்லன் றந்த
20 நீதவ றுடையையு மல்லை நின்வயின் †
ஞெ வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே.

என்பது: தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

—எருமைவெளியனார் மகனார் † கடலனார்

வரி

1-2. வானம் துளியைத் தன்னிடத்தே கொண்ட. 3. புற்றத்தை; 4. சுடர - மின்மினி ஒளிவிட; வாங்கி - இடந்து; 6. தோன்று மவ்விடத்து: 7. போதற்கரிய தன்மைய ஆறு. 8. சூர் - பயம்; 9. இரங்க - ஒலிப்ப; இவ்வளவும் வழியருமை சொல்லிற்று. இனித் தலைவன் கருத்தைக் கொண்டு கூறுகின்றது.

10. தமியமாதலால் அஞ்சுவ மென்றது; 12. ஈருயிர்ப்பிணவு - சூற் பிணவு; வயவுப்பசி - வேட்கைப்பசி. 15. மேய்மணி - மேய்தல் காரணமாக உமிழ்ந்த மணி. விளக்கின், அதுவே விளக்காக. 16. கவலை - அருவழி; 17. கல்லடர்ந்து கிடக்கிற இட்டியவழி; வழியை இரண்டு கூறிட்டாள். 18. அருள் - நம்மேலருள் 19. 20. தந்த நீ - கூட்டின நீ; 21. தோழி ஆற்றுளாம் படர்.

* தோழி கூட்டவே கூடுகின்றேன் என்பது அறிந்தே தலைமகள் கூடும் என்பதற்கு இதுமுதலாக ஐந்தடியும் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன. (இறை. களவு. 13.) † 'தன்னை அழிதல்' என்னுந் துறைக்கு இது முதலாக மூன்றடியினையும் உதாரணமாகக் காட்டி, "அவன் வரவினை உவவாது துன்பங்கூர்தல் வழுவாயினும், அதுவும் அவன்கண் அன்பாதலின் அமைத்தார்" என்பர் பேராசிரியர். இனி நச்சினார்க்கினியர் இப்பாட்டினை 'அவனளி சிறப்பினும்' என்ற துறைக்கு உதாரணமாகக் கொண்டு, "'வந்தோன்' என்பது அவனளிசிறத்தல்; 'தவறுடையேன்' என்பது தன்வயின் உரிமை, 'கொடியனு மல்லன்' என்பது அவன்வயிற் பரத்தமை" என்பர். (தொல். பொருள். 210, 111.)

9 கல் பொருதிரங்க என்பதனை 8 முதலைய வென்னும் முற்றுவினைக் குறிப்பொடு முடிக்க.

புலி துணைபுறந்தருதற்குப் பிறவற்றைத் தீங்குசெய்யும் பாம்பும் அதற்குத் துணையாயினாற் போல, நீயுங் குடியோம்பற் செய்திகாரணமாக வரைவொடுவரிற் கடுஞ்சொற் சொல்லுகிற பேரும் இன்சொற்சொல்லி வரைவுடம்படுவர் என்பதாம்.

ி - ம். 6. தோன்றியாங்கண். 15. புலாலையீர். † மோகமானக் கடலார்.

## 73. பாலை

* பின்னொடு முடித்த மண்ணா முச்சி
நெய்கனி வீழ்குழ லகப்படத் தைஇ
வெருகிரு ளோக்கி யன்ன கதிர்விடு ‡
பொருகாழ் முத்த மிடைமுலை விளங்க
5 வணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்
நின்னோய்த் தலையையு மல்லை தெறுவர
வென்னா குவள்கொ லளிய டாளெனன
வென்னழி பிரங்கு நின்னொ டியானு
மாறன் றென்னா வேறல் காட்சி
10 யிருவே நம்படர் தீர வருவது
காணிய வம்மோ காதலந் தோழி
கொடிபிணங் கரில விருள்கொ ளருகு
மடிபதம் பார்க்கும் வயமான் றுப்பி
னேனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்
15 பிடிக்கை யமைந்த கனல்வாய்க் கொள்ளி
விடுபொறிச் சுடரின் மின்னியவர்
சென்ற தேஎத்து நின்றதான் மழையே.

என்பது : தலைமகன் பொருள்வயிற் பிரிகின்முன் குறித்த பருவவரவு கண்டு அழிந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

— எருமைவெளியனார்.

* "'பின்னொடு முடித்த மண்ணா முச்சி' என்னும் பாட்டினுள் 'அணங்குறு கற்பொடு......டியானும்' என்றவழித் தலைமகன் பிரிவிற்குத் தோழி

வரி

1. பின் - பின்னுதல்; மண்ணுமை - கை செய்யாமை; 2 நெய் - வாச நெய்; வீழ்குழல் - இருகுழல்; அகப்படக் கட்டி. 3-4 வெருகு இருளிலே நோக்கினாற்போல ஒளிவிட்ட முத்தினொரு வடம் கதிர்விட்டு விளங்க என்க. 5 அணங்கு - அருந்ததி; கற்பொடு - கற்பினால். 6 நின்னுடைய நோயிடத்தையு மல்லே; தெறுவர - அச்சம் வர; 9 ஆறன்றென்று வேறல் காட்சி - வழி யல்ல வென்று சொல்லாத வேறற்ற அறிவு; என்றது, ஒன்றை அவள் நினைந்தால் தோழிக்கும் அதுவே அறிவாம். 8 நின்னொடு யானும் 11 காணவா; 10 இருவேம் படர்தீரக் 11 காணவா; ஓ - அசை.

12 அரில் - தூறு; நாகம் - யானை; 13 வயமான் - ஸிம்ஹம். 13 - 14 தன் வலியையுடைய சேனோன், இதணின் மேலிருக்கிறவன். 12-13 யானைச் சாய்வு பார்க்கிற 14 சேனோன்.

15. பிடி என்று பிடிக்குமிடமாக்கி, அது கையிடத்தமைந்த கொள்ளி என்க. பிடிக்கைக்கு இடம்வைத்து அதல்லாத விடம் சுட்டுக் கொள்ளியாக்குதல் இயல்பு.

15-16. கொள்ளி தான் விடுகிற சுடர்போல மின்னி; பொறி - பொறியும் போது பறக்கும் பொறி.

17. நின்றது மழை அதனைக் 11 காணிய வா எனக் கூட்டுக. 2 தைஇ 5 சாய் 8 என்னழிவுக்கு இரங்கு மென்க. 13 துப்பிற் 14 சேனோன் என்க.

பி - ம். 2. நெடுவீழகப்பட. 6. தெய்ய.

## 74. முல்லை

வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து
போர்வ லிளையர் தாள்வலம் வாழ்த்தத்
தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக்

---

படர்கூர்ந்தாளெனச் சொல்லினமையின் அது பிறன்கட்டோன்றிய இழவு பற்றி அவலம் பிறந்ததாம்" என்பர் பேரா. (தொல். பொருள். 253.)

குருதி யுருவி னொண்செம் மூதாய்
5 பெருவழி மருங்கிற் சிறுபல வரிப்பப்
பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ
வெண்களர் ரரிமணன் மன்பல தாஅய்
வண்டுபோ தவிழ்க்குந் தண்கமழ் புறவிற்
கருங்கோட் டிரலை காமர் மடப்பிணை
10 மருண்டமா னோக்கங் காண்டொறு நின்னினைந்து
திண்டேர் வலவ கடவெனக் கடைஇ
யின்றே வருவ ரான்றிகம் பனியென
வன்புறை யின்சொ னன்பல பயிற்று
நின்வலித் தமைகுவன் மன்னோ வல்கற்
15 புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோற்
கல்லாக் கோவல ரூதும்
வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் ணழிந்தகிழத்திவற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

—† மதுரைக் கவுணியன் பூதத்தனார்.

வரி

1. வினை வலம்படுத்தல் - வினையை வெற்றி படுத்தல்; அந்த வென்றியொடு. பைது.........5 சிறுபல வரிப்ப - பல வரிப்படச் சிறியவாகிய பலவும் பரக்க. 6 மெத்தென்ற செவ்விப் புதிய பூ 7 தாய் - தாவ, தாவச் செய்தே. 9-10 பிணை மானின் மருண்ட நோக்கம். 11 கடவென்று முடுக்கி 12 வருவர். ஆன்றிகம் பனி-நடுக்கத்தை அமைவேம். 14 நீ சொன்னபடியை நிச்சயித்திருப்பேன். மன் - அது மாட்டுகிலேன்.

2. தாள் வலம் வாழ்த்த 12 இன்றே வருவர் எனக் கூட்டுக. 17 வருத்தாக்கால் 12 அமைவேம்.

பி - ம். † மதுரைக் கவுணியன் முத்தனார்.

* "'கல்லா.........காலே' என்புழி இன்பத்தை வெறுத்தனளாயினும் புணர்ச்சிக் கேதுவாமென்பது கருத்து" என்பர், பேரா. (தொல். பொருள். 270.)

## 75. பாலை

அருளன் றாக வாள்வினை யாடவர்
பொருளென வலித்த பொருளல் காட்சியின்
மைந்துமலி யுள்ளமொடு துஞ்சல் செல்லா
தெரிசினந் தவழ்ந்த விருங்கடற் றடைமுதற்
5 கரிகுதிர் மரத்த கான வாழ்க்கை
யடுபுலி முன்பிற் றொடுகழன் மறவர்
தொன்றியற் சிறுகுடி மன்றுநிழற் படுக்கு
மண்ணா னெடுவரை யாமறப் புலர்ந்த
கன்னெறிப் படர்குவ ராயி னன்னுதற்
10 செயிர்தீர் கொள்கைச் சின்மொழித் துவர்வா
யவிர்தொடி முன்கை யாயிழை மகளி
ராரந் தாங்கிய வலர்முலை யாகத்
தாராக் காதலொடு தாரிடைக் குழையாது
சென்றுபடு விறற்கவி னுள்ளி யென்று
15 மிரங்குந ரல்லது பெயர்தந் தியாவருந்
தருநரு முளரோ விவ்வுலகத் தானென
மாரி யீங்கை மாத்தளி ரன்ன
வம்மா மேனி யைதமை நுசுப்பிற்
பல்காசு நிரைத்த கோடேந் தல்குன்
20 மெல்லியற் குறுமகள் புலந்துபல கூறி
யானா நோயை யாக யானே
பிரியச் சூழ்தலு முண்டோ
வரிதுபெறு சிறப்பி னின்வயி னானே.

என்பது: † பொருள்வயிற் பிரிவரென வேறுபட்ட தலைமகட்குப் பிரியா ரெனத் தோழி சொல்லியது.

—மதுரைப் போத்தனார்.

வரி

1-3. ஆடவர்கள், * பொருளன்றாக ஆள்வினையைப் பொருள் என வலித்த பொருளல்லாத காட்சியையுடைய உள்ளம் என்க. 3 உள்ளமொடு - உள்ளத்தால், துஞ்சல் செல்லாது 9 கன்னெறிப் படர்குவராயி னென்க.

* பேரருள் என்றும் படிக்கலாம்.

4. எரிசினம் தவழ்ந்த - எரிகிற சினம் பரந்த ; சினம் ஆகுபெயர், நெருப்பு. 4-5 கடற்றையடைந்த விடத்து,..மரம் ; கரிந்த குதிர் போலும் என்றுமாம். 7 தொன்றியற் சிறுகுடி - பழையதாய் வருகிற இயல்புடைய குடி. 13 குழையாது - துவளாது ; குழையாமலெனத்திரிக்க. 18. ஐதமை நுசுப்பு ; 14 போன வழகை நினைந்து 15 வருந்துவதல்லது மறித்துக் கொண்டு வந்து அழகைத் தந்து நிறுத்துவாரும் 16 உளரோ இவ்வுலகத்தெனை 20 மெல்லியற்குறுமகளே நீ பல புலந்து கூறி 21 நோயையாக நின்னிடத்து நின்று அவர் பிரிய அவரொடு யான் விசாரிப்பது உண்டோ என்க.

12. முலையாகத்திலே 13 தங்கள் தாரை இடையே குழைவியாதே 15 இரங்குந ரல்லது என்க.

7. நிழற்படுக்கும் 8 வரையையுடைய 9 நெறி என்க. 9 படர்வோரின் 15 இரங்குந ரல்லதென்க.

பி - ம். 21 †அவரே. பொருள்வயிற் பிரிய வேறுபட்ட தலைமகட்குப் பிரியேனெனத் தலைமகன் சொல்லியது.

## 76. மருதம்

* மண்கணை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை யூரனெஞ் சேரி வந்தென
வின்கடுங் கள்ளி னஃதை களிற்றொடு
நன்கல னீயு நாண்மகி ழிருக்கை
5 யவைபுகு பொருநர் பறையி னானது
கழறுப வென்பவவன் பெண்டி ரந்திற்
கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன்

* இப் பாட்டினைப் 'புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்' என்ற துறைக்கு உதாரணமாகக் கொண்டு, "இதனுள் 'எஞ்சேரி வந்தென...... கழறுப வென்ப அவன் பெண்டிர்' என முன்னொன்று புல்லுதன்மயக்குதலால் தலைவி புலந்தவாறும், அது கண்டு காமக்கிழத்தி கொண்டு கை வலிப்பலெனப்பெருமிதம் உரைத்தவாறும் காண்க" என்பர் நச். (தொல். பொருள். 151.)

வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் காண்டி ரோவென
10 வாதி மந்தி பேதுற் றினையச்
சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகு
மந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே.

என்பது: தலைமகனை நயப்பித்துக்கொண்டாளென்று கழறக் கேட்ட பரத்தை தலைமகட்குப் பாங்காயினர்கேட்பச் சொல்லியது.

— பரணர்.

வரி

1. மகிழ் மிகத் தூங்க - கண்டார்க்கு மிக நாங்கள் கூத்தாட என்றவாறு. 2. அது காண வந்தானாக. 4-5 இருக்கையை யுடைய அவை. 6 கழறுதல் - வைதல்; அந்தில் - அசை. 8 வகையமைதியோடு பொலிந்த மாலையை யுடைய 9 மயிர்; வகை - கூறுபாடு. 9. சுரியற் பொருநன்: கூத்தாடும் ஆட்டனத்தி. காண்டிரோ - கண்டீரோ, என. 11 சிறை - அணை. 13 சூட்கொண்டு; கை வலித்தல் - என்னிடத்தே கொண்டு கையாலே பற்றிக் கோடல்.

ஆடற்றகையானுதல் பாடற் குரலானுதல் பெற்றேனென்று சொல்லுவாளாயின் இப்படிச் செய்கிறேன் என்றாள்.

பி - ம். 1 முழவமொடு. 9. காணீரோ. 11. சிறைபாய்ந்.

## 77. பாலை

நன்னுதல் பசப்பவு மாள்வினை தரீஇயர்
துன்னருங் கானந் துன்னுத னன்றெனப்
பின்னின்று சூழ்ந்தனை யாயினன் றின்றுச்
சூழ்ந்திசின் வாழிய நெஞ்சே வெய்துற
5 விடியுமிழ் வான நீங்கி யாங்கணுங்
குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்க்
கயிறுபிணிக் குழிசி யோலை கொண்மார்

பொறிகண் டழிக்கு மாவண மாக்களி
னுயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த
10 தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி யெருவை யஞ்சுவர விருக்குங்
கல்லதர்க் கவலை போகிற் சீறூர்ப்
புல்லரை யித்திப் புகர்படு நீழ
லெல்வளி யலைக்கு மிருள்கூர் மாலை
15 வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை
யானா நறவின் வண்மகிழ்ப் பிட்டன்
பொருந்தா மன்ன ரருஞ்சமத் துயர்த்த
திருந்திலை யெஃகம் போல
வருந்துயர் தருமிவள் பனிவார் கண்ணே.

என்பது: தலைமகன் பிரியக்கருதிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங் குவித்தது.

—மருதனிளநாகனார்.

வரி

1. தரீஇயர் - பெறவேண்டி 3-4 மிகவும் சூழ்ந்தாய். 5. இடிப்போடு வெய்துறும்படி மழை பெய்யாது நீங்க. 6 சுட்டு - இப்பாழ் பலருங் கருதிச் சொல்லப் படுதல். இதனிடத்து வைத்த, 7 குழிசி - குடம். பொறி - இலச்சினை. ஆவண மாக்களின்-பிர மாணம் வாங்குகிற மாக்களைப்போல 9-10. உயிர் வேறொரு திறத்தே போகத்தெறுவர அமர் கடந்த என்க. 10-11 எருவை பட்டவீரர் குடரை வயிற்றினின்றும் வாங்கிப் போகடுகிற. 13. புகர்-புள்ளி. 14 எல்வளி - பெருவளி; தோற்றமும் ஆம். 15. வானவன் மறவன் - சேரன் படைத்தலைவன். மறவன் 16 பிட் டன். 16-18 பிட்டன் எடுத்த இலைத்தொழிலையுடைய வேல்.

14. மாலையிலே 19 துயர்தரும் இவள் கண்ணுதலாற் 3 பின்னின்று விசாரித்தாயாயின் கொடியவை விசாரித்தாயாவை.

பி - ம். 3. விடுத்தனை, விடுத்தி. 5. நீங்க நீங்கி. 12. நல்லதர்.

## 78. குறிஞ்சி

நனந்தலைக் கானத் தாளி யஞ்சி
யினந்தலைத் தரூஉ மெறுழ்கிளர் முன்பின்
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப்
பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்
5 விரும்பிணர்த் தடக்கையி னேமுறத் தழுவக்
கடுஞ்சூன் மடப்பிடி நடுங்குஞ் சாரற்
றேம்பிழி நறவின் குறவர் முன்றின்
முந்தூ ழாய்மல ருதிரக் காந்த
ணீடிதழ் நெடுந்துடுப் பொசியத் தண்ணென
10 வாடை தூக்கும் வருபனி யற்சிர
நம்மில் புலம்பிற் றம்மூர்த் தமிய
ரென்னா குவர்கொ லளியர் தாமென
வெம்விட் டகன்ற சின்னாட் சிறிது
முள்ளியு மறிதிரோ வோங்குமலை நாட
15 வுலகுடன் றிரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின் று
செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தா ளாம்பன் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா
20 தாளிடூஉக் கடந்து வாளமருழக்கி
யேந்துகோட் டியானை வேந்த ரோட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி
தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த
தேங்கமழ் புதுமலர் நாறுமிவ ணுதலே.

என்பது : களவுக்காலத்துப் பிரிந்துவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

—மதுரை நக்கீரனார்.

வரி

2. இனந்தலைத்தரும் - இனத்தைத் தன்னிடத்தே குவித்துக் கொள்ளும். 1 தலை - அசை; அழைத்துக் கூடக்கொண்டு நோக்கும் 4 ஒருத்தல் - தலைவன். 1. ஆளியஞ்சிப் 6 பிடி நடுங்குஞ் சாரல்.

7. தேம் - இனிமை ; தேனாற்பிறந்த நறவுமாம். 8. முந்தூழ் - மூங்கில். 10. வருபனி - தோன்றுகின்ற பனி ; அற்சிரம் - பனிக்காலம். 11. புலம்பின் - புலம்பால்.

16. கபிலன் சூழ என்றது, பாரியை அரசர் மூவரும் வளைத்திருப்ப, அகப்பட்டிருந்து உணவில்லாமைக் கிளிகளை வளர்த்துக் கதிர் கொண்டுவர விட்ட கதை.

18. ஆம்ப லவியுணர்வு.

யானை காக்கவும் பிடி நடுங்கினாற்போல உயிர் இவளைப் பாதுகாக்க வேண்டுமென்னுங் கருத்துடையரா யிருக்கவும், பிரிவிற்கு அஞ்சாநின்றாளென்றவாறு.

பி - ம். 10. தூங்கி. 15. நெடுங்தா. 20. நாளிடூஉ. †மதுரைக்கீரனார்.

## 79. பாலை

தோட்பத னமைத்த கருங்கை யாடவர்
கணைபொறி பிறப்ப நூறி வினைப்படர்ந்து
கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவிற்
பாருடை மருங்கி னூறன் மண்டிய
5 வன்புலந் துமியப் போகிக் கொங்கர்
படுமணி யாயம் நீர்க்குநிமிர்ந்து செல்லுந்
தேதா வெடுத்த செந்நிலக் குரூஉத்துக
ளகலிரு விசும்பி னூன்றித் தோன்று
நனந்தலை யழுவ நம்மொடு துணைப்ப
10 வல்லாங்கு வருது மென்னா தல்குவர
வருந்தினை வாழியென் னெஞ்சே யிருஞ்சிறை
வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை
யாடுதொறு கனையு மவ்வாய்க் கடுந்துடிக்
கொடுவி லெயினர் கோட்சுரம் படர
15 நெடுவிளி பயிற்று நிரம்பா நீளிடைக்
கல்பிறங் கத்தம் போகி
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்த நீயே.

என்பது : பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—குடவாயிற் கீரத்தனார்.

வரி

1. தோட்பதம் - தோளிலே கட்டமுது கட்டுதல்; 2. நூறி - வெட்டி : வினைப்படர்ந்து - தொழிலிலே செலுத்தி. 3. வல் லுவர் - மிக்க உவர். படு - கிணறு: 4. பார் - வன்னிலம்; மண்டிய - மண்ட வேண்டி.
6. ஆயமாகிய 7 சேதா.
9. அழுவம் - காடு; துணைப்ப - துணையாக. 10. வருதும் - போவோம்; அல்குவர - இங்கே தங்குதல்வர; வந்த வளவிலே; 12. வான் கண் - வெள்ளைக்கண். 13. ஆடுதொறு கனைத்தல் - எயினர் ஆட ஒலித்தல்.
12. பேடை 14 எயினர் போர்க்குப் போகிறதறிந்து 1 துணையை அழைக்கு மென்க.
1. தோட்பதனமைத்த என்றூர், சோறுங் கொண்டுபோய்க் 3 கல்லுத லின். 2. பொறி - வன்னிலமாதலிற் கல்லுகிறபொழுது எழுந்த பொறி.
9. அவளும் நம்மொடு துணையாக 10 வல்லபடி போவோம் என்று அங்கு நினையாது இங்குவந்து 11 வருந்தினை என்க.
8. ஊன்றித் தோன்றும் - மிக்குத் தோன்றும். 1. தோட்பயனமைத்த என்று பாடமாக்கித் தோண்டுகைமுன்பே நீரைச் சொரிந் தமைத்த என்றுமாம்.

பி - ம். 2. பிறப்புற. 3. கல்லறுத்.

## 80. நெய்தல்

கொடுந்தாண் முதலையொடு கோட்டுமீன் வழங்கு
மிருங்கழி யிட்டுச்சுர நீந்தி யிரவின்
வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப
நினக்கெவ னரியமோ யாமே யெந்தை
5 புணர்திரைப் பரப்பகந் துழைஇத் தந்த
பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்புது
முண்டகங் கலித்த முதுநீ ரடைகரை
யொண்பன் மலரக் கவட்டிலை யடும்பின்
செங்கேழ் மென்கொடி யாழி யறுப்ப
10 இனமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ

மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொற்
றண்ணறும் பைந்தா துறைக்கும்
புன்னையங் கானற் பகல்வந் தீமே.

என்பது: இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

—† மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்.

வரி

2. கழியாகிய இட்டிய சுரம். 4. எவன்-எப்படி. 7. அடைகரை - கரையடியில். 11. ஒளியையுடைய இலையோடு பொலிந்த இணர்; அவிழ்தல் - மலர்தல். 13. பகல் வரிற் 6. புள்ளோப்பவோம் 13 புன்னையங் கானலிலே என்றாள்.

பி - ம். 5 பாக்கம். 6. ஓப்ப. †நக்கீரர்.

## 81. பாலை

நாளுலா வெழுந்த கோள்வ லுளிய
மோங்குசினை யிருப்பைத் தீம்பழ முணையிற்
புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை
யொருங்குமுயன் றெடுத்த நனைவாய் நெடுங்கோ
5 டிரும்பூது குருகி னிடந்திரை தேரு
மண்பக வறந்த வாங்கட் கண்பொரக்
கதிர்தெறக் கவிழ்ந்த வுலறுதலை நோன்சினை
நெறியயல் மராஅ மேறிப் புலம்புகொள
வெறிபருந் துயவு மென்றூழ் நீளிடை
10 வெம்முனை யருஞ்சுர நீந்திச் சிறந்த
செம்ம லுள்ளந் துரத்தலிற் கறுத்தோ
ரொளிறுவே லழுவங் களிறுபடக் கடக்கு
மாவண் கடலன் விளங்கி லன்னவெம்
மையெழி லுண்கண் கலுழ
வைய சேறிரோ வகன்றுசெய் பொருட்கே.

என்பது: பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து சொல்லியது. இப் பாட்டினுட் குருகு என்றது கொல்லன் உலை மூக்கு.

— ஆலம்பேரி சாத்தனார்.

வரி

1. உலா - உலாவி; எழுந்த - எழுந்திருந்த. 3. புற்றின் 4 கோடு. 5. குருகின் - குருகுபோல, கரடி அகழ்கின்ற காலத்து உயிர்த்தல். 6. கண்பொர - வெயில் வெம்மையால் பார்க்க ஒண்ணுதபடி பொர. 9. எறிதல் - இரையைப் பாய்ந்தெடுத்தல். 12. வேலமுவம் - வேற் பரப்பு.

10. நீந்திச் 15 சேறிரோ பொருட்கெனச், செலவழுங்குவாளுவது பயன்.

பி - ம். 4 இருங்கோடு.

## 82. குறிஞ்சி

ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை
தோடமை முழவின் றுதைகுர லாகக்
5 கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
வின்பல் லிமிழிசை கேட்டுக் கலிசிறந்து
* மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்

* "மந்தி நல்லவை.........நாடன்" என்றவழிப் பண்டு ஒருகாலுங் கண்டறியாதபடி ஆடிற்று மயில் என்றமையிற் பிறபொருட்கட் டோன்றிய புதுமையாயிற்று" என்றும், "மலர்தார்.........ளேனே" என்பது தன் கட் டோன்றிய புதுமைபற்றிய வியப்புப் பிறந்தது; என்னை? தன் கருத்து வெளிப்படாது தன் மெய்க்கட் டோன்றிய புதுமையைத் தலைவி வியந்தாள்போலத் தோழிக்கு அறத்தொடுநின்றமையின்" என்றும், "புலர்குரலேனல்.........ளேனே" என்பது "கண்டயின் மறுத்த" லென்னும் மெய்ப்பாட்டிற்கு உதாரணமாகுமென்றும் கூறுவர் பேராசிரியர். நச்சினார்க்கினியர், "அவனை ஆயத்தார் பலரும் கண்டாரென வந்தோன் முட்டியவாறும் அவருள் நெகிழ்தோளேன் யானே எனத் தானே கூறியவாறும் காண்க" என்பர். (தொல். பொருள். 255, 270, 112.)

10 நனவுப்புகு விறலியிற் றோன்று நாட
னுருவ வல்விற் பற்றி யம்புதெரிந்து
செருச்செய் யானை சென்னெறி வினாஅய்ப்
புலர்குர லேனற் புழையுடை யொருசிறை
மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
15 பலர்தில் வாழி தோழி யவரு
ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி
யோரியா னாகுவ தெவன்கொ
னீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.

என்பது : தோழிக்குத் தலைவி அறத்தொடுநின்றது.

— கபிலர்.

வ.ரி

1. குயின்ற - செய்யப்பட்ட ; 2. கோடை - மேல்காற்று. 3. பாடின் அருவி - ஒலியினிய அருவி ; அருவியாகிய குளிர்ந்த நீர் ; 4. துதைவு - செறிவு ; 5. இகுத்தல் - தாழ்த்தல் ; கலை தாழவிடு கிற குரல் ; தூம்பு - பெருவங்கியம் ; குரலாகிய தூம்பு. குரல் - கலையினோசை. 8. மந்தியவை - மந்தித்திரள். மருடல் - ஆச்சரி யப்படுதல். 9. இயலி - உலாவி ; 12. தன்னால் செருச் செய் யப்பட்ட யானை. சென்னெறி - சென்ற நெறி ; 18. நெகிழ் தோளினை யுடையேன் 17 யானொருத்தியுமே ; அதற்குக் காரண மென்னோ என்றவாறு.

1-8. இவை இத்தன்மையைக் கருவிகளாக ஆடு மயிலென்க.

பிறர்க்கெல்லாம் இன்பஞ்செய்யும் நாடனைக் கண்டார் பலருள்ளும் நமக்கே துயராவா னென்னென உள்ளுறை காண்க.

பி - ம். 10. விழுவுக்கள விறலி.

## 83. பாலை

வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
* கறையடி மடப்பிடி கானத் தலறக்

*"வலஞ்சுரி மராஅத்து" என்னுங் களிற்றியானை நிரையுள் "கறையடி ........புல்லி" என யானைக்கன்றைக் கவர்ந்தவாறு காண்க' என்றார் நச். (தொல். பொருள். 60.)

களிற்றுக்கன் றொழித்த வுவகையர் கலிசிறந்து
5 கருங்கான் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொழி வெண்ணா ரழுந்துபடப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்
நறவுநொடை நல்லிற் புதவுமுதற் பிணிக்குங்
கல்லா விளையர் பெருமகன் புல்லி
10 வியன்றலை நன்னாட்டு வேங்கடங் கழியினுஞ்
சேய ரென்னா தன்புமிகக் கடைஇ
யெய்தவந் தனவாற் றாமே நெய்தற்
கூம்புவிடு நிகர்மல ரன்ன
வேந்தெழின் மழைக்கணெங் காதலி குணனே.

என்பது : தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

— கல்லாடனார்.

வரி

2. உளை மயிர் - தலையாட்டம்போல நான்ற மயிர்; 6. பெரும்பொழி - பெரிதாகவுரித்த உரி; 7. நியமம் - அங்காடி. 8. நறவு விலையாக; புதவு முதல் - வாயிலிடம். 9. இளையர் - வேடர் ;.............. 13. நிகர் - ஒளி. 14. குணங்கள் 12 எய்தவந்தன என்க. 6. பூட்டிக் கொடுபோந்து 7 ஊர் 8 வாயிலிற் பிணிக்கு மென்க.

பி - ம். 12. யல்கற்.

## 84. முல்லை

* மலைமிசைக் குலைஇய வுருகெழு திருவிற்
பணைமுழங் கெழிலி பௌவம் வாங்கித்

* "இது தூது கண்டு வருந்திக் கூறியது. இக்களிற்றியானை நிரையுள் தன்னூரும் ' அருமுனையியவிற் சீறூர்' என்றலின் தான் குறுநில மன்னனென்பது பெற்றாம்" என்றும், "குறுநில மன்னர் போல்வார் சென்றமை தோன்றக் கூறியது" என்றும், "ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்" என்னுந் துறைக்கு உதாரணமாகுமென்றும், " 'வினைவயிற்.........யேமே' எனத் தலைவியை நினைவன வாகைக்கு வழுவாம்; அகத்திற்கு வழுவன்று" என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 24., 27., 41., 76.)

தாழ்பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ
மாதிரம் புதைப்பப் பொழிதலிற் காண்வர
5 விருநிலங் கவினிய வேமுறு காலை
நெருப்பி னன்ன சிறுகட் பன்றி
யயிர்க்கட் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய
நறுவீ முல்லை நாண்மல ருதிரும்
புறவடைந் திருந்த வருமுனை யியவிற்
10 சீறூ ரோளே யொண்ணுதல் யாமே
யெரிபுரை பன்மலர் பிறழ வாங்கி
யரிஞர் யாத்த வலங்குதலைப் பெருஞ்சூடு
கள்ளார் வினைஞர் களந்தொறு மறுகுந்
தண்ணடை தழீஇய கொடிநுடங் காரெயி
15 லருந்திறை கொடுப்பவுங் கொள்ளான் சினஞ்சிறந்து
வினைவயிற் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறை யேமே.

என்பது ; தலைமகன் பாசறையிருந்து சொல்லியது.

—மதுரை யெழுத்தாளன்.

வரி

1. குலைஇய - வளைந்த; உரு-உட்கு; 3. பெருநீரைத் 4 திக்கெல்லாம் மறையப் பொழிதலால். 5. ஏமம் - ரக்ஷை. 7. அயிரிடத்துப் படாரிலே உறங்குகின்ற முதுகு.

9. புறவமடைந்த 10 சீறூர்; புறவு - சிறுகாடு. 11. எரிபுரை மலர் - தாமரை, செங்கழுநீர். பிறழ என்றது, பூவோடரிந்த நெல்லாத லால் கட்டுங்காலத்து அரிமாற வைத்துக் கட்டுதலால் பூக்கள் தம்மின் மாறுபட என்றவாறு. வாங்கி - வலித்து. 13. மறுகும் - கொடுபோம். 14. எயில் - ஊர்.

16. வினையிடத்தே போகவிடுஞ் சேனை. 10 யாம் 17 பாசறையேம்; ஏமுறு காலையிடத்துச் 10 சீறூரோள் ஒண்ணுதல் எனத் தூது போக விடுதற்குத் தன்வருத்தந்தோன்றக் கூறியது.

பி - ம். 3. தாழ்பெயற் கெதிரி. 10 நன்னுதல்.

## 85. பாலை

நன்னுதல் பசப்பவும் பெருந்தோ ணெகிழவு
முண்ணா வுயக்கமொ டுயிர்செலச் சாஅ
யின்ன மாகவு மிங்குநத் துறந்தோ
ரறவ ரல்ல ரவரெனப் பலபுலந்
5 தாழல் வாழி தோழி சாரற்
கீன்றுநா ளுலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்
வென்வேற் றிரையன் வேங்கட நெடுவரை
10 நன்னாட் பூத்த நாகிள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை
நனைப்பசுங் குருந்தி னறுசினை யிருந்து
துணைப்பயிர்ந் தகவுந் துணைதரு தண்கார்
வருது மியாமெனத் தேற்றிய
15 பருவங் காணது பாயின்றால் மழையே.

என்பது: தலைமகன் பிரிய வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தி யது. இப்பாட்டு எதிர்காலநோக்கிற்று.

—காட்டூர்கிழார் மகனார் கண்ணனார்.

வரி

3. துறந்தோர் என்பது முற்றும்........... ஆதலால் 4 அறவரல்ல ரென்று பொருளுரைக்க.

6. நாளுலந்த - நாள் முடிந்த; ஈன்றணிமை கழிந்த; பிடி 7 கன்று இவற்றினென்க. 8. கொடுத்தூட்டும். 8. ஊட்டும் 9 வேங்கட மலை. 10. நாகிள வேங்கை - மிக்க இளமையையுடைய வேங் கை. 11. ஆடிய. - குடைந்த; 13. பயிர்ந்தகவும் - அழைத்துக் கூப்பிடும். 14. வருகின்றேதென்று தேற்றிய 15 பருவம் 13 துணைதரு தண்கார்; அதற்கு 15 மழையும் பரவாநின்றது; அதனைப் பாராய் என்க.

13. துணையை அழைத்தல் - பிரிவருமையால் கூட அழைத்தல்.

பி - ம். 11 பொறிவரை. 13 பயிர்ந்திறைஞ்சு. துனைதரு.

## 86. மருதம்

* உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகாற்
றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
5 கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
கோள்கா னீங்கிய கொடுவெண் டிங்கட்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
வுச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
10 முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
15 நீரொடு சொரிந்த வீரித ழலரி
பல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர

---

* "இதனுள் வதுவைக்கு ஏற்ற காரணங்கள் நிகழ்ந்தவாறும் தமர் கொடுத்தவாறுங் காண்க. சுற்றஞ் சூழ்ந்து நிற்றலானும் தமர் அறிய மணவறைச் சேறலானும் களவாற் சுருங்கிநின்ற நாண் சிறந்தமையைப் பின்னர்த் தலைவன் வினவ அவள் மறுமொழி கொடாது நின்றமையைத் தலைவன் றோழிக்குக் கூறியவாறு காண்க. இதனானே இது களவின்வழி நிகழ்ந்த கற்பாயிற்று" என்றும் "கரணத்தின் அமைந்து முடிந்தது" என்றும் கூறுவர் நச்சினார்க்கினியர். பேராசிரியர் 'அகமலியுவ......யோளே' என்பது 'சிதைவு பிறர்க்கின்மை' என்னும் மெய்ப்பாட்டிற்கு உதாரணமாகுமென்றும், இது "தலைமகன் அறிய மெய்ப்பட்டதென்பது" என்றும், 'தமர்தர...கங்குல்' என்பது தமரிற் பெற்றது என்றும் கூறுவர். (தொல். பொருள். 142, 146, 261, 499.)

20 வோரிற் கூடிய வுடன்புணர் கங்குற்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்
தொடுங்கினள் கிடந்த வோர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
வஞ்சின ளுயிர்த்த காலை யாழநின்
25 னெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
வின்னகை யிருக்கைப் பின்யான் வினவலிற்
செஞ்சூட் டொண்குழை வண்காது துயல்வர
வகமலி யுவகைய ளாகி முகனிகுத்
*தொய்யென விறைஞ்சி யோளே மாவின்
30 மடங்கொள் மதைஇய நோக்கி
னொடுங்கீ ரோதி மாஅ யோளே.

என்பது: வாயின்மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக்கூடி யின்புற்றிருந்த தலைமகன் பண்டுநிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்ததூஉமாம்.

—† நல்லாவூர்கிழார்.

வரி

1. களி மிதவை - குழைதலையுடைய கும்மாயம்; மிதவையொடு 2 அமலைநிற்ப; நிற்ப என்றூன், உண்பார் இடையறுமை பற்றி. 6. கோள்கால் - அசுபக்கிரகங்களிடம். * சகடம் திங்களையடையு நாள், கல்யாண 7. நாள். 7. வந்தென - வந்தவளவிலே; 8. புதிய அகன்ற மண்டை; 9. பொது - கல்யாணம் எல்லாரும் புகுதற்கு யோக்யமாதலால், அதனைச் செய்கிற ஆரவாரத்தினையுடைய செவ்விப் பெண்டிர்; கம்பலை யிடத்துத் 10 தாத்தர என்றுமாம். 10. முன்னவும் பின்னவும் - முற்படக் கொடுப்பனவும் பிற்படக் கொடுப்பனவும்: முறைமுறையாகக் கொடுப்ப. 11-12 பிள்ளைபெற்ற மகளிர் நால்வர்கூடிக் குளிப்பாட்டுதன் மரபு.

14. உன்னைத் தனக்குப் பெற்றவனைப் பேணும் பேணுதலையுடையையாவாய்; 15. அலரி - பூ. வதுவை நன்மணம் - வதுவைக்

* "சகடமென்றது உரோகணியை" என்பர், "திங்கட், சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்து" என்னுமிடத்து. (அகம். 136.)

கல்யாணம்; என்றது குளித்துவிட்டபின் என்றவாறு; இதுவும் ஒருகல்யாணமாதலால் 20. ஓர் இல் - * சதுர்த்தியறை; உடன் புணர்தல் - கூடப் புணர்தல் 21- 22. ஒடுங்கிக்கிடத்தலாற் கோடின புறம். ஓர் - அசை. 25. நெஞ்சம் நினைந்தது, எஞ்சா துரை - மறையாது உரை; 26. இனிய நகையொடு கூடின விருக்கையிடத்து. பின் - கல்யாணங் கழிந்தபின்.

5. கனையிருளகன்ற.........என்றது, பூர்வ பக்ஷத்தையுடைய காலை; 21. கொடும்புறம் - நாணத்தால் வளைந்த உடம்பு.

26. இன்னகை இருக்கைப் பின் 25 எஞ்சாது உரையென 26 வினவ லின் எனக் கூட்டுக.

30. மதைஇய நோக்கு - செருக்கின நோக்கு; என்றது எக்காலத்து மவள் என்னளவில் அன்புடையளாயிருப்பள், அவளறிவ தொ ன்றுண்டோ, உன்னுடைய கொடுமையல்லவோ இந்த மாறுத லெனத் தோழியொடு புலந்து கூறினான்.

பி - ம். 10. தரீஇய. 11. பயந்த. 19. நுமர்தர. † நல்லார் பூரன்கிழார்.

## 87. பாலை

தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தங்
கன்றுவாய் சுவைப்ப முன்றிற் றூங்கும்
படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை
நல்கூர் சீறா ரெல்லித் தங்கிக்
5 குடுமி நெற்றி நெடுமரச் சேவற்
றலைக்குரல் விடியற் போகி முனாஅது
கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பி
னெழுந்த தண்ணுமை யிடங்கட் பாணி
யருஞ்சுரஞ் செல்வோர் நெஞ்சந் துண்ணெனக்
10 குன்றுசேர் கவலை யிசைக்கு மத்த
நனிநீ டுழந்தனை மன்னே யதனா
லுவவினி வாழிய நெஞ்சே மையற

* "நாலாம்நாளை இரவின்கண்" உடன்புணரும் அறை.

வைகுசுடர் விளங்கும் வான்றோய் வியனகர்ச்
சுணங்கணி வனமுலை நலம்பா ராட்டித்
15 தாழிருங் கூந்தனங் காதலி
நீளமை வனப்பிற் றோளுமா ரணைந்தே.

என்பது : †வினைமுற்றி மீளுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—மதுரைப் பேராலவாயார்.

வரி

2. முன்றிற்றூங்கும் 3 பந்தர். 3. படலைப் பந்தர் என்றது, மரநிழலாகிய பந்தரை; 3. குரம்பையையுடைய 4 சீறூர். 6. தலைக்குரல் - முதற் குரல். 11. மன் - மிகுதி; 12. மை - இருள்; 13. வைகுசுடர் - விடியுமளவும் எரியும் விளக்கு; 14 முலையையும் பாராட்டித் 16 தோளையும் அணைந்து 12 உவ்வினி எனக் கூட்டுக.

4. தங்கிப் 6போய் 11 உழந்தனை என்க. 11. உழந்தனை-முற்று.

பி - ம். †இடைச்சுரத்து மீளலுறும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

## 88. குறிஞ்சி

முதைச்சுவற் கலித்த மூரிச் செந்தினை
யோங்குவணர்ப் பெருங்குர லுணீஇய பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி வருதிற நோக்கிக்
5 கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய
நெடுஞ்சுடர் விளக்க நோக்கி வந்துநந்
நடுங்குதுயர் களைந்த நன்ன ராளன்
சென்றனன் கொல்லோ தானே குன்றத்
திரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்
10 கவுண்மலி பிழிதருங் காமர் கடாஅ
மிருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்
திருங்கல் விடரளை யசுண மோர்க்குந்

காம்பம விறும்பிற் பாம்புபடத் துவன்றிக்
கொடுவிர லுளியங் கெண்டும்
15 வடுவாழ் புற்றின வழக்கரு நெறியே.

என்பது: இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

இப் பாட்டினுட் புருவை என்பது இளமை.

—†ஈழத்துப் பூதன்றேவனார்.

வரி

2. ஓங்குதல் - மேனோக்குதல்; வணர்தல் - வளைதல்; நெறிப்புப்படு தலுமாம். 3. தன் பக்கத்துப் பல்லிப்பாட்டை விசாரித்துக் கிட்டச் செல்லும்; நன்னிமித்தமான பல்லி; பாடு - ஓசை. 4. புருவை - இளமை; வரக்கடவ திறம். 5. கழுது - பரண். 4 நோக்கிக் 5 கொண்ட 6 விளக்கு; 6. அச்சுடரே வெளியாகப் பார்த்து வந்து; 7. களைந்த நன்னராளன் - நன்மையையுடைய வன்.

5. கொளீஇய - கொளுத்தின. 10. கடாத்திடத்து; 11 தொழுதி - வண்டின் கூட்டம்; செத்து - கருதி; 15. வழங்குதற்கரிய நெறியைச் 8 சென்றோனைக் கூட்டுக. இத்தன்மையான வழியிலே வந்து போகின்றாரோவென இரங்கிக்கூறக் கேட்டு வரைவானாவது பயன்.

தினை நுகர்தற்குப் பன்றி நிமித்தம் பார்த்து வருகையைச் செய்தேயும் கானவன் அது வருதிறமறிந்து சுடர் கொளுத்தினாற்போலத், தாமும் பேணிவந்தாரேயாயினும் வரவு வெளிப்படும் என்றவாறு.

பி - ம். 13. காம்புபயி. †எறத்துப் புதன்றேவன்.

## 89. பாலை

தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலி
னுறுபெயல் வறந்த வோடுதேர் நனந்தலை
யுருத்தெழு குரல குடிஞைச் சேவல்
புல்சாய் விடரகம் புலம்ப வரைய
5 கல்லெறி யிசையி னிரட்டு மாங்கண்

சிள்வீடு கறங்குஞ் சிறியிலை வேலத்
தூழுறு விளைநெற் றுதிரக் காழியர்
கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழியக்
களரி பரந்த கன்னெடு மருங்கின்
10 விளருன் றின்ற வீங்குசிலை மறவர்
மைபடு திண்டோண் மலிர வாட்டிப்
பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவ ரருந்தலை துமித்த
படுபுலாக் கமழு ஞாட்பிற் றுடியிகுத்
15 தருங்கலந் தெறுத்த பெரும்புகல் வலத்தர்
வில்கெழு குறும்பிற் கோண்முறை பகுக்குங்
கொல்லை யிரும்புன நெடிய வென்னாது
மெல்லென் சேவடி மெலிய வேக
வல்லுநள் கொல்லோ தானே தேம்பெய்
20 தளவுறு தீம்பா லலைப்பவு முண்ணு
ளிடுமணற் பந்தரு ளியலு
நெடுமென் பணைத்தோண் மாஅ யோளே.

என்பது: மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது. இப்பாட்டினுள் காழியர் என்றது வண்ணுரை.

-மதுரைக் காஞ்சிப் புலவர்.

உரை

1. வேனிற் காலத்து மாத மிரண்டனுள் நடுவு என்னும் நாளிருபது. 3. வெம்மையுடனெழுகின்ற குரலையுடைய பேராந்தைச்சேவல்; 2. உறுபெயல் வறந்த நிலைநீராய் நின்ற...எரிக்கப்பட்டான...பெயலா லுண்டான நீர் இப்பொழுது ஓடுதேராய்ப் பரத்தல். 5. கல்லெறி இசை - மலையினின்றுங் கல்லு விழும்பொழுது எழுமோசை. 7. காழியர் - வண்ணார். 8. கவ்வைப் பரப்பு - சிள்வீட்டு ஆரவாரத்தையுடைய பரப்பு. 10. வீங்குசிலை - விசைதங்கு சிலை. 11. மை - கருமை; மலிர - பூரிக்க. 14. ஞாட்பு - பாக்கக்காரரும் கள்ளரும் பொருத பூசற்களம். 15. அருங்கலந் தெறுத்த - அரிய பண்டங்களைத் திறையாகக் குவித்த.

17. புனமாகிய கொல்லை யென்க. புனமென்பது, முன்பு பயிராயதனை ; கொல்லை யென்பது, பயிரின்றித் தரிசாய்க் கிடந்த காட்டினை. 2. ஓடுதேர் நனந்தலையினையும், 5 கல்லெறியிசையின் இட்டுமலி விடங்களையும் 9 களரிபரந்த கன்னெடு மருங்கினையுமுடைய 17 இரும்புனக் கொல்லை எனக் காட்டிற்கு அடையாக்குக.
16. பகுக்கும் 17 கொல்லை யென்க. 13. சாத்தரும் வீராயிருப்ப ரென்று வயவரென்றார்.

பி - ம். 3. குடுமிச்சேவல். 11. திணிதோள். 21. பந்தரியலு.

## 90. நெய்தல்

மூத்தோ ரன்ன வெண்டலைப் புணரி
யிளையோ ராடும் வரிமனை சிதைக்குந்
தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச்
சில்செவித் தாகிய புணர்ச்சி யலரெழ
5 வில்வயிற் செறித்தமை யறியாய் பன்னாள்
வருமுலை வருத்தா வம்பகட்டு மார்பிற்
றெருமர லுள்ளமொடு வருந்து நின்வயி
னீங்கு கென்றியான் யாங்ஙன மொழிகோ
வருந்திறற் கடவுட் செல்லூர்க் குணாஅது
10 பெருங்கடன் முழக்கிற் றாகி யாண
ரிரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கட் கோசர் நியம மாயினு
முறுமெனக் கொள்குந ரல்லர்
நறுநுத லரிவை பாசிழை விலையே *

என்பது: †பகற்குறி வந்து கண்ணுற்று நீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு நின்று இற்செறிப்பறிவுறீஇயது.

— மதுரை மருதனிளநாகனார்.

வரி

2. வரிமனை - பண்ணின சிற்றில். 4. சிலர் செவிப்பட்ட மாத்திரமான புணர்ச்சி; அது அலரெழுகையாலே 5 இல்வயிற் செறித்

* "இது பொருள் மிகக்கொடுத்தல் வேண்டுமென்கின்றது" என்பர் நச். (தொல். பொருள். 114.)

தமை அறிகிலே. 6 வருமுலே வருத்தா என்றது வருமுலேயை யுடையாளை வருத்தி என்றவாறு; மார்பின் வருத்தா என்க. வருத்தி 7வருந்தும் நின் என முடிக்க. வருத்தாள் என்னும் பாடத்திற்கு வருமுலே வருத்தப்பண்ணுள் வருந்தும் பகட்டு மார்பினையுடைய நின் என்று சேர்த்துரைக்க. வருமுலே தெரு மர லுள்ளமொடு வருத்தப் பண்ணுள் வருந்தும் பகட்டு மார்பின் நின் என்று பிரித்துப் பொருளுரைப்பாரு முளர். 8. எங்கண் வருத்தமறிந்து வரைந்துகொள்ள நினையாதவுமக்கு நீங்குகென் றறிய யான் சொன்னுலுமறியீர் என்னுங் கருத்தான் யாங்ஙன மொழிகோ என்ருள். 9. கடவுட் செல்லூர் - தெய்வங்களெல் லாம் பலி பெறுதற்கிடமாகிய செல்லூர்.

10. பெருங்கடன் முழக்கிற்ருகி 4 அலரெழுவெனக் கூட்டுக. 10. பெருங்கடல்போலு மாரவாரத்தை யுடைத்தாகக் கோசர்வாழு நியமமென்று மேலேற்றுவாரு முளர்.

10. யாணர் 12 நியமமென்க. 11. வேல் முதலாகிய இடம்படுத்தல். 14 விலே 12 நியமம் கொடுப்பினும் கொள்ளாராதலால் அவர்க ளேயும் ஆச்ரயித்துக் கொள்ளென்ருள்.

மூத்தோர் இளையோரை வருத்தாரன்றே: அது செய்யாது, புணரி இளையோர் மனைசிதைத்தாற்போலப் பெரிய அறிவுடைய நீர் சிறியேமாகிய வெங்களை வருத்தாகின்றீர் என்றவாறு.

பி - ம். 12. கடுங்கட் †எதிர்ப்பட்டு இற்செறிப்பறிவுறீஇயது.

[பழையவுரை இவ்வளவே உள்ளது]

## 91. பாலை

விளங்குபக லுதவிய பல்கதிர் ஞாயிறு
வளங்கெழு மாமலை பயங்கெடத் தெறுதலி
னருவி யான்ற பெருவரை மருங்கிற்
சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயங் காணது
5 பாசி தின்ற பைங்கண் யானை
யோய்பசிப் பிடியொ டொருதிற னொடுங்க
வேய்கண் ணுடைந்த வெயிலவிர் நனந்தலை

யரும்பொருள் வேட்கையி னகன்றன ராயினும்
பெரும்பே ரன்பினர் தோழி யிருங்கே
10 ழிரலை சேக்கும் பரலுயர் பதுக்கைக்
கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கா லாசினி யொடுங்காட் டும்பர்
விசிபிணி முழவிற் குட்டுவன் காப்பப்
பசியென வறியாப் பணைபயி லிருக்கைத்
15 தடமருப் பெருமை தாமரை முனையின்
முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியுங்
குடநாடு பெறினுந் தவிரலர்
மடமா னோக்கிநின் மாணல மறந்தே.

என்பது: பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

—மாமூலனார்.

விளங்கு பகல் உதவிய பல கதிர் ஞாயிறு வளம் கெழு மாமலை பயம் கெட தெறுதலின் அருவி ஆன்ற பெருவரை மருங்கில் சூர் சுனை துழைஇ நீர் பயம் காணாது பாசி தின்ற பை கண் யானை ஓய் பசி பிடியொடு ஒரு திறன் ஒடுங்க வேய் கண் உடைந்த வெயில் அவிர் நனந்தலை அரு பொருள் வேட்கையின் அகன்றனர் ஆயினும்— எல்லாப் பொருளும் விளங்குதற்குக் காரணமான பகலைச் செய்த பலவாகிய கதிரையுடைய ஞாயிறு வளம்பொருந்திய பெரிய மலையின் பயன் கெடுமாறு காய்தலினாலே, அருவி இல்லையான பெரிய வரையின் மருங்கிலே தெய்வங்க ளுறைதற்கிடனாகிய சுனையைத் துழவி, ஆண்டு நீராகிய பயனைக் காணாது, பாசியைத் தின்ற பசிய கண்ணையுடைய ஆண் யானையானது ஓய்வினைத் தரும் பசியையுடைய பிடியுடனே ஒருபுறத்தே ஒடுங்கியிருக்க, மூங்கில் கள் கணுத் தெறித்துக் கெட்ட வெயில் விட்டு விளங்குகின்ற அகன்ற பாலை நிலப் பரப்பிலே அரிய பொருளை ஈட்டும் வேட்கை யினால் நம் தலைவர் அகன்றுள்ளாராயினும்;

பெரு பேர் அன்பினர் குடநாடு பெறினும் மடமான் நோக்கி தோழி நின் மாண் நலம் மறந்து தவிரலர்—நின்மாட்டு மிகப் பெரிய காதலுடையாராய்த் தலைவர் குட நாடு பெறினும், மடப்பம் பொருந்திய மான்போலும் பார்வையினை யுடையாய்! தோழீ!

18

நினது மாட்சிமைப்பட்ட நலத்தினை மறந்து தங்கலர், என்று பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.

இரு கேழ் இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கை - கரிய நிறமுடைய இரலை மான் உறங்கும் பரலுயர்ந்த பெரிய கற்குவியலின் கண்ணே ; கடு கண் மழவர் களவு உழவு எழுந்த நெடு கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர் - அஞ்சாமையையுடைய மழநாட்டார் ஆக்களைக் களவிடலாகிய உழவினுக்கு உதவியாக வளர்ந்த நெடிய காலையுடைய ஈரப் பலாவையுடைய ஒடுங்காடு என்னும் ஊருக்கு அப்பாலுள்ள ;

விசி பிணி முழவின் குட்டுவன் காப்ப—இறுக்கிப் பிணித்த முழவினையுடைய குட்டுவன் காத்தலினாலே ;

பசி என அறியா பணை பயில் இருக்கை—குடிகள் பசி என்று சொல்ல அறியாத மருதம் பயின்ற ஊர்களையுடைய ; குட நாடு பெறினும் (தவிரலர்) - குடநாட்டைப் பெற்றாராயினும் ஆண்டுத் தங்கலர் என்க.

தட மருப்பு எருமை தாமரை முனையின் முடம் முதிர் பலவின் கொழு நிழல் வதியும் (குடநாடு) - வளைந்த கொம்பினையுடைய எருமை தான் மேய்ந்த தாமரையை வெறுக்குமாயின், முடத்தன்மை மிக்க பலாவின் கொழுவிய நிழலிலே தங்கும் குடநாடு என்க.

மான் நோக்கி! தோழீ! பேரன்பினர் நனந்தலைப் பொருள் வேட்கையின் அகன்றனராயினும் குட நாடு பெறினும் நின் நலம் மறந்து தவிரலர் என்று இயைக்க.

பணை பயில் இருக்கைக் கண்ணேயுள்ள எருமை தாமரையை முனையின் பலாவின் நிழலில் வதியும் குடநாடு என்க.

சுனையிடத்துச் சூர் உறையுமென்றல், 'சுனையுறையும், சூர்மகள் மாதோ என்னுமென் நெஞ்சே' (அகம் 198) என்பதனாலும் அறிக.

அவிர்தல்-விட்டுவிளங்குதல். ஆன்ற-இல்லையான. பதுக்கை-கற்குவியல். பணை-மருத நிலம். தவிர்தல்-தங்குதல்.

" எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்" என்பதனால், மருதத்துப் பூவாகிய தாமரையும், அந்நில விலங்காகிய எருமையும் பாலைக்கண் வந்தன.

பசியோடும் நீர் வேட்கையோடும் வருந்திய காலத்தும் தன் பிடியை விட்டு நீங்காத யானை ஒடுங்கும் கடத்திற் சென்றவ ராத லால், தலைவர் உன்னை மறந்து தவிரலர் என்றுளாம்.

இஃது இறைச்சியிற் றோன்றிய பொருள்; முன்பே தலைவர் பெரும்பேரன்பினர்; அதன்மேலும் பிடியைத் தழுவி அதனைவிட்டு நீங்காத யானை ஒடுங்கியிருத்தலைக் காண்பார்காண் என்று, அன்புறு தகுநகூறிப் பிரிவாற்றுதலை வற்புறுத்தினள் என்க.

எருமை தனக்கு விருப்பமான உணவை வருத்தமின்றிப் பெற் றுண்டு நிழலில் உறையும் என்றது. தலைவரும் தாம் விரும்பிய பொருளை எளிதிற் பெற்றுவந்து நின் கூந்தல் நிழலிற் றுயில்வர் காண் என்றவாறு.

இவை, "அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும், வன்புறை யாகும் வருந்திய பொழுதே" என்ற விதிபற்றி அமைந்தன.

[பி - ம்.] 2 வயங்கெழு. 3. பெருவளமருங்கிற்.

## 92. குறிஞ்சி

நெடுமலை யடுக்கங் கண்கெட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்குற்
குஞ்சர நடுங்கத் தாக்கிக் கொடுவரிச்
செங்க ணிரும்புலி குழுமுஞ் சாரல்
5 வாரல் வாழிய ரைய நேரிறை
நெடுமென் பணைத்தோ ளிவளும் யானுங்
காவல் கண்ணினந் தினையே நாளை
மந்தியு மறியா மரம்பயி லிறும்பி
ஞெண்செங் காந்த ளவிழ்ந்த வாங்கட
10 டண்பல் லருவித் தாழ்நீ ரொருசிறை
யுருமுச்சிவந் தெறிந்த வுரனழி பாம்பின்
றிருமணி விளக்கிற் பெறுகுவை
யிருண்மென் கூந்த லேமுறு துயிலே.

என்பது: இரவுக்குறிச்சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலை மகனைப் பகற்குறிநேர்ந்த வாய்பாட்டாற் றோழி வரைவு கடாயது.

—மதுரைப் பாலாசிரியர் நற்றமனார்.

நெடு மலை அடுக்கம் கண் கெட மின்னி படு மழை பொழிந்த பால் நாள் கங்குல் குஞ்சரம் நடுங்க தாக்கி கொடுவரி செங்கண் இரு புலி குழுமும் சாரல் ஐய! வாரல் வாழியர்—நெடிய மலையின் சாரலிலே கண்ணொளி கெட மின்னி, மிக்க மழை பெய்த பாதி ராத்திரி இருளில் யானை நடுங்கத் தாக்கி வளைந்த வரியையும் சிவந்த கண்ணையுமுடைய பெரும் புலி முழங்கும் மலைச்சாரலிலே ஐய! வாராதேகொள்; நீ வாழ்வாயாக;

நேர் இறை நெடு மென் பணை தோள் இவளும் யானும் நாளை தினை காவல் கண்ணினம்—நேரிய முன்கையையும் நெடிய மெத்தென்ற பருத்த தோளையுமுடைய இத்தலைவியும் யானும் நாளைத் தினையைக் காவல் செய்தலைக் கருதினோம்; ஆதலால்,

மந்தியும் அறியா மரம் பயில் இறும்பின் ஒள் செங்காந்தள் அவிழ்ந்த ஆங்கண் தண் பல் அருவி தாழ் நீர் ஒரு சிறை உருமு சிவந்து எறிந்த உரன் அழி பாம்பின் திருமணி விளக்கில் இருள் மென் கூந்தல் ஏமுறு துயில் பெறுகுவை—மந்தியும் ஏறியறிய மாட்டாதவாறு மரம் பயின்ற சிறு காட்டிலே ஒள்ளிய செங்காந்தள் மலர்ந்த அவ்விடத்திலே தண்ணிய பல அருவியால் தாழ்ந்த நீருடைய ஒரு புறத்திலே இடியேறு வெகுண்டு அலைறதலால் வலியழிந்த பாம்பின் சிறந்த மணி விளக்கத்திடையிலே இருண்ட மெத்தென்ற இவளுடைய கூந்தலிடத்து இன்பமுறுகின்ற துயிலைப் பெறுகுவை, என்று இரவுக்குறிச்சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனைப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி வரைவு கடாயினள் என்க.

பால்நாள், ஒருநாளின் பால் என்க. படுதல் - மிகுதல். மந்தியும் அறியா - சூரியனொளி நுழையாதவாறு என்றலுமாம். அடுக்கம் - சாரல். ஏமுறுதல் - இன்பமுறுதல்.

காந்தள் அவிழ்ந்த ஆங்கண் என்றமையால் பூப்பறிக்க வருவாராலும், அருவித் தாழ் நீர் ஒரு சிறை என்றமையால் அருவியாட வருவாராலும் பகற்குறியும் அரிதென்று, கூறவேண்டும் பொருட் புறத்து இறைச்சியிற் பொருள் தோன்றக் கூறி வரைவு கடாயினள்.

இஃது, "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" என்ற விதிபற்றி அமைந்தது.

சூரியனொளியும் நுழையாத இறும்பிற் பிறவற்றைத் தீங்கு செய்யும் பாம்புமிழ் திரு மணி நின் கூட்டத்திற்குத் துணை யாமாறுபோல, இல்லறத்தைக் கருதிய நின் வரைவிற்குக் கொடிய சொல்லைக் கூறுவாரும் உதவியாகி வரைவுடன் படுவர் என்று தோழி உள்ளுறையுவமம் கூறினாள் என்க.

"உள்ளுறுத் திதனோடு ஒத்துப் பொருள் முடிகென, வுள்ளுறுத் துரைப்பதை யுள்ளுறை யுவமம்" என்பது ஒத்து.

"கிழவோட் குவமம் ஈரிடத் துரித்தே" என்னும் உவமவியற் சூத்திரத்துச் சிறுபான்மை குறிஞ்சி முதலியவற்றிற்கும் உள்ளுறை யுவமம் கொள்க என்றலின், குறிஞ்சியில் உள்ளுறை கொண்டார்.

"தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக், கூறுதற் குரியர் கொள்வழி யான" என்ற விதிபற்றித் தோழி உள்ளுறை யுவமங் கூறினாள். இது பயவுவமப் போலி.

## 93. பாலை

கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவுங்
கேள்ல் கேளிர் கெழீஇயின ரொழுகவு
மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்
தாரங் கண்ணி யடுபோர்ச் சோழ
5 ரறங்கெழு நல்லவை யுறந்தை யன்ன
பெறலரு நன்கல னெய்திய நாடுஞ்
செயலருஞ் செய்வினை முற்றின மாயி
னரண்பல கடந்த முரண்கொ டானை
வாடா வேம்பின் வழுதி கூட
10 லாளங் காடி நாறு நறுநுத
னீளிருங் கூந்தன் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்றோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
15 நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுதல்

வயங்கிகழ் பிமிழ்தரும் வாய்புகு கடாத்து
மீளி மொய்ம்பொடு நிலனெறியாக் குறுகி
யாட்கோட் பிழையா வஞ்சுவரு தடக்கைக்
20 கடும்பகட் டியானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீ ருயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும் பலவே.

என்பது : வினைமுற்றிமீளலுறுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.

—கணக்காயனார் மகனார் நக்கீரனார்.

கேள் கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும் கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும் ஆள் வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல் சிறந்து - உறவினர்களைக் கேட்டினின்றுந் தாங்கவும், கிளைஞரைப் பெருக்கவும், நொதுமலாளர்களை உறவினராய் ஒழுகச் செய்யவும் வல்ல தாளாண்மைக்கு ஒத்த ஊக்கமொடு வெற்றியாற்சிறந்து ;

ஆரம் கண்ணி அடு போர் சோழர் அறம் கெழு நல் அவை உறந்தை அன்ன பெறல் அரு நல் கலம் எய்திய நாடும் செயல் அரு செய் வினை முற்றினம் - ஆத்தி மாலைசூடிய அடுகின்ற போரையுடைய சோழரது அறம் நிலைபெற்ற நல்ல அவையை யுடைய உறையூரைப் போலப் பெறற்கரிய நல்ல ஆபரணங்களை அடையும்பொருட்டு பலரும் ஆராயத்தக்க செய்யவரிய ஆள் வினையை முடித்தனம் ; ஆயின் - ஆதலினாலே ;

மாஅயோளொடு நெடு நகர் மெல் பூ சேக்கை நிவந்த பள்ளி விளக்கத்து ஆகம் பூண் வடு பொறிப்ப தண் ஆன்பொருநை உயர் கரை குவைஇய மணலினும் பல முயங்குகம் சென்மோ நெஞ்சே - கரியநிறமுடையாளோடு நெடிய மாளிகையிலே மெத்தென்ற மல ரணையுயர்ந்த பள்ளியிலே விளக்கு ஒளியிலே மார்பிலே ஆபரணங் களின் வடுப்பொறிப்பத் தண்ணிய ஆன்பொருநை யாற்றின் உயர்ந்த கரையிலே குவிந்த மணலினுங்காட்டிற் பல தடவை முயங் குவோம் வா நெஞ்சே ! என்று, வினை முற்றி மீளலுறும் தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

சோழரது உறந்தையில் தருமசபை உண்டென்பதனை, "மறங் கெழு சோழர் உறந்தை யவையத்து அறங்கெட லறியா தாங்கு" என்றும் (நற். 400), "மறங்கெழு சோழர் உறந்தை யவையத்து அறம் நின்று நிலையிற்று" என்றும் (புறம். 39) வருவன கொண்டு தெளிக.

அரண் பல கடந்த முரண் கொள் தானை வாடா வேம்பின் வழுதி கூடல் நாள் அங்காடி நாறும் நறு நுதல் நீள் இரு கூந்தல் (மாயோள்) - அரண்கள் பலவற்றைக் கடந்த பகைவரிடத்து மாறு பாட்டைக் கொண்ட தானையையும் வாடாத வேப்பந்தாரினையு முடைய வழுதியின் கூடலிடத்து நாட்காலையின்கண்ணுள்ள கடை வீதியைப் போல மணம் கமழும் நறிய நுதலினையும் நீளும் கரிய கூந்தலினையுமுடைய மாயோள் என்க.

வரை குயின்றன்ன வான் தோய் (நெடுநகர்) - மலையைக் குடைந்தாலொப்ப வானை அளாவிய நெடிய நகர் என்க.

நுரை முகந்தன்ன சேக்கை - நுரையை முகந்தாலொப்ப சேக்கை என்க. நலம் கேழ் ஆகம் - அழகு பொருந்திய மார்பு. இது வடுப்பொறிப்ப என்க. நெடுஞ்சுடர் - மிக்க ஒளி.

வரி நுதல் - வரி பொருந்திய நுதலினையும்; வாய் புகு கடாத்து - வாயிடத்துப் புகும் கடாத்தையுமுடைய;

வயம் திகழ்பு இமிழ்தரும் - வலி திகழ்கையினாலே முழங்கு கின்ற; மீளி மொய்ம்பொடு குறுகி ஆள் நிலன் எறியா கோள் பிழையா அஞ்சுவரு தடக்கை கடு பகட்டு யானை நெடு தேர் கோதை திருமா வியல் நகர் கருவூர் முன் துறை தெள் நீர் (ஆன்பொருநை)— மறம்பொருந்திய வலியோடு நெருங்கிவந்து ஆட்களை நிலத்தே எறிந்து கொலைசெய்தலிற் பிழையாத அச்சம் வருகின்ற பெரிய கையையும் மிக்க வலியையும் உடைய யானைப்படையையும் நெடிய தேர்ப்படையையும் உடைய சேரனது செல்வத்தாற் பெரிய அகன்ற நகரமாகிய கருவூரின் முதன்மையான துறைக்கண்ணே தெளிந்த நீரையுடைய ஆன்பொருநை யென்னும் யாறு என்க.

'அயம் திகழ்பு இழிதரும்' என்னும் பாடத்திற்குச் சுனையி னின்றும் தாழ்வதுபோல விளங்கிச் சொரியும் என்க.

கேளல் கேளிர் - நொது மலர். புகல் - வெற்றி; விருப்பமு மாம். புகல்சிறந்து முயங்குகம் என்று கூட்டுக. அயம்-சுனே. மீளி - மறம். பகடு - வலி.

இனி, "மேவிய சிறப்பின்" என்னும் சூத்திரத்து, "இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே" என்ற பகுதிக்குக் "கேள்கே ளேன்றவுங்.........புகல் சிறந்து" என்ற அடிகளைக் காட்டி, இது, 'வாணிகர் பொருள்வயிற் பிரிந்தவாறு காண்க' என்றும், "புறத் திணை மருங்கிற் பொருந்தி னல்லது, அகத்திணை மருங்கின் அளவுத லிலவே" என்ற சூத்திரத்துக் 'கேள்கே ளேன்றவும்' என்னும் அகப்பாட்டுப் புறத்திணைத் தலைவர் பலராய் அகத்திணைக் கண் அளவி வந்தது என்றும், "கரணத்தி னமைந்து முடிந்த காலை" என்ற சூத்திரத்து, 'அவ்வழிப் பெருகிய சிறப்பின்கண்' என்ற பகுதிக்குக் 'கேள்கே ளேன்றவுங் கிளைஞர் ஆரவும்' என்ற அடிகளைக் காட்டியுஞ் சென்றனர் நச்சினார்க்கினியர்.

இதனுள், 'சிறப்பாவன பகைவென்று திறை முதலியன கோடலும், பொருண் முடித்தலும் துறைபோகிய ஒத்தும் பிறவு மாம்' என்றலின், இது பொருண் முடித்த சிறப்புக்கண் தலைமகன் மனமகிழ்ந்து கூறினன் என்க.

இனிப் பேராசிரியர், "பிறப்பே குடிமை" என்ற சூத்திரத்து ஆண்மையால் தலைமகனோடு தலைமகள் ஒத்தமைக்குக் "கேள்கே ளேன்றவும் கிளைஞர் ஆரவும்.........புகல் சிறந்து" என்ற அடிகளைக் காட்டி, இன்ன காரணத்திற் பிரிந்து போந்து வினைமுடித்தன மாயினும், அவளை முயங்குகம் சென்மோ என்றமையின், தன் ஆள்வினைக்குத் தக்க பெண்மையான் அவள் ஆற்றியிருந்தா ளென் பதூஉம் கருதிய கருத்தினற் காமக் குறிப்புப் பிறந்தமையின், அஃது ஆண்மையாயிற்று என்றும், "மறைவெளிப் படுதலும்" என்ற சூத்திரத்து, மலிதலுக்கு, 'கலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப, முயங்குகம் சென்மோ நெஞ்சே' என்ற வடிகளைக் காட்டியுஞ் செல்வர். (தொல். பொருள். 28, 55, 146, 273, 499).

"ஆரும் வெதிரும்" என்ற சூத்திரத்து, 'மெய்பெற' என்ற தனன், 'ஆரங்கண்ணி' என, அம்முப்பெற்றது என்பர் நச். (தொல். எழுத்து. 363).

## 94. முல்லை

தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய
குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய
வானெனப் பூத்த பானாட் கங்குன்
மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற விடையன்
5 றண்கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ
வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணிய
னைதுபடு கொள்ளி யங்கை காயக்
குறுநரி யுளம்புங் கூரிரு ணெடுவிளி
சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய
10 முதைப்புனங் காவலர் நினைத்திருந் தூதுங்
கருங்கோட் டோசையொ டொருங்குவந் திசைக்கும்
வன்புலக் காட்டுநாட் டதுவே யன்புகலந்
தார்வஞ் சிறந்த சாய
லிரும்பல் கூந்தற் றிருந்திழை யூரே.

என்பது: (1) வினைமுற்றிமீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது. (2) தலைமகன் பாகற்குச் சொற்றதூஉமாம்.

—நன்பலூர்ச் சிறுமேதாவியார்.

அன்பு கலந்து ஆர்வம் சிறந்த சாயல் இரு பல கூந்தல் திருந்து இழை ஊர் - அன்பு கலந்து ஆர்வம் மிக்க சாயலையும் கரிய பல வாகிய கூந்தலையும் திருந்திய இழையினையுமுடைய எனது தலைவி உறையு மூரானது;

அன்பு, ஒருவரை ஒருவ ரின்றியமையாமை. ஆர்வம், கருதிய பொருண்மேலுள்ள பற்றுள்ளம். சாயல், மென்மைத்தன்மை.

தேம் படு சிமைய பாங்கர் பம்பிய குவை இலை முசுண்டை வெண் பூ வான் என குழைய பூத்த பால் நாள் கங்குல் - தேனீ ருல்கள் படுகின்ற மலைச்சிகரத்தின் பக்கங்களிலே பரவிய குவிந்த இலையையுடைய முசுண்டையின் வெள்ளிய பூக்கள் வானமானது மீனைப் பூத்தாற் போல குழையப் பூத்த பாதிராத்திரி இருளிலே;

றி துரூஉ தொகுத்த பறி புற இடையின் தண் கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ வண்டுபட தொடுத்த நீர்வார் கண்ணியன்-

யாட்டுக் குட்டிகளை ஒன்றுசேரத் தொகுத்த ஓலைப்பாயை முதுகின் புறத்தேயுடைய இடையனுனவன் தண்ணிதாகக் கமழ்கின்ற முல்லையைத் தோன்றியொடு பிணைத்து, வண்டு ஒலிக்கும்படி தொடுத்துச் சூடிய நீர் ஒழுகுகின்ற கண்ணியனுய் ;

ஐது படு கொள்ளி அகம் கை காய குறு நரி உளம்பும் கூர் இருள் நெடு விளி - மெல்லிதாகித் தேய்ந்த கொள்ளிக்கட்டை தன் அகங்கையிலே காய, மிக்க இருளிலே குறுநரிகளை ஓட்டுவதற்கு ஒலிக்கின்ற நீண்ட சத்தமானது ;

முதை புனம் காவலர் சிறு கண் பன்றி பெரு நிரை கடிய நினைத்து இருந்து ஊதும் கரு கோட்டு ஓசையொடு ஒருங்கு வந்து இசைக்கும் வன் புலம் காட்டு நாட்டது - முற்றிய தினைப்புனத்துக் காவலர் சிறிய கண்ணையுடைய பன்றிகளின் பெரிய மந்தையை ஓட்டுவதற்கு நினைத்திருந்து ஊதும் பெரிய கொம்போசையோடு சேர்ந்து ஒன்ருக வந்து இசைக்கும் வன்புலமான காட்டு நாட்டின் கண்ணது ஆகும், என்று வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னுன் என்க.

இனி இரண்டாம் துறைக்கு :—

தலைவனே! நின் தலைவி யாண்டுறைகின்ருள் என்று வினைய பாங்கற்குத் தலைமகன், 'திருந்திழை ஊரானது இடையன் குறு நரி உளம்பும் நெடு விளி முதைப் புனங் காவலர் ஊதும்கோட்டோசை யொடு ஒருங்கு வந்து இசைக்கும் காட்டு நாட்டது' என்று சொன்னுன் என்க.

இது முல்லையிற் களவு. "திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே" என்பது இதற்கு விதியாகக் கொள்க.

நரியை ஓட்டும் இடையர் விளியும், பன்றியை ஓட்டும் கானவர் கோட்டோசையும் ஒருங்குவந்து இசைக்கும் என்று கூறினமையால், முல்லையும் குறிஞ்சியும் மயங்கிய திணை மயக்கம் கூறும் செய்யுளாக இஃது அமைந்துள்ளது.

இத்தன்மையெல்லாம் அமைந்த திருந்திழை ஊர் காட்டு நாட்டதென்று இயைக்க.

பானாட் கங்குல் வான் பூத்தன்னவாகச் சிமையப் பாங்கர்ப் பம்பிய முசுண்டை வெண்பூக் குழையத்தொடுத்த வென்றுமாம்.

வானையு மதனிடத்துப் பூத்த மீனையும் சிமயத்தோடு மதனிடத்துப் பூத்த முசுண்டையோடும் உவமித்தமையின், இரட்டைக் கிளவியாயிற்று. "இரட்டைக் கிளவி இரட்டை வழித்தே" என்பது ஒத்து.

இது, "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்ற சூத்திரத்து, முல்லை ஒழுக்கத்திற்கு முல்லைநிலம் உரித்தாயிற்று என்றும், "புணர்தல் பிரிதல்" என்னுஞ் சூத்திரத்து, இருத்தல் நிமித்தத்திற்கு இப் பாட்டினைக் காட்டி, "இக்காலம் வருந்துணையும் ஆற்றினுளெனத் தான் வருந்துதலின் இருத்தல் நிமித்தமாயிற்று என்றும் கூறுவர். நச். (தொல். பொருள். 5; 14).

பி - ம். 3. வான்பூத்தன்ன. 9. கூடிய. கடியு.

## 95. பாலை

பைப்பயப் பசந்த நுதலுஞ் சாஅ
யைதா கின்றென் றளிர்புரை மேனியும்
பலரு மறியத் திகழ்தரு மவலமு
முயிர்கொடு கழியி னல்லதை நினையி
5 னெவனோ வாழி தோழி பொரிகாற்
பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற
வாலி யொப்பின் றூம்புடைத் திரள்வீ
யாறுசெல் வம்பலர் நீளிடை யழுங்க
வீன லெண்கி னிருங்கிளை கவருஞ்
10 சுரம்பல கடந்தோர்க் கிரங்குப வென்னார்
கௌவை மேவல ராகி யிவ்வூர்
நிரையப் பெண்டி ரின்னா கூறுவ
புரைய வல்லவென் மகட்கெனப் பரைஇ
நம்முணர்ந் தாறிய கொள்கை
15 யன்னை முன்னர்யா மென்னிதற் படலே.

என்பது: போக்குடன்பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

—ஔரோடோகத்துக் கந்தரத்தனார்.

பை பய பசந்த நுதலும் சாஅய் ஐது ஆகின்று என் தளிர் புரை மேனியும் பலரும் அறிய திகழ்தரும் அவலமும் உயிர்கொடு கழியின் அல்லது நினையின் எவனோ தோழி வாழி — மெல்ல மெல்லப் பசந்த என் நுதலும், நுணுகி மெல்லிதாகிய என் தளிரை ஒத்த மேனியும் பலரும் அறியும்படி விளங்குகின்ற துயர மும் என் உயிரைக் கொண்டு நீங்கினாலல்லது நினையின் வேறு என் செய்ய வல்லன? தோழீ! நீ வாழி;

பொரி தாள் பொகுட்டு அரை இருப்பை குவி குலை கழன்ற ஆலி ஒப்பின் தூம்பு உடை திரள் வீ ஆறு செல் வம்பலர் நீள் இடை அழுங்க ஈனல் எண்கின் இரு கிளை கவரும் சுரம் பல இறந் தோர்க்கு இரங்குப என்னார் - பொரிந்த தாளினையும் பொகுட் டுடைய அரையினையு முடைய இருப்பையின் குவிந்த குலையி னின்றும் கழன்ற ஆலங்கட்டியை ஒத்தனவான உட்டுளையுடைய திரண்ட பூக்களை வழிமேற் செல்லும் அன்னியர் நீண்ட அவ்வழி யிலே செல்லாது தவிருமாறு குட்டிகளை ஈன்ற கரடியின் பெருங் கூட்டம் கவர்கின்ற சுரங்கள் பலவற்றைக் கடந்து சென்ற தலை வர்க்கு இரங்குவர் என்றாய்;

இவ்வூர் நிரய பெண்டிர் கௌவை மேவலர் ஆகி இன்னா கூறுவ என் மகட்கு புரைய அல்ல என பரைஇ நம் உணர்ந்து ஆறிய கொள்கை அன்னை முன்னர் யாம் இதன் படல் என் - இவ்வூரிலுள்ள நரகப் பெண்டிர்கள் அலர் தூற்றுவதை விரும்புவா ராகி இன்னாவாகக் கூறுகின்ற சொற்கள் என் மகளுக்கு உயர்வான அல்லவென முருகனைப் பரவி, நம் நிலையை உணர்ந்து, அடங்கிய கோட்பாட்டினையுடைய அன்னை முன்னர் நாம் இந்நிலையின்கட் படுதல் எவ்வாறும்! என்று, தலைமகள் தோழிக்குச்சொன்னாள் என்க.

நுதலும் மேனியும் அவலமும் உயிர்கொடு கழியின் அல்லது பிறிது எவன்? சுரம் கடந்தோர்க்கு இரங்குப என்னார் பெண்டிர் இன்னா கூறுவ புரையவல்ல எனப் பரைஇ ஆறிய கொள்கை அன்னை முன்னர் இதற்படல் என்? எனக் கூட்டுக.

ஆலி ஒப்பின் இருப்பை வீ என்றதனால், வண்ணத்தோடு வடிவுபற்றி உவமஞ் சென்றது. 'விரவியும் வரூஉம் மரபின வென்ப' என்பது ஒத்து.

நிரையப் பெண்டிர் - நிரையத்து வாழும் பெண்டிர் ; நிரையம் புகுதற்குரியராய பெண்டிர் என்றலுமாம்.

நுதலும் பசந்தது, மேனியும் ஐதாயிற்று, அவலமும் நிகழ் தரும்; இவை உயிர் கொடு போனாலல்லது தீராது என்றலுமாம்.

தமக்கு விருப்பமான இருப்பைப் பூவைக் கவரும் எண்கின் கிளையை அஞ்சி வம்பலர் தம் காரியத்தைத் தவிர்ந்ததுபோல, அலர் வினை மேவும் அம்பல் ஒழுக்கப் பெண்டிரின் இன்னாத கூற்றுக்கு அஞ்சி யான் களவு ஒழுக்கத்தைத் தவிர்ந்து கற்புப் பூண்டு போக் குடன் படுவல் என்று தலைமகள் உள்ளுறுத்துக் கூறினாள் என்க.

"எஞ்சி யோர்க்கும் எஞ்சுத லிலவே" என்ற சூத்திரத்துத் தலைவி கூற்றுக்கு இப்பாட்டினைக் காட்டி, "இது போக்குடன்பட்ட தலைவி தோழிக்குரைத்தது" என்பர் நச். (தொல். பொருள். 42).
பி-ம். 1. பசந்தது. 7. தூம்பிடைத். 10. கழிந்தோர். 14. தாற்றிய.

## 96. மருதம்

நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்துப்
பூட்டறு வில்லிற் கூட்டுமுதற் றெறிக்கும்
பழனப் பொய்கை யடைகரைப் பிரம்பி
னரவா யன்ன வம்முண் ணெடுங்கொடி
5 யருவி யாம்ப லகலடை துடக்கி
யசைவரல் வாடை தூக்கலி னூதுலை
விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழுங்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர
வொண்டொடி யாயத் துள்ளுநீ நயந்து
10 கொண்டனை யென்பவோர் குறுமக ளதுவே
செம்பொற் சிலம்பிற் செறிந்த குறங்கி
னங்கலுழ் மாமை யஃதை தந்தை
யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்
வெண்ணெல் வைப்பிற் பருவூர்ப் பறந்தலை
15 யிருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய
வொளிறுவா ணல்லமர்க் கடந்த ஞான்றைக்

களிறுகவர் கம்பலை போல
வலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.

என்பது : தோழி வாயின் மறுத்தது.

—மருதம்பாடிய இளங்கடுங்கோ.

நறவு உண் மண்டை நுடக்கலின் இறவு கலித்து பூட்டு அறு வில்லில் கூட்டுமுதல் தெறிக்கும் பழனம் - கள்ளுண்ணும் மண்டை கழுவப்படுதலினாலே, அந்நீரைப் பருகிய இறவு செருக்குற்று நாண் வலித்தலினாலே பூட்டற்ற விற்போல நெற்கூட்டிடங்களிற் றுள்ளும் வயல்களையும் ;

பொய்கை அடைகரை பிரம்பின் அரம் வாய் அன்ன அமுள் நெடு கொடி அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி அசைவரல் வாடை தூக்கலின் ஊது உலை விசை வாங்கு தோலின் வீங்குபு நெகிழும் கழனி படப்பை காஞ்சி ஊர - பொய்கையை அடுத்த கரையிலேயுள்ள பிரம்பினது அரத்தின் வாயன்ன ஐதான முள்ளை யுடைய நெடிய கொடியானது அருவிக்கரைக்கண்ணுள்ள ஆம்பலின் அகன்ற இலையைப் பிணிக்க, அப்போது தங்கித்தங்கி வரும் வாடைக் காற்றானது அசைத்தலினாலே கொல்லன் ஊதும் உலையிலே விசைகொண்டு இழுக்கும் துருத்திபோல அவ்விலை ஒருகால் பருப்பதும் ஒரு கால் நெகிழ்வதுமாயுள்ள, வயல்களையடுத்த காஞ்சி மரங்களாற் சிறந்த தோட்டக்கூற்றினையுமுடைய ஊரனே ;

பழனமாகிய பொய்கை என்றலுமாம். பழனம் - நீர் நிலை.

ஒள் தொடி ஆயத்துஉள்ளும் ஓர் குறுமகள் நீ நயந்து கொண்டனை என்ப - ஒள்ளிய தொடியையுடைய பரத்தையர் கூட்டத்தினுள்ளே ஓரிளம் பரத்தையை நீ விரும்பி மணந்துகொண்டனை என்னாநின்றார்கள் ; அச்செய்தியானது ;

பருவூர்ப் பறந்தலை இரு பெரு வேந்தரும் பொருது களத்து ஒழிய சோழர் அமர் கடந்த ஞான்றை களிறு கவர் கம்பலை போல பலர் வாய்ப்பட்டு அலராகின்றது - பருவூர்ப் போர்க்களத்தின்கண் சேர பாண்டியரென்னும் இரண்டு பெரிய வேந்தரும் பொருது களத்தின்கண்ணே பட்டொழியச் சோழர் போரை வென்ற அன்றைக்கு அவர் களிறுகளைக் கவர்கின்ற ஆரவாரம் போலப்

பலர் வாயிலும் பட்டு அலராயிற்று என்று, தோழி தலைமகற்கு வாயின் மறுத்தாள் என்க.

செம்பொன் சிலம்பின் செறிந்த குறங்கின் அம் கலுழ் மாமை அஃதை தந்தை (சோழர்) - செம்பொற் சிலம்பினையும் செறிந்த தொடையினையும் அழகு ஒழுகுகின்ற மாமை நிறத்தினையுமுடைய அஃதை என்பாளுக்குத் தந்தையரான சோழர் என்க.

அண்ணல் யானை அடுபோர்ச் சோழர் - தலைமை பொருந்திய யானைப் படையால் அடுகின்ற போரையுடைய சோழர் என்க.

வெண்ணெல் வைப்பின் பருவூர் - வெண்ணெல் விளையும் ஊர்கள் சூழ்ந்த பருவூர். இவ்வூர்ப் பறந்தலைக் கண்ணே என்க.

ஒளிறுவாள் நல் அமர் - விளங்குகின்ற வாளால் வஞ்சனையின்றிப் பொருத அமர் என்க. இவ்வமரைச் சோழர் கடந்த ஞான்றை என்க.

படப்பைக் கான் நாறு ஊர என்ற பாடத்திற்குப் படப்பையின் மணம் கமழும் ஊர என்க.

பழனத்தையும் படப்பையினையுமுடைய காஞ்சியூர என்க.

ஈண்டு, "அலராகின்றது" என்றது, 'கிழவோன் விளையாட்டாங்கு மற்றே' என்ற கற்பியற் சூத்திரத்துத் தலைமகன் பரத்தையரிடம் விளையாட்டு நிகழ்த்த, அஃது அலராயவழி, 'அலரிற் றோன்றுங் காமத்திற் சிறப்பே' என்றபடி தலைவி காமஞ்சிறந்து புலந்தாளென்க.

"களவுங் கற்பும் அலர்வரை வின்றே" என்றமையின், ஈண்டுத் தோழி, 'அலராகின்றது' என்றாள்.

இப் பாட்டினுள் பொய்கையைப் பரத்தையர் சேரியாகவும், முள்ளுடைய பிரம்பின் கொடியை அச் சேரியைச் சூழ்ந்து திரிந்து நெஞ்சு வலிய பாணனாகவும், பூவை யொழித்து ஆம்பலிலையை அக் கொடி துடக்கியது காமஞ் சான்ற பரத்தையரை யொழித்துக் காமஞ்சாலா இளமையோளை அப்பாணன் தலைமகனோடு கூட்டிய தன்மையாகவும், வாடை தூக்குந்தோறும் அவ் விலை வீங்கித், தூக்காதவழி நெகிழ்ந்தது, தலைமகன் குறுமகளை முயங்கியவழி அக்

குறுமகள் கலி சிறந்து, அவன் நீங்கிய வழி அவள் சோர்ந்த தன்மை யாகவும் உள்ளுறை யுவமம் கொள்க.

இதனுள் தோலின் என்ற ஏனையுவமம் வீங்குபு நெகிழும் என்னும் உள்ளுறை யுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து உள்ளுறை உவமம்போலத் திணை யுணர்தலைத் தள்ளாது நின்றது.

" உள்ளுறை யுவமம் ஏனை யுவமமெனத்,
தள்ளா தாகும் திணையுணர் வகையே"

என்றமையின், இது கொள்ளப்படும்.

" உடனுறை யுவமம் சுட்டு நகை சிறப்பெனக், கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே" என்பதனுள் இது சிறப்பென்ற உள்ளுறை.

" இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கிற் றோன்று மென்ப"

என்றலின், ஈண்டுத் துனியுறு கிளவி தோன்றிற்று.

இஃது உவமப் போலி ஐந்தனுள் வினை யுவமப்போலி.

என்னை? தலைமகன் குறுமகளைப் புணர்ந்து தலையளி செய்த காலத்து அவள் மகிழ்ந்தும் அவன் பரத்தைமை செய்தொழுகிய காலத்து வருந்தியு மிருந்ததொழில்கள், வாடை தூக்கியவழி ஆம்ப லிலை வீங்கியும், அது மெலிந்தவழி அவ்விலை நெகிழ்ந்து மிருந்த தொழில்களோடு உவமங் கொள்ள நின்றமையின் என்க. இனி,

நறவுகலந்த தூயதல்லாத நீரை நுகர்ந்த இறவு செருக்கினல் மயங்கித் தான் உய்யமுடியாத கூட்டுமுதற்கண் தெறித்தாற்போல மாயஞ்செய்யும் பரத்தையரது இழிந்த நலனை நுகர்ந்த தலைமகனும் காமத்தால் மயங்கித் தான் இல்லற நடாத்தி உய்ந்துபோக முடியாத குறுமகள் முயக்கிடைத் தாழ்ந்தனன் என்று பிறிதுமோ ருள்ளுறை தோன்றவும் நின்றது.

இது பய வுவமப்போலி. என்னை? இறவு கூட்டு முதற் றெறித்துப் பெறும் பயனோடு தலைமகன் குறுமகளைப் புணர்ந்து பெறும் பயனை உவமங் கொள்ள வைத்தமையின் என்க.

ஈண்டு வில்லின் என்ற வினை யுவமம் தெறிக்கும் என்னும் உள்ளுறை யுவமத்தைத் தருகின்ற கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து, உள்ளுறை யுவமம்போலத் திணை யுணர்தலைத் தள்ளாது நின்றது.

"கிழவோட் குவமம் ஈரிடத் துரித்தே" என்ற உவமவியற் சூத்திரத்து, ஈரிடம் என்பன மருதமும் நெய்தலும் என்றலின், ஈண்டு மருதத்து உவமப்போலி கொண்டார்.

"தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக், கூறுதற் குரியர் கொள்வழி யான" என்ற விதிபற்றித் தோழி உள்ளுறை உவமங் கூறினாள்.

உள்ளுறை உவமமாவது :

"உள்ளுறுத் திதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் திறுவதை உள்ளுறை உவமம்"

தலைமகற்குரிய காமக்கிழத்தியருள் காமஞ்சாலா இளமை யோரும் ஒரு பகுதியினர் என்றலின், அவரிடத்துந் தலைவி யிடத்தும் தலைமகன் முயக்கத்தை இடையிட்டு மயங்குதலின் தலைவிக்குப் புலவி நிகழுமென்று, "ஒண்டொடி யாயத் துள்ளுநீ நயந்து, கொண்டனை என்பவோர் குறுமகள்" என்றுகூறித் தலைவி புலந்தாளாகக் கொள்வர் நச்.

இனிப் பேரா. தலைமகற்கு வரும் பழிகாத்தலும் தலைமகட்கு அறம் என்றலின், 'களிறுகவர் கம்பலை போல வலரா கின்றது பலர்வாய்ப் பட்டே' என்பது, "தெய்வ மஞ்சல்" என்னும் சூத்திரத்துப், 'புறஞ்சொன் மாணாக் கிளவி' என்னும் பகுதிக்கு உதாரணமாகும் என்பர். (தொல். பொருள். 151, 272.)

"'அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்' என்புழிச், சோழரெல்லாம் அஃதைக்குத் தந்தையாம் முறையராய் நிற்றலின், தந்தை யென்னும் ஒருமை சோழ ரென்னும் பன்மையொடு தனித்தனிச் சென்று கூடுதலின் வழுவின்றேனும், ஈற்றுப் பன்மைபற்றி வழுவமைத்தார்" என்பர் நச். (தொல். சொல். 461.)

**பி - ம்.** 1. துடக்கலின். 4. அரவாளன்ன. 12. அகுதை. 15. வேந்தரு மொருகளத்.

## 97. பாலை

கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுற லங்கோ டுதிர வலங்கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்
5 திருங்கன் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திருக்கு
மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலு
மிருங்கழை யிறும்பி னுய்ந்துகொண் டறுத்த
10 நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரொ
டகவுநர்ப் புரந்த வன்பிற் கழறொடி
நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூ ரன்னநின்
னலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்
15 தாழே லென்றி தோழி யாழவென்
கண்பனி நிறுத்த லெளிதோ குரவுமலர்ந்
தற்சிர நீங்கிய வரும்பத வேனி
லறலவிர் வார்மண லகலியாற் றடைகரைத்
துறையணி மருது தொகல்கொள வோங்கிக்
20 கலிழ்தளி ரணிந்த விருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை யம்மஞ் சூர
நுகர்குயி லகவுங் குரல்கேட் போர்க்கே.

என்பது : வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

— மாமூலனார்.

கள்ளி காட்ட புள்ளி பொறி கலை வறன் உறல் அம் கோடு உதிர வலம் கடந்து புலவு புலி துறந்த கலவு கழி கடு முடை—கள்ளிக் காட்டிலேயுள்ள புள்ளிப்பொறிபொருந்திய கலைமானுடைய வறனுற்ற அழகிய கோடு உதிரும்வண்ணம் அதன் ஓடும்

வெற்றியைக் கடந்து பற்றிக்கொண்டு அறைந்து கொன்று, புலா லில் விருப்பமுடைய புலி தின்று துறந்துவிட்டுப் போன மூட்டு வாய் கழிந்த மிக்க முடைநாற்றத்தையுடைய தசையை ;

இரவு குறும்பு அலற நூறி நிரை பகுத்து இரு கல் முடுக்கர் திற்றி கெண்டும் கொலை வில் ஆடவர் போல - இரவிலே குறும் பிலே யுள்ளார் அலறும்படி அவரை நூறி நிரையைக்கைக்கொண்டு அதனைப்பகுத்துப் பெரிய கற்பாறையின் முடக்கத்திலே தசையை அறுத்துத் தின்னும் கொலைத் தொழிலையுடைய வில்வீர ரான வெட்சியார் போல ;

பெரு தலை எருவையொடு பருந்து பல உடன் வந்து இருக்கும் அருசுரம் இறந்த கொடியோர்க்கு - பெருந்தலையையுடைய எருவை யோடு பருந்துகளும் பல ஒன்றுகூடிச் சூழ்ந்திருக்கும் அருஞ் சுரத்தே கழிந்த கொடியராகிய நம் தலைவர் பொருட்டு ;

வேண்மான் நன்னன் வியலூர் அன்ன நின் அலர் முலை ஆகம் புலம்ப அல்கலும் பல நினைந்து ஆழேல் என்றி தோழி - வேளிர் தலைவனை நன்னனது வியலூரைப் போலப் பரந்த நின் முலையையுடைய மார்பு தனிப்ப நாளும் பல நினைந்து ஆழாதே கொள் என்னுநின்றாய், தோழீ !

ஊரினை முலையாகத் தோடு உவமித்தார், ஊரின் நலன் அதனை உற்றநன்னற்குப் பயன்படல்போல, முலையாகத்தின் நலன் அதனை யுற்ற தலைமகற்குப் பயன் படலின் என்க.

குரவு மலர்ந்து அற்சிரம் நீங்கிய அரு பத வேனில் அறல் அவிர் வார் மணல் அகல் யாற்று அடைகரை துறை அணி மருது தொகல் கொள ஓங்கி கவிழ் தளிர் அணிந்த இரு சினை மாஅத்து இணர் ததை புது பூ நிரைத்த பொங்கர் புகை புரை அம் மஞ்சு ஊர நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கு என் கண் பனி நிறுத்தல் எளிதோ - குரவம் மலர்ந்து முன்பனிக்காலம் நீங்கிய அரிய செவ்வி யையுடைய இளவேனிற்காலத்திலே அற்றேமும் நீரிடத்து விளங்கு கின்ற ஒழுகிய மணலையுடைய அகன்ற யாற்றின் கரையிலே யுள்ள துறையை அலங்கரிக்கும் மருதமரங்கள் தொகுதியாக ஓங்கி, ஒழுகுந் தளிரா லலங்கரித்துக்கொண்ட பெரிய கிளைகளையுடைய மாவினது கொத்தடர்ந்த புதிய பூக்கள் செறிந்த சிறிய கொம்பு

களிலே புகையை ஒக்கும் அழகிய மேகம் தவழ, இவ்வின்பத்தை நுகர்கின்ற குயில்கள் பாட, அக் குரலை மகிழ்ந்து கேட்போர் பொருட்டு என் கண் நீரைச் சொரியாது நிறுத்துதல் எளிதோ என்று, வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

புலிதுறந்த கலைமானின் முடையைச் சூழ்ந்து எருவையொடு பருந்து வந்திருக்கும் சுரமிறந்த கொடியோர்க்கு ஆகம் புலம்ப ஆழேல் என்றி; வேனிலின்கண் யாற்றடைகறைத் துறை மருது ஓங்கவும் மாஅத்துப் புதுப்பூ நிரைத்த பொங்கரில் மஞ்சு ஊரவும் நுகர்குயில் அகவும் குரல் கேட்போர்க்கு என் கண்பனி நிறுத்தல் எளிதோ என்று கூட்டுக.

நுகர் குயில் அகவுதல்,

"ஊடினீ ரெல்லாரும் உருவிலான் தன்னாணைக் கூடுமின்" என்றல்.

இரு கழை இறும்பின் ஆய்ந்துகொண்டு அறுத்த நுணங்கு கண் சிறு கோல் வணங்கு இறை மகளிரொடு அகவுநர் புரந்த அன் பின் கழல் தொடி நறவு மகிழ் இருக்கை நன்னன் வேண்மான்—பெரிய மூங்கில் வளர்ந்த குறுங்காட்டில் இலக்கணம் ஆராய்ந்து அறுத்துத் திருத்திக்கொண்ட நுணங்கிய கணுவையுடைய சிறிய கோலைப் பிடித்த வளைந்த முன்கையையுடைய கூத்தியரொடு பாடகர்களையும் காத்த அன்பினையும் உழலும் தொடியினையும் நறவு உண்டு மகிழ்ந்திருக்கும் இருக்கையினையுமுடைய நன்னன் வேண் மான் என்க. இவனுடைய விரலூர் என்க.

தலைமைக் கூத்தியர் கையிற்கொண்ட மூங்கிற்கோற்குத் தலைக்கோ லென்று பெயர். அதன் இலக்கணத்தைச் சிலப்பதி காரம் அரங்கேற்று காதையுட் காண்க.

இறும்பு; ஈண்டு மாற்றார் எயிற்புறத்து மிளை. இதன்கண் தலைக் கோலுக்கு ஆவதொரு மூங்கிலை அறுத்துக் கோடல் மரபென்ப.

நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கு - நுகருகின்ற குயில் தன் பேடையை அழைக்கின்ற குரலைக் கேட்போர் பொருட்டு என்றலுமாம்; அகவுதல் - அழைத்தல்.

எருவை - பருந்தின் விசேடம். இது வெள்ளிய தலையை யுடையது. யாழ, அசை.

புலிதுறந்த கலைமானின் கடுமுடையைச் சூழ்ந்து எருவையும் பருந்தும் வந்து இருக்கும் சுரம் என்றியைக்க. கொலைவில் ஆடவர் எருவைக்கும் பருந்திற்கும் உவமை.

நுகர் குயில் அகவுங் குரலைக் கேட்ட தலைவர் அவ் வருத்தங் கண்டு வினை முடியாமல் வருவரோ வெனத் தலைவி அஞ்சினமை யின், "என் கண்பனி நிறுத்தல் எளிதோ ?" என்றாள் என்க.

"புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து, இடைச சுரத் திறைச்சியும் வினையும் சுட்டி, அன்புறு தக்க கிளத்த லானே, கிழவோன் செய்வினைக்கு அச்ச மாகும்" என்னுங் கற்பியற் சூத் திரத்தான் இது கொள்ளப்படும்.

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலோடு" என்னும் அகத்திணைச் சூத்திரத்து இப் பாட்டினை இத்துறைக்கே கொண்டு, 'இருவகை வேனிலும் பாலைக்கண் வந்தன' என்பர் நச். (தொல். பொருள் 9).

பி - ம். 6. கோள்வலாட. 9. கொண்டிறுத். 11. பண்பிற். 14. னகமலியாகம். 14. பலபுலக். 17. அரும்பவிழ். 19. மருதமொடிகல்கொள. 20. மாத்தி னிணர்ததை. ஔவையார். குடவுழுந்தனார்.

## 98. குறிஞ்சி

பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற்
றுனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த
வினிய வுள்ள மின்னா வாக
முனிதக நிறுத்த நல்க லெவ்வஞ்
5 சூருறை வெற்பன் மார்புறத் தணித
லறிந்தன ளல்ல ளன்னை வார்கோற்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
10 முருக னாரணங் கென்றலி னதுசெத்
தோவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன பலராய் மாண்கவின்

பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பரைஇக்
கூடுகொ ளின்னியங் கறங்கக் களனிழைத்
15 தாடணி யயர்ந்த வகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீர்
ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
20 பொறியமை பாவையிற் றூங்கல் வேண்டி
னென்னுங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக
வாடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயி னிம்மறை
25 யலரா காமையோ வரிதே யஃதான்
றறிவ ருறுவிய வல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவே ணல்குவ னெயெனின்
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
30 யானுயிர் வாழ்த லதனினு மரிதே.

என்பது : தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

— வெறிபாடிய காமக்கண்ணியார்.

பணி வரை நிவந்த பயம் கெழு கவான் துனி இல் கொள்கையொடு அவர் நமக்கு உவந்த இனிய உள்ளம் இன்று ஆக முனி தக நிறுத்த நல்கல் எவ்வம் - குளிர்ச்சிபொருந்திய மலையினது உயர்ந்த வளங்கெழுமிய சாரலிடத்து வெறுப்பில்லாத கோட்பாட்டுடனே நம் தலைவர் நமக்கு உதவின இனிய உள்ளம் இன்றுவாயினமையாலே, வெறுக்கும்படியாக நிலைநிறுத்திய நல்கல்வருத்தமானது;

சூர் உறை வெற்பன் மார்பு உற தணிதல் அன்னை அறிந்தனள் அல்லள் - தெய்வங்கள் உறைகின்ற வெற்பனது மார்பினை நாம் பொருந்துதலாலே தணிதலை அன்னை அறியாளாய் ;

வார் கோல் செறிந்து இலங்கு எல் வளை நெகிழ்ந்தமை நோக்கி கை அறு நெஞ்சினள் வினவலின் - நீண்ட கோற்றொழிலமைந்த செறிந்து தோன்றுகின்ற இலக்கம் அமைந்த நம் வளை நெகிழ்ந் தமையை நோக்கிச் செயலற்ற மனத்தினளாய் வினவுதலினாலே ;

முது வாய் பொய் வல் பெண்டிர் பிரப்பு உளர்பு இரீஇ முருகன் ஆர் அணங்கு என்றலின் அது செத்து - அறிவு வாய்த்த பொய் கூறுதல் வல்ல கட்டுவிச்சியர் பிரப்பினைக் குலுக்கி வைத்து, 'இது முருகனால் உண்டான தீர்தற்கு அரிய நோய்' என்று கட்டுக் கூறுதலின், அதனை மெய்யென்று கருதி ;

ஓவத்து அன்ன வினை புனை நல் இல் பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின் என் மகட்கு பண்டையில் சிறக்க என பரைஇ- சித்திரம் போலும் தொழில் புனைந்த நல்ல மாளிகையிலே 'பாவை போலும் பலராலும் ஆராயத்தக்க மாட்சிமைப்பட்ட அழகானது என் மகட்குப் பண்டையிற்போலச் சிறந்திடுக' எனத் தெய்வத் தைப் பராவி ; 'ஓவத்து...இல்', நலன்காரணமான உவமை.

கூடு கொள் இன் இயம் கறங்க களன் இழைத்து ஆடு அணி அயர்ந்த அகல் பெரு பந்தர் - கூட்டங்கொண்ட இனிய வாச்சியங் கள் ஒலிக்க வெறியாடுங் களனை இழைத்து, அவ்வாட்டத்திற் கேற்ற அலங்காரத்தைச் செய்த அகன்ற பெரிய பந்தலிலே ;

வெண்போழ் கடம்பொடு சூடி இன் சீர் ஐது அமை பாணி இரீஇ செல்வன் பெரு பெயர் ஏத்தி வேலன் வெறி அயர் வியல் களம் பொற்ப வல்லோன் பொறி அமை பாவையின் கை பெயரா தூங்கல் வேண்டின் தோழி என் ஆம் - வெளிய பனந் தோட்டினைக் கடம்பு மலரொடு சூடி, இனிய சீரை மெல்லிதாக அமைந்த பாணியிற் பொருத்திக் குமரக்கடவுளின் பெரும் கீர்த்தி யைப் புகழ்ந்து வேலனானவன் வெறியாடும் பெரிய களம் அழகுறப் பொறியமைக்கவல்லவன் அமைத்த சூத்திரப் பாவைபோலக் கையை வீசினவனாய் ஆடலை வேண்டின் தோழீ ! என் ஆகுமோ ;

மயங்கிய மையல் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக ஆடிய பின்னும் வாடிய மேனி பண்டையின் சிறவாதாயின் இ மறை அலர் ஆகா மையோ அரிதே - வெறியயர் களத்து வந்து கூடியுள்ள மயக்கங் கொண்ட கட்டுவிச்சியர் பொருட்டு விரைவாக வேலன் ஆடிய

பின்னும் என் வாடியமேனி பண்டையிற்போலச் சிறவாதாயின், யாம் மறைந்து ஒழுகிய இக்களவொழுக்கம் அலராகாமை அரிதாகும் ;

அஃது ஆன்று அறிவர் உறுவிய அல்லல் கண்டு அருளி வெறி கமழ் நெடுவேள் நல்குவனே எனில் - அதுவேயன்றி, நம் தலைவர் உறுவித்த இவ்வல்லலைக் கண்டு அருளி வெறிநாற்றங் கமழும் நெடுவேள் நம் பண்டை யழகை நல்குவனேயானால் ;

வெறியாடுங் களத்து வந்திருத்தலின், நெடுவேள் அக்களநாற்ற முடையனாயினான் என்க.

' செறி தொடி உற்ற செல்லலும் பிறிது என கான் கெழு நாடன் கேட்பின் யான் உயிர் வாழ்தல் அதனினும் அரிதே - ' செறிந்த தொடியினையுடைய நம் தலைவி உற்ற துன்பமும் நல்கலெவ்வ மின்றிப் பிறிது போலும் ' என்று கானைக் கெழீஇய நாடனாகிய நம் தலைவர் கேட்பாராயின் யான் உயிர்வாழ்தல் அதனினுங்காட்டில் அரிது என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்க.

தலைமகள் தோழிக்கு இவ்வாறு சொன்னாள் என்று இரண்டாந் துறைக்கும் இப்பொருள் கூறுக.

நல்கல் எவ்வமாவது - மார்பு நல்கியதாலாகிய எவ்வம். எவ்வம் - வருத்தம். வெண்போழ் - ஆகுபெயராற் பனந்தோட்டிற்காயிற்று.

பாணி - தாளம் ; சீர் - தாள அறுதி. ' மார்புறத் தணித்தல் ' என்னும் பாடத்திற்கு மார்பினை உறுவித்துத் தணித்தல் என்க. ஆடணி - தொங்கலலங்காரம் என்றலுமாம். கை பெயராப் பாணி இரீஇ என்று மாறி, கை எடாமல் தாளம் வைத்து என்றலுமாம்.

வேலன்-பூசாரி ; " செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின் வேலன் என்றார்." நொவ்வல் - விரைவு ; வருத்தமுமாம். இப்பொருட்கு, மையற் பெண்டிற்கு வருத்த முண்டாகும்படி, மேனி பண்டையிற் சிறவாதாயின் என்க.

மயங்குதல் - செறிதல். மையற் பெண்டிர் - அம்பற் பெண்டிருமாம்.

கட்டுவிச்சியர் கட்டுக்கூறு முறைமையினைக்,

"காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகிற் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைம்மோவாப்
பேரா யிரமுடையா னென்றாள் பெயர்த்தேயும்
காரார் திருமேனி காட்டினாள்"

என்னும் கலியன் திருவாய் மலர்ந்தருளிய சிறிய திருமடலினானும்,

"குயிலிதன் றேளன்ன லாஞ்சொல்லி கூறன்சிற் றம்பலத்தான்
இயலிதன் றேளன்ன லாகா இறைவிறற் சேய்கடவும்
மயில்இதன் றேகொடி வாரணங் காண்கவன் சூர்தடிந்த
அயலிதன் றேஇதன் றேநெல்லிற் றேன்றும் அவன்வடிவே"

என்னும் திருச்சிற்றம்பலக் கோவையார்ச் செய்யுளானும் அதன் உரையானும் அறிக.

செல்லலும் பிறிது, செல்லலுக்கு மருந்து மார்பேயன்றிப் பிறி தொன்று என்றலுமாம். அதனினும் - அவ்வலராகாமையினும்.

அலரச்சத்தினுட் நெடுவேள் நல்கல் அச்சத்திற்குத் தலைவி மிகுதியும் அஞ்சியது, தலைமகன் பண்டேயும் தன் பரத்தைமையால் நெகிழ்ந்து ஒழுகுவான் இன்று நம் ஆற்றாமைக்கு மருந்து பிறிது முண்டென்று அறியின் வரைவு நீடுமென்னும் கருத்தால் என்க.

"இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி, நின்ற இகரம் உகரம் ஆதல், தொன்றியல் மருங்கிற் செய்யுளுள் உரித்தே" என்ற சூத்தி ரத்துத், "தொன்று இயல் மருங்கின்" என்றதனால், அன்று என்பதூஉம் செய்யுளில் இம்முடிபு எய்துதல் கொள்க என்றலின், 'அன்றி' என்பது 'அன்று' என்றாகி,

"அன்றுவரு காலை ஆவா குதலும்" என்ற விதிபற்றி 'அஃ தான்று' என்றாயிற்று. (தொல். எழுத்து. 237, 258.)

இப் பாட்டினை, "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்" என்ற சூத்திரத்து, "வெறியாட் டயர்ந்த காந்தளும்" என்ற பகு திக்கு உதாரணமாகக் காட்டி, இதனுள் "சேயோன் கருப்பொரு ளாக மைவரை யுலகத்துக் கூதிர் யாமம் பொழுதாகச் சிறப்பறியும் வேலன் ஆடுதலின் வெறியாடிய காந்தள் அகத்திற்கு வந்தது

என்றும், "மறைந்தவற் காண்டல்" என்றசூத்திரத்து, "வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்" என்னும் பகுதிக்கு உதாரணமாகக் காட்டி, "'இன்னுவாக......நிறுத்த் எவ்வம்' என்பது அவன் வயிற் பரத்தைமை; 'உயிர் வாழ்தல் அரிது' என்பது தன்வயி னுரிமை; அவை வெறியஞ்சியவழி நிகழ்ந்தன" என்றும், "களவல ராயினும்" என்னும் சூத்திரத்து, "கட்டினும் கழங்கினும் வெறி என இருவரும் ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்" என்னும் பகு திக்குப் "'பனிவரை நிவந்த' என்னும் அகப்பாட்டினுள், 'வின வலின்......பெண்டிர் பிரப்புளர் பிரீஇ' எனக் கட்டுவிச்சியைக் கேட்டவாறும், 'என் மகட்கு' எனச் செவிலிகூற்று நிகழ்ந்தவாறும் காண்க" என்றும், "இதனுள் 'நெடுவேள் நல்குவனே எனின்' எனத் தலைவி அஞ்சவேண்டியது, இருவரும் (கட்டுவிச்சியும் வேல னும்) ஒட்டிக் கூறுமையால் தெய்வந்தான் அருளுமென்று கோட லின்" என்றுங், 'கான்கெழு நாடு' இதற்குக் 'கானைக் கெழீஇய நாடு' எனவுரைக்க என்றும் கூறுவர் நச்.

இனிப் பேரா. "சிறப்பே நலனே" என்ற சூத்திரத்துப் 'பாவை யன்ன பலராய் மாண்கவின்' என்புழி, மகட்கண் காதல் காரணமாக உவமை பிறந்தது" என்பர். (தொல். பொருள். 60, 111, 115, 279; தொல். எழுத்து. 481.)

**பி-ம்.** 3. மின்னுவாக்கி 4. முனிவுதகவந்த. 7. நெகிழ்த ளேக்கி, 27. நல்குவனெனினே.

## 99. பாலை

வாள்வரி வயமான் கோளுகி ரன்ன
செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின்
சிதரார் செம்ம லுஅய் மதரெழின்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
5 முகைபிணி யவிழ்ந்த கோங்கமொ டசைஇநனை
யதிரல் பரந்த வந்தண் பாதிரி
யுதிர்வீ யஞ்சினை தாஅ யெதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅ
மணங்குடை நகரின் மணந்த பூவின்

10 னன்றே கான நயவரு மம்ம
கண்டிசின் வழியோ குறுக ணுந்தை
யடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற்
பிடிமிடை களிற்றிற் றோன்றுங்
குறுநெடுந் துணைய குன்றமு முடைத்தே.

என்பது : உடன்போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொல்லியது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

வாள் வரி வயமான் கோள் உகிர் அன்ன செ முகை அவிழ்ந்த முள் முதிர் முருக்கின் சிதர் ஆர் செம்மல் தாய் - வாளின்வடிவு போலும் வரியையுடைய புலியினது இரையைப் பற்றிய நகத்தினைப் போலும் சிவந்த மொட்டவிழ்ந்த முள்ளு முதிர்ந்த முருக்கினது வண்டுகள் உண்ட பூவாடல்கள் தாவி ;

கோள் உகிர் - ஏனை விலங்குகட்குக் கூற்றுப்போலும் உகிர் என்றலுமாம், கோள், கூற்று.

மதர் எழில் மாண் இழை மகளிர் பூண் உடை முலையின் முகை பிணி அவிழ்ந்த கோங்கமொடு அசைஇ - களித்த அழகினையும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தினையிமுடைய மகளிரது பூண் அணிந்த முலைபோலும் மொட்டுக் கட்டவிழ்ந்த கோங்கமொடு தங்க ;

நனை அதிரல் பரந்த அம் தண் பாதிரி அம் சினை உதிர் வீ தாஅய் - கொத்தான புனலிப்பூவும் பரந்த அழகிய தண்ணிய பாதிரியின் அழகிய சினைக்கணின்றும் உதிர்ந்த பூவினோடு தாவவும் ;

எதிர் வீ மராம் மலரொடு விராய் - இங்ஙனம் ஒன்றோடொன்று மாறுபட்ட பூக்கள் வெண்கடப்பம் பூவோடு கலந்து ;

எதிர் வீ மராம் - இணையொத்த மராம்பூவுமாம்.

பராஅம் அணங்கு உடை நகரின் மணந்த பூவின் கானம் நன்றே நயவரும் - பராவத்தக்க தெய்வமுறையும் கோயிலின் கண்ணே தூவுதலாற்கலப்புற்ற பூவைப்போலக் கானமானது மிகுதியும் விரும்பத்தக்கதா யிராநின்றது ; மற்றும்,

நுந்தை அடு களம் பாய்ந்த தொடி சிதை மருப்பின் பிடி மிடை களிற்றில் தோன்றும் குறு நெடு துணைய குன்றமும் உடைத்து -

உன் தந்தை அடுகின்ற போர்க்களத்திற் பகைவர் மதிற் கதவின் மேற் பாய்ந்ததனாற் கிம்புரி சிதைந்த மருப்பினையுடைய, பிடி மிடைந்த, களிறுகளைப்போலத் தோன்றா நிற்கும் குறியவும் நெடியவுமான அளவுள்ள குன்றங்களையும் உடையதா யிராநின்றது ;

அம்ம குறுமகள் கண்டிசின் வாழி - இஃது என்ன ஆச்சரியம்! இள நங்காய் ! இதனை நீ பார் ; நீவாழ்க ! என்று உடன் போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொன்னான் என்க.

முருக்கின் செம்மல் தாஅய்க் கோங்கமொடு அசைஇ, அதிரல் பாதிரி உதிர்வீயோடு தாஅய், மராஅ மலரொடு விராய், அணங்குடை நகரின் மணந்த பூவின் கானம் நன்றும் நயவரும் : மற்றும் தொடி சிதை மருப்பிற் பிடிமிடை களிற்றிற் றோன்றும் குறு நெடுந்துணைய குன்றமும் உடைத்து ; அம்ம ! குறுமகள் ! கண்டிசின் வாழி என்று இயைக்க.

"பொறக்கலத்திற் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்" என்று உவமை கூறுமாறு இயல்பிலே வெளிய நிறமுடைய புலியுகிர் தான் பற்றிய இரையின் குருதியாற் சிவந்துகாட்டலிற் கோளுகிரென்றார்.

இவ்வுகிரானது முருக்கின் செம்முகைக்கு வண்ணத்தோடு வடிவுபற்றி உவமஞ் சென்றது. 'விரவியும் வரூஉ மரபின வென்ப' என்பதனாற் கொள்க.

மகளிர் முலைபோலும் முகைக் கோங்கு என்க. தொடி சிதை மருப்பிற் களிறு, பிடிமிடை களிறு என்க.

'மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்' என்ற அடி அளபெடை வண்ணத்திற் குதாரணம். (தொல். பொருள். 531. பேரா.)

"ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்" என்ற சூத்திரத்து, 'அப்பாற்பட்ட ஒருதிறத்தானும்' என்றதனானே, தலைவியிடத்துத் தலைவன் கூறுவன பலவுங் கொள்க என்று கூறி, இப்பாட்டினைக் காட்டி, இவ்வகப்பாட்டுத் தலைவியை மருட்டிக் கூறியது என்றார் நச்சினார்க்கினியர். (தொல். பொருள். 41.)

இனி, "இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு, வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்" என்ற சூத்திரத்துப் பேரா. "உம்

மையாற் கிழத்தியொடு வழக்கிய லாணையானன்றி மருட்டிக் கூற வும் பெறுமென்று கோடலின்; இஃது அமைக்கப்படும்.

பி - ம். 3. சிதரற். 7. முதிர்வீ 9. யணங்கு. 12. தொடி செறி. 13. பிடி யிடை.

## 100. நெய்தல்

அரையுற் றமைந்த வார நீவிப்
புரையப் பூண்ட கோதை மார்பினை
நல்லகம் வடுக்கொள முயங்கி நீவந்
தெல்லினிற் பெயர்த லெனக்குமா ரினிதே
5 பெருந்திரை முழக்கமொ டியக்கவிந் திருந்த
கொண்ட லிரவி னிருங்கடன் மடுத்த
கொழுமீன் கொள்பவ ரிருணீங் கொண்சுட
ரோடாப் பூட்கை வேந்தன் பாசறை
யாடியல் யானை யணிமுகத் தசைத்த
10 வோடை யொண்சுட ரொப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்
புன்னையங் கானற் புறந்தை முன்றுறை
வம்ப நாரை யினனொலித் தன்ன
15 வம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்
வைகுறு விடியற் போகிய வெருமை
நெய்தலம் புதுமலர் மாந்தும்
கைதையம் படப்பையெம் மழுங்க லூரே.

என்பது : தோழி வரைவுகடாயது.

—உலோச்சனார்.

அரை உற்று அமைந்த ஆரம் நீவி புரைய பூண்ட கோதை மார்பினை நீ எல்லினில் வந்து நல் அகம் வடு கொள முயங்கி பெயர்தல் எனக்கும் ஆர இனிது - பிறவிரைகளோடுங் கூட்டி அரைக்கப் பெற்றுப் பூசுதற்கு அமைந்த சந்தனத்தைப் பூசி, உயர்வாகப் பூண்ட பூமாலையையுடைய மார்பினை! (தலைவ) நீ இரவிலே

வந்து நல்ல மார்பு வடுக்கொள்ளும்படியாக முயங்கி விட்டுப் பெயர்தல் எனக்கும் மிக்க இனியதாக இராநின்றது ;

ஆர இனிது எனற்பாலது கடைக் குறைந்து நின்றது. மார் என்று கண்ணழித்து, அசை என்றலுமாம். உம்மை, இறந்தது தழீஇயது. ஆனால் இக்கள வொழுக்கத்தால் ;

கைதை படப்பை எம் அழுங்கல் ஊர் புறந்தை முன் துறை வம்ப நாரை இனன் ஒலித்தன்ன அம்பல் வாய்த்த - தாழைத் தோட்டத்தினையுடைய எம்முடைய ஆரவாரமுடைய ஊரின்கண்ணே புறையாற்றின் முதன்மையான கடற்றுறைக்கண்ணே புதிதாக வந்த நாரையின் இனங்கள் ஒலித்தாலன்ன அம்பல் உண்டாயின ; ஆதலால், நீ வரைவொடு புகவேண்டும் என்று தோழி தலைமகனை வரைவுகடாயினாள் என்க.

இப் பாட்டு நெய்தலிற் களவு.

பெருதிரை முழக்கமொடு இயக்கு அவிந்து இருந்தகொண்டல் இரவின் கொழுமீன் கொள்பவர் இரு கடல் மடுத்த இருள் நீங்கு ஒள் சுடர் - பெரிய திரையின் முழக்கமொடு அதன் சஞ்சாரமும் ஓய்ந்திருந்த மேகஞ் சூழ்ந்த இரவிலே கொழுமினைக் கொள்ளும் பரதவர் கரிய கடலிலே மடுத்தனவான அம்பியிற் பிணித்த இருள் நீங்குதற்குக் காரணமான ஒள்ளிய விளக்கமானது ;

ஓடா பூட்கை வேந்தன் பாசறை ஆடு இயல் யானை அணி முகத்து அசைத்த ஓடை ஒள் சுடர் ஒப்ப தோன்றும் (புறந்தை) - ஓடாத மேற்கோளினையுடைய வேந்தனது பாசறைக்கண்ணே ஆடுமியல்புடைய யானையின் அழகிய முகத்துப் பிணித்த ஓடையின்கண் வைத்த ஒள்ளிய விளக்கம்போலத் தோன்றாநிற்கும் புறையாறு என்க. ஆடுதற் றொழில்பற்றியும் வடிவுபற்றியும் அம்பி யானைக்கு உவமை.

பாடுநர் தொடுத்த கை வண் கோமான் பரி உடை நல் தேர் பெரியன் விரி இணர் புன்னை கானல் புறந்தை - பாடுவார்களைத் தன்பாலே வளைத்துக்கொண்ட கைவண்மையையுடைய அரசனை குதிரை பூண்ட தேரினையுடைய பெரியன் என்பானது விரிந்த பூங்கொத்தையுடைய புன்னையாலழகிய கடற்கரைச் சோலையையுடைய புறையாறு என்க.

மீன் கொள்பவர் கடலம்பியில் மடுத்த சுடர் யானை ஓடையில் வைத்த சுடர் ஒப்பத் தோன்றும் புறந்தை என்று இயைக்க.

கொழுமீன், மீன்விசேடம். தொடுத்த கைவண்மை - தொடுத்தற்குக் காரணமான கைவண்மை. ஓடை, முகபடாம்.

புறந்தை, புறையாற்றின் மரூஉ. புறையாறு, பொறையாறு எனவும் வழங்கும். இதனை, "நறவுமகி ழிருக்கை நற்றேர்ப் பெரியன் கட்கமழ் பொறையாற் றன்ன" எனவும் (நற். 131), பொறையாற்றுகிழானைக் கல்லாடனார்' எனவும் (புறம் 391) வருவன நோக்கி அறிக.

தண் புலர் வைகு உறு விடியல் போகிய எருமை நெய்தல் புது மலர் மாந்தும் (கைதைப் படப்பை) - தண்ணிய இருள்புலர்கின்ற இராக்காலம் வைகிய விடியலிலே மேயப் போன எருமை நெய்தற் புதுமலரை உண்ணும் கைதைப் படப்பை என்க.

படப்பை - தோட்டக்கூறு. புலர்தல் - அகலப் போதல்; வைகுறு புலர் விடியல் - இராப்பொழுது வைகுற்ற இருள் புலர்கின்ற விடியல்.

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும் அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்" என்ற சூத்திரத்து, ஒன்றென முடித்தலாற் பிற கருப்பொருண் மயங்குவன உளவேனும் கொள்க என்றலின், மருதத்து விலங்காகிய எருமையும், சிறுபொழுதாகிய வைகறையும் நெய்தற்கண் வந்தன.

புல் மேயப் புறப்பட்ட எருமை தனக்கு ஊழின் பயனாற் கிடைத்த நெய்தற் புதுமலரை மாந்துதலிலேயே மகிழ்ந்து தன் காரியமான கொட்டிலுக்கு ஏகுதலை மறந்திருந்த தன்மை, வேட்டைமேற் புறப்பட்ட தலைமகன் தனக்கு ஊழின்பயனாற் கிடைத்த தலைவியைக் களவிற் புணர்ந்திருத்தலிலேயே மகிழ்ந்து தன் அறமான வரைவொடு புகுதலை மறந்திருந்த தன்மையாக உள்ளுறை உவமம் கொள்ளக்கிடந்து, வரைவு கடாதற்பொருட்கு உபகாரப் பட்டு நின்றது.

கோதை, மார்பி லணியுமாலை; "கோதை மார்பிற் கோதையானும்" என்பதுங் காண்க.

அகம் - ஆகம்; 'சாந்தகம் இழிய.........ஞெமுங்கப் புல்லி' என்றார் சிந்தாமணியினும்.

நல்லகம் எனப் பொதுப்படக் கூறியவதனால், பூணும் தாதும் முறையே உறைத்த இருவர் மார்புங் கொள்க.

அமைந்த ஆரத்தைப் பூண்ட நீ புரைவான கோதையையும் பூண்டனை என்றது, நின் தலைமைக்கு ஒத்தவாறு தலை சிறந்த தலைமகளையே யெதிர்ப்பட்டனை என்றாளாம். இது கண்டு, என் தமர் கொடை நேர்வர் என்பது குறிப்பு. நின் குடிக்கு ஏற்ற ஒழுக்க முடைமை ஆகுக என்று வரைவுகடாயினாளுமாம்.

கடலினின்றும் மீனைப் பிரிக்க வைத்த விளக்குப் பாசறையில் இயங்குவார்க்குப் பயன்பட வைத்த விளக்குப்போலும் என்றது, தமரினின்றும் இத் தலைவியைப் பிரிக்க ஒழுகிய இக் களவொழுக்கம் கடிமனைக்கண் வரும் விருந்தினரைப் புறந்தரற்குப் புணர்த்த வரைவேபோலத் தோன்றுகின்றது என்றவாறு.

பி - ம். 1, அறையற்றமை. 18 நெய்தற் புதுமலர்.

## 101. பாலை

அம்ம வாழி தோழி யிம்மை
நன்றுசெய் மருங்கிற் றீதில் லென்னுந்
தொன்றுபடு பழமொழி யின்றுபொய்த் தன்றுகொ
றகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த
5 சுவன்மாய் பித்தைச் செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறற்
றீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி
நுரைதெரி மத்தங் கொளீஇ நிரைப்புறத்
தடிபுதை தொடுதோல் பறைய வேகிக்
10 கடிபுலங் கவர்ந்த கன்றுடைக் கொள்ளைய
ரினந்தலை பெயர்க்கு நனந்தலைப் பெருங்காட்
டகலிரு விசும்பிற் கோடம் போலப்
பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்
றுருப்பவிர் பூரிய சுழன்றுவரு கோடைப்

15 புன்கான் முருங்கை யூழ்கழி பன்மலர்
தண்கா ராலியிற் றுவன வுதிரும்
பனிபடு பன்மலை யிறந்தோர்க்கு
முனிதகு பண்பியாஞ் செய்தன்றோ விலமே.

என்பது : பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச் சொல்லியது. தோழி கிழத்திக்குச் சொல்லியதூஉமாம்.

இப் பாட்டினுள் வாய்ப்பகை கடியு மருந்து என்றது இருமல் தீர்க்கும் மருந்து.

—மாமூலனார்.

தோழி அம்ம வாழி பனிபடு பல மலை இறந்தோர்க்கு முனிதகு பண்பு யாம் செய்தன்றோ இலம் - தோழி! கேட்பாயாக நீ வாழி; பனி மிகுத்த பல மலைகளையும் கடந்து சென்ற நம் தலைவர்க்கு வெறுக்கத்தக்க காரியம் நாம் ஒன்றும் செய்திலேம்; அற்றாகவும்,

இம்மை நன்று செய் மருங்கில் தீது இல் என்னும் தொன்று படு பழமொழி இன்று பொய்த்தன்று - இம்மையில் நன்று செய்யுமிடத்துத் தீதுண்டாவதில்லை என்பதாகிய இயற்கைப்புணர்ச்சிக் காலத்துக் கூறிய பழமொழி இன்று பொய்த்ததுபோலும், என்று, தலைமகன் வரைவிடைவைத்துப் பிரிந்தவிடத்து வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

தகர் மருப்பு ஏய்ப்ப சுற்றுபு சுரிந்த சுவல் மாய் பித்தை சேகண் மழவர் - யாட்டுக்கிடாயின் மருப்பினை ஒப்பச் சுற்றிக் கடை குழன்ற பிடரியை மறைக்கின்ற தலைமயிரையும் சிவந்த கண்ணையும் உடைய மழவர்;

வாய் பகை கடியும் மண்ணொடு கடு திறல் தீ படு சிறு கோல் வில்லொடு பற்றி - இருமல் வாராமற் றீர்க்கும் மருந்தாகிய புற்று மண்ணை வாயி லடக்கிக்கொண்டு மிக்க வலியையுடைய தீ யுண்டாகின்ற சிறிய அம்பினை வில்லினோடு பிடித்து;

நுரை தெரி மத்தம் கொளீஇ - நுரை தெரிதற்குக் காரணமான மத்தினைக் கவர்ந்துகொண்டு;

நிரை புறத்து அடி புதை தொடு தோல் பறைய ஏகி - ஆன்நிரையின் புறத்துத் தம் அடியைப் புதைத்துள்ள செருப்புக்கழல ஓடி;

கடி புலம் கவர்ந்த கன்று உடை கொள்ளையர் இனம் தலை பெயர்க்கும் நனை தலை பெரு காடு - காவலையுடைய விடத்திலே கவர்ந்த கன்றுகளை மிகுதியாக வுடையவராய், அவற்றை இனம் இனமாகக் கூட்டி வைக்கும் இடம் பரந்த பெரிய காட்டிலே ;

அகல் இரு விசும்பிற்கு ஓடம் போல பகல் இடை நின்ற பல கதிர் ஞாயிறு உருப்பு அவிர்பு ஊரிய சுழன்று வரு கோடை - அகன்ற பெரிய விசும்பாகிய கடலிலே செல்லும் ஓர் ஓடம் போல பகலிடையே நின்ற பல கதிர்களையுடைய சூரியனது வெப்பம் விட்டு விளங்குகையினலே நிரம்பிய சுழன்று வருகின்ற மேல் காற்றினல் ; ஞாயிற்றை, 'விந்த்ய வீதீ : ப்லவங்கம :' என்றார் ஆதித்யஹ்ருதய முடையாரும். விந்த்யவீதி - ஆகாய வீதி ; ப்லவங்கம்-ஓடம்.

ஊழ் கழி புன் கால் முருங்கை பல மலர் தண் கார் ஆலியில் தாவன உதிரும் பனி படு பல மலை - வரிசையாகக் கழிந்த புல்லிய காலையுடைய முருங்கையின் பல மலர்களும் தண்ணிய கார்காலத்து ஆலங்கட்டி போலத் தாவி உதிரும் பனி மிகுந்த பல மலைகள் என்க.

தோழீ மலைஇறந்தோர்க்கு முனிதகு பண்பு யாம் செய்திலம் ; அற்றாகவும், இம்மை நன்றுசெய் மருங்கில் தீது இல் என்னும் தொன்றுபடு பழமொழி இன்று பொய்த்தது போலும் என்க.

இது, வரைவு மாட்சிமைப்படாதிற்கவும், பொருள் காரணத் தான் அதற்கு இடையீடாகத் தலைமகன் நீக்கிவைத்துப் பிரிந்த காலத்துத் தலைவி வருந்தியதாகக் கொள்க. "வரைவிடை வைக்க காலத்து வருந்தினும்" என்பது இதற்கு விதி.

உளரிய என்ற பாடத்திற்குக் கோடை அசைத்த என்க. காட்டுப் பன்மலை என்று கூட்டுக

முருங்கை மலர் வெள்ளிய நிறமுடைய தாதலால், அஃது ஆலங்கட்டிக்கு உவமை கூறப்பட்டது. 'முருங்கை நவிரல வான் பூச், சூரலங் கடுவளி எடுப்ப ஆருற் றுடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன், கடல்போற் றோன்றல காடு' (அகம். 1) என்பத னும், 'முருங்கை வெண்பூ' (பெருங். I-52-65, 66) என்பத னும் அஃது அந்நிறமுடையதாதல் அறியப்படும்,

இனி இரண்டாந் துறைக்கு :

மலை இறந்தோர்க்கு முனிதகு பண்பு யாம் செய்திலமாதலால், இம்மை நன்றுசெய் மருங்கில் தீதில் என்னும் பழமொழி இன்று பொய்த்ததன்று. மழவர் கடிபுலங் கவர்ந்த கன்றுடைக் கொள்ளை யராய் இனந்தலை பெயர்த்தாற்போலத் தலைவரும் வினைமுடித்து மீள்வரென்று தோழி கிழத்திக்குக் இறைச்சியிற் பொருள் பயப்பக் கூறி, வற்புறுத்தினள் என்க.

இஃது, "நாற்றமும் தோற்றமும்" என்னுங் களவியற் சூத்திரத்து, "ஆங்கதன் தன்மையின் வன்புறை யுளப்பட,.......... ரேழி மேன" என்ற பகுதிபற்றிக் கொள்ளப்படும்,

வீரர் புற்று மண்ணைக் கைக்கொண்டு ஆனிரை கவர்தல், 'மண்கொள் புற்றத்து அரும்புழைத் திறப்பின் ஆகொள் மூதூர் கள்வர் பெருமகன்" (அகம். 342) என்றமையாலும் உணரப்படும்.

'பி - ம். 4. சுற்றுபு புரிந்த. 12. கூடம். 15. வீகழிபன்மலர். 16. தாதின்றுதிரும்.

## 102. குறிஞ்சி

உளைமான் றுப்பி ஞெங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
வுரைத்த சந்தி னூர விருங்கதுப்
பைதுவர லசைவளி யாற்றக் கைபெயரா
5 வொலியல் வார்மயி ருளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகன் மழகளி றுறங்கு நாட
10 ஞார மார்பி னரிஞிமி றார்ப்பத்
தாரன் கண்ணிய னெஃகுடை வலத்தன்
காவல ரறித லோம்பிப் பையென
வீழாக் கதவ மசையினன் புகுதந்
துயங்குபட ரகல முயங்கித் தோண்மணந்
15 தின்சொ லளைஇப் பெயர்ந்தனன் றோழி

யின்றெவன் கொல்லோ கண்டிகு மற்றவ
னல்கா மையி னம்ப லாகி
யொருங்குவர் துவக்கும் பண்பி
னிருஞ்சூ ழோதி யொண்ணுதற் பசப்பே.

என்பது: இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

—மதுரை யிளம்பா லாசிரியன் சேந்தங்கூத்தன்.

உளைமான் துப்பின் தினை பெரு புனத்து ஓங்கு கழுதில் கானவன் பிழி மகிழ்ந்து வதிந்தென - உளைமானாகிய சிங்கத்தின் வலியினோடு தினையின் பெரிய புனத்திலே ஓங்கிய பரணிலே கானவன் மதுவை யுண்டு மகிழ்ந்து உறைந்தானாக;

உரைத்த சந்தின் ஊரல் இரு கதுப்பு ஐது வரல் அசை வளி ஆற்ற கொடிச்சி ஒலியல் வார் மயிர் கை பெயரா உளரினள் பெரு வரை மருங்கில் குறிஞ்சி பாட - பூசிய சாந்தினையுடைய பரந்த கரிய தன் கூந்தலினை மெல்லிதாக வருதலோடு மடிந்து வீசும் காற்று ஆற்றக் கொடிச்சியானவள் தழைத்து நீண்ட மயிரினைக் கைபெயராது கோதினளாய்ப் பெரிய வரையின் மருங்கிலே குறிஞ்சிப் பண்ணைப் பாட;

மறம் புகல் மழ களிறு குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது படா பை கண் பாடு பெற்று ஒய்யென உறங்கும் நாடன் - ஆண்மையை விரும்பும் இளங் களிறு தான் கவர்ந்த தினைக் கதிரினை உட்கொள்ளாமலும், நின்ற நிலையினின்றும் பெயராமலும் உறங்காத தனது பசிய கண் உறங்கும் தன்மையைப் பெற்று விரைய உறங்கும் நாடனான தலைவன்;

ஆரம் மார்பில் அரி ஞிமிறு ஆர்ப்ப தாரன் கண்ணியன் எஃகு உடை வலத்தன் காவலர் அறிதல் ஓம்பி வீழா கதவம் அசையினன் பை என புகுதந்து உயங்கு படர் அகல முயங்கி தோள் மணந்து இன் சொல் அளைஇ பெயர்ந்தனன் தோழீ - ஆரம் பொருந்திய தன் மார்பிலே அழகிய வண்டு ஒலிப்ப மாலையனாகவும் கண்ணியனாகவும் வலக்கையிலேந்திய வேலனாகவும் தோன்றி, காவலர் அறிதலைப் பரிகரித்துத் தாள் வீழ்த்தாத கதவின் மருங்கே

தங்கினவனும் மெல்ல உட்புகுந்து, வருந்தும் துன்பந்தீர என் மார்பினை முயங்கித் தோளினைப் புணர்ந்து, இனிய சொல்லைக் கலந்து பேசிவிட்டுப் போனான் தோழீ !; அவ்வாறிருக்க,

இன்று அவன் நல்காமையின் ஒருங்கு வந்து அம்பலாகி உவக்கும் பண்பின் இரு சூழ் ஓதி ஒள் நுதல் பசப்பு எவன் கண்டிகும்—இன்று ஒரு நாள் அவன் அருளாமையால் ஒருங்கே வந்து அலராகுமாறு உவக்கும் பண்பினையுடைய கரிய சூழ்ந்த ஓதியை யடுத்த ஒள்ளிய நுதலிடத்துப் பசப்பினை ஏனோ கண் டோம்? என்று இரவுக் குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

நாடன் தாரன் கண்ணியன் எஃகுடை வலத்தன் கதவம் புகுதந்து முயங்கித் தோண் மணந்து சொல் அளைஇப் பெயர்ந் தனன்; இன்று அவன் நல்காமையின் நுதற்பசப்பு எவன் கொல் கண்டிகும் தோழீ என்றியைக்க.

உவக்கும் பண்பின் இருஞ்சூழ் ஓதி ! தோழீ ! ஒண்ணுதற் பசப்பு இன்று எவன் கொல்லோ கண்டிகும்? என்றியைத்து ஓதியை விளியாக்கிப் பொருள் கோடலுமாம்.

கொடிச்சி தன் கானவற்குப் பாடிய குறிஞ்சிப்பண் யானை யைத் தினை நுகரவொட்டாமற் செய்ததன்றிப் பசி யொருபுறம் நலிய அதனை உறங்கவும் செய்ததுபோல, அலர்வினை மேவல் அம்பற் பெண்டிர் தாய்க்கு உணர்த்திய அலர் தலைவியைக் களவில் நுகரவந்த தலைமகனை அது செய்ய வொட்டாமற் றடுத்த தன்றி வேட்கை ஒரு புறம் நலிய, அவனைக் கையற்ற நெஞ்சின னாய்ப் புறத்து அசைந்திருக்கவும் பண்ணிற்று என்று உள்ளுறை உவமம் கூறினாளாம்.

இது கேட்டு வரைவொடு புகுவானாவது பயன்.

“கிழவோட் குவமம் ஈரிடத் துரித்தே” என்ற உவமவியற் சூத்திரத்துச் சிறுபான்மை குறிஞ்சி முதலியவற்றிற்கும் உவமப் போலிகொள்க என்றலின், ஈண்டுக் குறிஞ்சியில் உவமப் போலி கொண்டார்.

“கிழவி சொல்லின் அவளறி கிளவி” என்ற விதிபற்றித் தலைவி அவளறி கிளவியால் உள்ளுறை கூறினாள்.

என்னை? தினைப்புனம் நாளும் அவளால் காக்கப்பெற்று அவளறியுமிட மாகலானும், தினைகவர யானை ஆண்டு வருதல் அவளால் நன்கறியப்படுவ தென்றாகலானும் என்க.

இது வினையுவமப் போலி.

என்னை? குரல் கொள்ளவந்து, அது கொள்ளாது தினைப் புனத்து உறங்கும் களிற்றின் றொழிலினைத் தலைமகளைப் புணர வந்து, புணரமாட்டாது சிறைப்புறத்தே கையற்றிருக்கும் தலைமகன் றொழிலோடு உவமித்தமையின் என்க.

உளை - பிடரின் மயிர். அதனை உடைய விலங்கு ஆவது சிங் கம். அரி - அழகு; இரேகையுமாம். தார் - அழகினுக்கிடும் மாலை. கண்ணி, போர்ப்பூ. மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஊர்தல் - நிரம்புதலுமாம்.

'இரவுக் குறியே இல்லகத் துள்ளும், மனையோர் கிளவி கேட் கும்வழி யதுவே, மனையகம் புகாஅக் காலை யான' என்ற சூத்தி ரத்தின்கண் இது மனையகம் புக்குப் புணர்ந்தது என்றும், இப் புணர்ச்சி தலைவிபுறத்துப் போகின்றாளெனச் செவிலிக்கு ஓர் ஐய நிகழ்ந்தவழிப் பின்னர் மனையகத்து நிகழும் என்றும் கொள்வர் நச். (தொல். பொருள் 131).

பி - ம். மதுரைப் பாலாசிரியன் சேனங் கூத்தன்.

## 103. பாலை

நிழலறு நனந்தலை யெழிலேறு குறித்த
கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்
விதிர்த்த போலு மந்நுண் பல்பொறிக்
காமர் சேவ லேமஞ் சேப்ப
5 முளியரில் புலம்பப் போகி முனைஅது
முரம்படைந் திருந்த மூரி மன்றத்
ததர்பார்த் தல்கு மாகெழு சிறுகுடி
யுறையுநர் போகிய வோங்குநிலை வியன்மனை
யிறைநிழ லொருசிறைப் புலம்பயா வுயிர்க்கும்
10 வெம்முனை யருஞ்சுர நீந்தித் தம்வயி

னீண்டுவினை மருங்கின் மீண்டோர் மன்னென
நள்ளென் யாமத் துயவுத்துணை யாகிய
நம்மொடு பசலை நோன்று தம்மொடு
தாமே சென்ற நலனு
15 நல்கார் கொல்லோநா நயந்திசி னோரே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொற்றது.

—காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்.

நிழல் அறு நனை தலை எழில் ஏறு குறித்த கதிர்த்த சென்னி நுணங்கு செ நாவின் விதிர்த்த போலும் அ நுண் பல பொறி காமர் சேவல் ஏமம் சேப்ப - நிழலற்ற அகன்ற விடத்திலே அழகிய ஏறென்பதனைக் குறியாநின்ற கதிர்த்த தலையையும் நுணிகிய சிவந்த நாவினையும் தெளித்தாற்போலும் ஐயவான நுண்ணிய பல புள்ளிகளையும் விரும்பப்படும் தன்மையினையுமுடைய சேவல் ஏமத்திலே தங்கும் பொருட்டு;

முளி அரில் புலம்ப போகி முரம்பு அடைந்திருக்க முதுஅது மூரி மன்றத்து அதர் பார்த்து அல்கும் ஆ கெழு சிறு குடி உறையுநர் போகிய ஓங்கு நிலை வியல் மனை இறை நிழல் ஒரு சிறை புலம்பு அயாவுயிர்க்கும் வெம் முனை அரு சுரம் நீந்தி - தான் கிடந்த காய்ந்த தூறு தனித்தொழியப் போய் வன்னிலத்தினைச் சார்ந்திருந்த பழையதான பெரிய அம்பலத்திலே வழியைப் பார்த்துக்கொண்டு தங்கியிருக்கும் ஆக்கள் கெழுமிய சிறுகுடிக்கண்ணே வசிப்போர் துறந்து விட்டுப் போன ஓங்கிய நிலையை உடைய பெரிய மனையின் இறப்பு நிழலின் ஒருபுறத்தே தனிமையால் நெட்டுயிர்க்கும் கொடிய போர் முனையாகிய கடத்தற்கரிய சுரத்தைக் கடந்து;

தம வயின் ஈண்டு வினை மருங்கின் நாம் நயந்திசினோர் மீண்டோர் மன் என - தம்மிடத்திலே ஈண்டிய வினையின் பக்கத்து நாம் விரும்பிய நம் தலைவர் மீண்டு மேகினர் இனி அவர் மீளார் என்று சொல்லுகையினாலே;

நள் என் யாமத்து உயவு துணை ஆகிய நலனும நமமொடு பசலை நோன்று தம்மொடு தாமே சென்ற - 'நள்' என்னும் அது

கரணை ஒலியையுடைய நடு யாமத்திலே நமக்கு உசாத் துணையாகும் பொருட்டு நம் நலனும் இதுகாறும் நம்மொடு பசலையைப் பொறுத்திருந்து இப்போது அவர் தம்மொடு தாமே வலியச்சென்றன;

நல்கார் கொல்லோ - இனி நம் தலைவர் அருளார் போலும் என்று, தலைமகன் பிரிவின்கண் அவனுடன்போய் மீண்டார் வழியதருமை கூறக்கேட்டுத் தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

ஏமம் செப்ப என்ற பாடத்திற்கு, சேவல் ஏமத்தினை உணர்த்தினமையால், நாம் நயந்திசினோர் நிழலறு நனந்தலைச் சுரம் நீந்தித் தம்வயின் ஈண்டுவினை மருங்கின் மீண்டோர் மன் என யாமத்து உயவுத் துணையாகிய நலனும் நம்மொடு பசலை நோன்று தம்மொடு தாமே சென்ற; நல்கார்கொல்லோ என்றியைக்க.

மன், கழிவின்கண் வந்தது.

ஈண்டுக் கூறிய சேவல், குறும்பூழ்ச் சேவல். 'பொறிப்புறப் பூழின் போர்வல் சேவல்' என்பதுங் காண்க. (புறம் 321.) அஃது ஏமஞ் செப்புதலாவது, நற்சகுனத்தை உணர்த்துதல்.

இப் பாட்டு, "அவனறி வாற்ற வறியு மாகலின்" என்னுங் கற்பியற் சூத்திரத்து, 'ஆவயின் வரூஉம் பல்வேறு நிலை' யென்றார், அந்நிலையினுள், தலைமகன் பிரிந்துழி அவனுடன் போய் மீண்டார் வழியதருமை கூறக் கேட்டுத் தலைவி கூறிய பகுதியாகக் கொள்க.

இது, 'மீண்டோர் மன் என' என்றமையாற் பெறுதும்.

சென்னி நா பொறி சேவற்கு அடைகள். எழிலேறு என்பதற்கு, எழிலையுடைய ஆனேறு என்று கொண்டு, அது சேவல் ஏமம் செப்ப, அரில் புலம்பப் போகி மன்றத்துச் சிறுகுடிக்கண் இறை நிழல் ஒரு சிறைப் புலம்பயா வுயிர்க்கும் சுரம் நீந்தி என்றியைத்துப் பொருள் கோடலுமாம்.

உயவுத் துணையாக என்னும் பாடத்திற்கு, நலனும் உயவுத் துணையாக நோன்று என்று இயைத்துப் பொருளுரைக்க.

தோன்றுக தம்மொடு, என்னும் பாடத்திற்கு,

நயந்திசினோர்தம்மொடு நலனும் தாமே சென்ற ; அவர் நல் கார்போல விராகின்றார் ; இனி நம்மாட்டுப் பசலை தோன்றுக என்று பொருள் வருவித்துக்கொள்க.

நம்மொடு, ஒடு உருபு மயக்கம்.

## 104. முல்லை

வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந்
தினவண் டார்க்குந் தண்ணறும் புறவின்
வென்வே லிளைய ரின்புற வலவன்
வள்புவலித் தூரி னல்லது முள்ளுறின்
5 முந்நீர் மண்டில மாதி யாற்றா
நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்
வாங்குசினை பொலிய வேறிப் புதல
பூங்கொடி யவரைப் பொய்யத ளன்ன
வுள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி
10 மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய
புன்றலைச் சிறுரோ டுகளி மன்றுழைக்
கவையிலை யாரி னங்குழை கறிக்குஞ்
சீறூர் பலபிறக் கொழிய மாலை
யினிதுசெய் தனையா லெந்தை வாழிய
15 பனிவார் கண்ணள் பலபுலந் துறையு
மாய்தொடி யரிவை கூந்தற்
போதுகுர லணிய வேய்தந் தோயே.

என்பது : வினைமுற்றி மீளுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

— மதுரை மருதனிளநாகனார்.

வேந்து வினை முடித்த காலை இனம் வண்டு தேம் பாய்ந்து ஆர்க்கும் தண் நறு புறவின் வெல் வேல் இளையர் இன்புற வலவன் வள்பு வலித்து ஊரின் அல்லது - அரசன் வினையை முடித்த காலத்தே பெடையுடன் கூடிய வண்டு திசைகள்தோறும் பாய்ந்து ஆர

வாரியாநின்ற தண்ணிய நறிய முல்லைநிலத்திலே வெற்றி வேலை யுடைய தேரினையர் மகிழுமாறு அவர் செலவிற்கேற்பப் பாகன் கடி வாள வாரை வலித்து ஊரினல்லது ;

முள்ளுறின் முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்ரு நல் நால்கு பூண்ட கடு பரி நெடு தேர் வாங்கு சினை பொலிய ஏறி - தாற்று முள்ளால் ஊன்றப்பெறின் மூன்றுன தன்மையையுடைய மண்டிலங்களும் தன் ஆதி என்னும் நேரோட்டத்திற்கு இடம் பற்ருத நல்ல நான்கு குதிரைகள் பூண்ட மிக்க விரைந்த செலவினையுடைய பெருந் தேரின் வளைந்த கொடிஞ்சி பொலிய ஏறி ;

நால்கு, நான்கு குதிரைகட்கு ஆகு பெயர்.

சிறு ஊர் பல பிறக்கு ஒழிய - சிறிய ஊர்கள் பல பின்னெழிய;

பனி வார் கண்ணள் பல புலந்து உறையும் ஆய் தொடி அரிவை அணிய - நீர் ஒழுகும் கண்ணளாய்ப் பல சொல்லி வெறுத்து இல்லிலே உறையும் ஆராய்ந்த தொடியையுடைய தலைவி அணியுமாறு ;

குரல் கூந்தல் போது மாலை வேய்தந்தோய் - அவளது கொத் தான கூந்தலிடத்துப் போதினை மாலைக்காலத்துவந்து சூட்டிஞய் ;

அதனுல், இனிது செய்தனை எந்தை வாழிய - இனியதனைச் செய்தாயாஞய், எந்தாய் நீ வாழ்க ! என்று வினைமுற்றி மீளுந் தலை மகற்குத் தோழி சொன்னுள் என்க.

புதல பூ கொடி அவரைபொய் அதள் அன்ன உள் இல் வயிற்ற மாழ்கி அன்ன தாழ் பெரு செவிய வெள்ளை வெள் மறி புல் தலை சிருரொடு உகளி மன்று உழை கவை இலை ஆரின் அம் குழை கறிக் கும் (சீறூர்) - புதலிடத்துப் படர்ந்த பூவையுடைய கொடியின்கட் காய்த்த அவரையின் பொய்த்தோல்போல உள்ளீடில்லாத வயிற்ற வும் மயங்கி விழுந்தாலன்ன தாழ்ந்த பெரிய செவியவுமான வெள் ளாட்டின் வெள்ளிய குட்டியானவை புல்லிய தலையையுடைய சிரு ரோடு கூடித் துள்ளிக்கொண்டு சென்று, அம்பலத்தின் புறத்துள்ள கவை பொருந்திய இலையையுடைய ஆத்தியின் அழகிய தளிரைக் கடியாநிற்கும் சிறிய ஊர்கள் என்க.

துருவி னன்ன புன்றலை மகார்' என்பதும் ஈண்டு நினைக்கற் பாலது.

வினை முடித்த காலை இளையர் இன்புற வலவன் வள்பு வலித்து ஊரினல்லது முள்ளுறின் மண்டிலம் ஆகி ஆற்றுப் பரித் தேர் ஏறிச் சீறூர் பல பிறக்கொழிய மாலை வந்து அரிவை கூந்தல் போது வேய்தந்தோய் ; இனிது செய்தனை எந்தை வாழிய என்று கூட்டுக.

வேலன் பலியிட இறத்தற்குறிய மறி ஊரினர் அருளுகையாலே ஏதமற்றுச் சிறுரோடு உகளிக் குழை கறித்து இன்புறும் என்றதனால், தனிமை நலிய உயிர் துறத்தற்குரிய தலைவி நீ குறித்த பருவத்துவந்து தலையளி செய்தமையால் இறந்து பாடொழிந்து, தனக்குப் பாங்காயினாரோடு கலிசிறந்து நின்னோடு இல்லறப் பயனை நுகர்வாள்காண் என்றானாம்.

வஞ்சிக்கண்ணும் பொதுவியல் வரும் என்று கொண்டு, அது, "வேந்துவினை முடித்த" என்னும் அகப்பாட்டினுள் சுட்டி ஒருவர்ப் பெயர்கூறு வஞ்சி பொது வியலாய் வந்தவாறு காண்க என்றும், "வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவருங் காலை" என்ற கற்பியற் சூத்திரத்து இப் பாட்டினைக் காட்டி, "இதனுள் வினைமுடித்த காலைத் தேரிளையர் செலவிற்கேற்ப ஊராது கோலூன்றின் உலகிறந்தன செலவிற்குப் பற்றாத குதிரைத் தேரேறி இடைச் சுரத்திற் றங்காது மாலைக் காலத்து வந்து பூச்சூட்டினை, இனிது செய்தனை எந்தை வாழிய எனத் தோழி கூறியவாறு காண்க" என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 60, 194.)

பி - ம். 1. வேந்துவினை முடித்தனன். 3. ரன்புற. 6. நன்றுன்கு. 12. கொறிக்கும்.

## 105. பாலை

அகலறை மலர்ந்த வரும்பு முதிர் வேங்கை
யொள்ளிலைத் தொடலை தைஇ மெல்லென
நல்வரை நாடன் றற்பா ராட்ட
யாங்குவல் லுநள்கொ றானே தேம்பெய்து
5 மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி
யீனாத் தாயர் மடுப்பவு முண்ணா
ணிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பி
னெம்முடைச் செல்வமு முள்ளாள் பொய்ம்மருண்டு

பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்
10 சில்பரிக் குதிரைப் பல்வே லெழினி
கெடலருந் துப்பின் விடுதொழின் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவ லம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கண் மகிழின் முனைகடந்து
15 வீங்குமென் சுரைய வேற்றினந் தரூஉ
முனைகதலை திறந்த வேனிற்
பனைதலை மணந்த பல்லதர்ச் செலவே.

என்பது : மகட்போக்கிய தாய் சொல்லியது.

— தாயங் கண்ணனார்.

மணி செய் மண்டை தேம் பெய்து தீம் பால் ஏந்தி ஈனு தாயர் மடுப்பவும் உண்ணாள் நிழல் கயத்து அன்ன நீள் நகர் வரைப்பில் எம்முடை செல்வமும் உள்ளாள் அகல் அறை அரும்பு முதிர் மலர்ந்த வேங்கை ஒள் இலை தொடலை தைஇ நல் வரை நாடன் தன் பாராட்ட பொய் மருண்டு முகை தலை திறந்த வேனில் பகை தலை மணந்த பல அதர் செலவு மெல்லென யாங்கு வல்லுநள் கொல் - நவமணிகளு மிழைத்துச் செய்த மண்டையில் தேனைச் சொரிந்து தீவிய பாலோடு கலந்து ஏந்தி வந்து செவிலிமார் ஊட்டவும் உண்ணாளாகிய என் மகள் நிழலின்கீழே யமைந்த சுனைபோலத் தண்ணென்னும் நெடிய மாளிகையின் எல்லையிலேயுள்ள எம்முடைய பெருஞ்செல்வத்தையுங் கருதாது, அகன்ற பக்கமலையிலே அரும்பு முதிர்ந்து மலர்ந்த வேங்கையின் ஒள்ளிய பச்சிலை மாலையைச் சூடி நல்ல மலைநாடனாகிய தலைமகனானவன் தன்னைப் பாராட்ட, அப் பொய்யை மெய்யென்று மருண்டு, மலைக்குகையின் வாய் வெடிக்கத் திறக்கும் வேனிற்காலத்தே பகைவர் கைகலந்து பொரும் பல வாகிய பாலைநில வழியிலே அவனுடன் செல்லுதலை மெத்தெனவேனும் எவ்வாறு மாட்டுவளோ? என்று மகட்போக்கிய தாய் சொன்னான் என்க. எம் வரைப்பின் உண்டியையும் உறையுளையும் வெறுத்தாளென்றபடி.

மெல்லெனப் பாராட்ட யாங்கு வல்லுநள் என்றியைத்துப் பொருள் கோடலுமாம்.

பந்து புடைப்பு அன்ன பாணி பல அடி சில பரி குதிரை பல வேல் எழினி விடுதொழில் முடிமார் - பந்தின் புடைத்த லோசையை ஒத்த தாளத்தினையும் பலவாகிய அடி வைப்பினையும் சிலவாகிய செலவினையுமுடைய குதிரைப் படை யையும் பலவாகிய வேற்படையையுமுடைய எழினி என்பான் ஏவிவிட்ட தொழிலை முடிக்கும் பொருட்டு ;

வினைவல் அம்பின் விழு தொடை மறவர் - வினையை ஆக்குதலில் வல்ல தப்பாத அம்புத் தொடையையுடைய வீரர்கள் ;

கனை எரி நடந்த கல் காய் கானத்து - மிக்க தீப் பரவிப் பாறைகளைத் தீய்க்குங் காட்டிலே ;

தேம் பிழி நறு கள் மகிழின் - தேனாற் சமைந்த நறிய களளை யுண்ட செருக்கினாலே ; வேற்று முனை கடந்து - பகைவரது போர் முனையை கடந்து ;

வீங்கு மென் சுரைய இனம் கெடல் அரு துப்பின் தரூஉம் - பருத்த மென்மையான மடியையுடைய ஆனிரையைக் கெடாத வலியாலே வென்றுகொள்ளும் முகை தலைதிறந்த அதர் என்க.

இனி விடுதொழில் முடிமார் - தாம் குறையாக விட்ட தொழிலினை முடிக்கும் கரந்தைவீரர் ; அஃதாவது, ஆகொள் பூசலிற் றம்மால் கைவிடப்பட்ட வினையை மீட்டும் முடிக்கும் கரந்தையர் ;

கனை எரி நடந்த கல்காய் கானத்து எழினி வினைவல் மறவர் மகிழின் முனை கெடல் அரு துப்பின் கடந்து ஏற்று இனம் தரூஉம் கவலை - மிக்க எரி தவழ்ந்ததனால் கற்கள் பிளக்கும் கானத் திலே எழினியின் வினையை ஆக்குதலில் வல்ல மறவரது வீர பானத்தையுடைய போர்முனையைக் கெடாத வலியாலே கடந்து தமது ஏற்றானினத்தைத் தரூஉம் கவலை என்க.

எனவே, எழினியின் மறவர் முனைகடந்து ஏற்று ஆனினந் தரூஉம் கவலை என்றுதல், வேற்று வீரர் எழினியின் ஆனினந் தரூஉம் கவலை என்றுதல் கொள்க. இரண்டுங் கோடலுமாம்.

இவ்வெழினி, அஞ்சி என ஔவையாராலும் எழினி எனப் பெருஞ்சித்திரனாராலும் (புறம் 91, 158), அதிகன் என இடைகழி

நாட்டு நல்லூர் நத்தத்தனாராலும் (சிறுபாண் அடி 103) பாராட்டப் பெறும் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய அதியமான் நெடுமான் அஞ்சியாவான். "நெடுநெறிக் குதிரைக் கூர்வே லஞ்சி கடுமுனை யலைத்த கொடுவி லாடவர் ஆகொள் பூசல்" (அகம் 372) என, இவனது போர்முனையை வென்று பகைவர் ஆகொள்ளுகை யறியப்படுதலாலும், "எழினி, முனையான் பெருநிரை போலக், கிளையொடு காக்க" (குறுந். 80) என, இவன் தான் முனையிடத்துக் கொண்ட ஆன்நிரையைப் பகைவர் மீட்டுக்கொள்ளாதவாறு கிளையொடு காத்தமை அறியப்படுதலானும் இவ் விருவகை யுரையும் பொருந்தும்.

விலங்கு மென் சுரை என்னும் பாடத்திற்கு வளைந்த மெத்தென்ற சுரை என்க. ஏற்று ஆ ஒய்யும் என்று கண்ணழித்து ஏற்றினோடு பொருந்திய ஆனினத்தை ஒய்யும் என்று பொருள் கோடலுமாம்.

புடைப்பு, புடைத்தலாலுண்டான ஓசைக்காயிற்று.

பி-ம். 1. அகவரை 10. வல்வேலெ. 15. விலங்குமென்.

## 106. மருதம்

எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை யுணீஇயர் பைப்பயப்
பறைதபு முதுசிர லசைபுவந் திருக்குந்
5 துறைகே ழூரன் பெண்டுதன் கொழுநனை
நம்மொடு புலக்கு மென்ப நாமது
செய்யா மாயினு முய்யா மையிற்
செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி
10 யொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
வெளிறில் கற்பின் மண்டம ரடுதொறுங்
களிறுபெறு வல்சிப் பாண னெறியுந்
தண்ணுமைக் கண்ணி னலைஇயர்தன் வயிறே.

என்பது: தலைமகள் தன்னைப் புறங்கூறினளாகக் கேட்ட பரத்தை யவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

—ஆலங்குடி வங்கனர்.

எரி அகைந்தன்ன தாமரை பழனத்து—எரி கப்புவிட்டாற் போன்ற தாமரை மலர்களையுடைய வயலிடத்தே ;

பொரி அகைந்தன்ன பொங்கு பல சிறு மீன் உணீஇயர்—நெல் முதலிய பொரி வெடித்தாற்போலத் துள்ளி எழும் பலவாகிய சிறு மீன்களை உண்ணும்பொருட்டு ;

வெறி கொள் பாசு அடை பறை தபு முது சிரல் அசைபு பை பய வந்து இருக்கும் துறை கேழ் ஊரன் பெண்டு தன் கொழுநனை நம்மொடு புலக்கும் என்ப—வெறி நாற்றத்தையுடைய பசிய இலையின்மேலே பறத்தலொழிந்த முதிய சிச்சிலிப்புள் ஓய்ந்து மெல்ல மெல்ல வந்திருக்கும் நீர்த்துறை கெழுமிய ஊரனது மனையோள் தன் கொழுநனை நம்மோடு சேர்த்து வெறுக்கின்றாள் என்றுகின்றார்கள் ;

நாம் அது செய்யாம் ஆயினும் — அவ்வாறு அவள் வெறுக்கு மாறு யாம் ஒன்றும் செய்யாமாயினும் ; உய்யாமையின் — அவள் கூறும் புறமொழியைக் கேட்டு உய்யமாட்டாமையினலே ;

தண்ணுமை கண்ணின் தன் வயிறு அலைஇயர் - தண்ணுமை யிடத்துக் கண்போலும் தன் வயிற்றை அத்தலைவி அலைத்துக் கோடற்பொருட்டாக ;

செறி தொடி தெளிர்ப்ப வீசி அவண் சிறிது உலமந்து வருகம் சென்மோ தோழி - செறிந்த நம் தொடி ஒலிப்ப வீசி அவள் உறையும் சேரிக்கண் சிறிது பொழுது சூழ்வருவோம் வா தோழீ என்று, பரத்தை தன்னைத் தலைமகள் புறங்கூறினளாகக் கேட்டு அத் தலைமகட்குப் பாங்காயினர் கேட்பச் சொன்னாள் என்க.

'புதல்வற் பயந்த திதலை யவ்வயிற்' றினளாதலின், தலைவியது வயிற்றுக்குத் தண்ணுமைக்கண்ணை உவமை கூறின முகத்தானே தலைவியது இளமை கழிந்த முதுமைப் பருவத்தைப் பரத்தை எள்ளினளாம்.

பழனத்து மீன் உணீஇயர் முது சிரல் பாசடை அசைபு வந்திருக்கும் ஊரன் பெண்டு தன் கொழுநனை நம்மொடு புலக்குமென்ப; நாம் அது செய்யாமாயினும் உய்யாமையின், (அப்பெண்டு) தன் வயிறு அலைஇயர் சிறிது அவண் உலமந்து வருகம் சென்மோ தோழி என்று இயைக்க.

ஒளிறு வாள் தானை கொற்றம் செழியன் வெளிறு இல் கற்பின் மண்டு அமர் அடுதொறும் களிறு பெறு வல்சி பாணன் எறியும் (தண்ணுமைக் கண்ணின் வயிறு) - விளங்கும் வாட்படையால் வெற்றியையுடைய செழியனுனவன் குற்றமில்லாத படைக்கலக் கல்வியினுல் மண்டிய போரை அடுதோறும் களிற்றுப் பரிசிலோடு பெற்ற சிறப்பான உணவையுடைய பாணன் எறிகின்ற தண்ணுமையின் கண்போலும் வயிறு என்க.

'களிறு பெறு வல்சிப் பாணன்' என்பதற்கு, களிறுபோலப் பிறர் வலிந்து கொடுக்கப் பெருமிதத்தோடு பெற்றுக்கொள்ளும் வல்சியையுடைய பாணன் என்றுதல், களிறு பெறுகின்ற நெய்ம்மிதியுணவைப் பெறுகின்ற பாணன் என்றுதல் கூறினும் பொருந்தும்.

'பாணன் எறியும் தண்ணுமைக் கண்ணின் அலைஇயர் தன் வயிறே' என்பதனைத் தண்ணுமைக் கண் எறியும் பாணனின் தன் வயிறு அலைஇயர் என்று மாறி, தன் தண்ணுமையின் கண்ணிடத்து எறியும் பாணன்போலத் தலைவி தன் வயிற்றிடத்து அலைக்கும் பொருட்டு என்றலுமாம்.

பறைதபு முதுசிரல் தான் கவரக் கருதிய மீனுக்கு அண்மைத்தாகிய பாசடைமீது வதிந்தும், அதனைக் கவரமாட்டாதாகப் பறைவல்ல இளஞ்சிரல் அதற்குச் சேய்மைத்தாகிய மரக் கொம்பரிலிருந்தும் கவர்ந் தேகினுற்போல, இளமை கழிந்து ஊக்க மொழிந்த தலைவி ஒரு மனையகத்தே தன் கணவனைக் கொண்டிருந்தும் அவனைத் தொடுத்துக்கொள்ள மாட்டாளாக இளையரும் ஊக்கமுடையருமான யாம் சேரிக்கண்ணிருந்தும் அவனைத் தொடுத்துக் கொண்டனம் என்று உள்ளுறை கூறினுளாம்.

"ஏனோர்க்கெல்லாம் இடம்வரை வின்றே" என்ற விதி பற்றிப் பரத்தை உள்ளுறை கூறினுள்.

இது பயவுவமப் போலி. என்னை ? முதுசிரல் பெற்ற பய னோடு தலைவிபெற்ற பயன் உவமங் கொள்ள நின்றமையின் என்க.

“ இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியும்
உவம மருங்கிற் றோன்று மென்ப ”

என உவமப் போலிக்குக் கூறுதலின், ஈண்டு இனிதுறு கிளவி தோன்றிற்று.

எரியகைந் தன்ன தாமரைப் பழனத்து என்ற அடியினை வினை யுவமத்திற்கு உதாரணமாகக் காட்டியதனோடு, “ பரத்தை வாயில் எனவிரு கூற்றுங், கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பய னிலவே ” என்ற செய்யுளியற் சூத்திரத்து, ‘ கிழத்தியைச் சுட்டுத லெனவே, பாங்காயினோர் கேட்பச் சொல்லினும் அமையு மென்பதாயிற்று ’ என்று கொண்டு, “ செறிதொடி... ..தோழி ” என்றக்காற் றலை விக்குப் பாங்காயினோர் கேட்பச் சொல்லிக் கூறல்வேண்டு மென்பது ; வாயில்களும் தலைமகளை ஊடல்காப்பவல்லது சொல்லாராகலாற் றலைமகள் கேட்பாளாகச் சொல்ல வேண்டு மென்பது ’ என்றும் கூறுவர் பேரா. (தொல், பொருள். 287, 511).

பி - ம். 7. உய்யாமா. 8. சிறிதிவண். (கூறினுளென).

## 107. பாலை

நீசெல வயரக் கேட்டொறும் பலநினைந்
தன்பி னெஞ்சத் தாயாப் பொறைமெலிந்த
வெண்ணகத் திடும்பை களைமார் நின்னொடு
கருங்கல் வியலறைக் கிடப்பி வயிறுதின்
5 றிரும்புலி துறந்த வேற்றுமா னுணங்க
னெறிசெல் வம்பல ருவந்தன ராங்க
ணொலிகழை நெல்லி னரிசியொ டோராங்
கானிலைப் பள்ளி யனைபெய் தட்ட
வானிண முருக்கிய வாஅல் வெண்சோறு
10 புகரரைத் தேக்கி னகலிலை மாந்துங்
கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்

வல்லா ணருமுனை நீந்தி யல்லாந்
துகுமனூ றஞ்சு மொருகாற் பட்டத்
தின்று வேற்றத் திழுக்கி முடங்கூர்ந்
15 தொருதனித் தொழிந்த வுரனுடை நோன்பக
டங்குழை யிருப்பை யறைவாய் வான்புழல்
புல்லுளைச் சிறாஅர் வில்லி னீக்கி
மரைகடிந் தூட்டும் வரையகச் சீறூர்
மாலை யின்றுணை யாகிக் காலைப்
20 பசுநனை நறுவீப் பரூஉப்பர லுறைப்ப
மணமனை கமழுங் கானந்
துணையீ ரோதியென் றோழியும் வருமே.

என்பது : தோழி தலைமகள் குறிப்பறிந்துவந்து தலைமகற்குச் சொல்லியது.

—காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

நீ செல அயர கேட்டொறும் பல நினைந்து அன்பின் நெஞ்சத்து ஆயா பொறை மெலிந்த என் அகத்து இடும்பை களைமார் துணை ஈர் ஓதி என் தோழியும் கானம் நின்னொடு வரும் - நீ உடன் கொண்டு செல்ல விரும்பக் கேட்டபோதெல்லாம், பலவும் நினைந்து அன்புடைய நெஞ்சத்திடத்து அதன் விளைவினை ஆராய்ந்து வருத்தமாகிய சுமையினாலே மெலிந்த என் மனத்திடத்து நோயினைக் களையும்பொருட்டு, இணைந்த ஈரிய கூந்தலையுடைய என் தோழியும் கானத்தே நின்னொடு வருவள் என்று, தோழி தலைமகள் குறிப்பறிந்துவந்து தலைமகற்குச் சொன்னாள் என்க.

இது, தோழி ' தலைவரு விழுமம் ' தலைமகட்குக் கூறிப் போக்கொருப்படுத்தியவழித் தலைமகள் துணிவெடுத்துத் தலைமகற்குக் கூறியதாகக் கொள்க.

" உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்று "

என்று கொண்டு, தலைவி போக்கொருப்பட்ட அருமை நோக்கி, என் தோழியும் வரும் என்று சிறப்புமையாற் கூறினாள்.

பசு நனை நறு வீ பரூஉ பரல் உறைப்ப காலை மணம் மனை கமழும் கானம் (வரும்) - பசிய பூங்கொத்தினின்றும் நறிய பூக்கள் பருத்த பரலிடத்து உதிர்வதனால் நாட் காலையிலே கலியாண வீடு போலக் கமழாநிற்கும் கானத்தே என்றோழி வரும் என்க.

'அசாஅப் பொறை மெலிந்த' என்னும் பாடத்திற்குத் துன்பச் சுமையால் மெலிந்த என்க.

இரு புலி கரு கல் வியல் அறை கிடப்பி வயிறு தின்று துறந்த ஏறு மான் உணங்கல் - பெரும்புலி பெரிய கற்களையுடைய அகன்ற பக்க மலையிலே தான் அடித்து வீழ்த்தித் தன் வயிறு நிறையத் தின்று துறந்தொழிந்த மானேற்றின் வற்றிய தசையை;

ஒலி கழை நெல்லின் அரிசியோடு முருக்கிய ஆன் வால் வெள் நிணம் அட்ட சோறு புகர் அரை தேக்கின் அகல் இலை ஆனிலை பள்ளி அளை பெய்து ஆங்கண் நெறி செல் வம்பலர் உவந்தனர் ஓராங்கு மாந்தும் - தழைத்த மூங்கில் நெல்லின் அரிசியோடு தாம் கொன்றழித்த ஆனின் மிக வெள்ளிய நிணத்தைக் கூட்டிச் சமைத்தசோற்றைப் புள்ளிபொருந்திய அரையினையுடைய தேக்கின் அகன்ற இலையில் வைத்து இடைச்சேரியிலுள்ள தயிரைச் செரிந்து ஆங்கு நெறியிற் செல்லும் அன்னியரோடு ஒன்றுகூடி மகிழ்ந்தனரா யுண்ணுகின்ற;

வால் ஆன் வெண் நிணச சோறு என்றலுமாம்.

கல்லா நின் மொழி கதம் நாய் வடுகர் அரு முனை - பிறிதொன்றனையுங் கல்லாத வஞ்சின மொழி யொன்றனையே கற்ற வரும் கோபமிகுத்த நாயையுடைய வருமான வடுகரது கடத்தற்கரிய பகைப்புலங்களை;

வல் ஆண் நீந்தி - வலிய ஆண்மையையுடைய நின்னோடு ஒத்த ஆண்மையாற் கடந்து;

இஃதாண்மையால் ஒப்பு. இஃது "பிறப்பே குடிமை யாண்மை யாண்டே" என்ற மெய்ப்பாட்டிற் சூத்திரத்தானமையும்.

உகும் மண் ஊறு அஞ்சும் ஒரு கால் பட்டத்து - சரிந்து விழும் மண்ணினாலே விளையும் இடையூற்றுக்கு அஞ்சத்தக்க ஒரே துறையைக் கொண்ட ஓடையிலே உள்ள;

இன்னு ஏற்றத்து இழுக்கி முடம் கூர்ந்து ஒரு தனித்து ஒழிந்த உரன் உடை நோன் பகடு - இன்னுமையையுடைய ஏற்றத்திலே ஏறி வழுக்கி முடம் மிக்குத் தன் இனத்தின்றும் வேருகத் தனித்து ஒழிந்த உடல் வலிமையோடு பாரஞ் சுமக்கும் வலிமையினை முடைய பகட்டினுக்கு ;

அம் குழை இருப்பை அறை வாய் வால் புழல் புல் உளை சிறுர் வில்லின் நீக்கி மரை கடிந்து ஊட்டும் - நிறமழகிய தழையையுடைய இருப்பையின் அற்ற வாயையுடைய வெள்ளிய துளை பொருந்திய பூவைப் புல்லிய உளைபோலும் தலைமயிரினையுடைய சிறுர் வில்லினுலே உதிர்த்து, அப்பூவினைத் தின்ன வரும் மரையாவைக் கடிந்து ஊட்டுகின்ற ;

வரை அகம் சிறு ஊர் மாலை இன் துணை ஆகி (என் தோழியும் வரும்) - மலையகத்துள்ள சிறிய ஊரிடத்து மாலைக் காலத்தே உனக்கு இனிய துணையாகி என் தோழியும் வரும் என்க.

நீ செலவயரக் கேட்டொறும் பல நினைந்து மெலிந்த என் அகத்து இடும்பை களைமார் நின்னொடு வடுகர் வல்லாண் அருமுனை நீந்திச் சீறூர் இன்றுணை யாகிக் கானம் என் தோழியும் வரும் என்றியக்கை.

ஆகி என்பதனை ஆகவெனத் திரித்து, மாலைக் காலத்து அவளுக்கு நீ துணை ஆவதனுலே வரும் என்றலுமாம்.

இருப்பையின்புழலை மரத்தினின்றும் வில்லின் நீக்கி மரை கடிந்து பகட்டினுக்கு ஊட்டும் சிறுர் ஊர் என்க. மரையை வில்லினீக்கிக் கடிந்து பகட்டினுக்குப் புழலூட்டும் என்றலுமாம்.

புழலுடைமையால் இருப்பைப்பூ, புழல் எனவும், உளை போறலின், சிறுர் தலைமயிர் உளையெனவும் பட்டன.

கல்லா நீண்மொழி, கல்லாமலே இயல்பாக நாவிடத்துப் பயிலும் நீண்மொழி என்றலுமாம்.

வம்பலர் மான் உணங்கல், அரிசி ஆன் நிணம் இவற்றைக் கூட்டி அட்ட வெண் சோற்றை அளைபெய்து உவந்தனராய் உண்ணும் அருமுனை என்றியைத் துரைப்பினு மமையும்.

இது பாலையிற் களவு.

" திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே " என்பது விதி.

ஓடையின் நீருண்டு அதன் துறையினின்றும் எறமாட்டாது முடம் பட்ட உரனுடைப் பகட்டிற்குச் சிறார் இருப்பைப்பூவை மரத்தினின்றும் நீக்கி மறைகடிந்து ஊட்டினாற்போலக் களவொழுக்கமாகிய இவ்வின்பத்தை நுகர்ந்து, இவ்வொழுக்கத்தினின்றும் நீங்கி வரைவொடு புகமாட்டாது வருந்தும் உரவோயாகிய உனக்குக் குற்றேவன் மகளாகிய நான் தலைமகளைத் தாயார் தன்னையரிடத்தினின்றும் வேறு பிரித்து நொதுமலர் வரைவு நீக்கி உடன்போக்குப் பொருத்துவல் என்று இறைச்சியிற் பொருள் தோன்றக் கூறினளாம்.

வடுகர் தாம் தேடாமற் பெற்ற மான் உணங்கலை அரிசியோடும் ஆன் நிணத்தோடும் கூட்டி அட்டு, அவ்வெண் சோற்றைத் தேக்கிலையில் வைத்து அளைபெய்து வம்பலரோடு உவந்துண்டாற்போல, நீயும் நின் முயற்சியானன்றி ஊழ்தானே கூட்டப் பெற்ற தலைவியை நின் பெருஞ் செல்வத்தோடு வைத்துப் பாராட்டி, நின் பதிக்கண் கொண்டெய்த்து விருந்து புறந்தந்து இன்புறுவாயாக என்று தோழி ஓம்படுத்துரைத்தாளாகக் கொள்க.

பெருஞ் செல்வமாவது : தாயத்தாற் பெற்ற பொருளும், தானீட்டிய பொருளும், தலைவியின் தமர்பாற் பெற்ற வரிசைப் பொருளுங் கூடியதாம். மூங்கிலரிசியைத் தாயத்தாற் பெற்ற பொருளாகவும், முருகிய ஆன் நிணத்தைத் தானீட்டிய பொருளாகவும், அளையைத் தலைவியின் தமர்பாற் பெற்ற வரிசைப் பொருளாகவும் கொள்க.

மான் உணங்கல் புலிநுகர்தற்கு இன்றியமையாத பொருளானதன்றி வடுகர்க்குந் தம்மூர் புகுந்த வம்பலரைப் புறந்தரற்குப் பயன்பட்டவாறு போல, இத் தலைவி நீ நுகர்தற்கு இன்றியமையாத துணையானதன்றி நின் கடிமனைக்கண் செல்லும் விருந்தினரைப் புறந்தந்து இல்லறப் பயனை நுகர்வித்தற்கும் துணையாவாள்காண் என்றாளாம்.

நறுவீ பரலிடத்தே யுதிர்ந்து ஆறுசென் மாக்களது அடிசிதையாவண்ணம் காத்தமையோ டமையாது நறுமணமுங் கமழ்ந்து அவரை மகிழ்வூட்டினமை போல, சீறூரார் ஆறலைக்கும் மறவாது

கொடுமைநீங்க நமக்குத் துணைவ ராவதோடமையாது, வேளாண்மை செய்தும் நம்மை மகிழ்வூட்டுக என்று வாழ்த்தினளுமாம்.

"கிழவோட் குவம மீரிடத் துரித்தே" என்ற உவமவியற் சூத்திரத்துச் சிறுபான்மை குறிஞ்சி முதலியவற்றிற்கும் உவமப்போலி கொள்க என்றலின், பாலைத்திணையில் மயங்கிவந்த இக் குறிஞ்சியிலும் உவமப்போலி கொண்டார்.

"தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக் கூறுதற் குரியர் கொள்வழியான" என்ற விதிபற்றித் தோழி யுள்ளுறை யுவமங் கூறினள்.

"தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது" என்பவாகலின் பாலை நில மகளாகிய தோழி அந்நிலத்துக் கருப்பொருள் கொண்டே இறைச்சி கூறினள்.

மன்னூறஞ்சும் என்னும் பாடத்திற்கு, நிலைத்த ஊற்றினுக் கஞ்சும் என்றும், மண் ஊறஞ்சும் என்னும் பாடத்திற்கு இட்ட காலைப் புதைக்கும் மண்ணின் ஊற்றிற்கஞ்சும் என்றும் கூறுக.

பி - ம். 4. இருங்கல். 13. பன்னூறஞ்சு.

## 108. குறிஞ்சி

புணர்ந்தோர் புன்க ணருளலு முணர்ந்தோர்க்
கொத்தன்று மன்னெ லெவன்கொன் முத்தம்
வரைமுதற் சிதறிய வைபோல் யானைப்
புகர்முகம் பொருத புதுநீ ராலி
5 பளிங்குசொரி வதுபோற் பாறை வரிப்பக்
கார்கதம் பட்ட கண்ணகன் விசும்பின்
விடுபொறி ஞெகிழியிற் கொடிபட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்கு
லாருயிர்த் துப்பிற் கோண்மா வழங்கு
10 மிருளிடைத் தமியன் வருதல் யாவது
மருளான் வாழி தோழி யல்கல்
விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ யரவி
னணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
காயா மென்சினை தோய நீடிப்

15 பஃறுடுப் பெடுத்த வலங்குருதலைக் காந்த
ளணிமலர் நறுந்தா தூதுந் தும்பி
கையாடு வட்டிற் றோன்று
மையாடு சென்னிய மலைகிழ வோனே.

என்பது : தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லு வாளாய்த் தோழி சொல்லியது.

— தங்காற் பொற்கோல்லனார்.

தோழி வாழி - தோழீ, நீ வாழ்வாயாக !

காந்தள் அணி மலர் நறு தாது ஊதும் தும்பி கை ஆடு வட்டில் தோன்றும் மை ஆடு சென்னிய மலை கிழவோன் - காந்த ளின் அழகிய மலரின் நறிய தாதினை நுகரும் தும்பி மகளிர் கையால் ஆடப்பெறும் சூதுபொரு காயைப் போலத் தோன்றாநிற்கும் மேகம் இயங்குகின்ற சிகரங்களையுடைய மலை நாடனை தலைமகன் ;

அல்கல் ஆர் இருளிடை நமியன் வருதல் எவன் யாவதும் அருளான் - இரவிலே வழங்கற்கரிய இருளினிடையிலே தனியனாக வருதலைப் பரிகரித்து ஏனோ சிறிதும் நமக்கு அருள் செய்யானாயிராநின்றான் ?

புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்கு ஒத்தன்று - நட்டோரது துன்பத்தினை நீக்கியருளலும் அறிந்தோர்க்கு அவர் அறிவோடு ஒத்தது ஆகும்.

மன்-அது மாட்டாரன்றே என்று, தலைமகன் சிறைப்புறத்தா னாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொன்னாள் என்க.

'புணர்ந்தோர் புன்கண் அருளலு முணர்ந்தோர்க்கு ஒத்தன்று' என்பது பிறர்மேல் வைத்துத் தலைவனை அறிவு கொளுத்தியது. இதனை, " பொழுது மாறுங் காப்பும் " என்னும் பொருளியற் சூத்தி ரத்து, 'நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்' என்னும் பகு தியா னமைக்க.

முத்தம் வரை முதல் சிதறியவை போல் புகர் யானை முகம் பொருத புது நீர் ஆலி - முத்தம் மலைத்தலையிலே சிதறப் பெற்றன போலுகின்ற புகரையுடைய யானையின் முகத்திலே மோதிய புதிய ஆலங்கட்டி ;

பளிங்கு சொரிவது போல் பாறை வரிப்ப - பளிங்கு சொரிவதுபோலப் பாறைக்கண்ணே யுதிர்ந்து அழகு செய்யாநிற்க ;

கார் கதம் பட்ட கண் அகல் விசும்பில் - காரினாலே கோடையின் வெப்பம் ஒழிந்த இடமகன்ற விசும்பிலே ;

விடு பொறி ஞெகிழியின் கொடி பட மின்னி படு மழை பொழிந்த பால் நாள் கங்குல் உயிர் துப்பின் கோண்மா வழங்கும் ஆர் இருள் இடை வருதல் அருளான் - விடுகின்ற பொறியையுடைய கடைகொள்ளிபோல வரிசையாக மின்னி மிக்க மழை பொழிந்த பாதி ராத்திரி இருளிலே மக்களின் உயிரினை உணவாகவுடைய கோண்மா என்னும் விலங்கு இயங்காநிற்கும் அரிய இருளிடை வருதலைப் பரிகரியான் என்க.

வருதலை யருளலாவது, வருதலைப் பரிகரித்தல்.

வரைமுதற் சிதறிய முத்தம் யானை முகத்து அமைந்துள்ள புகருக்கு உவமை. இஃது 'இரட்டைக்கிளவி யிரட்டை வழித்தே' என்பதனாற் கொள்ளப்படும், அம் முகத்துப் பட்டு விழும் ஆலி பாறைக்கண் சொரியும் பளிங்கு போலும் என்க.

கோண்மா, அச்சஞ் செய்யும் ஒரு விலங்கு விசேடம்.

"அச்சப் பொருளாவன : 'வள்ளெயிற்று அரிமா வாள்வரி வேங்கை, முள் எயிற்று அரவே முழங்கு அழல் செந்தீ, ஈற்று மதமா ஏக பாதம், கூற்றம் கோண்மாக் குன்றுறை அசுணம்' என்று சொல்லப்பட்டன போல்வன" என்றார் பேராசிரியர். அதுகொண்டு உயிர்த்துப்பிற்கோண்மா என்பதற்கு மக்களுயிரை உணவாகவுடைய கோண்மா எனப் பொருள் கூறப்பட்டது.

விரவு பொறி மஞ்ஞை வெரீஇ அரவின் அணங்கு உடை அரு தலை பை விரிப்பவை போல் காயா மெல் சினை தோய நீடி எடுத்த அலங்கு பல துடுப்பு குலை காந்தள் - விரவிய புள்ளியையுடைய மஞ்ஞையை வெருவி அரவினது வருத்தத்தைச் செய்யும் தீண்டற்கரிய தலைகள் படத்தை விரிப்பனபோன்று காயாவினது மெல்லிய கொம்பு தோய்தலால், நீண்டு உயர்ந்த அசையுந் தன்மையவான பல துடுப்புப்போலும் குலையான காந்தள்கள் என்க.

காயாவின் சினை தோய்ந்த காந்தண் மடல் அரவினுடலிற் பொருந்திய அதன் பைபோலும் என்றவாறு.

இதனை, "இரட்டைக் கிளவி யிரட்டை வழித்தே" என்ற விதிபற்றிக் கொள்க.

ஆர் உயிர்த் துப்பிற் கோண்மா என்று கொண்டு, பிறவிலங்கிறுல் வீழ்த்தற்கரிய உயிரையுந் தான் வீழ்த்திக் கொன்றுண்ணவல்ல சிங்கம் என்றலுமாம்.

கண்டார் விரும்புந்தன்மையவாய காந்தளின் விரிந்த மடல் பெரிதும் அஞ்சத்தக்க அரவின் பை விரிப்புப் போலும் என்றது, எம்மால் விரும்பப்படும் நின் வருகை ஆற்றது தீமையை உன்னுமிடத்துப் பேரச்சம் தருவதா யிராநின்றது என்று, தோழி இறைச்சியிற்பொருளால் வரைவு கடாயினுள் என்க.

"விரவியும் வரூஉம் மரபின வென்ப" என்ற சூத்திரத்து, "காயா.........வோனே" என்றவடிகளைக் காட்டி, ஈண்டு ஆடுதற்றொழில் பற்றியும் வடிவு பற்றியும் வண்ணம் பற்றியும் உவமை வந்தது என்பர் பேரா. (தொல். பொருள். 277.)

பி - ம். 3. வரைமிசைச்சித. 5. சொரிபவைபோற். தங்கால் பூட்கோவனர்.

## 109. பாலை

பல்லிதழ் மென்மல ருண்க ணல்யாழ்
நரம்பிசைத் தன்ன வின்றீங் கிளவி
நலநல் கொருத்தி யிருந்த வூரே
கோடுழு களிற்றின் றொழுதி யீண்டிக்
5 காடுகால் யாத்த நீடுமரச் சோலை
விழைவெளி லாடுங் கழைவளர் நனந்தலை
வெண்ணுனை யம்பின் விசையிட வீழ்ந்தோ
ரெண்ணுவரம் பறியா வுவலிடு பதுக்கைச்
சுரங்கெழு கவலை கோட்பாற் பட்டென
10 வழங்குந ரமடிந்த வத்த மிறந்தோர்
கைப்பொரு ளில்லை யாயினு மெய்க்கொண்

டின்னுயிர் செகாஅர்விட் டகறப் பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரியத ளிறுக்கு
மறனில் வேந்த னூரும்
15 வறனுறு குன்றம் பலவிலங் கினவே.

என்பது : இடைச் சுரத்துத் தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.

— கடுந்தோடைக் காவினூர்.

பல இதழ் மெல் மலர் உண் கண் நல் யாழ் நரம்பு இசைத்தன்ன இன் தீம் கிளவி நலம் நல்கு ஒருத்தி இருந்த ஊர் வறன் உறு குன்றம் பல விலங்கின - பலவாகிய இதழ்களையுடைய மெல்லிய மலர் போன்ற மையுண்ட கண்களையும் நல்ல யாழ் நரம்பு ஒலித்தாலன்ன இனிய தீவிய மொழியினையும் நன்மையெல்லாந் தரவல்ல ஒப்பற்றவளாகிய நந் தலைவி யிருந்த ஊரானது வற்கட முற்ற குன்றுகள் பலவற்றாற் குறுக்கிட்டுத் தடுக்கப்பட்டுள்ளது ; அன்றாயின் இன்றே யாம் நந் தலைவி பக்கல் மீண்டேகலாம் என்று இடைச்சுரத்துத் தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொன்னான் என்க.

கோடு உழு களிற்றின் தொழுதி ஈண்டி காடு கால் யாத்த நீடு மரம் சோலை - பகைவர் மார்பினைத் தம் கோட்டால் உழும் களிற்றின் தொகுதி ஒன்றுகூடி வாழுமாறு காடு திசையெல்லாம் மண்டிய நெடிய மரச் சோலையையுடைய ;

விழை வெளில் ஆடும் கழை வளர் நனை தலை - ஏறும் பிணையுமாகித் தம்மில் ஒன்றை ஒன்று விழையும் அணில்களாடும் மூங்கில் வளர்ந்த அகன்ற விடத்திலே ;

வெள் நுனை அம்பின் விசை இட வீழ்ந்தோர் எண்ணு வரம்பு அறியா உவல் இடு பதுக்கை சுரம் கெழு கவலை கோள் பால் பட்டென வழங்குநர் மடிந்த அத்தம் - நிணந்தோய்தலால் வெள்ளிய நுனையையுடைய அம்பின் விசைபட மரித்தோரின் எண்ணின் எல்லை யறியாத சருகிட்ட பதுக்கைகளையுடை சுரத்திற் பொருந்திய கவர்த்த வழியானது எயினரால் ஆறலைக்கும் பகுதியிலே பட்டதாக அஞ்சிச் செல்லுவாரற்ற அத்தத்திலே ;

இறந்தோர் கை பொருள் இல்லை ஆயினும் மெய் கொண்டு இன் உயிர் செகார் விட்டு அகல் தப்பற்கு பெரு களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும் அறனில் வேந்தன் ஆளும் வறன் உறு குன்றம் பல விலங்கின - சென்றவரது கையிற் பொருள் இல்லையாயினும் அவரை மெய்யிடத்துப் பற்றிக்கொண்டு அவர் இனிய உயிரைக் கொல்லாராய் விட்டு அகன்றுபோன தவற்றுக்காகத் தன் ஏவலிளையரைப் பெரிய களிற்று மருப்பொடு புலித்தோலைத் தண்டமாக இறுக்கச் செய்யும் அறனில்லாத வேந்தனை காட்டுத் தலைவன் ஆளாநின்ற வற்கடமுற்ற குன்றம் பல குறுக்கிட்டுள்ளன என்க.

நலம் நல்கு ஒருத்தி இருந்த ஊர் குன்றம் பல விலங்கின என்றியைக்க. ஈண்டி என்பதனை, ஈண்டவெனத் திரிக்க.

கால்யாத்தல் - வேரூன்றலுமாம். விழை வெளில் - கண்டார் விழையும் வெளில் என்றலுமாம். விலங்குதல் - தடுத்தல். அறனில் வேந்தன் - அறஞ்செய்யாத மறமன்னன்; என்றூர், 'மறக்குடி அறஞ்செய்யக் கெடும்' ஆதலின்.

இஃதிடைச் சுரத்துத் தலைமகன் தலைவி குணம் நினைந்து இரங்கியது.

இங்ஙனம் தலைமகன் இரங்குதலைக் "கரணத்தி னமைந்து முடிந்த காலை" என்னுங் கற்பியற் சூத்திரத்து, 'மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணும்' என்னும் பகுதியான் அமைக்க.

"வெறியறி சிறப்பின்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்து, 'மாயோன்மேய மன்பெருஞ் சிறப்பிற், றாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்" என்னும் பகுதியுள், 'தாவா' என்றதனானே அரசர் புகழைக் காட்டுவாழ்வோர்க்குக் கூறுதலும், அவரை அரசர் பெயராற் கூறுதலும் கொள்க என்று கூறி, இப்பாட்டினுள், "அறனில் வேந்த......கினவே" எனக் காட்டுத் தலைவனை நாட்டுத் தலைவன் பெயராற் கூறினார்" என்றூர் நச். (தொல். பொருள். 60.)

பி - ம். 6. கழைவிரி. 7. 'வெந்நுனை. 11. மெய்க்கட்.

## 110. நெய்தல்

அன்னை யறியினு மறிக வலர்வா
யம்மென் சேரி கேட்பினுங் கேட்க

பிறிதொன் றின்மை யறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக்
5 கடுஞ்சூ டருகுவ னினக்கே கானற்
றொடலை யாயமொடு கடலுட னாடியுஞ்
சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தந் தீர யாஞ்சிறி
திருந்தன மாக வெய்த வந்து
10 தடமென் பணைத்தோண் மடநல் லீரே
யெல்லு மெல்லின் றசைவுமிக வுடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
வெனமொழிந் தனனே யொருவ னவற்கண்
15 டிறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி
யிவைநுமக் குரிய வல்ல விழிந்த
கொழுமீன் வல்சி யென்றன மிழுமென
நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ
காணு மோவெனக் காலிற் சிதையா
20 நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு
மென்னே குறித்த நோக்கமொடு நன்னுதா
லொழிகோ யானென வழிதகக் கூறி
யான்பெயர் கென்ன நோக்கித் தான்ற
னெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
25 நின்றோன் போலு மென்றுமென் னகட்டே.

என்பது : தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நின்றது.

—போந்தைப்பசலையார்.

யாம் தொடலை ஆயமொடு கடலுடன் ஆடியும் கானல் சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும் வருந்திய வருத்தம் தீர சிறிது இருந்தனமாக-(அன்னாய் ஒரு நாள்) யாம் மாலைபோலத் தொடர்ந்த தோழிக் கூட்டத்தொடு கடலில் ஒருங்கே ஆடியும் கடற்கரைச் சோலைக்கண்ணே சிற்றில் கோலியும் சிறு சோறு ஆக்கியும் வருந்திய வருத்தம் தீருமாறு சிறிது இளைப்பாறி இருந்தனமாக ;

ஒருவன் எய்த வந்து தட மென் பணை தோள் மடம் நல்லீரே! எல்லும் எல்லின்று அசைவும் மிக உடையேன் மெல் இலை பரப்பின் விருந்து உண்டு இ கல் என் சிறு குடி யானும் தங்கின் எவனோ என மொழிந்தனன் - ஒரு தலைமகன் அப்போது அணுகி வந்து, 'பெரிய மெத்தென்ற மூங்கில்போலும் தோளையும் மடப்பத்தையுமுடைய நற்குணமுடையீரே! பகலும் ஒளி மழுங்கிற்று: தளர்ச்சியு மிகவுமுடையேன், இம்மெல்லிய இலைப்பரப்பின் கவிர் குவைஇய சிறு சோற்றை விருந்துண்டு, இக்கல்லென்னும் ஒலியையுடைய சிறிய குடியில் யானும் தங்கினால் என்னகுறை?' என மொழிந்தனன் (என்றும்);

அவன் கண்டு இறைஞ்சிய முகத்தெம் புறம் சேர்பு பொருந்தி இழும் என இவை நுமக்கு உரிய அல்ல இழிந்த கொழுமீன் வல்சி என்றனம் - அவனைக் கண்டு கவிழ்ந்த முகமுடையேமாய் மறைவான பக்கத்தே சேர்ந்திருந்து இழுமென்னும் ஒலியுடன், 'இச்சோறு முதலியன நுமக்குத் தகுதியுடையவல்ல, இழிந்த கொழுமீன் உணவாகும்' என்றனம் (என்றும்); என்றனென்று;

நுடங்கும் நெடு கொடி தோன்றுவ நாவாய் காணுமோ என காலில் சிதையா நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும் - 'அசையும் நெடிய கொடியோடு தோன்றுகின்றனவான மரக்கலங்களைக் காணேமல்லேமோ?' என்று சொல்லிக்கொண்டு, தமது சிற்றில் சிறுசோறு முதலியவற்றைக் காலாற் சிதைத்துவிட்டு ஆண்டு நின்றும் நில்லாது பெயர்ந்த ஆயத்தார் பலருள்ளும்;

என்னே குறித்த நோக்கமொடு நல் நுதாஅல் ஒழிகோ யான் என அழிதகக் கூறி - என்னையே குறித்த பார்வையொடு 'நன்னுதால்! யான் செல்லவா?' என்று, என் நெஞ்சம் அழியுமாறு அத்தலைமகன் கூறி;

கூறி, கூறவெனத் திரிக்க.

யான் பெயர்க என்ன நோக்கி தான் தன் நெடு தேர் கொடிஞ்சி பற்றி என் மகட்கு நின்றோன் என்றும் அன்னை அறியினும் அறிக - யான 'போவீராக' எனவும், பெயராது இரக்கந் தோன்றப் பாராநின்றே தன்னுடைய நெடிய தேரின் கொடிஞ்சியைப் பற்றிய வண்ணம் என் மகள்பொருட்டே நின்றோன் என்றும் அன்னை அறிவாளாயினும் அறிக; போலும், ஒப்பில்போலி.

அலர் வாய் அம் என் சேரி கேட்பினும் கேட்க பிறிது ஒன்று இன்மை அறிய கொடு சுழி புகார் தெய்வம் நோக்கி நினக்கு கடுசூள் கூறி தருகுவன் – அதனை அலர் கூறும் வாயினையும் அம்மென்னும் ஒலியினையுமுடைய சேரிப் பெண்டிர் கேட்பினும் கேட்க, இதனைத் தவிரப் பிறிதொன்று மின்மையை நீ அறியுமாறு வளைந்த சுழியையுடைய புகாஅரிடத்துத் தெய்வத்தை நோக்கி அதன் முன் நீ தெளியும் வண்ணம் உனக்குச் சூள் கூறித் தருவேன் என்று தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றுளென்க.

'என்றும்' என்னுஞ்சொல் இரண்டிடங்களில் வருவித்துரைக்கப்பட்டன.

யாம் ஆயமொடு ஆடியும் இழைத்தும் குவைஇயும் இருந்தனமாக, ஒருவன் வந்து, 'நல்லீரே! எல்லும் எல்லின்று; அசைவும் மிகவுடையேன்; இலைப்பரப்பின் விருந்துண்டு இச் சிறுகுடித்தங்கின் எவனோ?' என மொழிந்தனன் என்றும், அவற்கண்டு யாம் 'இவை நுமக்கு உரியவல்ல கொழுமீன்வல்சி என்றனம் என்றும், என்னை நின்று, 'நாவாய் தோன்றுவ காணுமோ' எனச் சிதையாதில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும் என்னேகுறித்த நோக்கமொடு, "நன்னுதால்! ஒழிகோ யான்?" என அழிதகக் கூறி, யான் பெயர்கென்ன, நோக்கிக் கொடிஞ்சி பற்றி என் மகட்கே நின்றோன் என்றும் அன்னை அறியினும் அறிக; சேரி கேட்பினுங் கேட்க; பிறிதொன்றின்மை அறியத் தெய்வ நோக்கி நினக்குச் சூள் கூறித் தருவேன் என்றியைக்க.

"'நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்' என்புழி முன்னர் எல்லாரும் உளப்பாடாகக் கூறிய தோழி ஈண்டும் பல்லே முள்ளும் என்னுது, தன்னை நீக்கிக் கூறிய தென்னை எனின்: தலைமகன் தன்னை நோக்கி அழிவுதகக்கூறி ஆற்றுனாகி நின்ற நிலைமையைக் கண்டு அருள் பிறவாது ஆயமும் தலைவியும் போயவாறும், அதற்குத் தான் அழிவுதக்கு நிற்றலின், அவரொடு போதலாற்றாது பின்னர்ப் போயவாறுந் தோன்றக் கூறுகின்றாளாதலிற் பல்லோருள்ளுமெனக் கூறினள்" (தொல். சொல். நச். 463.)

யான் பெயர்க வென்றபின்னும் தலைமகன் நோக்கியது, அவன் பால் எனக்கு முன்னர்ப் பிறந்த அருள் பின்னர்ச் சிதைந்து

ஒழிந்ததேனும், மற்று மொருகால் அதுபிறத்தலுங் கூடுமென்று அவன் கருதினனாதலின் என்க.

'ஒழிகோ யான் என அழிதகக் கூறி' என்புழித் தலைமகன் மனத்து நிகழ்ந்த அழிவெல்லாம் 'ஒழிகோ யான்' என்ற உரை யானே தோழி உணர்ந்தமையின் அது செவியுணர் வெனப்படும் (தொல். பொருள். பேரா. 275.)

எல் - பகல்; எல்லின்று - ஒளி மழுங்கிற்று. கொழுமீன், மீன் விசேடம். தொடலை - மாலை; தொடலை ஆயம் - மாலைபோலத் தலைவியைத் தொடர்ந்த ஆயம். கோதை யாயம் என்பது போல.

மற்று, 'யான் என் ஊர்க்கு ஏகுதலொழிந்து சிறுகுடித் தங்கின் என்று பொருள் படலின், வினைமாற்றின்கண் வந்தது. சேரி ஆகுபெயரால் அதன்கணுள்ள அலர் கூறும் பெண்டிற்காயிற்று. ஒன்றின்மை, முற்றும்மை தொக்கது. ஒன்று மின்மை.

இது நெய்தலிற் குறிஞ்சி.

"மாயோன் மேய காடுறை யுலகமும்" என்னுஞ் சூத்திரத்து, "நெய்தல் நிலத்து நுளையர்க்கு வலைவளந் தப்பின் அம் மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டுப் பரவுக்கடன் கொடுத் தலின் ஆண்டு வருணன் வெளிப்படும்" என்று கூறி, அதற்குக் 'கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக், கடுஞ்சூ ளுருகுவன்' என்ற வடிகளை உதாரணமாக்கியும், "மெய்தொட்டுப் பயிறல்" என்ற சூத்திரத்து, "ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும், நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித் தோழியைக் குறையுறூஉம் பகுதியும்" என்புழிப் பிறவு மென்பதற்கு, "மெல்லிலை......றெவனோ" என்ற வடிகளைக் காட்டியும், அச் சூத்திரத்தே 'தண்டாது இரப்பினும்' என்னும் பகுதிக்கு, 'எல்லும் எல்லின்று அசைவு......வொருவன்' எனத் தலைவன் இரவுக்குறி வேண்டியதனைத் தோழி கூறியவாறு காண்க என்றும், இவ்வடிகளையே "எளித்தல் ஏத்தல்" என்னும் பொருளியற் சூத்திரத்து, 'எளித்தலுக் குதாரணமாகக் காட்டியும்' அச்சூத்திரத்தே தலைப்பாட்டிற்குப் "பிறிதொன்றின்.....னக்கே" என்பதனைக்காட்டியுஞ்செல்வர், நச். (தொல். பொருள். 5,102,207.)

இனிச் சேனாவரையர், "'கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக் கடுஞ்சூ ளுருகுவ னினக்கே' என முன்தேற்று உணர்த்தி

யவாறு கண்டுகொள்க; முன்தேற்று - புறத்தின்றித் தெய்வ முதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல்" என்பர். (தொல். சொல். 383.)

'நினக்கென' என்ற பாடத்திற்கு, 'நினக்குச் சூள் கூறித் தருகு வன் எனவும் அன்னை அறியினும் அறிக' என்று இயைத்துரைக்க.

'காவிற் சிதையா' என்ற பாடத்திற்கு 'நில்லாது காவிற் சிதையாப் பெயர்ந்த பல்லோருள்ளும்' என்று மாறிப் பொருள் காண்க. யாம் பெயர் கென்ன என்பதும் பாடம்.

'நின்றோன் போலும் இன்றுமென் கட்கே' என்ற பாடத் திற்கு என் கண்முன் இன்றும் நின்றோன் போல விராநின்றான்; இதனை அன்னை அறியினுமறிக என்று, ஒருசொல் வருவித் துரைக்க. கட்கு வேற்றுமை மயக்கம்.

தோழி, தலைவிகண்ணைத் தன்கண் என்றது 'தாயத்தி னடையா' என்ற பொருளியற் சூத்திரத்தா னமையும்.

## 111. பாலை

உள்ளாங் குவத்தல் செல்லார் கறுத்தோ
ரெள்ள னெஞ்சத் தேஎச்சொ ணுணி
வருவர் வாழி தோழி யரச
யானை கொண்ட துகிற்கொடி போல
5 வலந்தலை ஞெமயத்து வலந்த சிலம்பி
யோடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர
மழையென மருண்ட மம்மர் பலவுட
ஞெய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை
தொகுசொற் கோடியர் தூம்பி னுயிர்க்கு
10 மத்தக் கேழ லட்ட நற்கோட்
செந்நா யேற்றை கம்மென வீர்ப்பக்
குருதி யாரு மெருவைச் செஞ்செவி
மண்டைம ரழுவத் தெல்லிக் கொண்ட
புண்டோர் விளக்கிற் றோன்றும்
15 விண்டோய் பிறங்கன் மலையிறந் தோரே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை யாற்று வித்தது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

கறுத்தோர் எள்ளல் நெஞ்சத்து ஏ சொல் நாணி உள் ஆங்கு உவத்தல் செல்லார் விண் தோய் பிறங்கல் மலை இறந்தோர் வருவர் வாழி தோழி - பகைவர் இகழ்ச்சியொடு பட்ட நெஞ்சத்தோடு கூறும் அம்புபோலும் சொல்லுக்கு நாணினராய்த் தமக்குப் பொருளுள்ளபடியைக்கொண்டு உவவாராய் மிக்க பொருளை ஈட்டும் நினைவுடன் ஆகாயத்தை அளாவி உயர்தலையுடைய மலைகளைக் கடந்து சென்ற நம் தலைவர் விரைய வருவர்; தோழீ நீ வாழி என்று, தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை ஆற்றுவித்தாள் என்க.

அரச யானை கொண்ட துகில் கொடி போல ஓடைக்குன்றத்து அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி கோடையொடு துயல்வர - பட்டத்தியானையின்மீதேகொண்ட துகிற்கொடிபோல ஓடையென்னும் பெயரிய குன்றத்திடத்தே உலறிய தலையையுடைய ஞெமை மரத்துச் சுற்றிய சிலம்பிக்கூடானது வீசும் மேல்காற்றால் அசைய;

மழை என மருண்ட மம்மர் ஓய் களிறு பல உடன் எடுத்த நோய் உடை நெடு கை தொகு சொல் கோடியர் தூம்பின் உயிர்க்கும் அத்தம் - அதனை மேகமென்று மருண்ட மயக்கத்தையுடைய இளைத்த களிறுகள் பல அம்மேகத்தைப் பற்றற்கு ஒருசேரத் தூக்கிய துன்பத்தையுடைய நெடிய கைகளானவை ஒழுங்குபட்ட சொல்லையுடைய கூத்தரது தூம்பென்னும் வாச்சியத்தைப் போல ஒலியாநிற்கும் அத்தத்தினையுடைய;

துறையூர் ஓடை கிழார் (புறம். 136.) என்னும் தொடரை நோக்க, ஓடை என்பது (துறையூரைச் சார்ந்த) ஓர் ஊர் என்று விளங்குதலால், ஓடைக்குன்றமென்பது, ஓடையூர்ப் புறத்துள்ள ஒரு குன்றமாதல் வேண்டும்.

கேழல் அட்ட நல் கோள் செந்நாய் ஏற்றை கம் என ஈர்ப்ப - பன்றியை அட்ட, இரையை நன்கு பற்றவல்ல, செந்நாய் ஏற்றையானது அக்கேழலை விரைய இழுக்க அதனால்;

குருதி ஆரும் எருவை செ செவி மண்டு அமர் அழுவத்து எல்லி கொண்ட புண் தேர் விளக்கில் தோன்றும் மலை - வழியெல்

லாம் ஒழுகிய குருதியை உண்ணும் எருவையினுடைய சிவந்த செவியானது மண்டிய போர்க்களத்திலே இரவிலே வீரரது மருமத்துக் கொண்ட புண்ணை ஆராய்தற்கு வைத்த விளக்குப் போலத் தோன்றுநிற்கும் மலை என்க.

துகில் - வெண்பட்டு ; பட்டு விசேடம். அழுவம் - பரப்பு. எடுத்தல் - ஒலித்தலுமாம். கம், தேய வழக்கு. ஏ - பெருக்கமுமாம்; ஏச் சொல் - பெருமிதத்தோடு பேசின பேச்சு என்க.

அலந்தலை, விகாரம்.

யானை, ஓடைக் குன்றத்துக்கும், அதன் மீதுள்ள கொடிமரம், அலந்தலை ஞெமையத்துக்கும், துகிற்கொடி, சிலம்பிக்கூட்டிற்கும் உவமைகள். துயல்வருகின்ற அச் சிலம்பிக்கூட்டினை மேகமெனக் களிறு மருண்டன வென்க. "விரவியும் வருஉ மரபின என்ப".

கோடியர் தூம்பு, களிற்றின் நெட்டுயிர்ப்புப்போலும் ; 'களிற் றுயிர்த் தூம்பு' என்றதுங் காண்க. (மலைபடு. அடி 6.)

அரசர் யானைக் கொண்ட துகிற்கொடி என்னும் பாடத்திற்கு அரசர் தம் பட்டத்து யானைமீது உயர்த்துக் கொண்டுள்ள துகிற் கொடி என்க. அல்லல் நெஞ்சத்து என்னும் பாடத்திற்கு, அல்ல லுடைய நெஞ்சத்தோடு மலையிறந்தோர் என்றியைத்துப் பொருள் கூறுக.

சிலம்பிக்கூடு யானையை வஞ்சித்தமையைக் காணுந்தோறும் தலைவர் தம்மைப் பொருள்நசை வஞ்சித்தமையை உணர்வ ராதலால், விரைய வருவாரென்று இறைச்சியிற் சுட்டித் தோழி தலைமகளை ஆற்றுவித்தாள் என்க.

பொருளல்லாத எருவையின் செவியும் பொருள்படும் விளக்கும் போலு மென்றது, தலைவரீட்டிய பொருளல்லாத பொருளும் நீ இல்லறம் நிகழ்த்துவதற்குப் பயன்படுவதொன் றாகும் எனக் கொண்டு ஆற்றியிருக்கற்பாலை என்றானுமாம்.
பி - ம். 1. உள்ளாங்குறுத்தல். 14. புண்டோய்.

## 112. குறிஞ்சி

கூன லெண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்

மண்புனை நெடுங்கோ டுடைய வாங்கி
யிரைநசைஇப் பரிக்கு மரைநாட் கங்கு
5 லீன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி
யொளிறேந்து மருப்பிற் களிறட்டுக் குழூஉம்
பனியிருஞ் சோலை யெமிய மென்னாய்
தீங்குசெய் தனையே யீங்குவந் தோயே
நாளிடைப் படினென் றோழி வாழா
10 டோளிடை முயக்க நீயும் வெய்யை
கழியக் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்
வரையி னெவனோ வான்றோய் வெற்ப
கணக்கலை யிருக்குங் கறியிவர் சிலம்பின்
15 மணப்பருங் காமம் புணர்ந்தமை யறியார்
தொன்றியன் மரபின் மன்ற லயரப்
பெண்கோ ளொழுக்கங் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலவிவள்
புதுநா ணொடுக்கமுங் காண்குவம் யாமே.

என்பது : இரவுக்குறி வந்த தலைமகனை யெதிர்ப்பட்டு நின்று தோழி சொல்லி வரைவுகடாயது.

—நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார்.

கூனல் குறு நடை எண்கின் தொழுதி சிதலை செய்த செதிலை புற்றின் மண் புனை நெடு கோடு உடைய வாங்கி இரை நசைஇ பரிக்கும் அரை நாள் கங்குல் - கூனிய உடலையுங் குறுமையான நடையினையுமுடைய கரடியின் கூட்டமானது கறையான் செய்த சிவந்த நிலைப்புற்றின் மண் புனைந்த நெடிய சிகரம் உடைய இடந்து புற்றும்பழஞ்சோறாகிய இரையை நச்சி அப்புற்றினைச் சூழ்வாராநிற்கும் பாதியிராத்திரி யிருளிலே ;

ஈன்றணி வயவு பிணை பசித்தென ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டு மறம் புலி குழூஉம் பனி இரு சோலை எமியம் என்னாய் ஈங்கு வந்தோய் தீங்கே செய்தனை - குட்டிகளை ஈன்ற அணுமையையுடைமையால் வயவுப் பசியையுடைய பிணவு பசித்த

தென்று விளங்குகின்ற ஏந்திய மருப்பினையுடைய களிற்றினை அட்டு வலிய புலி முழங்காநிற்கும் குளிர்ச்சிபொருந்திய இருண்ட சோலைக்கண்ணே 'யாம் தமியமன்றே !' என்று நினையாயாய், இங்கு வந்த நீ தீங்கினையே செய்தனையாகுவை ;

தேற்றப் பொருளில்வந்த ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

நாள் இடை படின் என் தோழி வாழாள் தோள் இடை முயக்கம் நீயும் வெய்யை - நீ வாராது ஒரு நாள் இடைப்பட்டாலும் என் தோழியும் உயிர் வாழாள், அவள் தோளிடை முயக்கத்தினை நீயும் விரும்புவோயா யிராநின்றனை ;

கழிய காதலர் ஆயினும் சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்- மிக்க காதலையுடையராயினும் சான்றோர் பழியொடுகூடி வருகின்ற இன்பத்தினை விரும்பாராவர் ;

கணம் கலை இருக்கும் கறி இவர் சிலம்பின் மணப்பு அரும் காமம் புணர்ந்தமை அறியார் தொன்று இயல் மரபின் மன்றல் அயர பெண் கோள் ஒழுக்கம் கண் கொள நோக்கி இவள் புது நாண் ஒடுக்கம் நொதுமல் விருந்தினம் போல யாம் காண்குவம் - கூட்டமான கலைமான்கள் ஒலியைத் தாழவிடுகின்ற மிளகுக் கொடி வளர்ந்தேறுகின்ற மலைச்சாரலிலே கூடுதற்கரிய காமம் புணர்ந்தமையை அறியாராய், நின் இருமுது குரவரும் சான்றோரும் பழைமையாக நடந்துவரும் மரபின்படி கலியாணஞ் செய்தலை விரும்பி மகட்பேசிப் பெண்ணைக் கொள்ளும் முறையை யாம் கண் கொள்ளப் பார்த்து, மணத்திடத்துப் புதியாள்போலும் இத்தலைவி யது நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தை அயலேமும் புதியேமும் போல யாமும் காண்போம் ; ஆதலால் ;

வான்தோய் வெற்ப வரையின் எவனோ- வானைத் தோய்கின்ற வெற்பனே வரைவொடு புகின் என்ன குறை ? என்று, இரவுக்குறி வந்த தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி தன் சதுரப்பாடு டைமை தோன்றச் சொல்லி வரைவு கடாயினாள் என்க.

கங்குல் எமியம் என்னாய் ஈங்கு வந்தோய் தீங்கே செய்தனை ; நாள் இடைப்படின் என் தோழி வாழாள் ; தோளிடை முயக்கம் நீயும் வெய்யை ; சான்றோர் கழியக் காதலராயினும் பழியொடு

வரூஉம் இன்பம் வெஃகார்; மன்றல் அயரப்பெண கோளொழுக்கம் கண்கொள நோக்கி விருந்தினம் போல இவள் புது நாண் ஒடுக்கம் யாம் கண்குவம்; வரையின் எவனோ வெற்ப என்றியைக்க.

கணைக்கலை இருக்கும் சிலம்பில் நீ காமம் புணர்ந்தமை அறியார் என்றது, நீ புணர்ந்தமையை நின் இருமுது குரவரும் சான்றோரும் அறியாரேனும் அதற்குக் கலைக்கணம் அறிகரியாயின என்றாளாம்.

கூரல் எண்கு என்னும் பாடத்திற்கு உடம்பு வளைந்த எண்கு என்க. இருத்தல் - தாழ ஒலி விடுதல்.

பறிக்கும் என்னும் பாடத்திற்குப் புற்றினை அகழாநிற்கும் என்றும், கழியாக் காதலர் என்னும் பாடத்திற்கு நீங்காத காதலை யுடையார் என்றும் பொருள் கொள்க.

இப் பாட்டினுள் எண்கின்றொழுதி சிதலைப் புற்றினை வாங்கிப் பரிக்கும் என்ற இறைச்சிப் பொருள் :

இழிந்த புற்றும்பழஞ்சோற்றை நச்சிய எண்கு சிதலையின் காப்பமைந்த செம்புற்றை உடைத்து அகழ்ந்துகொண்டு நுகர்ந்தும் அமையாது அவ்விடத்துச் சூழ்வாராநின்றாற்போல, இழிந்த களவொழுக்கத்தை நச்சிய நீயும் எம் தாயர் தன்னையரிழைத்த காப்பினை எல்லாம் சிதைத்து, என்னையும் நயப்பித்துக் கொண்டு தலைவியையும் புணர்ந்து அஃதோடமையாது பின்னும் இத்தகைய இரவுக்குறி பகற்குறிகளைப் பெறச் சூழ்வாராநின்றாய் என்றவாறு.

வரையின் எவனோ என்று வரைவுகடாய பொருட்புறத்தே இப்பொருள் தோன்றினமையின், இஃது இறைச்சியாயிற்று.

" இறைச்சி தானே பொருட்புறத் ததுவே " என்பது ஒத்து.

பிணப் பசித்தெனப் புலி களிறட்டுக் குழுமும் என்ற இறைச் சிப் பொருள் :

தனக்குக் குட்டி யீன்று தன்னை மகிழ்வித்த பிணவினுக்கு வயவினாலுண்டான பசியைத் தீர்த்தற்குக் களிற்றினை அட்டுப் புலியேறு முழங்கினாற்போல, நினக்கு மகப்பேறு நல்கி நின்னை மகிழ்வித்தற்குரிய நின் தலைவிக்கு நொதுமலர் வரைவுவேண்டி விடலாலுண்டான தளர்ச்சியை நீக்கற்கு அவர் வரைவினை நீக்கி வரைந்துகொண்டு நின் சுற்றத்துடன் ஆரவாரிப்பாயாக என்றவாறு.

"நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்து, 'ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்' என்னும் பகுதிக்கு இப் பாட்டினை உதாரணமாகக் காட்டியும், '"பொழுதும் ஆறும் காப்பும்" என்ற சூத்திரத்து, "நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்" என்னும் பகுதிக்கு, "கழியக்......வெஃகார்" எனப் பிறர்மேல் வைத்துத் தலைவனை அறிவு கொளுத்தினமையின் வழுவாயமைந்தது' என்றும், '"பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்" எனவே, புகழொடு வரூஉம் இன்பம் வெஃகுவரெனக் கொள்ளவைத்தலின் நன்மையும் தீமையும் பிறிதின்மேல் வைத்துக் கூறிற்றும்' என்றும் கூறுவர் நச்.

இனிப் பேரா. "கல்வி தறுகண்" என்ற சூத்திரத்துப் புகழ் பற்றிய பெருமிதத்திற்குக் 'கழியக் காதலராயினும் சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்' என்ற அடிகளைக் காட்டுவர். (தொல். பொருள். 114, 210, 257.)

பி - ம். 1. கானலெண்கின். கூருகிரெண்கின். 10. முயங்கமதி. 15. மணப்பெருங்.

## 113. பாலை

நனறல காலையு நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியிற்
புன்றலை மடப்பிடி யகவுநர் பெருமக
னமர்வீசு வண்மகி ழஃதைப் போற்றிக்
5 காப்புக்கை நிறுத்த பல்வேற் கோச
ரிளங்கட் கமழு நெய்தலஞ் செறுவின்
வளங்கெழு நன்னா டன்னவென் றோண்மணந்
தழுங்கன் மூதா ரலரெடுத் தரற்ற
நல்காது துறந்த காதல ரென்றுங்
10 கல்பொரூஉ மெலியாப் பாடினோ னடிய
னல்கு வன்சுரைப் பெய்த வல்சிய
னிகந்தன வாயினு மிடம்பார்த்துப் பகைஞ
ரோம்பின ருறையுங் கூழ்கெழு குறும்பிற்
குவையிமில் விடைய வேற்றூ வொய்யுங்

15 கனையிருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
விழவயர்ந் தன்ன கொழும்பஃ றிற்றி
யெழாஅப் பாண னன்னாட் டும்பர்
நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வ
ரெறிபடை கழீஇய சேயரிச் சின்னீ
20 ராறுதுறை யயிர்மணற் படுகரைப் போகிச்
சேய ரென்றலிற் சிறுமை யுற்றவென்
கையறு நெஞ்சத் தெவ்வ நீங்க
வழாஅ முறைதலு முரியம் பராரை
யலங்க லஞ்சினைக் குடம்பை புல்லெனப்
25 புலம்பெயர் மருங்கிற் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகியவர்
செய்வினை மருங்கிற் செலீஇயரென் னுயிரே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

— கல்லாடனார்.

நன்று அல் காலையும் நட்பில் கோடார் சென்று வழிப்படூஉம் திரிபு இல் சூழ்ச்சியில் புல் தலை மடம் பிடி அகவுநர் பெருமகன் அமர் வீசு வண் மகிழ் அஃதை போற்றி காப்புக்கை நிறுத்த பல் வேல் கோசர் இளம் கள் கமழும் நெய்தலஞ்செறுவின் வளம் கெழு நல் நாடு அன்ன என் தோள் மணந்து அழுங்கல் மூதூர் அலர் எடுத்து அரற்ற நல்காது துறந்த காதலர் - கேடுற்ற காலத்தும் நட்பினரிடத்துக் கொண்ட நட்பிற் பிழையாராய், அவர் பாற் சென்று அவர் குறிப்பிலே படுகின்ற திரியாத அறிவினாலே, புல்லிய தலையையுடைய மடப்பிடியைக் கூத்தர் தலைவனுக்கு அமரிடத்துக் கொடுக்கும் வளவிய மதுவுண்டு மகிழ்தலையுடைய அஃதை என்ப வனைப் பாதுகாத்துப் பின்னும் அவற்கு ஏதம் வாராது காவலான விடத்து வைத்து நிறுவிய பல வேற்படைகளையுடைய கோசரது இளங்கள் மணவாநின்ற நெய்தலஞ்செறு வென்னும் வளங்கெழுமிய நல்ல நாடுபோலும் என் தோளை மணந்து, இவ் வாரவாரமுடைய முதிய ஊர் அலரை மிகுத்துக் கூறவும் அருள்செய்யாது துறந்த நம் காதலர் ;

நட்பிற் கோடாராய் வழிப்படூஉம் திரிபில் சூழ்ச்சியிற் கோசர் அந்நைதப் போற்றிக் காப்புக்கை நிறுத்த கோசர் என்றியைக்க.

நெய்தலஞ்செறு வென்பது நெய்தலங்கானல் (புறம். 10 203.) என்பது போல ஓர் ஊர்போலும். நெய்தல்வாயில் அல்லது நெய்வாசல் என்றோரூர் காவிரிப்பூம்பட்டினத்துக் கருகி லுள்ளதென்ப. இந் நெய்தலஞ்செறுவினைத் தலைமையாகக் கொண்ட நாட்டினை செய்தலஞ்செறுவி னன்னாடு என்றார் போலும்.

எழாஅ பாணன் நல் நாட்டு உம்பர் நெறி செல் வம்பலர் கொன்ற தெவ்வர் எறி படை கழீஇய சேய் அரி சில் நீர் அறு துறை அயிர் மணல் படு கரை போகி சேயர் என்றலின் சிறுமை உற்ற என் கை அறு நெஞ்சத்து எவ்வம் நீங்க-போரில் முதுகிட்டார்மேற் போர்க்கெழாத பாணனது நல்ல நாட்டிற்கு அப்பாலுள்ள பாலை நில வழியோடு செல்லும் அன்னியரைக் கொன்ற பகைவர் தாம் எறிந்த படைக்கலங்களைக் கழுவியதனாற் சிவந்த அரித்தொழுகு கின்ற சிலவாகிய நீரும் அற்றுப்போகின்ற துறைக்கண்ணேயுள்ள நுண் மணலையுடைய பெருங்கரையையுந் தாண்டி நெடுந் தூரத்தே யுள்ளாரென்று பலரும் கூறலினாலே நோயுற்றஎன் செயலொழிந்த நெஞ்சத்திடத்துள்ள வருத்தம் நீங்குமாறு ;

அவர் வினை செய் மருங்கின் என் உயிர் செலீஇயர் - அவர் ஆள்வினை செய்யுமிடத்து என் உயிர் செல்வதாக ; சொல்லின்,

என்றும் அழாஅம் உறைதலும் உரியம் - எக்காலத்தும் அழாமல் உறைதலுக்கும் உரியேமாவேம் என்று, தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

என்றும் அழாஅம் உறைதலாவது, இறந்துபடுதல்.

நாடன்ன என் தோள் மணந்து அலர் எடுத்தரற்ற நல்காது துறந்த காதலர் சேயர் என்றலின் என் எவ்வம் நீங்க அவர் வினை செய் மருங்கின் என் உயிர் செலீஇயர் ; செல்லின் என்றும் அழாஅம் உறைதலும் உரியம் என்றியைக்க.

நாடன்ன என்தோள் என்பதற்கு 'ஊரன்ன முலையாகம்' (அகம் 97.) என்புழிப் பொருள் விரித்தாங்கு விரித்துக்கொள்க. மேல் வருவனவற்றிற்கும் இவ்வாறே பொருள் கூறிக்கொள்க.

பராரை அலங்கல் அம் சினை குடம்பை புல் என புலம் பெயர் மருங்கின் புள் எழுந்தாங்கு மெய் இவண் ஒழிய என் உயிர் போகி அவர் வினை செய் மருங்கிற் செலீஇயர் - பருத்த அரையிற் கிளைத் துள்ள ஆடும் இயல்புடைய அழகிய கொம்பிடத்துள்ள கூடு புற்கென்ன வேற்றிடத்தே பெயருங்கூற்றிலேயுள்ள புள் ஆண்டிருந்தும் எழுந்து போயது போல என் உடம்பு இவ்விடத்துத் தனித்து ஒழிய, என் உயிர் சென்று, என் தலைவர் வினைசெய்யு மிடத்துக்குப் போவதாக என்க. குடம்பை, கூட்டிலுள்ள முட்டையுமாம்.

கல் பொரூஉம் மெலியா பாடு இன் நோன் அடியன் வன் சுரை பெய்த அல்கு வல்சியன் இகந்தன ஆயினும் பகைவர் ஓம்பினர் உறையும் சூழ் கெழு குறும்பில் குவை இமில் விடைய வேற்று ஆ இடம் பார்த்து ஓய்யும் பாணன் - கல்லோடு உறழ்ந்து மெலியாத ஒலியினிய வலிய அடியினனும், வலிய மூங்கிற்குழாயிற் பெய்த மிக்க உணவினனும், தன் நாட்டு எல்லையினைக் கடந்தன வாயினும் பகைவரைப் பரிகரித்தனராகிய வீரர் உறையும் உணவுப் பொருள் மிக்க குறும்புகளிலுள்ள திரண்ட இமிலையுடைய விடையோடு பொருந்திய பகைப்புலத்து ஆனிரையை இடனோக்கிக் கவருவானுமாகிய பாணன் என்பான் என்க.

'செருப்பிடைச் சிறுபர' லோசை போல ஓசையுடைய காலன் என்பார், 'பாடின் நோன் அடியன்' என்றார். பரட்டினோ னடி என்னும் பாடத்திற்கு, பரடு பொருந்திய வலிய அடி என்றுரைக்க.

கால் பொரூஉம் என்னும் பாடத்திற்குக் காற்றை ஒக்கும் என்க. 'அகல்சூ லஞ்சுரைப் பெய்த வல்சியர்' என்ற பாடத் திற்கு, சூல் அகல் அம் சுரைப்பெய்த வல்சியர் என்று மாறி, சூலினலகன்ற அழகிய சுரையிலேயிற் பெய்த உணவினர் என்க. அகன்ற குழாயின் கண்ணே சூல்போல நிறையப்பெய்த உணவினர் என்றலுமாம்.

இத்தகைய அடியினரும் வல்சியினரும் ஓம்பினருமாக உறை யும் வீரரது குறும்பில் விடைய வேற்று ஓய்யும் பாணன் என் றுரைக்க.

அல்குலஞ்சுரைப் பெய்த வல்சியர் என்னும் பாடத்திற்கு, மடியிலே பிணித்த அழகிய குழாயிற் பெய்த வல்சியர் என்றுரைக்க.

குறும்பு - சிற்றரண். குறும்புகள் தன் எல்லையை இகந்தனவாயினும், ஆண்டுள்ளார் பகைவரை ஓம்பினரா யுறையினும், அவ் விடத்துள்ள ஆநிரையை நோனடியனும் அல்கு வல்சியனுமாய்ச் சென்று இடம் பார்த்து ஒய்யும் பாணன் என்க.

சுரைப் பெய்த வல்சியரும், பகைவரை ஓம்பினருமான வீரர் உறையும் குறும்பிலும் இடம் பார்த்து ஆ ஒய்யும் பாணன் என்றியைத் தலுமாம். இவ்வுரைக்கு 'அடியர்', 'வல்சியர்' என்பன பாடங்கள்.

'வலிமிகு முன்பிற் பாணன்' என்றும், 'வடாஅது பல்வேற் பாணன் நன் நாடு' என்றும் இந்நூலுள் பாராட்டப்பட் டுள்ளமையால், இவன் சிறந்த வலியும் வேற்படையும் படைத்தோனென் றும், இவன் நாடு தமிழ் நாட்டினுக்கு வட பால் உள்ளதென்றும், நன்மை வாய்ந்ததென்றும் அறியப்படும்.

கழை இரும் சுருணை காழ் கனி நெடுவேல் விழவு அயர்ந்தன்ன கொழு பல திற்றி பாணன் - செறிந்த கரிய வளைந்த பூணிட்ட தண்டினையுடைய நெய்கனிந்த நெடிய வேலுக்கு விழாக் கொண்டா டினாற்போலக் கொழுவிய பலவாகிய இறைச்சியையுடைய பாணன் என்க. கனிகாழ் - முற்றிய காழுமாம்.

சுருளுடைமையிற் பூணைச் சுருணை என்றார். சுருளை என்று பாடங் கோடலுமாம்.

வேல்விழா வென்பது 'தொடை விழா' (அகம். 187.) என்பது போல ஒரு விழவு. அதைக் கொண்டாடும் முறையாவது,

'மங்கல மகளிரொடு மாலைசூட்டி, இன்குரல் விசும்பை யாழெ டுத் தியம்பத், தெண்ணீர்ப் படுவினும் தெருவினுந் திரிந்து, மண் முழு தழுங்கச் செல்'லுமாறு அதனை விடுத்தல். (புறம். 332.)

வேலையும் விழாவயர்ந்தா லன்ன திற்றியையும் உடைய பாணன் நாடு என்றுரைப்பினு மமையும். ஓம்புதல் - பரிகரித்தல். குறும்பில் ஒய்யும் - தன் குறும்பிற்குக் கவர்ந்துகொண்டு வரும் என்றலுமாம்.

இப்பாட்டு, "அவனறி வாற்ற வறியு மாதலின்" என்னுங் கற்பியற் சூத்திரத்து, 'ஆவயின் வரூஉம் பல்வேறுநிலை' என்றார் அந்நிலையினுள் தலைமகன் பிரிந்துழி அவனுடன்போய் மீண்டார் வழிய தருமை கூறக்கேட்டுத் தலைவிகூறிய பகுதியாகக் கொள்ளப் படும்.

பி – ம். 2. திருவில் சூழ்ச்சி. 3—4. மகன், மாவீசு. பொற்றி. 10. 16. றித்தி.

## 114. முல்லை

கேளா யெல்ல தோழி வேலன்
வெறியயர் களத்துச் சிறுபல தாஅய
விரவுவீ யுறைத்த வீர்நறும் புறவி
னுரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயி
5 றரவுநுங்கு மதியி னையென மறையுஞ்
சிறுபுன் மாலையு முள்ளா ரவரென
நப்புலந் துறையு மெவ்வ நீங்க
நூலறி வலவ கடவுமதி யுவக்கா
ணெடுங்கொடி நுடங்கும் வான்றோய் புரிசை
10 யாமங் கொள்பவர் நாட்டிய நளிசுடர்
வானக மீனின் விளங்கித் தோன்று
மருங்கடிக் காப்பி னஞ்சுவரு மூதூர்த்
திருநக ரடங்கிய மாசில் கற்பி
னரிமதர் மழைக்க ணமைபுரை பணைத்தோ
15 ளணங்குசா லரிவையைக் காண்குவம்
பொலம்படைக் கலிமாப் பூண்ட தேரே.

என்பது : வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல் லியது.

எல்ல தோழி கேளாய் வேலன் வெறி அயர் களத்து தாய சிறு பல விரவு வீ உறைத்த ஈர் நறு புறவின் உரவு கதிர் மழுங்கிய கல் சேர் ஞாயிறு அரவு நுங்கு மதியின் ஐயென மறையும் சிறு புன் மாலையும் அவர் உள்ளார் என நம் புலந்து - எல்லா, தோழீ, கேட்

பாயாக! வேலன் வெறியாட்டு அயர்கின்ற களத்திடத்துத் தாவி யுதிர்ந்த சிறிய பலவாகிய கலப்புற்ற பூக்கள் போலச் சொரிந்து கொட்டுண்ட ஈரிய நறிய புறவிலே பரக்கும் கிரணங்கள் மழுக்கமடைந்த அத்தகிரி யடையும் ஞாயிருனது அரவால் விழுங்கப் பட்ட மதிபோலக் கண்டார் வியக்குமாறு மறைகின்ற சிறிய புல்லிய மாலைக் காலத்திலேயும் நம் தலைவர் நம்மை நினையாரோ எனச் சொல்லி நம்மொடு புலந்து;

ஐ - வியப்பு.

திரு நகர் உறையும் அடங்கிய மாசு இல் கற்பின் அரி மதர் மழை கண் அமை புரை பணை தோள் அணங்கு சால் அரிவையை எவ்வம் நீங்க காண்குவம் நூல் அறி வலவ பொலம் படை கலிமா பூண்ட தேர் உவக்காண் மூதூர் கடவுமதி - ஐசுவரியம் மிக்க தனது மாளிகையின்கண்ணே உறைகின்ற அடங்கிய மாசில்லாத கற்பி னையும் செவ்வரிபரந்த மதர்த்த குளிர்ந்த கண்ணினையும் மூங்கிலை ஒத்துப்பருத்த தோளினையுமுடைய அருந்ததியின் சிறப்பெல்லா மமைந்த எம் தலைவியை வருத்த மெல்லாம் நீங்கக் காண்பேம்; அதன்பொருட்டு அசுவஹிருதய நூல் வல்ல பாக! பொன்னலாகிய பல்லணத்தையுடைய மனஞ்செருக்கிய குதிரை பூண்ட தேரை ஊங்கேயுள்ள மூதூர்க்குக் கடவுவாயாக, என்று, வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னன் என்க.

எவ்வம், அரிவையது எவ்வமும் எம் எவ்வமும் ஆம்.

விரவு வீ யுறைத்த புறவின் கதிர் மழுங்கிய ஞாயிறு மதியின் மறையும் மாலையும் அவர் உள்ளார் என நப்புலந்துறையும் அரிவை எவ்வம் நீங்கக் காண்குவம்; கலிமாப் பூண்டதேர் மூதூர் கடவுமதி என்றியைக்க.

நெடு கொடி நுடங்கும் வான் தோய் புரிசை யாமம் கொள்பவர் நாட்டிய நளி சுடர் வானக மீனின் விளங்கி தோன்றும் அரு கடி காப்பின் அஞ்சுவரு மூதூர் - நெடிய கொடி யசையும் வானை யளாவிய மதிலிலே யாமந்தோறும் காவல்முறை கொள்பவர் நாட்டிய ஒளிசெறிந்த விளக்கமானது வானத்திடத்து மீன்போல விளங்கித்தோன்றுநிற்கும் அணுகவரிய சிறந்த காவலமைந்த அச்சம் வருகின்ற முதிய ஊர் என்க.

'தானே சேறலும் தன்னொடு சிவணிய, ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே' என்பவாகலின், இப்பாட்டினுள், கொடி நுடங்கும் புரிசை அருங்கடிக்காப்பின் அஞ்சுவரு மூதூர்க்கண் தன் தலைவி உறைந்தா ளென்றலின், தலைமகனது ஊரும் அதுவேயாகி, அவன் அரச வருணத்தானுயினவாறு உய்த்துணரப்படும்.

வேலன் வெறியயர் களத்துத்தாஅய விரவு வீப்போல உறைத்த புறவு என்க. எனச் சொல்லி என்று ஒரு சொல் வருவித் துரைக்கப்பட்டது.

'கேளாயெல்ல' என்பது முதலாக 'உள்ளாரவரென' வென்பது ஈருக நின்றசொற்கள் தலைவி கூற்று. அதனைத் தலைமகன் கொண்டு கூறினுன் என்க.

அணங்கு, தெய்வமுமாம். கணவற்கு வேண்டியன அளித்தலின் தெய்வமாயினுள். அசுவஹிருதயமாவது, குதிரையின் மனத்தை அறிந்து அதனைத் தன் குறிப்பின்படி இயங்குமாறு செய்யவல்ல மந்திரம். கடி, ஈண்டுச் சிறப்பினை யுணர்த்திற்று. உவக்காண் - ஊங்கே. ஒட்டி நின்ற இடைச் சொல். (குறள். 1185.)
பி - ம். 2. களந்தோ றுறுபல. 11. வானமீனின். (வருகின்ற.)

## 115. பாலை

அழியா விழவி னஞ்சுவரு மூதூர்ப்
பழியில ராயினும் பலர்புறங் கூறு
மம்ப லொழுக்கமு மாகிய வெஞ்சொற்
சேரியம் பெண்டி ரௌ்ளினு மௌ்ளுக
5 நுண்பூ ணெருமை குடநாட் டன்னவெ
னாய்நலந் தொலையினுந் தொலைக வென்று
நோயில ராகநங் காதலர் வாய்வா
ளெவ்வி வீழ்ந்த செருவிற் பாணர்
கைதொழு மரபின்முன் பரித்திடூஉப் பழிச்சிய
10 வள்ளுயிர் வணர்மருப் பன்ன வொள்ளிணர்ச்
சுடர்ப்பூங் கொன்றை யூழுறு விளைநெற்

றறைமிசைத் தாஅ மத்த நீளிடைப்
பிறைமருள் வான்கோட் டண்ணல் யானைச்
சினமிகு முன்பின் வாமா னஞ்சி
15 யினங்கொண் டொளிக்கு மஞ்சுவரு கவலை
நன்ன ராய்கவின் றொலையச் சேய்நாட்டு
நந்நீத் துறையும் பொருட்பிணிக்
கூடா மையி னீடி யோரே.

என்பது: பிரிவிடை வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—மாமூலனார்.

அழியா விழவின் அஞ்சுவரு மூதூர் பழி இலராயினும் பலர் புறங்கூறும் அம்பல் ஒழுக்கமும் ஆகிய வெம் சொல் சேரி பெண்டிர் எள்ளினும் எள்ளுக.—அழியாத விழவினையுடையதும் பகைவர்க்கு அச்சம் விளைப்பதுமான இம் மூதூரின்கண்ணுள்ளார் பழியற்றவராயினும் அவரெல்லோரையும் புறங்கூறுகின்ற அம்பல் ஒழுக்கமுடைமையோடு வெஞ்சொல்லையுஞ் சொல்லும் சேரிப் பெண்டிர் என்னை எள்ளினும் எள்ளுக ; அம், சாரியை.

நுண் பூண் எருமை குடநாடு அன்ன என் ஆய் நலம் தொலையினும் தொலைக - நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆபரணங்களையுடைய எருமை என்பானது குடநாட்டினைப் போலும் என்னுடைய ஆராய்ந்த நலன் தொலையினும் தொலைக ;

நன்னர் ஆய் கவின் தொலைய சேய் நாட்டு நம் நீத்து உறையும் காதலர் பொருட்பிணி கூடாமையின் நீடியோர் என்றும் நோயிலராக - நன்மை வாய்ந்த ஆய்ந்த என் அழகு கெடுமாறு சேய்மைக்கணுள்ள நாட்டிலே சென்று நம்மை நீத்து உறையும் நம் காதலர் தமக்குப் பொருட்கூட்டம் கூடாமையினாலே குறித்த காலத்து மீளாது நீட்டித்தாரேனும், என்றும் நோயிலராகுக, என்று பிரிவிடை வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

பலர் - எல்லாரும் ; பலர் புகழ் ஞாயிறு என்புழிப் போல. பொருட் பிணி - பொருளைப் பிணித்தல் ; கூட்டுதல்.

செருவில் வீழ்ந்த வாய் வாள் எவ்வி முன் பாணர் பரித்து இடூஉ கைதொழுமரபின் பழிச்சிய வள் உயிர் வணர் மருப்பு அன்ன ஒள் இணர் சுடர் பூ கொன்றை ஊழ் உறு விளை நெற்று அறை மிசை தாஅம் அத்தம் நீள்இடை - செருவிடை வீழ்ந்த தப்பாத வாட்படையை உடைய எவ்வியென்பானுக்கெதிரில் பாணர் முதற்கண் ஒடித்துப்போகட்டுப் பின்பு கையாற் றொழும் மரபினோடு பராவிய வளவிய ஒலியையுடைய வளைந்த யாழின் மருப்புப்போன்ற ஒள்ளிய இணரையும் விளக்கம்போலும் பூவையுமுடைய கொன்றையின் செவ்வியழிந்து முற்றிய நெற்றுக் கற்பாறை மிசையே தாவி யுதிரும் சுரத்தின் நீண்ட வழியிலேயுள்ள என்க.

வாய் வாள் எவ்வி வீழ்ந்த செருவில் என்றாரேனும், செருவில் வீழ்ந்த வாய் வாள் எவ்வி என்பது கருத்தாகக் கொள்க.

எவ்வி வீழ்ந்த செருவில் பாணர் முன் பரித்திடூஉ கைதொழு மரபின் பழிச்சிய மருப்பு என்றுகொண்டு எவ்விபட்ட செருவிலே பாணர் துயரமிகுதியால் முதற்கண் முறித்துப் போகட்டுப்பின்னர்க் கழிவிரக்கங்கொண்டு கையாற்றொழும் மரபினோடு பராவிய மருப்பு என்றலுமாம்.

பாணர் யாழ்மருப்பினை முதற்கண் முறித்தது, எவ்வியின் சாக் காட்டிற்குப்பிறகு தாம் யாழினாற் பயன்கோட லரிதென்று அவர் கையறுதலின். பின்னர் அவர் பராவியது, பண்டு அவ்யாழ் தமக்கு உணவிட்டுக்காத்த நன்றிகருதியாம்.

பிறை மருள் வால் கோட்டு அண்ணல் யானை சினம் மிகு முன்பின் வாமான் அஞ்சி இனம் கொண்டு ஒளிக்கும் அஞ்சுவரு கவலை சேய்நாடு - பிறையை ஒக்கும் வெளிய கோட்டையும் தலைமையையுமுடைய யானையையும், சினம் மிக்க வலியையும், தாவிச் செல்லுதலையுடைய குதிரையையுமுடைய அஞ்சி என்பான் தான் வென்று கொண்ட ஆன் இனத்தைக் கூட்டிக்கொண்டு ஒளித்து வைக்கும் அச்சம் வருகின்ற கவர்த்த வழியையுடைய சேய் நாட்டிலே என்க.

"ஒருவன் மேற்சென்றுழி ஒருவன் எதிர் செல்லாது தன் மதிற் புறத்து வருந்துணையும் இருப்பின், அஃது உழிஞையினடங்

கும். அது சேரமான் செல்வுழித் தகடூரிடை அதிகமான் இருந்த தாம்" என்று கூறிய நச்சினார்க்கினியர் வாக்கியமும், 'மடவர் மகிழ் துணை நெடுமான் அஞ்சி, இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத், தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன், கான்றுபடு கனை யெரிபோலத், தோன்றவும் வல்லன்றான் தோன்றுங் காலே' என்ற 315 ஆம் புறப்பாட்டுச்செய்தியும் இவ்வஞ்சி சேர்த்தவிடம் காணு மளவும் வெளிப்படாதிருந்து, அது கண்டவுடன் பகைவரை அடும் இயல்பினன் என்பதனை ஒருவாறு புலப்படுத்தும்.

'வயமான் அஞ்சி என்ற பாடத்திற்கும் கீழ்க்கூறிய பொருளே கொள்ளலாகும். வயமான் - குதிரை; "பணைநிலை முனைஇய வய மான் புணர்ந்து திண்ணிதின் மாண்டன்று தேர்" (ஐங். 449.) என் புழியுங்காண்க.

இனி, 'யானை, சினமிகு முன்பின் வயமான் அஞ்சி, இனங் கொண்டு ஒளிக்கும்' என்பது பாடமாயின், யானையானது சிங் கத்தை அஞ்சித் தன் இனத்தைக்கொண்டு ஒளிக்கும் என்க.

இவ்வுரைக்குச் சிங்கத்தின் அச்சமொழிய யானையானது தன் இனத்தைக் கூட்டிக்கொண்டு சென்று காத்தாற்போல, அன்னையது கொடுஞ்சொல்லும் சேரிப்பெண்டிரது அம்பன்மொழியும் ஒழிய எம்மைத் தலைவர் உடன்கொண்டு சென்று காத்தற்குரியார் என் பது இறைச்சியிற் பொருளாகக் கொள்க.

அம்பல் ஒழுக்கச் சேரிப் பெண்டிர் எள்ளினும் எள்ளுக, என் நலம் தொலையினும் தொலைக. கொன்றை நெற்றுத் தாஅம் அத்த நீளிடையிலேயுள்ள அஞ்சுவரு கவலையையுடைய சேய்நாட்டின்கண் பொருட்பிணிக் கூடாமையின் நீடியோராய் நம் நீத்து உறையும் காதலர் என்றும் நோயிலராக என்றாளென்க.

"மங்கல மொழியும் வைஇய மொழியும்" என்னுஞ் சூத்தி ரத்து, "நோயில ராகநங் காதலர்" என்பதனைக் காட்டி, இது, "நம்மை அறனன்றித் துறத்தலின் தீங்கு வருமென் றஞ்சி வாழ்த் தியது ; நம் பொருட்டுத் தீங்கு வருமென்று நினைத்தலின் வழுவா யமைந்தது" என்றார் நச். (தொல். பொருள். 244.)

## 116. மருதம்

எரியகைந் தன்ன தாமரை யிடையிடை
யரிந்துகால் குவித்த செங்நெல் வினைஞர்
கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறி
ஞய்கரும் படுக்கும் பாய்புன லூர
5 பெரிய நாணிலை மன்ற பொரியெனப்
புன்கவி ழகன்றுறைப் பொலிய வொண்ணுத
னறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தன்
மாழை நோக்கிற் காழியல் வனமுலை
யெஃகுடை யெழினலத் தொருத்தியொடு நெருநை
10 வைகுபுன லயர்ந்தனை யென்ப வதுவே
பொய்புறம் பொதிந்தியாங் கரப்பவுங் கையிகந்
தலரா கின்றாற் றனே மலர்தார்
மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவிற் கூடற் பறந்தலை
15 யுடனியைந் தெழுந்த விருபெரு வேந்தர்
கடன்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி
யிரங்கிசை முரச மொழியப் பரந்தவ
ரோடுபுறங் கண்ட ஞான்றை
யாடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே.

என்பது : தோழி தலைமகனை வாயின் மறுத்தது.

—பரணர்.

எரி அகைந்தன்ன தாமரை இடை இடை செங்நெல் கால் அரிந்து குவித்த வினைஞர் கள் கொண்டு மறுகும் சாகாடு அளறு உறின் ஆய் கரும்பு அடுக்கும் பாய் புனல் ஊர நீயே பெரிய நாண் இல மன்ற - தீயானது கப்புவிட்டாலொக்கும் தாமரையின் இடை இடையே செங்நெற்றாளை அரிந்து போகட்டுக்குவித்த நெல் விளைக்கும் உழுநர் கள்ளைக்கொண்டு போகும் வண்டி சேற்றிலே புதையுமானால் அதன் ஆழ்ச்சியைப் பரிகரித்தற்கு ஆராய்ந்தெடுத்த

கரும்பினை அவ்வண்டியின் காலின் கீழே அடிக்காறிற்கும் பாயும் புனலையுடைய ஊரனே! நீ மிகவும் தெளிவாக நாணில்லாதவனை யாயினும்; ஆய் கரும்பு—நுண்ணிய கரும்புமாம்.

பொரி என புன்கு அவிழ் அகல் துறை பொலிய ஒள் நுதல் நறு மலர் காண்வரும் குறு பல கூந்தல் மாழை நோக்கின் காழ் இயல் வனம் முலை எஃகு உடை எழில் நலத்து ஒருத்தியொடு நெருநை வைகுபுனல் அயர்ந்தனை என்ப - நெற்பொரி போலும் புன்கு மலர்கின்ற அகன்ற யாற்றின் துறை பொலிய ஒள்ளிய நுதலையும் நறிய மலர் வேய்ந்த காண்டற்கினிய குறிய பலவாகிய கூந்தலையும், செருக்கிய நோக்கையும், முத்துவடம் அசையும் அழகிய முலையையும் கூரிய எழுச்சி யழகையுமுடைய ஒரு பரத்தையொடு இடையறாது ஒழுகும் புனலிலே விளையாடினாய் என்றுகின்றார்கள்;

எழில் நலம் - யௌவன போகமுமாம். எஃகுடை மாழை நோக்கென் றியைத்தலுமாம். ஈண்டெஃகு, வேல்.

என் நலத்து ஒருத்தியொடு என்னும் பாடத்திற்கு என் போலும் நலத்தினையுடைய ஒருத்தியொடு என்க. இஃது உவமை கருதாது; வன்மையுரை தோன்ற நின்றது. என்னைப் போலும் பொதுமகள் ஒருத்தி என அவளை இழித்துக் கூறியவாறுமாம்.

அது பொய் புறம் பொதிந்து யாம் கரப்பவும் கை இகந்து - அதைப் பொய்யெனக்கூறிப் புறத்தே மூடி யாம் மறைக்கவும் எம் செயலைக் கடந்து;

மலர் தார் மை அணி யானை மறம் போர் செழியன் பொய்யா விழவின் கூடல் பறந்தலை உடன் இயைந்து எழுந்த இரு பெரு வேந்தர் கடல் மருள் பெரு படை கலங்க தாக்கி இரங்கு இசை முரசம் ஒழிய பரந்து அவர் ஓடு புறம் கண்ட ஞான்றை ஆடு கொள் வியல் களத்து ஆர்ப்பினும் பெரிது அலர் தானே ஆகின்று - விரிந்த பூமாலையையும் அஞ்சனமணிந்த யானையையும் வலிய போரையும் உடைய நெடுஞ்செழியன் என்பான் தவிராத விழாவினையுடைய கூடற் பறந்தலையிலே தன் மீது சேர்ந்தியைந்து போர்க்கெழுந்த சேர பாண்டியர் என்னும் இருபெரு வேந்தரது கடலை ஒக்கும் பெரும் படை கலங்குமாறு தாக்கி, மிக்க ஒலியையுடைய அவரது வீர முரசம் அவரிடத்தினின்று மொழியுமாறு நாற்புறமும் அவர்

சிதறி ஓடின புறத்தைக் கண்டவன்று வெற்றியைக் கொண்ட பெரிய களத்துள்ள வீரர் ஆர்த்த ஆர்ப்பினுங்காட்டிற் பெரிதாக அலர் தானகவே ஆயிற்று, என்று, தோழி தலைமகனை வாயின் மறுத்தாள் என்க.

இரங்கிசை, ஒருபொருட்பன்மொழி. களம், ஆகுபெயரால் அதன்கண்ணுள்ள வீரர்க்காயிற்று.

மாறை - செருக்கு ; காழ் - முத்து வடம். எஃகு - கூர்மை. எழிலாவது, வளர்ந்தமைந்தபருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்று காட்டுதல். வைகு புனல் - இடையறுத ஒழுக்குடைய புனல் ; வைகார்ப்பு என்பது போல. அஞ்சனத்தை யானையின் மத்தகத்தில் அணிதல் மரபாதலின், 'மையணி யானை' எனப்பட்டது. 'மையணி மதயானை மத்தக வகலல்குல்' என்றார் சிந்தாமணியினும். (2434.)

நெல்வினைஞர் தம் அறமான நெல்லரிதலைவிட்டுச் சேற்றிலழுந்திய கள் நிறைந்த சாகாட்டின் எவ்வத்தினைத் தீர்த்தற்குச் சென்று அதன் காலில் ஆய்ந்த கரும்பினை அடுக்கிச் சிதைத்தாற்போல நீயும் நின் அறமான இல்லறத்தி லொழுகுதலைக் கைவிட்டு இழிந்த குண நிறைந்த பரத்தையது காமநோயினைத் தீர்த்தற்குச் சென்று அவளுடன் புனலாடி அவளுக்கு இழிந்தாளாகத் தலைவியைச்செய்து அத் தலைவியது சிறந்த நலனைச் சிதைத்து ஒழுகுவான் ஒருவனல்லையோ என்று தோழி வாயின் மறுத்தாளாகக்கொள்க.

“ வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல், தாவின்று உரிய தத்தம் கூற்றே” என்ற சூத்திரத்து, “எரியகைந் தன்ன.......... ...ஆர்ப்பினும் பெரிதே” என்பது முழுவதையும் காட்டி, “இதனுள் 'நாணிலை மன்ற' எனத் தோழி கூறி 'அலராகின்றால்' என வெளிப் படக் கிளத்தலின் வழுவா யமைந்தது என்றும், “கிழவோன் விளை யாட் டாங்கு மற்றே” என்ற சூத்திரத்து, “எஃகுடை......றனே” எனத் தலைவி பிறர் அலர் கூறியவழிக் காமஞ் சிறந்து புலந்தவாறு காண்க” என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 241,164.)

பி - ம். 2. வினைஞர். 7. கூழை. 8. காழின். 9. நெருநல். 11. யான் கரப்பவுங் கைகடந்.

## 117. பாலை

மௌவலொடு மலர்ந்த மாக்குர னொச்சியு
மவ்வரி யல்கு லாயமு முள்ளா
ளேதிலன் பொய்ம்மொழி நம்பி யேர்வினை
வளங்கெழு திருநகர் புலம்பப் போகி
5 வெருவரு கவலை யாங்க ணருள்வரக்
கருங்கா லோமை யேறி வெண்டலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கட்
பொலந்தொடி தெளிர்ப்ப வீசிச் சேவடிச்
சிலம்புநக வியலிச் சென்றவென் மகட்கே
10 சாந்துளர் வணர்குரல் வாரி வகைவகுத்
தியான்போது துணைப்பத் தகர மண்ணு
டன்னோ ரன்ன தகைவெங் காதலன்
வெறிகமழ் பன்மலர் புனையப் பின்னுவிடச்
சிறுபுறம் புதைய நெறிபுதாழ்ந் தனகொ
15 னெடுங்கான் மாஅத் தூழுறு வெண்பழங்
கொடுந்தாள் யாமை பார்ப்பொடு கவரும்
பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர்
வாணன் சிறுகுடி வடாஅது
தீநீர்க் கான்யாற் றவிரறல் போன்றே.

என்பது : மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

மௌவலொடு மலர்ந்த மா குரல் நொச்சியும் அ வரி அல்குல் ஆயமும் உள்ளாள் சாந்து உளர் வணர் குரல் வாரி வகை வகுத்து யான் போது துணைப்ப தகரம் மண்ணுள் ஏதிலன் பொய்ம்மொழி நம்பி ஏர் வினை வளம் கெழு திரு நகர் புலம்ப போகி - மௌவற்பூவோடு மலர்ந்த கரிய கொத்தினையுடைய நொச்சியையும் அழகிய வரிபொருந்திய அல்குலையுடைய ஆயத்தையும் நினையாளாகி, சாந்தொடு சேர்த்துக் கோதும் நெறித்த மயிர்க்கற்றையை வாரி வகை வகையாக வகுத்து யான் போதுபெய்யவும் அதற்கு

உடன்பட்டுத் தகரத்தினைப் பூசாளாகி, அன்னியனொருவனுடைய பொய்ம்மொழியை விரும்பி, அழகிய சித்திர முதலிய தொழி லமைந்த வளங்கெழுமிய தன் செல்வமிக்க மாளிகை தனித் தொழியத் துறந்துபோய் ;

வெருவரு கவலை ஆங்கண் வெள் தலை பருந்து கரு கால் ஓமை ஏறி அருள்வர பெடை பயிரும் பாழ் நாட்டு ஆங்கண் பொலம் தொடி தெளிர்ப்ப வீசி சே அடி சிலம்பு நக இயலி சென்ற என் மகட்கு - வெருவத்தக்க கவலையிடத்தே வெண்டலைப் பருந்து கரிய காலையுடைய ஓமை மீதேறியிருந்து தன்பெடைக்கு அருள் வரும் வண்ணம் அதனை யழையாநிற்கும் பாழான நாட்டிடத்தே தன் பொற்றொடி ஒலிப்ப வீசியும் சேவடியிலுள்ள சிலம்பு விளங்க உலாவியும் சென்ற என் மகளுக்கு ;

தன் ஓர் அன்ன தகை வெம் காதலன் பின்னுவிட—தன்னையே ஒத்த தகைமையையும் விருப்பத்தையுமுடைய காதலன் பின்னு தலைச்செய்ய ;

தன்னொடு ஒப்பாவது : பிறப்பு, ஒழுக்கம், ஆண்மை, பிராயம், உருவு, அன்பு, நிறை, அருள், அறிவு, செல்வம் என்ற பத்து வகையாலும் ஒப்பு என்க.

வாணன் சிறுகுடி வடாஅது தீம் நீர் கான்யாற்று அறல் போன்று வணர் குரல் தாழ்ந்தன கொல் - வாணன் சிறுகுடிக்கு வடபாலுள்ளதான தீவிய நீரையுடைய கான்யாற்று அறல்போன்று நெறித்த மயிர்க்கற்றையானவை தாழ்ந்தனபோலும் ! என்று, மகட் போக்கிய செவிலித்தாய் சொன்னாள் என்க.

நெடு கால் மாஅத்து ஊழ் உறு வெண் பழம் கொடு தாள் யாமை பார்ப்பொடு கவரும் பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர் வாணன் சிறுகுடி வடாஅது கான்யாற்று அறல் போன்று சிறுபுறம் புதைய நெறிபு தாழ்ந்தன கொல் - நெடிய காலையுடைய மாமரத்தி னின்றும் செவ்வியழிந்து உதிர்ந்த சுவையற்ற பழத்தை வளைந்த காலையுடைய யாமையானது தன் பார்ப்பொடு கவராநிற்கும் பொய்கை சூழ்ந்த பொய்யாத புதுவருவாயையுடைய வாணன் என்பானுடைய சிறுகுடி என்னு மூருக்கு வடபாலுளதாகிய தீவிய நீரையுடைய கான்யாற்றிடத்து அவிரும் அறல்போன்று புறங்

கழுத்து மறைய வணர்குரல் நெறிப்புப்பட்டுத் தாழ்ந்தனவோ என்றாள் என்க.

வணர் குரல் - நெறித்த மயிர்க்கற்றை. உளர்தல் - கோதுதல். சிறுபுறம் - புறங்கழுத்து. ஊழ்த்தல் - செவ்வி யழிதல். இஃது ஊழ் என முதனிலை மாத்திரையாய் நின்றது.

மௌவல் - மல்லிகை விசேடம்; தெளிர்த்தல் - ஒலித்தல்; வீங்குதோள், தெளிர்த்த வொள்வளை ' என்றார் சிந்தாமணியினும் (1330). அருள்வர - கேட்டார்க்கெல்லாம் அருள்வர என்றலுமாம்.

தான் வளர்த்த மௌவல் நொச்சிகளையும் ஆயத்தையும் உள்ளாளாய் யான் குரல் போது துணைப்பத் தகரம் மண்ணாளாய் ஏதிலன் மொழி நம்பித் திருநகர் புலம்பப்போகிப் பாழ்நாட்டாங்கண் இயலிச் சென்ற என் மகட்குத் தன் காதலன் பின்னுவிட வணர் குரல் கான் யாற்று அறல்போன்று நெறிபு தாழ்ந்தனகொல் என்றியைக்க.

மாஅத்துப் பழத்தினை யாமை பார்ப்பொடு கவருகின்ற பொய்கை சூழ்ந்த வாணன் சிறுகுடி வடாஅது கான்யாறு என்க. அவ்யாற்றின் அறல்போன்று வணர் குரல் நெறிப்புப்பட்டுத் தாழ்ந்தனகொல் என்க.

முற்றாத பருவத்து வெளுத்த மாங்கனியை யாமை கவர்ந் தேகித் தன் பார்ப்பினொடு உண்டாற்போல, முறுக்குறையும் பருவத்தளல்லாத பேதையான என் மகளைத் தலைமகன் கவர்ந்து சென்று இல்லறம் நிகழ்த்தித் தன் சுற்றத்தினோடு இல்லறப்பயனை எவ்வாறு நுகர்வான்கொல் என்று, செவிலி தன் மகளது பருவம் நினைந்து கவன்றாளாம்.

பருந்து தன்பால் அருள்வரும் வண்ணம் தன் பெடையைப் பயிர்கின்ற குரலைத் தலைமகன் கேட்பானாதலால் என் புலம்பலையும் துயரத்தையும் கருதி, அருள்பிறந்து அவன் என்மகளை என்மனை யுய்க்கவும் கூடும் என்று அவள் தேறினளுமாம்.

" தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக், கூறுதற் குரியர் கொள்வழி யான " என்ற விதிபற்றிச் செவிலி இறைச்சி கூறினள் என்க.

பி - ம். 10. வண்குரல். 18. ப்பண்ணன்.

## 118. குறிஞ்சி

கறங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅற்
றேங்கம ழிணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ
மறுகிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்
5 தியன்முரு கொப்பினை வயநாய் பிற்படப்
பகல்வரிற் கவ்வை யஞ்சுது மிகல்கொள
விரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்
பெருங்கை யானைக் கோட்பிழைத் திரீஇய
வடுபுலி வழங்கு மாறிரு ணடுநாட்
10 டனியை வருத லதனினு மஞ்சுது
மென்னா குவள்கொ றானே பன்னாட்
புணர்குறி செய்த புலர்குர லேனற்
கிளிகடி பாடலு மொழிந்தன
ளளிய டாணின் னளியல திலளே.

என்பது : செறிப்பறிவுறீஇ யிரவும்பகலும் வாரலென்று வரைவு கடாஅயது.

— கபிலர்.

கறங்கு வெள் அருவி பிறங்கும் மலை கவாஅன் தேம் கமழ் இணர வேங்கை சூடி பெண்டிரொடு விரைஇ மறுகில் தொண்டகப் பறை சீர் தூங்கும் சிறுகுடி பாக்கத்து இயல் முருகு ஒப்பினை வய நாய் பிற்பட பகல் வரில் கௌவை அஞ்சுதும் - ஒலிக்கும் வெளிய அருவி விளங்கும் ஓங்கிய மலைச்சாரலிலே தேன்கமழ்கின்ற கொத்தையுடைய வேங்கையைச் சூடிப் பெண்டிரொடு கலந்து ஆடவர் வீதியிற் றொண்டகப் பறையின் தாளத்தே ஆடுகின்ற சிறுகுடிப் பாக்கத்தின்கண்ணே இயங்காநிற்கும் ஒரு முருகனை ஒப்பையாய் வலிய நின் நாய் பின்னேவரப் பகற்போதில் நீ வருவையாயினால் அலருக்கு அஞ்சாநின்றேம்,

தொண்டகப் பறை யாவது குறிஞ்சிநில மாக்கட்குரிய ஒரு சிறுபறை. ஆடவர் வேங்கை சூடிப் பெண்டிரொடு விரைஇத் தொண்டகப் பறைச் சீர்க்குத் தூங்கும் சிறுகுடிப் பாக்கம் என்க.

கயவாய் பெரு கை யானை கோள் பிழைத்து இரு பிடி கன்றொடு விரைஇய இகல் கொள இரீஇய அடு புலி வழங்கும் ஆறு இருள் நடு நாள் தனியை வருதல் அதனினும் அஞ்சுதும் - பெரிய வாயையும் பெரிய கையையுமுடைய யானையைக் கொள்ளுதலிற் பிழைத்து அவ்யானை கரிய பிடியோடும் கன்றோடும் கலந்தனவாய் மாறுபாடு கொண்டு ஓரிடத்தே மறைந்து இருக்கும்படிசெய்த அடுகின்ற புலி சஞ்சரிக்கும் வழியில் இருளையுடைய பாதி இராத்திரியில் தனியனாகி வருதலை அவ்வலரினுங் காட்டில் மிகுதியாக அஞ்சாநின்றேம்.

சிங்கம் புலி முதலியவற்றிற்கு அஞ்சி யானைகள் இரவில் இனத்தோடு குழுமி இருக்குமென்பதனை இந்நூல் 78, 115 முதலிய பாடல்களாலும், 'களிறு வெரீஇ அரியாளி குழீஇ வழங் காக் கழிகட்டிரவு' என்ற திருக்கோவையார்(255)ச் செய்யுளா னும் அறிக.

"யானைக் கோள்பிழைத்து இரீஇய அடுபுலி வழங்கும் ஆறு இருள் நடுநாள் தனியை வருதல்" என்றது பொழுதும் ஆறும் வழு வுதலிற் குற்றங்காட்டியது.

பல நாள் புணர் குறி செய்த புலர் குரல் ஏனல் கிளி கடி பாட லும் ஒழிந்தனள் என் ஆகுவள் கொல் அளியள் நின் அளி அலது இலள் - பலநாளும் புணர்தற்குக் குறியாகச் செய்த முற்றிய கதிரையுடைய ஏனலைக் கவரவரும் கிளியை ஓட்டும் பாடலைப் பாடுதலும் ஒழிந்தனள், என் ஆகுவளோ என் தோழி ? இரங்கத் தக்காளாகிய அவள் நினது அருளையன்றிப் பிறிதொன்றும் இல ளாயினள், என்று செறிப்பு அறிவுறீஇ இரவும் பகலும் வாரலென்று தோழி வரைவு கடாஅயினள் என்க.

ஏனல் முற்றித் தினைப்புனம் அறுத்துத் தலைவி இற்செறிப் புண்டாளாதலால், இரவுக் குறியிடத்து வருதலொழிந்தனளேயன்

றிப் பகற்புணர்ச்சிக்குச் செய்த குறியாகிய கிளி கடி பாடலும் ஒழிந் தனள் என்க.

பாக்கத்து முருகு ஒப்பினை பகல்வரிற் கௌவை யஞ்சுதும், புலிவழங்கும் ஆறு இருள் நடுநாள் வருதல் அதனினும் அஞ்சுதும்; பன்னாள் புணர்குறி செய்த ஏனற் கிளிகடி பாடலும் ஒழிந்தனள்; என்னுகுவள்கொல்லோ அளியள்தான்! நின் அளியலதிலள் என்று கூட்டுக.

இகல் முருகு ஒப்பினை என்னும் பாடத்திற்கு வலிபடைத்த முருகனை ஒப்பையாய் என்றும், அவுணரொடு மாறுபாடு கொண்ட முருகனை ஒப்பையாய் என்றும் பொருள் கூறுக.

பெருமையும் உரனுமுடைய ஆடவர் மகளிரொடு கூடித் தமக்கேலாத கூத்தாகிய தொண்டகப்பறைச சீர்க்குத் தூங்கினாற் போலப் பொருவிறந்த நீயும் மடவேமாகிய எம்மொடு இவ் விழிந்த களவொழுக்கத்தை இவ்வாறு நீட்டித்தொழுகற்பாலை யல்லைகாண் என்று தோழி கழறி வரைவுகடாயவாறுக்குக.

இது தலைமகனை நன்குமதியாமையின் வழுவேனும், அன்பு மிகுதியாற் கூறலின் அமைந்தது.

அடுபுலியேயாயினும் யானையைக் கொள்ளும் முறையிற் பிழைத்து அதனை இரீஇயினாற் போல, நீ அறிவாற்றலுடையையே யாயினும், வரைந்து கொள்ளும் முறையிற் பிழைத்தமையின் தலைவியை இற்செறிப்புண்ணச் செய்தனை என்று உள்ளுறை யுவமங் கூறினளுமாம்.

"பொழுதும் ஆறும் காப்பும்" என்ற சூத்திரத்து, 'கிழவோன் தன்னை வாரல் என்றலும்" என்னும் பகுதியுள், "பகல்வரிற் கௌவை யஞ்சுதும்" என்பது பகல்வாரல் என்றது என்பர் நச். (தொல். பொருள். 210.)

இப் பாட்டினை இத்துறைக்கே கொள்வர் நக்கீரர். (இறை. களவி. 30.)

## 119. பாலை

நுதலுந் தோளுந் திதலை யல்குலும்
வண்ணமும் வனப்பும் வரியும் வாட

வருந்துவ ளிவளெனத் திருந்துபு நோக்கி
வரைவுநன் றென்னா தகலினு மவர்வறி
5 தாறுசென் மாக்க ளறுத்த பிரண்டை
யேறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப
நெறியயற் றிரங்கு மத்தம் வெறிகொள
வுமண்சாத் திறந்த வொழிக லடுப்பி
ஞென்சிலை மழவ ரூன்புழுக் கயருஞ்
10 சுரன்வழக் கற்ற தென்னா தூஞ்சிறந்து
நெய்த லுருவி னைதிலங் ககலிலைத்
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
மடையமை திண்சுரை மாக்காழ் வேலொடு
தணியம ரழுவந் தம்மொடு துணைப்பத்
15 துணிகுவர் கொல்லோ தாமே துணிகொள
மறப்புலி யுழந்த வசிபடு சென்னி
யுறுநோய் வருத்தமொ டுணீஇய மண்டிப்
படிமுழ மூன்றிய நெடுநல் யானை
கைதோய்த் துயிர்க்கும் வறுஞ்சுனை
20 மைதோய் சிமைய மலைமுத லாறே.

என்பது : செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொற்றது. தோழி தலைமகட்குச் சொற்றதூஉமாம்.

— குடவாயிற் கீரத்தனார்.

அவர் வரைவு நன்று என்னாது அகலினும் - நம் தலைவர் வரைதல் நன்று என்னாமல் அகல்வராயினும் ;

இவள் நுதலும் தோளும் திதலை அல்குலும் வண்ணமும் வனப்பும் வரியும் வாட வருந்துவள் என திருந்துபு நோக்கி மை தோய் சிமைய மலை முதல் ஆறு தாமே தணி அமர் அழுவம் தம் மொடு துணைப்ப துணிகுவர் கொல்லோ - இத்தலைவி தனது நுதலும் தோளும் திதலைபொருந்திய அல்குலும் இயற்கையழகும் செயற்கை யழகும் செவ்வரியும் வாட வருந்துவளே என்று திருத்தமாக ஆராய்ந்து, மேகந் தவழ்கின்ற சிகரத்தையுடைய மலையிடத்து வழி

யிலே தாமே சென்று பகை தணிவிக்கும் போர்க்களப் பரப்பிலே தம்மொடு யாம் துணையாகச் சேர்ந்துபோகும்படி நிச்சயிப்பரோ? என்று, செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

அவர் வரைவு நன்று என்னாது அகலினும் தோள் முதலியன வாட இவள் வருந்துவள் என நோக்கி மலைமுதலாறு தம்மொடு துணைப்பத் துணிகுவர் கொல்லோ என்றியைக்க.

நுதல் முதலியன வாட இவள் வருந்துவள் என நோக்கியும் வரைவு நன்று என்னாது அவர் அகல்வாராயினும் மலைமுதலாறு தம்மொடு துணைப்பத் துணிகுவர் கொல்லோ என்றியைத்தலுமாம்.

இது பகைதணி வினையின்கண் அரசன் பிரிந்த பிரிவு; என்னை? உரஞ் சிறந்து வேலொடு தணி அமர் அழுவம் சென்றான் என்றாராகலின்.

'தாமே' என்புழி நின்ற ஏகாரம் தம்மையொழியப் பிறராற் றணிவித்தலது அருமை தோற்றி நின்றதாகலின், பிரிநிலைக்கண் வந்தது. தாமே துணிகுவர் கொல்லோ என்றியைத்துப் பிறர் கூறாது தாமாகவே துணிகுவரோ என்றலுமாம். தாமே திருந்துபு நோக்கித் துணைப்பத் துணிகுவர் கொல்லோ என்று இயைப்பினு மமையும்.

ஆறு செல் மாக்கள் அறுத்த பிரண்டை ஏறு பெறு பாம்பின் பை துணி கடுப்ப நெறி அயல் வறிது திரங்கும் அத்தம் — வழியே போகும் மாக்கள் அறுத்துப் போகட்ட பிரண்டைக் கொடியானது இடியேறு எறிதலைப் பெற்று நலிந்த பாம்பின் பசிய துண்டம் போல நெறியின் பக்கத்தே பயன் கோடலின்றியே திரங்காநிற்கும் அத்தத்திலே;

உமண் சாத்து இறந்த ஒழி கல் அடுப்பின் நோன் சிலை மழவர் வெறி கொள ஊன் புழுக்கு அயரும் சுரம் வழக்கற்றது என்னாது— உப்பு வாணிகர் விட்டொழித்த கல் அடுப்பிலே வலிய வில்லை யுடைய மழவர் வெறி நாற்ற முண்டாக ஊன் புழுக்கினை வேவித்து உண்டு மகிழும் சுரனானது மக்களால் போக்கொழிந்த தென்னமல்;

நெய்தல் உருவின் ஐது இலங்கு அகல் இலை தொடை அமை பீலி பொலிந்த கடிகை மடை அமை திண் சுரை மா காழ் வேலொடு

உரம் சிறந்து தணி அமர் அழுவம் தம்மொடு துணைப்ப துணிகுவர் கொல்லோ — நெய்தற்பூவினை வடிவாலொத்துக் கூர்மையுடைய தாக இலங்குகின்ற அகன்ற இலையினையும் மாலையோடமைந்த மயிற் பீலியாற் பொலிந்த காம்பினையும், மூட்டுவாயமைந்த திண்ணிய குழாயினையும், கரிய தண்டையுமுடைய வேலொடு வலியாற் செருக்கிச் சென்று இருபெரு வேந்தரது மாறுபாட்டையும் தணிவிக்கின்ற போர்களப் பரப்பிலே தம்மொடு யாமும் துணைப் பட்டுச் செல்லுமாறு நிச்சயிப்பரோ என்க. நெய்தற்பூ வேலுக்கு உவமை. (களவழி. 33.)

ஒண்சிலை மழவர் என்னும் பாடத்திற்கு ஒள்ளிய சிலைப்பை யுடைய மழவர் என்க. சிலை, ஒரு மரமுமாம். தனி அமர் அழுவம் தம்மொடு துணைப்ப என்னும் பாடத்திற்குத் தனியாக விரும்பிச் செல்லும் சுரத்திற் றமக்குத் துணையாக என்க.

மறம் புலி உழந்த துனி கொள வசி படு சென்னி உறு நோய் வருத்தமொடு உணீஇய மண்டி படி முழம் ஊன்றிய நெடு நல் யானை கை தோய்த்து உயிர்க்கும் வறும் சுனை மலை முதல் ஆறு - வலிய புலியோடு பொருதுழந்ததனுல் துண்டமாகும்படி பிளப் புற்ற சென்னியிடத்து மிகும் நோயால் உண்டான வருத்தமொடு நீர் உண்ண விரும்பி, நிலத்தொடு படிந்த முழந்தாளை ஊன்றிய நெடிய நல்ல யானையானது துதிக்கையையிட்டுத் தோய்த்தும் நீரின்மை யிற் கதறும் வறிய சுனையையுடைய மலையிடத்து வழி என்க.

துனி கொள என்ற பாடத்திற்கு, வெறுப்புக்கொள்ள என்று கூறி, அதனை உயிர்க்கும் என்பதனோடு கூட்டுக.

ஆறு செல்லும் மாக்களால் அறுத்துப் போகடப்பட்டுப் பிரண் டை வறிதே திரங்குவது போலத் தலைவராற் றுறக்கப்பட்டு எம் அழகு பயன்படலின்றியே கழியாநின்றது என்றுளாம்.

சாத்தராற் றுறக்கப்பட்ட கல்லடுப்பு மழவர்க்கு ஊன் புழுக் கயர்ந்து மகிழற்குக் கருவியாயினாற் போலத் தலைவராற் றுறக்கப் பட்ட யாம் அம்பற்பெண்டிர்க்கு அலர் தூற்றி மகிழற்கு இலக்காயி னேம் என்றுளாம்.

புலியொடுழந்து சென்னியிடத்து வடுப்பட்டு வருந்திய யானை நீருண்ணச் சுனையிடத்து முழமூன்றிக் கையைத் தோய்த்தும் நீர்

பெறு துயிர்த்தாற்போல, அன்னையின் கொடுஞ் சொல்லாலும், அம்பற் பெண்டிரின் அலராலும் நெஞ்சு புண்ணுற்ற யாம் அந்நோய் தீர வரையுமாறு தலைமகன் கழல்களைப் பணிந்து வேண்டியும் அருள் பெறுமல் உயிர்க்கின்றேம் என்றாளாம்.

தலைமகள் இவ்வாறு கூறுதல், "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" என்ற களவியற் சூத்திரத்துத் "தாவி னன்மொழி கிழவி கிளப்பினும்" என்ற பகுதியாற் கொள்ளப்படும்.

இனித் தோழி கூற்றாகக் கூறும் இரண்டாந் துறைக்குத் தலைமகன் சிறைப்புறத்தானாக அவன்கேட்டு வரையுமாற்றால் இவ்வாறு தோழி தலைமகட்குக் கூறினாள் என்க.

"தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக், கூறுதற் குரியர் கொள்வழி யான" என்ற உவமவியற் சூத்திரம் பற்றித் தோழி இறைச்சி கூறினாள்.

"கிழவி சொல்லி னவளறி கிளவி, தோழிக் காயின் நிலம் பெயர்ந் துரையாது" என்பவாகலின், பாலைநில மகளாகிய தோழி அந்நிலக் கருப்பொருள் கொண்டே இறைச்சி கூறினாள்.

பி - ம். 6. வேறு பெறு. 7. நெறியவற். 8. உமண்சாக்கொண்ட. 11. நெய்யகலுருவி. 15. துனிகொள்பு. 16. வரிபடு.

## 120. நெய்தல்

நெடுவேண் மார்பி னாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்தும்
பைங்காற் கொக்கின நிரைபறை யுகப்ப
வெல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயிற்
5 கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழின் மழைக்கண் கலுழ விவளே
பெருநா ணணிந்த சிறுமென் சாயன்
மாணலஞ் சிதைய வேங்கி யானு
தழலொடுடங் கினளே பெரும வதனாற்
10 கழிச்சுறு வெறிந்த புட்டா ளத்திரி

நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ
வல்வி லிளையரொ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
15 யன்றி லகவு மாங்கட்
சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே.

என்பது: தோழி பகற்குறிக்கட் டலைமகளை யிடத்துய்த்து வந்து தலைமகனை யெதிர்ப்பட்டு நின்று சொல்லியது.

—நக்கீரனார்.

நெடுவேள் மார்பின் ஆரம் போல செவ்வானம் வாய் தீண்டி மீன் அருந்தும் பை கால் கொக்கு இனம் நிரை பறை உகப்ப எல்லை பைப்பய கழிப்பி பல் கதிர் ஞாயிறு குடவயில் கல் சேர்ந்தன்று - முருகன் மார்பிலே கிடந்த முத்துவடம்போலச் செவ்வானத்திடத்தைப் பொருந்தி மீனை யருந்தும் பசிய காலையுடைய கொக்கின் கூட்டம் வரிசையாகப் பறந்துயர்ந்து செல்லப் பகலை மெல்ல மெல்லக் கழித்துப் பல கதிர்களையுமுடைய ஞாயிறு அத்தகிரியை யடைந்தது;

பெரு நாண் அணிந்த சிறு மென் சாயல் இவள் மாண் நலம் சிதைய ஏங்கி மதர் எழில் மழை கண் கலுழ அழல் ஆனது தொடங்கினள் பெரும - பெரிய நாணத்தை அணிந்த சிறிய மெத்தென்ற சாயலையுடைய இவள் தனது மாண்ட நலம் கெட ஏங்கி மதர்த்த அழகிய குளிர்ந்த கண் கலங்க அழுதலை அமையாது தொடங்கினள் பெருமானே! அதனால்,

கழி சுறு எறிந்த புள் தாள் அத்திரி நெடு நீர் இரு கழி பரி மெலிந்து வல் வில் இளையரொடு எல்லி செல்லாது பெண்ணை ஓங்கிய வெள் மணல் படப்பை அன்றில் அகவும் ஆங்கண் சிறு குரல் நெய்தல் எம் பெரு கழி நாடு சேர்ந்தனை அசைஇ செலினே சிதைகுவது உண்டோ - கழியிடத்துள்ள சுறாப் பாய்ந்ததனாலே புண்ணுற்ற தாளையுடைய கோவேறுகழுதையானது நெடிய நீரினையுடைய கரிய கழியிடத்துச் செலவு மெலிந்ததனால் வலிய வில்லையுடைய இளையரொடு நீ இரவிலே செல்லாமல், பனை வளர்ந்

தோங்கிய வெள்ளிய மணற்சோலையிலே அன்றில் தன் பேடையை அழையாநிற்கும் அவ்விடத்தே சிறிய கொத்தான நெய்தன் மலரை யுடைய எம்முடைய பெரிய கழிசூழ்ந்த நாட்டினையடைந்து இளைப்பாறிப் போனாற் கெடுவது யாதாயினும் உண்டோ? என்று, தோழி பகற்குறிக்கட் டலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று சொன்னாள் என்க.

கொக்கின் நிரை என்ற பாடத்திற்கு; கொக்கின் கூட்டம் என்க அது பறந்து எழ என்க.

ஞாயிறு குடவயிற்கல் சேர்ந்ததனாலும், இவள் கண் கலுழ அழல் தொடங்கினளாதலாலும் பெருமானே! நீ ஊர்ந்து வந்த அத்திரி பரிமெலிந்ததனாலும், நின் இளையரொடு நீ இரவிலே நின்னூர்க்குச் செல்லாமல் எம் கழி நாட்டுச் சேர்ந்தனை அசைஇச் செலின் சிதைகுவ துண்டோ என்று தோழி தலைவியது வருத்தம் பற்றித் தலைமகனுக்குச் சொன்னாள் என்க.

அன்றி லகவுமாங்கண் சேர்ந்தனைசெலினே சிதைகுவ துண்டோ என்றமையால், நீ வாராக்கால் தலைவி இறந்துபடுவள்காண் என்று, தோழி குறிப்பாற் கூறியவாறு. என்னை? "அன்றில் துணை யொன்று பிரியினுந் துஞ்சா" (அகம் 50.) என்பவாகலின்.

சிவந்த வானத்தை நெடுவேளின் மேனிக்கும் வரிசையாகப் பறந்து செல்லும் கொக்கினத்தை முத்தாரத்திற்கும் உவமையாகக் கொண்டு, அவ்வானத்தை ஓட்டிப் பறந்து செல்லும் கொக்கின் கூட்டத்தினை நெடுவேளின் மார்பிடத்துத் துவளு முத்தாரம்போலு மென்று கூறினார் என்க.

மெலிந் தென்னும் செய்தெனெச்சம் செயவெனெச்சப் பொருளில்வந்து காரணப் பொருள்பட்டது. எறிந்த புண் - எறிந்த தனாலுற்ற புண். சாயல், மென்மைத் தன்மை.

சுறா எதிர்ந்ததனால் தனக்கு இயல்பாகவுள்ள செலவு மெலிந்து அத்திரி கழியிடத்துத் தங்கினாற்போல, நீ எதிர்ந்தமையால் தனக்கு இயல்பாகவுள்ள நாணம் முதலிய பெண்மைக் குணங்க ளொழிந்து தலைவி நின் வழியளாயினாள் என்று தோழி இறைச்சி யாற் கூறினாளாம்.

இது நெய்தலிற் களவு; 'திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே' என்பதனால் அமைந்தது.

"நிழவோட் குவம மீரிடத் தரித்தே" என்ற உவமவியற் சூத்திரத்து, "ஈரிடமாவன மருதமும் நெய்தலும்" என்றலின், ஈண்டு நெய்தலில் இறைச்சி கொண்டார்.

வைகுறு விடியன் மருதமெற் பாடு, நெய்த லாதன் மெய் பெறத் தோன்றும்" என்ற அகத்திணையியற் சூத்திரத்து இப்பாட்டினை இத்துறைக்கே கொண்டு, ஈண்டு நெய்தற்கு எற்பாடு வந்தது என்றும், "பொழுது மாறுங் காப்புமென் றிவற்றின்" என்ற பொருளியற் சூத்திரத்து, 'இரவினும் பகலினும் நீ வரல் என்றலும்' என்னும் பகுதிக்கு, 'வல்வி விளையரொடெல்லிச் செல்லாது......... நாட்டே' என்பதனைக் காட்டி, 'களவு அறிவுறுமென்று அஞ்சாது வருகவென்றலின் வழுவேனும், தலைவி வருத்தம்பற்றிக் கூறலின் அமைத்தார்' என்றும், "தேரும் யானையும் குதிரையும் பிறவும், ஊர்ந்தன ரியங்கலுமுரிய வென்ப" என்றசூத்திரத்துப் 'பிறவாவன கோவேறு கழுதையும் சிவிகையும் முதலியவாம்' என்று கூறி 'கழிச் சுறு வெறிந்த புட்டாளத்திரி.........தசைஇ' என்ற அடிகளை அதற்குக் காட்டியும், அதே சூத்திரத்து, "உம்மையான் இளையரொடு வந்து தனித்துக் கூடுதலுங் கொள்க" என்று கூறி அதற்கு, 'வல்வி விளையரொடு எல்லிச் செல்லாது சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ" என்ற வடிகளைக் காட்டியும் சென்றனர் நச்சினார்க்கினியர் (தொல். பொருள். 8,210,212).

நெடுந்தொகை ஆகும் அகநானூற்றுள் முதலாவதான களிற்றியானைநிரை மூலமும், அதன் முதற் றெண்ணூறு பாட்டிற்குள்ள பழைய வுரையும், இறுதி முப்பது பாட்டிற்கு ஸ்ரீவத்ஸ சக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் எழுதிய உரையும் ஸம்பூர்ணம்.

ஹரி: ஓம்.



ஸ்ரீ:

இரண்டாவது

# மணிமிடைபவளம்

## மூலமும் உரையும்

### 121, பாலை

நாநகை யுடைய நெஞ்சே கடுந்தெறல்
வேனி னீடிய வானுயர் வழிநாள்
வறுமை கூறிய மண்ணீர்ச் சிறுகுளத்
தொடுகுழி மருங்கிற் றுவ்வாக் கலங்கல்
5 கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச்
சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு
செங்கோல் வாலிணர் தயங்கத் தீண்டிச்
சொறிபுற முரிஞிய நெறியயன் மராஅத்
தல்குறு வரிநிழ லசைஇ நம்மொடு
10 தான்வரு மென்ப தடமென் றோளி
யுறுகணை மழவ ருருள்கீண் டிட்ட
வாறுசென் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்

கணைவிசைக் கடுவளி யெடுத்தலிற் றுணைசெத்து
வெருளேறு பயிரு மாங்கட்
15 கருமுக முசுவின் கானத் தானே.

என்பது : தோழியாற் றலைமகளை யுடன் வருமெனக்கேட்ட தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது.

— மதுரை மருதனிளநாகன்.

## இதன் பொருள்

உறு கணம் மழவர் உருள் கீண்டிட்ட ஆறு செல் மாக்கள் சோறு பொதி வெண் குடை கணை விசை கடு வளி எடுத்தலின் துணை செத்து வெருள் ஏறு பயிரும் ஆங்கண் — மிக்க கூட்டமான மழவர் தேருருள் உருளும்படி உடைத்திட்ட மலையின் வழியிலே செல்லும் சாத்தரது சோறு பொதிந்த வெளிய பனை ஓலைக் குடையை அம்பு போலும் விசையையுடைய சூறவளி எழுப்புகையினாலே உண்டான ஓசையைத் தன் துணையிட்ட கூச்சலென்று கருதி வெருண்ட புல்வாயேறு அத் துணையை அஞ்சலென அழையா நிற்கும் அவ்விடங்களிலே ;

கருமுக முசுவின் கானத்தான் — கரியமுகத்து முசுக்கலைகள் நிறைந்த காட்டிலே ;

கடு தெறல் வேனில் நீடிய வான் உயர் வழி — மிகுதியும் எரித்தலையுடைய கோடை நீட்டித்த மிகவுமுயர்ந்த ஏற்றவழியிலே ;

நாள் வறுமை கூறிய மண் நீர் சிறு குளம் தொடு குழி மருங்கில் துவ்வா கலங்கல் — நாளும் தன் வறுமையைக்காட்டிக் கூறிய மண் கலந்த நீரையுடைய சிறிய குளத்தகத்தே தோண்டப்பட்ட குழியின் பக்கத்திலேயுள்ள உண்ணத் தகாத கலங்கல் நீரைக்கொண்டு ;

கன்று உடை மடம் பிடி கய தலை மண்ணி சேறு கொண்டு ஆடிய வேறுபடு வயம் களிறு — கன்றுகளை உடைய மடப்பம் பொருந்திய பிடியின் மெல்லிய தலையைக் கழுவிவிட்டுச் சேற்றைக் கொண்டு தான் நீராடியதனாலே பிடியோடும் கன்றோடும் வேறுபட்ட வலிய களிறு ;

செ கோல் வால் இணர் தயங்க தீண்டி சொறி புறம் உரிஞிய நெறி அயல் மராத்து அல்குறு வரி நிழல் அசைஇ — சிவந்த

காம்பினையுடைய வெள்ளிய கொத்து அசையத் தன் துதிக்கையாற் பற்றிச் சொறி பொருந்திய தன் முதுகினை உராய்ந்துகொண்ட வழிக்கு அயலதாக வுள்ள மராமரத்தின் தங்குதற் கமைந்த வரி வரியாயுள்ள நிழலிலே தங்கி ;

தடம் மென் தோளி நம்மொடு தான் வரும் என்ப — பருத்த மென்மையான தோளையுடைய தலைவி நம்மொடு தானும் வருவள் என்று நின்றார் ;

நெஞ்சே நாம் நகை உடையம் — நெஞ்சே ! இதுகேட்க நாம் நகையினை யுடையேமா யிராநின்றேம் என்று, தோழியாலே தலைமகளை உடன் வருமெனக் கேட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கினான் என்க.

முசுவின் கானத்தே ஏறு பயிரு மாங்கண் வேனில் நீடிய உயர் வழியிலே களிறு புறமுரிஞ்சிய மராஅத்து நிழலில் அசைஇத் தோளி நம்மொடு வரும் என்ப ; நெஞ்சே! இது கேட்க நாம் நகையை உடையேமா யிராநின்றேம் என்க.

நாணகையுடையம் என்ற பாடத்திற்கு, நாளும் நகையை யுடையேமா யிராநின்றே மென்க. குளக் கொடுகுழி மருங்கிற் றூவற் கலங்கல் என்ற பாடத்திற்குக் குளத்திலே கோடிய குழியிலே யுள்ள மழைத் தூவலாலுண்டான கலங்கல் நீரை என்க.

சேறுகொண்டு ஆடியதனால் மட்களிறுபோலத் தோன்றலின் வேறுபடு வயக்களிறு என்றான்.

களிறு தன் பிடியை மண்ணியும் ஏறு தனது துணையைப் பயிர்ந்தும் அவற்றினைத் தலையளி செய்தாற்போல யாமும் தலைவி யைத் தலையளி செய்யாநிற்பேம் என்று தலைமகன் தன் தலைமை தோன்ற இறைச்சியிற் கூறினானாகக் கொள்க.

இது, 'கிழவோற் காயி னுரனொடு கிளக்கும்' என்றும், 'கிழ வோற் காயின் இடம் வரை வின்றே' என்றும் ஆசிரியர் தொல் காப்பியனார் ஓதினாராகலின், தலைமகன் றன்றலைமை தோன்றக் கூறினான் என்றும், பாலைத்திணைக்கண் இறைச்சி கொண்டா னென்றும் அறிக.

"காரணத்தி னமைந்து முடிந்த காலை" என்ற கற்பியற் சூத்தி ரத்து, 'உடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு மடம்பட வந்த தோழிக் கண்ணும்' என்ற பகுதியில் தலைமகன் நெஞ்சிற்குக்

கூறியதாக இப் பாட்டினைக் கொள்வர் நச். இனிப்பேரா. "நாநகை யுடைய நெஞ்சே.........தான்வரு மென்ப தடமென் றோளி" என் பதனை, "எள்ளல் இளமை பேதைமை மடனென், றுள்ளப் பட்ட நகைநான் கென்ப" என்ற மெய்ப்பாட்டியற் சூத்திரத்துப் பிறர் மடம் பொருளாக நகை தோன்றற்கு உதாரணமாகக் கொள்வதனோடு, "பன்றி புல்வா யுழையே...........ஏறெனற் குரிய" என்ற மரபியற் சூத்திரத்துப் புல்வாய் ஏறெனப் பட்டதற்கு, 'வெருளேறு பயிரு மாங்கண்' என்பதனை உதாரணமாகவும் கொள்வர். (தொல். பொ. 146, 252, 594.)

பா-ம்: 1. கடுந்திறல். 11. யூறுகணை மழவ ருள்கீண். 13. கன்மிசை; கனைவிசை.

## 122. குறிஞ்சி

இரும்பிழி மகாஅரிவ் வழுங்கன் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகு
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்
5 பிணிகோ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற்
றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவ
ரிலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழு
மாவவாய் ஞமலி மகிழாது மடியிற்
10 பகலுரு வுறழ்நிலாக் கான்று விசும்பி
னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருண் மடியி
னில்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
15 வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பு
மெல்லா மடிந்த காலை யொருநா
ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, யதனா
லரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்

20 தாதி போகிய பாய்பரி நன்மா
ஞெச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றாற் றோழிநங் களவே.

என்பது : தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்றது. தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

இப்பாட்டு இரவுக்குறி.

— பரணர்.

இதன் பொருள்

மிக்க தேனுண்டு களிக்கும் மாக்களையுடைமையால் ஆரவார மிக்க இம்மூதூர்தான் விழவினையுடையதின்றாயினும் துஞ்சாதாகும்; வளம் மிக்க கடை வீதியும் பிற வீதிகளும் உறங்கினாலும் கொடிய பேச்சுடைய அன்னை உறங்காளாவள் ; பிணித்துக்கொள்ளும் கூற்றினைப் போலத் தப்பவரிய சிறை காவலையுடைய அன்னை துஞ்சினாலும், உறங்காத கண்ணரான ஊர் காவலர் விரைந்து வருவர்; விளங்குகின்ற வேலையுடைய அவ்விளையர் துஞ்சினாலும் கூரிய எயிற்றினையும் வலஞ்சுரிந்த வாலினையுமுடைய நாய் குரையாநிற்கும் ; அரவமிகுத்த வாயையுடைய அந்நாய் குரையாது உறங்கினாலும், பகலுருவினை ஒக்கும் நிலாவைக் கக்கி விசும்பின் அகன்றவிடத்தினுள்ள சந்திரன் நிலைபெற்று விரியாநிற்கும் ; திங்கள் அத்தகிரியை யடைந்து மிக்க இருள்வந்து தங்குமானால், வீட்டெலியை உணவாகவுடைய வலிய வாயையுடைய கூகைச் சேவலானது பேய் இயங்கும் நடுயாமத்து உள்ளம் அழிவுண்டாகக் குழறாநிற்கும் ; மரப்பொந்தில் வாழும் அக் கூகைச் சேவல் குழறாது உறங்குமாயின் மனையின்கண் செறிக்கப்பட்ட கோழி தனது மாட்சிமைப்பட்ட குரலை எடுத்துக் கூவாநிற்கும் ; இவை எல்லாம் உறங்கின ஒருகாலை ஒருநாளும் என்னிடத்தினின்று பிரிந்து நில்லாத நெஞ்சினையுடைய தலைவர் வாரலர் ; அதனால், பருக்கைக் கற்கள் பெய்துள்ள சதங்கைகள் ஒலிக்க ஓட்டத்தில் மிக்கு, ஆதியென்னும் கதியிற்றேர்ந்த பாயும் செலவினையுடைய நல்ல குதிரைகளையும் காவல் வேலியையுமுடைய தித்தனது உறையூரைச் சூழ்ந்த கல் முதிர்ந்த புறங்காடுபோல நம் களவு பல இடையூறுகளையுமுடையதா யிருந்தது தோழீ ! என்று,

இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

கோள்-கூற்று, ஞாளி, ஞமலி-நாய், கழுது-பேய், ஆதி-குதிரையின் நேரோட்டம். ஈண்டுக் கூறிய கோழி யாமக்கோழி என்க.

'பொத்த வரையுட் போழ்வாய்க் கூகை' என்பது நோக்கி, 'வளைக்கட் சேவல்' என்பதற்கு மரப் பொந்தில் வாழும் கூகைச் சேவல் என்று உரைக்கப்பட்டது.

இப்பாட்டுச் 'சிறைகாவலெல்லாம் வந்த செய்யுள்' என்பர் (களவியலுரைகாரர். சூ. 30.) "இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்தும்," என்னுங் கற்பியற் சூத்திரத்துக் 'காணவகையிற் பொழுதுநனி யிகப்பினும்' என்னும் பகுதியின் விசேடவுரையில், 'தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், நாய் துஞ்சாமை போல்வனவற்றால் தலைவன் குறியின்கண் தலைவி வரப்பெறாமல் நீட்டித்தலாம்' என்று கொண்டு, அதற்கு இப்பாட்டினை உதாரணமாகக் காட்டியும், "களவலராயினும்" என்னும் ஷை இயற்சூத்திரத்து, 'அன்னையைபிறவும் செவிலிமேன' என்றதனால், 'வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்' என்பதுங் கொள்க என்றும், "குடையும் வாளும்" என்னும் புறத்திணையியற்சூத்திரத்து, 'மூற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும்' என்னும் பகுதியின் விசேடவுரையில், 'நொச்சியாவது, காவல்; இதற்கு நொச்சி ஆண்டுச் சூடுதலும் கொள்க; அது மதிலைக் காத்தலும் உள்ளத்தைக் காத்தலுமென இருவர்க்குமாயிற்று. இக்கருத்தானே 'நொச்சி வேலித்தித்த னுறந்தை' என்றார் சான்றோரும்' என்றும் கூறுவர் நச். இனிப்போா, "முட்டு வயிற் கழறல்" என்ற மெய்ப் பாட்டியற் சூத்திரத்து, "முட்டுவயிற் கழற" லென்னும் பகுதிக்கு, 'நொச்சிவேலி.........களவே' என்னும் பகுதியினை உதாரணமாகக் கொண்டு, 'இது தலைமகன் கேட்பக் கழறியுரைத்தது' என்றும் 'சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு, மாயிருந் தூவி மயிலலங் கடையே' என்ற மரபியற் சூத்திர உரையில் 'கூகை' சேவலெனப் பட்டதற்கு 'வளைக்கட் சேவல் வாளாது மடியின்' என்பது உதாரணமாகுமென்றும் காட்டிச் செல்வர். (தொல். பொருள். 107, 115, 68, 271, 603.)

பி - ம் : 8. மருளும்; 9. குரையாது; 22. கன்முது.

## 123. பாலை

உண்ணா மையி னுறங்கிய மருங்கி
னாடாப் படிவத் தான்றோர் போல
வரைசெறி சிறுநெறி நிரையுடன் செல்லுங்
கான யானை கவினழி குன்ற
5 மிறந்துபொரு டருதலு மாற்றாய் சிறந்த
சில்லைங் கூந்த னல்லகம் பொருந்தி
யொழியின் வறுமை யஞ்சுதி யழிதக
வுடைமதி வாழிய நெஞ்சே நிலவென
நெய்கனி நெடுவே லெஃகி னிமைக்கு
10 மழைமருள் பஃறோன் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை
யிறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
வொன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே.

*என்பது : தலைமகன் இடைச் சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.*

*இப் பாட்டினுட் படிவமென்பது விரதம்.*

— காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

### இதன் பொருள்

*வரை செறி சிறு நெறி நிரையுடன் செல்லும் கான யானை - பக்க மலையைச் செறிந்த சிறிய வழியிலே மந்தையாய்க் கூட்டங் கூடிச் செல்லுங் காட்டியானைகள் ;*

*உண்ணாமையின் உறங்கிய மருங்கின் ஆடா படிவத்து ஆன்றோர் போல கவின் அழி குன்றம் இறந்து பொருள் தருதலும் ஆற்றாய் - உண்ணாமையினாலே ஒட்டிப்போன வயிற்றினை யுடைய நீராடாத விரதத்து ஆன்றோரைப்போல அழகழியாநின்ற குன்றத்தினைக் கடந்து பொருளீட்டுதலும் மாட்டிற்றில்லை ;*

*சில் ஐங்கூந்தல் **நல்** அகம் பொருந்தி ஒழியின் **வறுமை** அஞ்சுதி - சிலவாகிய ஐந்து பகுதியையுடைய கூந்தலாற் பொலிந்த*

தலைவியது நல்ல ஆகத்தைப் பொருந்தி மனைக்கண் ஒழியின் வறுமையை அஞ்சாநின்றாய் ;

சென்று தரு பொருட்கு - குன்றமிறந்து சென்று ஈட்டும் பொருளைக் குறித்து ;

நிலவு என நெய் கனி நெடு வேல் இமைக்கும் எஃகின் மழை மருள் பல தோல் மா வண் சோழர் கழை மாய் காவிரி மண்டு கடல் பெரு துறை இறவொடு வந்து கோதையொடு பெயரும் பெரு கடல் ஓதம் போல - நிலவென்னும்படி நெய்யாற்கனிந்த நெடிய வேற் படையினையும், மின்னாநின்ற வாட்படையினையும் மழையை ஒத்த பல தோற்கிடுகுப் படையினையும் பெரிய வள்ளன்மையையு முடைய சோழரது ஓடக்கோலை முழுகச் செய்யும் நீத்தத்தையுடைய காவிரியானது சென்றடையும் கடற்பெருந் துறைக்கண்ணே இற வொடு வந்து கோதையொடு பெயரும் பெருங் கடலலைபோல ;

ஒன்றில் கொள்ளாய் - போதல் தவிர்தல் என்னுமிரண்டனுள் ஒன்றினிடத்துத் துணிவினைக் கொள்ளாய் ;

நெஞ்சே வாழிய அழிதக உடைமதி - நெஞ்சே! நீ வாழ்க, அன்றி அழிவு பொருந்தப் பிளக்க, என்று, தலைமகன் இடைச் சுரத்துத் தன்னெஞ்சினைக் கழறிச் சொன்னான் என்க.

ஓதம் இறவினையாதல் கோதையினையாதல் ஒன்றினைக் கொள்ளாது இறவொடு வருதலும் பின்னர் அதனை விடுத்துக் கோதையைக் கைக் கொண்டு பெயர்தலும் போல நெஞ்சமும் போதல் தவிர்தல் என்னும் இரண்டனுள் ஒன்றினைக் கைக்கொள்ளாது, முதலிற் பொருளை யுட்கொண்டு செலவயர்தலும், பின்னர் அதனை விடுத்துச் சில்லைங் கூந்தலாளது ஆகத்தை யுட்கொண்டு செலவொழிதலுமாக உழலாநின்றது என்றான் என்க.

கழைமாய் என்றமையால் நீத்தம் வருவித் துரைக்கப்பட்டது ; உறங்குதல் - ஒடுங்குதல் ; கழை - ஓடக்கோல் ; மாய்த்தல் - நீருள் மறையச் செய்தல்.

நெஞ்சே! குன்ற மிறந்து பொரு டருதலுமாற்றாய் ; சில்லைங் கூந்தலாளது ஆகம் பொருந்தி ஒழியின் வறுமையை யஞ்சுதி ; சோழர் காவிரியானது சென்று மண்டாநின்ற கடற்றுறை ஓத

மேபோலச் சென்றுதரு பொருட்கு ஒன்றிற் கொள்ளாய் அழிதக உடைமதி ; வாழிய என்றியைக்க.

"காரணத்தி னமைந்து முடிந்த காலை" என்னுங் கற்பியற் சூத்திரத்து, 'வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்' என்னும் பகுதியின் விசேடவுரையில் 'விழுமமாவன, பிரியக் கருதியவன் பள்ளியிடத்துக் கனவிற் கூறுவனவும், போவேமோ தவிர்வேமோ வென வருந்திக் கூறுவனவும்.........பிறவுமாம்' என்று கொண்டு, 'இப்பாட்டுப் போவேமோ தவிர்வேமோ என்றது' என்றும், "நோயு மின்பமு மிருவகை நிலையின்" என்னும் பொருளியற் சூத்திரவுரையில், "'உண்ணுமை பின்' என்னும் அகப்பாட்டினுள், 'இறவொடு வந்து.........பொருட்கே' என்றவழி 'அழிதகவுடைமதி வாழிய நெஞ்சே' என்றதனுன் நிலையின் ருகுதி என நெஞ்சினை உறுப் புடையது போலக் கழறி நன்குரைத்தவாறும், ஒதத்தையும் நெஞ் சையும் உயர்திணையாக்கி உவமவாயிற் படுத்தவாறுங் காண்க" என்றும் கூறுவர் நச். (தொல். பொருள். 146, 196.)

பி - ம்: 1. னுயங்கிய. 8. உடையை வாழிய னெஞ்சே. 9. லெஃகிலே. 14. வொன்றிற் கொல்லாய்.

## 124. முல்லை

நன்கலங் களிற்றொடு நண்ணா ரேந்தி
வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து
சென்றீ கென்ப வாயின் வேந்தனு
நிலம்வகுத் துறாஅ வீண்டிய தானையொ
5 டின்றே புகுதல் வாய்வது நன்றே
மாட மாணகர்ப் பாடமை சேக்கைத்
துனிதீர் கொள்கைநங் காதலி யினிதுறப்
பாசறை வருத்தம் வீட நீயு
மின்னுநிமிர்ந் தன்ன பொன்னியற் புனைபடைக்
10 கொய்சுவற் புரவிக் கைகவர் வயங்குபரி
வண்பெயற் கவிழ்ந்த பைங்கொடி முல்லை
வீகமழ் நெடுவழி யூதுவண் டிரியக்
காலை யெய்தக் கடவுமதி மாலை

யந்தி காவல ரம்பணை யிமிழிசை
15 யரமிய வியலகத் தியம்பு
நிரைநிலை ஞாயி னெடுமதி லூரே.

என்பது : தலைமகன் தேர்ப்பாகற் குரைத்தது.

— மதுரை அறுவைவாணிகனிள வேட்டனார்.

## இதன் பொருள்

நண்ணார் நல் கலம் களிற்றொடு வந்தி வந்து திறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து சென்றீக என்பவாயின் வேந்தனும் நிலம் வருத்துறூஅ ஈண்டிய தானையொடு இன்றே புகுதல் நன்றே வாய்வது - பகைவர் நல்ல ஆபரணங்களை யானைமீது எடுப்பித்துக்கொண்டு வந்து திறையாகக் கொடுத்து வணங்கி வழிபாடு சொல்லிச்செல்லுக என்பாராயின், வேந்தனும் நிலத்தை வருத்துக்கொண்டு ஒன்றுகூடிய தனது சேனையொடு இன்றே தன் ஊர் புகுதல்பெரிதும்மெய்யாகும்;

மாடம் மாண் நகர் பாடு அமை சேக்கை துனி தீர் கொள்கை நம் காதலி இனிது உற பாசறை வருத்தம் வீட - மாடங்களால் மாட்சிமைப்பட்ட மாளிகையிலே செவ்வியமைந்த பள்ளியிலே வெறுப்புத் தீர்ந்த கோட்பாட்டினையுடைய நம் காதலி இனிதுறவும், இங்கு நம் பாசறை வருத்தம் ஒழியவும் ;

வள் பெயற்கு அவிழ்ந்த பை கொடி முல்லை வீ கமழ் நெடு வழி ஊது வண்டு இரிய காலை — வளவிய பெயற்கு மலர்ந்த பசிய கொடியிடத்து முல்லை மலர் மணவாநின்ற நெடிய வழியிலே நுகரும் வண்டுகள் பறந்தோட, இக்காலத்தே ;

மின்னு நிமிர்ந்தன்ன பொன் இயல் புனை படை கொய் சுவல் புரவி கை கவர் வயங்கு பரி — மின்னல் நுடங்கினால் அன்ன ஒளி வீசுகின்ற பொன்னால் இயன்ற அலங்கரித்த பல்லணத்தினையும், கொய்யப்பட்ட உளையினையுமுடைய புரவியைக் கை விரும்புகின்ற விளக்கமமைந்த செலவு சிறக்க ;

அந்தி காவலர் அம் பணை இமிழ் இசை வியல் அரமிய அகத்து இயம்பும் நிரை நிலை ஞாயில் நெடு மதில் ஊர் மாலை எய்த கடவுமதி— அந்திப் பொழுதிற் காக்கும் முறைமையையுடைய காவலரது அழகிய முரசின் ஆர்க்கின்ற ஓசையானது அகன்ற நிலாவெளி முற்றத்தின்

கண் ஒலியாநிற்கும் ஒழுங்குபட்ட நிலைமையையுடைய மதிலுறுப் பாற் சிறந்த நெடிய மதிலை யுடைய ஊர்க்கு மாலையிலே சென் றடையக் கடாவுவாயாக என்று, தலைமகன் தேர்ப்பாகற்கு உரைத் தான் என்க.

களிற்றொடு - உருபுமயக்கம்; நண்ணார் நன் கலம் ஏந்திக் களிற்றொடும் வந்து திறை கொடுத்து வணங்கினர் என்றலுமாம். களிற்றுத்திறையும் கலத்திறையும் கொடுத்தனர் என்றபடி.

சென்றீக - செல்லுக. இஃது 'என் போர்யானை வந்தீக ஈங்கு' (கலி. 86.) என்பதனோடு ஒப்பிடத்தக்கது.

நண்ணார் திறை கொடுத்து வணங்கி வழி மொழிந்து சென்றீக என்பவாயின் வேந்தனும் தானையொடு இன்றே புகுதல் வாய்வது; நம் காதலி இனிதுற நீயும் பாசறை வருத்தம் வீட மதிலூர்க்கு மாலை எய்தப் புரவி கடவுமதி என்றியைக்க.

'அரமிய வியலகம்' என்பதனைச் 'சிதைந்தன வரினு மியைந் தன வரையார்' என்ற சூத்திரத்துக்குக் காட்டுவர்; "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே" என்ற அகத்திணை யியற்சூத்திர வுரையில், "நன்கலங்.......................வழிமொழிந்து' என்புழி நன்கலந் திறை கொடுத்தோ ரென்றலின், பகைவயிற் பிரிவே பொருள் வருவாயாயிற்று" என்றும் கூறுவர் நச். (தொல். சொல். 402; பொருள். 29.)

பி - ம்: 4. வருத்துறூஅ. 6. மாடமாநகர். 9. பொன்னயிற்.

## 125. பாலை

அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நோதல் வேண்டி
யீர்ங்கா முன்ன வருப்புமுதி ரிங்கை
யாலி யன்ன வால்வீ தாஅய்
5 வைவா லோதி மையணை லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅ மாறிய யானை போலப்

பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
10 மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுட் சான்ற
15 செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
20 வொன்பது குடையு நன்பக லொழித்த
பீடின் மன்னர் போல
வோடுவை மன்னால் வாடைநீ யெமக்கே.

**என்பது: தலைமகன் வினைமுற்றி மீண்டமை யுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.**

— பரணர்.

இதன் பொருள்

நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி - முடிவு போகாத இல்வாழ்க்கையை முற்றுவிக்க வேண்டி ;

அரம் போழ் அவ் வளை தோள் நிலை நெகிழ - அரத்தாற் போழப்பட்ட அழகிய வளைகள் எம் தோள்நிலையினின்றும் நழுவும்படி ;

ஈர்ங்காழ் அன்ன அரும்பு முதிர் ஈங்கை ஆலி அன்ன வால் வீ தாஅய் - ஈரிய கொட்டையை ஒக்கும் அரும்புகள் முதிர்ந்த ஈங்கையின் ஆலங்கட்டி போலும் வெளிய பூக்கள் உதிர்கையாலே ;

வை வால் ஓதி மை அணல் ஏய்ப்ப தாது உறு குவளை போது பிணி அவிழ - கூரிய வாலையுடைய ஓந்தியின் இருண்ட தாடியை ஒக்கத் தாது நிரம்பிய குவளை மொட்டுக் கட்டவிழவும் ;

படா பை கண் பா அடி கய வாய் மாறிய கடாஅம் யானை போல பெய்து வறிது ஆகிய பொங்கு செலல் கொண்மூ மை தோய்

விசும்பின் மாதிரத்து உழிதா—உறங்காத பசிய கண்ணையும், பரந்த அடியையும், பெரிய வாயையும், வற்றிய கடாத்தையுமுடைய யானை போலப் பெய்து வற்றிய பொங்கிய செலவினையுடைய மேகமானது நீலநிறந் தோய்ந்த ஆகாயத்திற் பலதிசைகளிலும் திரிதரவும் ;

வாடை - ஓ, வாடைக் காற்றே !;

முரண் இல் காலை-நம்மிருவர்க்கும் மாறுபாடில்லாத காலத்தே ;

பனி அடூஉ நின்ற பானாள் கங்குல் தமியோர் மதுகை தூக்காய் தண் என முனிய அலைத்தி - பனி வருத்தாநின்ற பாதி ராத்திரி இருளிலே தனித்துள்ளாரது வலிமையை ஆராயாய் தண்ணென்று நின்னை யாம் வெறுக்குமாறு வருத்தாநின்றாய்காண் ;

கை தொழு மரபின் கடவுள் சான்ற செய்வினை மருங்கின் சென்றோர் வல்வரின் - பலரும் கையாற்றொழுந் தன்மையையுடைய கடவுட்டன்மை யமைந்த செய்வினையாகிய ஓதல் வினையின் பக்க லிலே சென்ற எம் தலைவர் விரையவரின் ;

விரி உளை பொலிந்த பரி உடை நல் மான் வெருவரு தானை யொடு வேண்டு புலத்து இறுத்த பெரு வளம் கரிகால் முன் நிலை செல்லார் சூடா வாகை பறந்தலை ஆடு பெற ஒன்பது குடையும் நல் பகல் ஒழித்த பீடு இல் மன்னர்போல நீ மன் ஒடுவை — விரிந்த தலை யாட்டத்தாற் பொலிந்த விரைந்த செலவினையுடைய நன்மை வாய்ந்த குதிரைப்படை முதலாக மாற்றார்க்கு அச்சம் வருகின்ற பிறபடையோடும் தான் வேண்டிய புலத்துத் தங்கிய பெரிய வளத்தையுடைய கரிகால் வளவனுக்கு முன் நிற்றலை மாட்டாராய், வாகையூர்ப் பறந்தலையிலே அவன் வெற்றிபெறத் தாம் தோற்றுத் தமது ஒன்பது குடையையும் நடுப்பகலிலே போகட்டு ஒழித்த பெருமை யொழிந்த மன்னர் ஒன்பதின்மரைப்போல நீ மிகுதியும் ஓடுவை, என்று, தலைமகன் வினைமுற்றி மீண்டமை யுணர்ந்த தோழி தலைமகட்குச் சொன்னாள் என்க.

சூடாவாகை, வெளிப்படை.

மன்னர்க்குத் தொகை கொடாது வாளா கூறினாரேனும் குடை ஒன்பது எனத் தொகை கொடுத்தலின் மன்னரும் ஒன்ப தின்ம ராயினர். உம்மை முற்றும்மை.

நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி வளை நெகிழக் கடவுட் சான்ற செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின் வாடை! நீ எமக்குப் பீடின் மன்னர்போல ஓடுவை என்றியைக்க.

ஈங்கை தாஅய்க் குவளைப்போது பிணி அவிழவும் பெய்து வறிதாகிய கொண்மூ மாதிரத்து உழிதரவும் பனி அடூஉநின்ற பானாட் கங்குலில் வாடையே நீமுனிய அலைத்தி என்க.

"பனியெதிர் பருவமு முரித்தென மொழிப" என்ற அகத் திணை யியற்சூத்திர வுரையில் முன்பனியாமங் குறிஞ்சிக்கண் வந்த தற்கு 'பனியடூஉ நின்ற..........காலை' என்பதனைக் காட்டியும், "ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன" என்ற கை இயற்சூத்திர வுரையில் இப்பாட்டினைக் காட்டி, இதனுள் பலருங் கைதொழும் மரபினையுடைய கடவுட்டன்மையமைந்த செய்வினை யெனவே, ஓதற் பிரிதலென்பது பெற்றாம்; 'சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' என்பதனாற் கிழவனும் கிழத்தியும் இல்லறத்திற் சிறந்தது பயிற் றாக்கால் இறந்ததனாற் பயனின்றாதலின், இல்லறம் நிரம்பாதென் றற்கு, 'நிரம்பா வாழ்க்கை' என்றார். இல்லறம் நிகழ்த்துகின்ற காலத்தே மேல் வரும் துறவறம் நிகழ்த்துதற்காக அவற்றைக் கூறும் நூல்களையும் கற்று, அவற்றின் பின்னர்த் தத்துவங்களை யுணர்ந்து மெய்யுணர்தல் அந்தணர் முதலிய மூவர்க்கும் வேண்டு தலின் ஓதற் பிரிவு அந்தணர் முதலியோர்க்கே சிறந்த தென்றார்" என்றும், "வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது" என்னுங் கற்பியற் சூத்திரத்து, 'அரம்போழவ்வளை' என்னும் பாட்டினுள், "பானாட் கங்குல்ன்..............முனிய அலைத்தி...........கடவுட் சான்ற செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்............... ஓடுவை' என்றது இராப்பொழுது அகலாது நீட்டித்ததற்கு ஆற்று ளாய்க் கூறினளென்று உணர்க" என்றும் கூறுவர் நச். தேவர் காரணமாகப் பிரியும் பிரிவுக்கு இதனை உதாரணமாகக் கொள்வர் இளம். (தொல். பொருள். 7, 26, 188, 30)

பி - ம்: 5. வைவர லோதி. 6. க்கேழுறு; க்கோளுறு. 9. வோங்குசெலற் 10. திழிதர. 11. பனிபடநி. தலை மகன் வினைமுற்றி மீண்டமை தோழி யுணரத் தலைமகள் சொல்லியது.

## 126. மருதம்

நினவாய் செத்து நீபல வுள்ளிப்
பெரும்புன் பைதலை வருந்த லன்றியு
மலைமிசைத் தொடுத்த மலிந்துசெல லீர்த்தந்
தலைநாண் மாமலர் தண்டுறைத் தயங்கக்
5 கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்
றறல்வார் நெடுங்கயத் தருநிலை கலங்க
மாலிரு ணடுநாட் போகித் தன்னையர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்
கவ்வாங் குந்தி யஞ்சொற் பாண்மக
10 ணெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகிற்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறாஉம்
பயங்கெழு வைப்பிற் பல்வேல் லெவ்வி
நயம்புரி நன்மொழி யடக்கவு மடங்கான்
15 பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத வன்னி போல
விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்
சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய
கயலென வமர்த்த வுண்கட் புயலெனப்
20 புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பால்
மின்னேர் மருங்குற் குறுமகள்
பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே.

என்பது: 1. உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன் றன்னெஞ்சிற்குச் சொல்லியது.

2. அல்லகுறிப்பட் டழிந்ததூஉமாம்.

3. தோழியைப் பின்னின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

— நக்கீரர்

## இதன் பொருள்

கிளி என சிறிய மிழற்றும் செ வாய் பெரிய கயல் என அமர்த்த உண் கண் புயல் என புறம் தாழ்பு இருளிய பிறங்கு குரல் ஐம்பால் மின் நேர் மருங்குல் குறுமகள் பின் நிலை விடாஅ மடம் கெழு நெஞ்சே — கிளி என்னுமாறு சிறியவாக மிழற்றுகின்ற செவ்வாயினையும், பெரிய கயலென்னுமாறு மாறுபட்ட மையுண்ட கண்ணினையும், மேகம் என்னுமாறு முதுகிலே தாழ்ந்து இருண்ட, விளங்குகின்ற கொத்தான ஐந்து பகுதியான கூந்தலையும், மின் போன்ற மருங்குலையும், இளமையினையு முடைய தங்கியது பின்னே நிற்றலைத் தவிராத மடமை கெழுமிய நெஞ்சே!

்னை நீ வாய் செத்து பல உள்ளி பெரு புல் பைதலை வருந்தல் அன்றியும் — நின் சொற்களை நீதானே மெய்யாகக் கருதிப் பலபல நினைந்து பெரிய புல்லிய துன்பமுடையையாய் வருந்துவதன்றியும்;

மலைமிசை தொடுத்த மலிந்து செலல் நீத்தம் தலை நாள் மா மலர் தண் துறை தயங்க - மலையின் மிசையே தொடுத்த மிக்குச்செல்லு கின்ற வெள்ளத்தாலே முதல் நாளிலே பூத்த பெருமை பொருந்திய மலர் தண்ணிய துறைக்கண்ணே அசையா நிற்க ;

கடல் கரை மெலிக்கும் காவிரி பேர் யாறு அறல் வார் நெடு கயத்து அரு நிலை கலங்க - கடலின் கரையை மெலிவிக்கும் காவிரி என்னும் பெரிய யாற்றினுடைய கருமணல் ஒழுகிய நெடிய மடுவின் நிலைத்தற்கரிய ஆழ்ந்த நிலை தளருமாறு ;

மால் இருள் நடு நாள் போகி தன்னையர் காலை தந்த கணை கோட்டு வாளைக்கு அ வாங்கு உந்தி அம் சொல் பாண் மகள் நெடு கொடி நுடங்கும் நறவு மலி மறுகில் பழ செ நெல்லின் முகவை கொள்ளாள் கழங்கு உறழ் முத்தமொடு நல் கலம் பெறாஉம் பயம் கெழு வைப்பின் பல வேல் எவ்வி - மயக்கத்தைச் செய் கின்ற இருண்ட நள்ளிரவிலே சென்று தன் தமையன்மார் நாட் காலையிலே பிடித்துக்கொணர்ந்த திரண்ட, உடலிடத்து வரியுள்ள வாளைமீனுக்கு விலையாக அழகிய உட்குழிந்த கொப்பூழினையும் அஞ்சொல்லினையுமுடைய பாண்மகள் நெடிய கொடிகள் அசையும் கள்ளு மலிந்த வீதியின்கண்ணே பழைய செந்நெல் முகவையை விரும்பாளாய்க் கழங்கினை ஒக்கும் பருத்த முத்தமொடு நல்ல ஆபா

ணங்களைக் கொள்ளும் பயன் மிக்க ஊர்களையும் பல வேற்படைகளையு முடைய எவ்வி என்பான் ;

நயம் புரி நல் மொழி அடக்கவும் அடங்கான் பொன் இணர் நறு மலர் புன்னை வெஃகி திதியனொடு பொருத அன்னி போல — நீதியை ஆராய்ந்த நல்ல மொழியாலே அடக்கவும் அடங்கானாய்ப் பொன்போலும் பூங்கொத்தினையும் நறிய மலரையுமுடைய புன்னைமரத்தினை விரும்பித் திதியனொடு பொருத அன்னிபோல ;

விளிகுவை கொல்லோ நீ— நீ இறந்தும் படுவையோ! என்று, உணர்ப்பு வயின்வாரா ஊடற்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொன்னான் என்க.

குறுமகள் பின்னிலை விடா நெஞ்சே! பைதலையாய் வருந்தலன்றியும் அன்னிபோல விளிகுவைகொல்லோ எனக் கூட்டுக.

தன்னையர் தந்த வாளைக்குப் பாண்மகள் கொடிநுடங்கும் மறுகில் செந்நெல்லின் முகவைகொள்ளாள் முத்தமொடு நன்கலம் பெறும் வைப்பின் எவ்வி என்க.

காவிரிப் பேரியாற்றுக் கயத்து நிலைகலங்கத் தன்னையர் இருள் நடு நாட் போகிக் காலையிலே தந்த வாளை என்க.

மலைமிசைத் தொடுத்த நீத்தத்தால் மாமலர் துறைத் தயங்கக் கடற் கரையை மெலிவிக்கும் காவிரிப் பேரியாறு என்க.

தன்னையர் மாவிரு ணடுநாட் போகியது கணைக்கோட்டு வாளையை அனந்தருற்ற அமையத்துப் பற்றற்கு என்க. வாளை முதலிய மீன்கள் நள்ளிரவில் உறங்கு மென்ப ; 'கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து' என்றார் பரணரும். (அகம். 142.)

வாய் - மெய். செத்தல் - கருதுதல். தயங்குதல் - அசைதல். கடலின் கரையை மெலித்தலாவது - கடற்கரையைக் குத்தி யிடித்தல். தலைநாள் நீத்தமாவது, புதுப்பெருக்கு. கோட்டு வாளை, வாளை விசேடம். புரிதல் - ஆராய்தல். முகவை - முகந்துகொள்ளும் நெல். வைப்பு - ஊர்.

நீத்தம் மலரை யலைத்ததோடு கடற்கரையையும் குத்தி யிடித்தாற் போல, இவ்வாற்றுமை தலைவியது குழையு முள்ளத்தை நெகிழ்வித்ததன்றி தோழியது வலிய உரனையும் சிதைப்பதாயிராநின்றது. இனி இவள் ஊடலொழிவள்காண் என்று ஆற்றினானாக இறைச்சியிற் கொள்க.

இப் பாட்டினைப் பிற்கூறிய இரண்டு துறைக்கும் கொள்ளின் குறிஞ்சி ஒழுக்கமாம். ஆகவே இது மருதத்துக் களவு. "இணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே" என்ற விதிபற்றி யமையும்.

நாம் அல்லகுறிக்கப்பட்டது தலைவியது மெலிய நெஞ்சத்தினையும் தோழியது வலிய நெஞ்சத்தினையும் ஒருசேர நெகிழ்விக்கும் என்று ஆற்றினும் என்று பிற்கூறிய துறைக்கு ஏற்ப உரைத்துக்கொள்க.

பாண்மகளது வாளைமீனை நென்முகவைக்கும் பெருரேனும் முத்தத்திறுக்கும் நன்கலனுக்கும் பெற்றாற்போல நாம் தலைவியைக் குறையிரவினாற் பெறேமாயினும் நன்கலன் நல்கிப்பெறவேம் என்று தலைமகன் உரனொடு கிளந்து ஆற்றினனாகக் கோடலுமாம்.

"மெய்தொட்டுப் பயிறல்" என்ற தொல்காப்பியக் களவியற் சூத்திரத்து, 'மற்றைய வழியும்' என்னும் பகுதிக்கு இப் பாட்டினைக் காட்டி, 'இது நெஞ்சினை இரவு விலக்கியது' என்பர் நச். (தொல். பொருள். 102.)

பி-ம் : 1. நின்செயல். 3. செனீத்த. 4. ப்பரப்பிக். 6. றறல்வாழ் நெடுங்கயத். 7. போகிய தன்னை. 12. கலந்தரூஉம்; கலம்பொரூஉம். 17. சொன்மோ. (அல்லகுறிப்பட்டுத் தலைமகன் றன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம். தோழியின்னின்ற.)

## 127. பாலை

இலங்குவளை நெகிழச் சாஅ யல்கலுங்
கலங்கஞ ருழந்து நாமிவ ணொழிய
வலம்படு முரசிற் சேர லாதன்
முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமயத்து
5 முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத் தொன்னார்
பணிதிறை தந்த பாடுசா னன்கலம்
பொன்செய் பாவை வயிரமொ டாம்ப
லொன்றுவாய் நிறையக் குவைஇ யன்றவ
10 ணிலந்தினத் துறந்த நிதியத் தன்ன
வொருநா ளொருபகற் பெறினும் வழிநாட்
டங்கலர் வாழி தோழி செங்கோற்
கருங்கால் மராத்து வாஅன் மெல்லிணர்
சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடிக்
15 கல்லா மழவர் வில்லிடந் தழீஇ
வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
மொழிபெயர் தேஎத்த ராயினும்
பழிதீர் காதலர் சென்ற நாட்டே.

என்பது : பிரிவிடை ஆற்ருளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

—மாமூலனார்.

## இதன் பொருள்

இலங்கு வளை நெகிழ சாஅய் அல்கலும் கலங்கு அஞர் உழந்து நாம் இவண் ஒழிய - இலங்குகின்ற கைவளைநெகிழுமாறு மெலிந்து தினமும் கலங்கும் துன்பமுழந்து நாம் இவ்விடத்துத் தனித்திருப்ப ;

பழி தீர் காதலர் சென்ற நாட்டு — பழியினின்றும் நீங்கிய நம் காதலர் தாம் சென்ற வேற்று நாட்டிலே ;

முந்நீர் ஓட்டி கடம்பு அறுத்து வலம் படு முரசின் சேரலாதன் இமயத்து முன்னோர் மருள் வணங்கு வில் பொறித்து மாந்தை நல் நகர் முற்றத்து ஒன்னார் பணி திறை தந்த பாடு சால் நல் கலம் பொன் செய் பாவை வயிரமொடு ஆம்பல் ஒன்று வாய் நிறைய குவைஇ அன்று நிலம் தின அவண் துறந்த நிதியம் அன்ன ஒரு நாள் ஒரு பகல் பெறினும் — கடலில் நாவாயைச் செலுத்திக் கடம்பினை அறுத்து அதுகொண்டு இயற்றிக் கொண்ட வெற்றிமிக்க முரசினையுடைய சேரலாதன் இமயமலையில் முன்னோரெல்லாம் வியக்க வளைந்த விற்பொறியைப் பொறித்து (மீண்டுவந்து), மாந்தைக்கண்ணுள்ள நன்மையினையுடைய தன் கோயிலின் முற்றத்துப் பகைவர் பணிந்து திறையாகத் தந்த பெருமைமிக்க நல்ல ஆபரணங்களோடு பொன்னாற் செய்த பாவையையும் வயிரங்களையும் ஆம்பல் என்னும் எண் அளவு நிறையக் குவித்து, அன்று நிலம் தின்னும்படி அவ்விடத்தே துறந்த அந் நிதியன்ன நிதியினை நம் காதலர் ஒருநாள் ஒருபகலிற் பெற்ருலும் ;

சே கோல் கரு கால் மராத்து வாஅல் மெல் இணர் சுரிந்து வணர் பித்தை பொலிய சூடி கல்லா மழவர் வில் இடம் தழீஇ வருநர் பார்க்கும் வெருவரு கவலை மொழி பெயர் தேஎத்தர் ஆயினும் — சிவந்த கொம்பினையும் கரிய காம்பினையுமுடைய மராமரத்து வெளிய மெல்லிய பூங்கொத்தினைச் சுரிந்துவளைந்த தலைமயிர் பொலிவுறச் சூடி, ஆறலைக்கும் தொழிலையன்றிப் பிறதொழிலைக் கல்லாத மழவர் வில்லை இடப்புறத்திலே தழுவிச் சுரத்திடையே வருகின்ற சாத்தரைப் பார்க்கும் அச்சம் வருகின்ற கவர்த்த பாலைநில வழிகளையுடைய பாடைவேறுபட்ட திசையிலுள்ளாராயினும் ;

வழி நாள் தங்கலர் வாழி தோழி — மறுநாள் தங்கார் ; தோழி நீ வாழ்க என்று, பிரிவிடை ஆற்ருளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தினள் என்க.

வளைநெகிழ மெலிந்து அஞருழந்து நாம் இவண் ஒழிந்திருக்க நம் காதலர் சேரலாதன் துறந்த நிதியன்ன நிதியை ஒருநாள் ஒருபகலிலே தாம் சென்ற நாட்டின்கண் பெறினும், வழிநாள் ஆண்டுத் தங்கலர் என்று கூட்டுக.

மழவர் இணர்சூடி வில் தழீஇ வருநர்ப்பார்க்கும் கவலைத்தேஎம் என்க.

இச் சேரலாதன் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனுவான். இந்நூல் 55, 347, 396 ஆம் பாடல்களிற் கூறப்பட்டவனும் இவனே. கடம்பு அறுத்து - கடம்பு அறுத்ததனுல் என்று காரணப் பொருட்டாக்குக.

"கடம்பு அறுத்து இயற்றிய பண்ணமை முரசு" என்று இந்நூலுள் 347ஆம் பாட்டிற் கூறப்பட்டமையானும், "கடம்பறுத்து இயற்றிய வலம் படு வியன்பணை" என்புழிப் 'போர்செய்து வருந்தாமற் பகைவர் வெருவி யோட முழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலே படநின்ற முரசு' என்று பதிற். (17) உரைகாரர் கூறுதலானும் இப்பொருள் கொள்ளப்பட்டது.

இக்கடம்பு வஞ்சத்தால் மூப்பின்றி ஒருநாளைப்போல நின்ற தென்ப. இது 'திரள்பூங் கடம்பின், கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்' என்றும், முந்நீருட் புக்கு மூவாக் கடம்பெறிந்தான் மன்னர் கோச்சேரன்' என் றும் வந்தனநோக்கி உணரப்படும். (பதிற். 11. சிலப். ஆய்ச்சியர்.)

இவன் இமயத்து விற்பொறித்த செய்தி இந்நூல் 347, 396 ஆம் பாடல்களாலும் பிறவற்றுலும் அறியப்படும்.

காதலர் பொருளால் மயங்கியும், போரால் உயங்கியும் வேற்று நாட்டுத் தங்கார் என்று தலைமகனது புகழும் வீரமும் எடுத்துக்கூறித் தோழி வற்புறுத்தினுள் என்க.

அத்துச் சாரியை அல்வழிக்கண் வந்தது. சாய்தல் - மெலிதல். முந்நீர் ஆவது, ஆக்கல் அழித்தல் காத்தல் என்ற முத்தொழிலையுமுடைய நீர். பணிதிறை - பணிந்தது காரணமாக இட்ட திறை. ஆம்பல் - ஓர் எண். பித்தை - ஆண்மக்கள் தலைமயிர்.

பி - ம். 4. முன்னீரோட்டி ; கடம்பெறிந். 9. யின்றவண். 13. கடுங் கான்மாஅத்து. 14. வளர்பித்தை.

## 128. குறிஞ்சி

மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்ரூ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
5 யெவன்கொல் வாழி தோழி மயங்கி
யின்ன மாகவு நன்னர் நெஞ்ச
மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்

கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
10 கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மிதிப்புழி நோக்கியவர்
15 தளரடி தாங்கிய சென்ற தின்றே.

என்பது: இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

—கபிலர்.

## இதன் பொருள்

மன்று பாடு அவிந்து மனை மடிந்தன்று — ஊர் அம்பலங்கள் ஒலியடங்கி மனைகளும் உறங்கின.

கொன்றன்ன கொடுமையொடு இன்று யாமம் கொளவரின் காமம் கனைஇ கடலினும் உரைஇ கரைபு ஒழியும் — கொன்றாலொத்த கொடுமையொடு இன்று நடுயாமப்பொழுது வருமாயின் காமமானது செறிந்து கடலினுங்காட்டிற் பரந்து பின்னர்க் கரைந்து ஒழியும்; ஓர், அசை.

இன்னம் ஆகவும் நன்னர் நெஞ்சம் மயங்கி என்னொடும் நின்னொடும் சூழாது கை மிக்கு — நாம் இவ்வண்ணமாகவும் நம் நல்ல நெஞ்சமானது மயங்கி என்னொடும் நின்னொடும் ஆராயாது கை கடந்து;

இறும்பு பட்டு இருளிய இட்டு அரு சிலம்பில் குறு சுனை குவளை வண்டு பட சூடி கான நாடன் வரூஉம் யானை புறத்து கயிறு அன்ன கல் மிசை சிறு நெறி — சிறுகாடிட்டு இருண்ட குறுகிய கடத்தற்கரிய பக்கமலையின்கண்ணுள்ள குறுமையினையுடைய சுனைக்கண் பூத்த குவளைமலரை வண்டுமொய்க்கும்படி சூடிக் கானநாடன் வாராநின்ற யானைமுதுகிற்கிடந்த கயிற்றுத் தழும்புபோன்ற கன்மிசையேயுள்ள சிறிய வழியிலே;

மாரி வானம் தலைஇ நீர் வார்பு அரு இட்டு கண்ண படுகுழி இயவின் — மாரிக்காலத்து மேகம் மழைபெய்து நீங்கக்கூதிரிலே நீர் ஒழுகிச் சேறற்கரிய குறுகிய இடத்திலுள்ள படுகுழிகளையுடைய வழியிலே;

இருள் இடை மிதிப்புழி நோக்கி அவர் தளர் அடி தாங்கிய இன்று சென்றது எவன்கொல் — இருளிடையே அவர் மிதிக்குந்தோறும் பார்த்து அவரது தளராநின்ற அடியைத் தாங்கும்பொருட்டு இன்று சென்றதே!

அஃது என்ன பயனைக் கருதியோ? ; தோழி வாழி — தோழி அதனைச் சொல்லிக்காண் ; நீ வாழ்க, என்று இரவுக்குறிவந்த தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்க.

நன்னர் நெஞ்சம் என்றாள், தானகன்று அவலித்திருப்பவும் தலைவரது தளரடியைத் தாங்கச்சென்ற தன் நெஞ்சத்தின் அன்புமிகுதியை நோக்கி.

யானையும் அதன் புறத்துக் கயிற்றுத் தழும்பும், கல்லுக்கும் அதன் புறத்தே பதிந்துள்ள அடிச்சுவட்டிற்கும் உவமை. "இரட்டைக் கிளவி யிரட்டை வழித்தே" என்பது விதி.

மன்றுபாடவிந்து மனை மடிந்தன்று ; காமம் கரைபொழியும் ; நாம் இன்னமாகவும் நெஞ்சம் கானநாடன் வரூஉம் சிறு நெறிக்கட் படு குழியிய வின் அவர் இருளிடை மிதிப்புழி நோக்கித் தளரடிதாங்கிய இன்று சென் றது. இஃது எவன்கொல் என்க.

"மாயோன மேய காடுறை யுலகமும்" என்னும் அகத்திணையியற் சூத்திர விசேடவுரையில், "இறும்புபட்............கன்மிசைச் சிறுநெறி" என்பது குறிஞ்சி ஒழுக்கத்திற்குக் குறிஞ்சி நிலம் உரிய தாயிற்று என்றும், "காரு மாலையு முல்லை குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்" என்ற அவ்வியற் சூத்திரவுரையில், குறிஞ்சிக்கட் கூதிரும் யாமமும் வந்ததற்கு இப்பாட்டினைக் காட்டி, இஃதிரவுக் குறிக்கட் சிறைப் புறமாகத் தோழிக் குரைப்பாளாக உரைத்தது என்றும் ; "மறைந்தவற் காண்டல்" என்னுங் களவியற் சூத்திரத்துப் 'பொழுது மாறும் புரைவ தன்மையின், அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்' என்னும் பகுதிக்கு இப் பாட்டினைக் காட்டி, "காமம் கரைபு ஒழியாநிற்கவும் என்ன நன்றிகருதி இருவரொடுஞ் சூழாது சென்றது நெஞ்சு எனப் பொழுதும் நெறியும் இரண்டுங் கூறினாள், மனைமடிந்தன்றே என்பது பொழுது ; சிறுநெறியென்பது ஆற்றின்னாமை. இதனைப் பொருளியலுட்கூறுது, தன்வயி னுரிமையும், அவன்வயிற் பரத் தைமையும்பற்றி ஈண்டுக் கூறினன்" என்றும், "பொழுது மாறுங் காப்பு" மென்னும் பொருளியற் சூத்திர வுரையில், 'மன்றுபா டவிந்து' என்பது, பொழுது வழுவுதலிற் குற்றங்காட்டியது என்றும், "நோயு மின்பமும்" என்னும் அவ்வியற்சூத்திரவுரையில், இப்பாட்டில், 'நெஞ்சம் தளரடி தாங்கிய சென்ற தின்றே' என்பது உறுப்புடையது போல அழு கைபற்றிக் கூறியது என்றும் காட்டுவர் நச். (தொல். பொருள். 5 ; 6 ; 111 ; 210 ; 196.) இனிப் பேரா. "முட்டுவயிற் கழறல்" என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்து. 'அச்சத்தி னகறல்' என்னும் மெய்ப்பாட்டி ற்கு இதனை உதாரணமாகக் காட்டி, 'இதன் கருத்தாவது: நாம் இவர்

இருளிடைவருத லேதமஞ்சி அகன்று அவலித்திருப்பேம், என்னையும் நின்னையும் கேளாது என்னெஞ்சு போவானேன் என்றவாறாயிற்று' என்பர். (ஷை. ஷை. 271.) "செல்வர் மனத்திறேங்கி" என்னுஞ் செய்யுளுரையில் "யானைக் கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி" என்பது வழியின் ஓக்கத்தைக் கூறியதாகக் கொள்வர். நச். (சிந்.1416).

பி - ம் : 3. கோள்வரின். 6. இன்னணா. 13. படுகுழியியலின்.

## 129. பாலை

உள்ளல் வேண்டு மொழிந்த பின்னென
நள்ளென் கங்கு னடுங்குதுணை யாயவர்
நின்மறந் துறைதல் யாவது புன்மறந்
தலங்கல் வான்கழை யுதிர்நென் ஞெக்கிக்
5 கலைபிணை விளிக்குங் கானத் தாங்கட்
கல்சேர் பிருந்த கதுவாய்க் குரம்பைத்
தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்
பொதிவயிற் றிளங்காய் பேடை யூட்டிப்
போகில்பிளந் திட்ட பொங்கல் வெண்காழ்
10 நல்கூர் பெண்டி ரல்குற் கூட்டுங்
கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்பக்
கொழுப்பா தின்ற கூர்ம்படை மழவர்
செருப்புடை யடியர் தெண்சுனை மண்டு
மருஞ்சுர மரிய வல்ல வார்கோற்
15 றிருந்திழைப் பணைத்தோட் டேஎறு கதுப்பிற்
குவளை யுண்க ணிவளொடு செலற்கென
நெஞ்சுவா யவிழ்ந்தனர் காதல
ரஞ்சி லோதி யாயிழை நமக்கே.

என்பது ; பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

— குடவாயிற் கீரத்தனார்.

### இதன் பொருள்

அம் சில் ஓதி ஆய் இழை — அழகிய சிலவாகிய அளகத்தினையும் ஆராய்ந்த ஆபரணங்களையுமுடைய தலைவீ!

ஒழிந்த பின் உள்ளல் வேண்டும் என நள் என் கங்குல் நடுங்கு துணையாயவர் — இவளை நாம் பிரிந்துபோயபின் இவள் இறந்துபாட்டை

நினைந்து நாம் இரங்கவேண்டுமன்றோ என நினைந்து நள்ளென்னும் இரவில் நடுங்குந்துணையினரான நம் தலைவர் ;

புல் மறந்து அலங்கல் வான் கழை உதிர் நெல் நோக்கி கலை பிணை விளிக்கும் கானம் ஆங்கண் — தான் புல்லுத் தின்னுதலை மறந்து காற்றால் அசைந்தாடும் பெரிய மூங்கிலினின்றும் உதிரும் நெல்லை நோக்கிக் கலைமான் தன் பிணையை அழைக்கும் கானத்திடத்தே ; புன் மறைந்து என்ற பாடத்திற்குப் புல்லுப்புதரிலே மறைந்திருந்து என்க.

கல் சேர்பு இருந்த கதுவாய் குரம்பை — கற்பாறையொடு சேர்ந்து அமைந்திருந்த வடுப்பட்ட சிற்றில்லிலே ;

தாழி முதல் கலித்த கோழ் இலை பருத்தி பொதி வயிற்று இள காய் பேடை ஊட்டி — தாழியிடத்தே செருக்கிவளர்ந்த கொழுவிய இலையையுடைய பருத்திமொட்டினிடத்துள்ள இளங்காயைத் தன் பேடைக்கு ஊட்டி ; போகில் பிளந்து இட்ட பொங்கல் வெள் காழ் நல்கூர் பெண்டிர் அல்குல் கூட்டும் — ஆண் பறவைகள் கொத்திப் பிளந்து போகட்ட பஞ்சி பொங்கி எழுந்த வெளிய அப்பருத்திக் கொட்டையை வறுமையுற்ற பெண்டிர் தம் அல்கு லிடத்துக் கூட்டாநிற்கும் ; அல்கற்கூட்டும் என்ற பாடத்திற்கு, இரவிற் கூட்டும் என்க. பொங்கர் வெண்காழ் என்ற பாடத்திற்குச் சிறு கொம்பிலுள்ளகாழ் என்க.

கலங்கு முனை சிறு ஊர் கை தலை வைப்ப—கலங்குதற்குக் காரணமான போர்முனையையுடைய சிறியஊரினர் கையைத் தலைமீதுவைத்தலமரும்படி;

கொழுப்பு ஆ தின்ற கூர் படை மழவர் செருப்பு உடை அடியர் தெள் சுனை மண்டும் அரு சுரம் அவருடைய கொழுத்த ஆவைக்கவர்ந்து சென்று தின்ற கூரிய படையையுடைய மழவர் செருப்பினைப்பூண்ட அடியினராய்த் தெள்ளியசுனைக்கண் நீர்பருகும் நெருங்குதற்கரிய சுரமானது ;

வார் கோல் திருந்து இழை பணை தோள் தேன் நாறு கதுப்பின் குவளை உண் கண் இவளொடு செலற்கு அரிய அல்ல என காதலர் நெஞ்சு வாய் அவிழ்ந்தனர் -நீண்ட கோற்றொழிலமைந்த திருந்திய ஆபரணங்களையும் மூங்கில்போன்ற தோளையும் வண்டுமொய்க்கின்ற கூந்தலையும் குவளைபோன்ற மையுண்ட கண்ணையுமுடைய இத்தலைவியுடன் செல்லுதற் கரியவல்லவாயிராநின்றன என்று காதலர் நமக்குத் தம் மனக்கருத்தை வெளியிட்டனர் ;

அவ்வாறாகியபோது, நின் மறந்து உறைதல் யாவது - நின்னை மறந்து நம்காதலர் வேற்றுநாட்டு உறைதல் எவ்வாறு கூடும் என்று தலைமகட்குத் தோழி தலைமகன் பிரிந்தகாலத்துச் சொன்னாள் என்க.

அலங்கல் - அசைதல். கதுவாய் - வடுப்பட்ட வாய். முதல் - இடம். பொதி - மொட்டு. போங்கில் - புள். தேன் நாறுதல் - தேன் கமழ்தலுமாம்.

## 130. நெய்தல்

அம்ம வாழி கேளிர் முன்னின்று
கண்டனி ராயிற் கழறலிர் மன்னோ
நுண்டாது பொதிந்த செங்காற் கொழுமுகை
முண்டகங் கெழீஇய மோட்டுமண லடைகரைப்
5 பேஎய்த் தலைஇய பிணரரைத் தாழை
யெயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்
வயிறுடைப் போது வாலிதின் விரீஇப்
புலவுப்பொரு தழித்த பூநாறு பரப்பி
னிவர்திரை தந்த வீர்ங்கதிர் முத்தங்
10 கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கு
நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை
வண்டுவாய் திறந்த வாங்குகழி நெய்தற்
போதுபுறங் கொடுத்த வுண்கண்
மாதர் வாண்முக மதைஇய நோக்கே.

என்பது: கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது.

—வெண்கண்ணனார்.

### இதன் பொருள்

கேளிர் அம்ம - பாங்கனுரே! யான் சொல்வதனைக் கேட்பீராக!

நுண் தாது பொதிந்த சே கால் கொழு முகை முண்டகம் கெழீஇய மோடு மணல் அடை கரை - நுண்ணிய தாது மூடிய சிவந்த காம்பினையும் கொழுவிய மொட்டினையுமுடைய கழிமுள்ளி பொருந்திய மோடிட்ட மண லடைந்த கரையின்கண்ணே;

பேய் தலைய பிணர் அரை தாழை - பேய்போன்ற தலையையுடைய சருச்சரைபொருந்திய அரையினையுடைய தாழையினது;

எயிறு உடை நெடு தோடு பல உடன் காப்ப - முள்ளாகிய பற்களை யுடைய நெடிய மடல்கள் பல ஒருசேரக் காப்ப;

வயிறு உடை போது - நடு இடத்தைப் பிறப்பிடமாகவுடைய மொட்டுக்கள்; வாலிதின் விரீஇ - தூய்மையாக விரிந்து; புலவு பொருது அழித்த

பூ நாறு பரப்பின்* - புலால் நாற்றத்தினைப் பொருதுவென்று அழித்த தாழைப் பூமணமே கமழும் கடற்பரப்பின்கண் ; இவர் திரை தந்த ஈர் கதிர் முத்தம் - பரக்கின்ற அலைகள் கரையிலே தந்த குளிர்ந்த கிரணங்களையுடைய முத்தங்கள் ; கவர் நடை புரவி கால் வடு தபுக்கும் நல் தேர் வழுதி கொற்கை முன் துறை - விரும்பிய நடையையுடைய குதிரையின் காலை வடுப்படுத்து முடம் செய்யும் நல்ல தேரையுடைய வழுதியின் கொற்கைப்பட்டினத்து முதன்மையான கடற்றுறைக்கண்ணேயுள்ள ;

வண்டு வாய் திறந்த வாங்கு கழி நெய்தற் போது புறம் கொடுத்த வாள் முகம் உண் கண் மாதர் மதைஇய நோக்கு - வண்டினால் வாய் விரிக்கப் பெற்ற வளைந்த கழியிடத்துள்ள நெய்தற்போது அழகினுக்குத் தோற்றுப் புறங்கொடுத்த ஒளிபொருந்திய முகத்தின்கண்ணுள்ள மையுண்ட கண் ணின் காதலொடுபொருந்திய வனப்பு மிக்க பார்வையை ;

முன் நின்று கண்டனிர் ஆயின் கழறலிர் - எதிர் நின்று நீர் கண்டீரா யின் இவ்வாறு இடித்துக் கூறீர் ;

மன் - அது காணவில்லையாதலால், இடித்துக் கூறுகின்றீர் என்று கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தான் என்க.

முண்டக முகையொடு தாழைமுகை கெழீஇயது காதற்றோழியொடு தலைமகள் கூடியிருந்த தன்மையாகவும், தாழையின் தோடுகள் பல அம் முகையைக் காத்திருந்தது ஆயவெள்ளம் தலைமகளை இடைவிடாமற் சூழ்ந் திருந்த தன்மையாகவும் இறைச்சியிற் கூறிப் பாங்கற்குத் தலைமகன் தான் கண்ட தலைமகளது இயல்புரைத்தானாகக் கொள்க.

தாழம்பூக் கழியின்புறத்துள்ள புலவு நாற்றத்தினை நீக்கித் தன் மணமே கழியிடமெல்லாம் கமழுமாறு செய்ததுபோலத் தலைவியின் பாலுள்ள என் காதல் நின் உறுதிமொழியினையெல்லாம் அகற்றி அக் காத லையே பெருக்குவதாயிராநின்றது என்று இறைச்சியிற் பொருள்பட உரனொடு கிளந்து கழற்றெதிர் மறுத்தானாகக் கொள்க.

பாங்கன் கழறத் தலைமகன் கழற்றெதிர்மறுத்ததற்கே இப்பாட்டினை உதாரணமாகக் கொண்டார் நக்கீரரும். (இறை. களவி. 3)

பி-ம். 3. குறுமுகை. 5. பெய்தறலைஇய. 6. நெடுங்கோடு. 7. விரிய; விரைஇ. 8. பொருதிழிந்த. 10. கவர்பரி ; கவர்காற். 12. திறக்கும்; துறந்த. 13. புறக்கொடுத்த. (சொல்லியது. கழற்றெதிர்மறை.)

## 131. பாலை

விசும்புற நிவந்த மாத்தா ளிதணைப்
பசுங்கேழ் மெல்லிலை யருகுநெறித் தன்ன
வண்டுபடு பிருளிய தாழிருங் கூந்தற்
சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை
5 யிவளினுஞ் சிறந்தன் றீத னமக்கென
வீளை யம்பின் விழுத்தொடை மழவர்
நாளா வுய்த்த நாம வெஞ்சுரத்து
நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி புகுநீர் துடைத்த வாடவர்
10 பெயரும் பீடு மெழுதி யதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
வெருவரு தகுந கான நம்மொடு
வருக வென்னுதி யாயின்
15 வாரே னெஞ்சம் வாய்க்கநின் வினையே.

என்பது : பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

—மதுரை மருதனிளநாகனார்.

### இதன் பொருள்

விசும்பு உற நிவந்த மா தாள் இதணை பசு கேழ் மெல் இலை அருகு நெறித்தன்ன வண்டு படுபு இருளிய தாழ் இரு கூந்தல் சுரும்பு உண விரிந்த பெரு தண் கோதை இவளினும் ஈதல் நமக்கு சிறந்தன்று என — ஆகாயத்தை அளாவி உயர்ந்த கரிய அரையினையுடைய இதணை மரத்தின் பசிய நிறமுடைய மெல்லிய இலைகள் ஒன்றினருகு ஒன்று ஒடித்து வைக்கப்பட்டாற்போல வண்டு மொய்த்து இருண்ட முதுகின் புறத்தே தாழ்ந்த கரிய கூந்தலையும் சுரும்பு நுகர விரிந்த பெரிய தண்ணிய மாலையி னையுமுடைய இத்தலைவியினும் வறியோர்க் கீதலே நமக்குச் சிறந்ததென ;

வீளை அம்பின் விழு தொடை மழவர் - 'வீள்' என்னும் சீழ்க்கை ஒலிபொருந்திய தப்பாத அம்புத்தொடையையுடைய வீரர்; நாள் ஆ உய்த்த நாம வெம் சுரத்து - நாட்காலையிலே வெட்சிசூடினராய் ஆன் நிரையைக் கவர்ந்துகொண்டுபோன அச்சம்பொருந்திய வெவ்விய பாலைநில வழியிடத்தே ; சேண் நடை மெலிந்து ஒழிந்த படர் கன்றின் கடைமணி உகு நீர் துடைத்த ஆடவர் - தூர நடையினாலே மெலிந்து தம் தாயுடன் செல்லமாட்டாது தங்கிவிட்ட நினைவுத்துன்பத்தையுடைய

கன்றுகளின் கடைக்கண்ணினின்றும் ஒழுகும் நீரைத் துடைத்த கரந்தை வீரர்களது; அஃதாவது நிரைமீட்டு அப்போரிற் பட்டிறந்த வீரர்களது;

பெயரும் பீடும் எழுதி பீலி சூட்டிய அதர்தொறும் பிறங்கும் நிலை நடுகல் - பெயரும் பெருமையும் பொறித்து மயிற்பீலி சூட்டப்பெற்ற பாலைநில வழிதோறு முயர்ந்து தோன்றுகின்ற நிலையான நடுகற்களிடத்து; வேல் ஊன்று பலகை - அந் நடுகலிடத்தவன் பிடித்த வேலை நட்டு அதன்கண் சார்த்தப் பெற்ற கேடகங்கள்; வேற்றுமுனை கடுக்கும் - வேற்று வேந்தரது போர்முனையை ஒவ்வாநின்ற; வெருவரு தகுந கானம் - அச்சம் வருகின்ற கானத்தே;

நெஞ்சம் நம்மொடு வருக என்னுதி ஆயின் - நெஞ்சமே! நம்மொடு நீ வருக என்றழைப்பையாயின்; வாரேன் நின் வினை வாய்க்க - நான் வாரேன்; நீ செல்லுக; நின் காரியம் கைகூடுக, என்று பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொன்னான் என்க.

இதணை இலை அருகு நெறித்தன்ன வண்டுபடு இருளிய கூந்தற் கோதை இவளினும் நமக்கு ஈதல் சிறந்தன்று என நெஞ்சே, கானம் நம்மொடு வருக என்னுதியாயின், வாரேன்; நின் வினை வாய்க்க என்க.

இதணை என்பது மருதநிலத்துக்குரிய ஒருமரம்; இதனை இகணை எனவும் வழங்குப. "இலையணி இதணை" என்றும் "இலைக்கொடிச் செல்வமொடு தலைப்பரந் தோங்கிய கணைக்காலிதணை" என்றும் பாராட்டப் பட்டுள்ளமையால், இஃது அழகிய நிறமுடைய இலை நெருங்கிய பெரிய மரம் என்பது புலனும். நடுகல்லிற் பெயரும் பீடும் எழுதுதலும் மயிற்பீலி சூட்டுதலும், அந்நடுகற்கு உரியான் பிடித்தவேலை நட்டு அதன்கண் கேடகத்தைச் சார்த்துதலும் மரபு. பலகை - கேடகம். நாம் - அச்சம்.

"வெறியறி சிறப்பின்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்து, "ஆபெயர்த்துத் தருதலும்" என்னும் பகுதிக்கு இப்பாட்டினை உதாரணமாகக் காட்டி "இதனுள் 'மறவர் நாளா வுய்த்த' என வேந்துறுதொழில் அல்லாத வெட்சித்திணையும் பொதுவியற் கரந்தைக்கண்ணே கொள்க" என்றும், "பெயரும் பீடு மெழுதி யதர்தொறும் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" என அகத்திற்கும் வருதலிற் பொதுவியலாயிற்று" என்றும், 'நோயு மின்பமும்' என்னும் பொருளியற் சூத்திரத்து "வருக வென்னுதி யாயின், வாரேன் நெஞ்சம் வாய்க்கநின் வினையே' என்பது மறுத்துரைப்பது போலத் தறுகண்மை பற்றிப் பெருமிதங் கூறிற்று" என்றுங் கூறுவர் நச். (தொல். பொருள் 60, 196.)

பி - ம் 1. ளிகைப். 6. வீவாயம்பின். 12. படுக்கும். 15. வோர நெஞ்சம்.

## 132. குறிஞ்சி

ஏனலு மிறங்குகுர லிறுத்தன நோய்மலிந்
தாய்கவின் றொலைந்தவிவ ணுதலு நோக்கி
யேதில மொழியுமிவ் வூரு மாகலிற்
களிற்றுமுகந் திறந்த கவுளுடைப் பகழி
5 வாணிணப் புகவிற் கானவர் தங்கை
யம்பணை மென்றோ ளாயிதழ் மழைக்க
ணொல்கியற் கொடிச்சியை நல்கினை யாயிற்
கொண்டனை சென்மோ நுண்பூண் மார்ப
துளிதலைத் தலைஇய சார னளிசுனைக்
10 கூம்புமுகை யவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை

---

இறங்கு குரல் ஏனலும் இறுத்தன இவள் நுதலும் நோய் மலிந்து ஆய்கவின் தொலைந்த இவ்வூரும் நோக்கி ஏதில மொழியும் - தூங்கித் தாழ்ந்த கதிரினையுடைய தினையும் அறுக்கப்பட்டன ; இவளுடைய (தலைவியுடைய) நுதலும் நோய்மிக்கதனால் ஆயத்தாரால் ஆராயப்பட்ட அழகுகெட்டது ; இவ்வூராரும் இதனைநோக்கிப் புறமான சொற்க ளைச் சொல்லுகின்றனர். ஆகலின் - ஆதலினாலே, அம்பணை மென் தோள்ஆய் இதழ் மழைக்கண் ஒல்கு இயல் கொடிச்சியை நல்கினை ஆயின், நுண்பூண்மார்ப! பெருங்கல் வேலி நும் உறைவு இன் ஊர்க்கு கொண்டனை சென்மோ - அழகிய மூங்கில் போன்ற மெத்தென்ற தோளினையும் ஆராய்ந்தெடுத்த இதழ்போன்ற குளிர்ந்த கண்ணினையும் துவளும் இயல்பினையுமுடைய குறிஞ்சிநிலத் தலைவியை அருளு வையாயின் நுண்ணிய வேலைப்பா டமைந்த ஆபரணம் பூண்ட மார்பனே ! (தலைவனே!) பெரிய மலை வேலியையுடைய வசித்தற்கு இனிய நும் ஊர்க்கு மணந்து கொண்டு செல்வீராக என்று சொல்லி, தோழி தலைமகனை விளையாடு மிடத்து உய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று வரைவு கடாயினள் என்க.

களிற்று முகம் திறந்த பகழி - களிற்றின் முகத்தினைப் பிளந்த அம்பினையும்; கவுளுடைவால் நிண புகவின் - கன்னத்தில் அடக்கிய வெள்ளிய நிணமாகிய உணவினையுமுடைய; கானவர் தங்கை - குறிஞ்சி நில மாக்களின் தங்கையாகிய அம்பணைத்தோள் கொடிச்சியை

வேங்கை விரியிணை ரூதிக் காந்தட்
டேனுடைக் குவிகுலைத் துஞ்சி யானை
யிருங்கவுட் கடாஅங் கனவும்

---

என்று இயைக்க. களிற்று முகம் திறந்த பகழிக் கானவர் என்றும் கவளுடை நிணப் புகவின் கானவர் என்றும் இயையும். பகழிக்குக் 'கவுள்' அடை பொருந்துமேற் கொள்க.

துளிதலைத் தலைஇய சாரல் - மழைத்துளியை முதற் பெயலாகப் பெய்துவிட்ட மலைச்சாரலிலே ; நளி சுனை கூம்பு முகை அவிழ்த்த குறு சிறை பறவை - பலவாகச் செறிந்த சுனையிடத்துக் கூம்பிய மொட்டை விரித்த குறுமையான சிறகையுடைய பறவையாகிய வண்டுகள் ; வேங்கை விரி இணர் ஊதி - வேங்கையின் விரிந்த பூங்கொத்தினை நுகர்ந்து; தேனுடை காந்தள் குவி குலை துஞ்சி - தேனை யுடைய காந்தளின் குவிந்த குலையிலே உறங்கி ; யானை இரு கவுள் கடாம் கனவும் - யானையினது பெரிய கவுளிடத்து ஒழுகும் மதநீரை உண்பதாகக் கனக் காணும் பெருங்கல்வேலி ஊர் என்று கூட்டுக.

கூம்பு முகை அவிழ்த்த பறவை வேங்கையின் இணரூதி, காந்தட் குலையில் துஞ்சி, யானைக்கடாம் கனவும் என்றதன் கருத்து, தலைமகளின் நாண் முதலிய தளைகளை அவிழ்த்த தலைமகன் அவளை நுகர்ந்து, பாங்கற் கூட்டமும் பின்னர்த் தோழியிற் கூட்டமும் பெற்று, பின்னரும் இரவுக்குறி பகற்குறிகளால் அடைதற்கரிய கூட்டம் பெறச் சிந்தியாநின்றான் எ - று. அவ்வெண்ணத்தை விட்டு வரைவொடு புகுதக எனத் தலைமகனைத் தோழிவரைவு கடாயினாள் என்றுகொள்க.

குரல் - கதிர். இறுத்தல் - ஒடித்தல் ; அழித்தலுமாம். ஏதில - புறப்பழியான சொற்கள். புகவு - உணவு.

'வானிணப் புகவின் கானவர் தங்கை' என்பது "ஆயர்......... .........ஆஉேத்திணைப் பெயர்" என்ற சூ. மேற்கோள். (தொல். பொருள். 21.)

பி - ம். 6. ளாயிழைமழைக்கண். 9. துளிதலைக்கலைஇய. 11. விரியிணரூதிரக் காந்தட். (தையங் கண்ணனார். கையங்கண்ணனார். தகையங் கண்ணனார். கதையங் கண்ணனார்.)

பெருங்கல் வேலிநும் முறைவி னூர்க்கே.

என்பது : தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை யெதிர்ப் பட்டு நின்று வரைவுகடாயது.

—தாயங்கண்ணனார்.

## 133. பாலை

குன்றி யன்ன கண்ண குரூஉமயிர்ப்
புன்றாள் வெள்ளெலி மோவா யேற்றை
செம்பரன் முரம்பிற் சிதர்ந்த பூழி
நன்னாள் வேங்கைவீ நன்களம் வரிப்பக்
5 கார்தலை மணந்த பைம்புதற் புறவின்
வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழுங்
கொல்லை யிதைய குறும்பொறை மருங்கிற்
கரிபரந் தன்ன காயாஞ் செம்மலொ
டெரிபரந் தன்ன விலமலர் விரைஇப்
10 பூங்கலுழ் சுமந்த தீம்புனற் கான்யாற்று

---

மிளை நாட்டு அத்தத்து ஈர்ஞ் சுவல் கலித்த வரி மரல் கறிக்கும் மடம் பிணை திரி மருப்பு இரலைய காடு இறந்தோர் - மிளை என்னும் நாட்டிலே பாலை நில வழியிலேயுள்ள ஈரிய மோட்டிடத்திலே செருக்கி வளர்ந்த வரிகளையுடைய மரலைக் கடிக்கும் மடப்பிணையுடன்கூடிய திரிந்த கொம்பினையுடைய இரலைமான் வாழும் காட்டிற் சென்ற நம்தலைவர்; கான்யாறு தூவல் வான் கொள் வளிதர உண்ணும் எம்மொடு வருதல் வல்லையோ என - காட்டாற்று நீர்த் துவலையை வானை எட்டிய காற்று எழுப்பித்தர உண்ணுவேமாகிய எம்மோடு வருதலை மாட்டுவையோ என்று; கொன் ஒன்று வினவினர் தோழீ - பெருமை பொருந்திய ஒரு வார்த்தையைக் கேட்டார் தோழீ! மன் - கேட்டனரேயன்றிக் கொண்டு தலைக்கழிந்திலர் என்று தலைமகள் தோழிக்குக் கூறினாள் என்க.

மன், ஒழியிசை. ஒருகாற் கொண்டு தலைக்கழிதலும் கூடும் என்று தலைவி நினைத்தலால், அவள் ஆற்றுதல் பெற்றாம். தான் பசித்திருக்கவும் தன்பிணை மரலைக் கறித்துப் பசிதீர்வதைக் கண்டு மகிழும் இரலை

வான்கொ ரேவல் வளிதா வுண்கு
மெம்மொடு வருதல் வல்லையோ மற்றெனக்
கொன்னொன்று வினவினர் மன்னே தோழி
யிதன்முள் ளொப்பின் முகைமுதிர் வெட்சி
15 கொல்புனக் குருந்தொடு கல்லறைத் தாஅ
மிளைநாட் டத்தத் தீர்ஞ்சுவற் கலித்த

---

யையுடைய காட்டிற் சென்றவராதலால் நம்தலைவர் தாம் கடத்தில் உழந்தாராயினும் நம் நோய் தீர விரைய வந்து அருளுவர் என்று தலைவி குறிப்பால் உணர்த்தினாள் என்க.

கரி பரந்து அன்னகாயா செம்மலொடு எரிபரந்து அன்ன இலமலா விரைஇ பூகலுழ் சுமந்த தீபுனல் (கான்யாறு) - கரிபரவினாற் போன்ற காயாவினது பூவாடலோடு எரிபரவினாற்போன்ற இலவமலர் கலந்து அழகிய வண்டலைச் சுமந்த தீவிய நீரையுடைய கான்யாறு என்க.

கார் தலைமணந்த பை புதல் புறவின் வில் எறி பஞ்சியின் வெண் மழை தவழும் கொல்லை இதைய குறு பொறை மருங்கின் (கான்யாறு) - கார் காலம் தலைக்கூடியதனால் பசிய புதல்களையுடைய முல்லை நிலத் திலே வில்லினாலே எஃகப்பட்ட பஞ்சிபோல வெள்ளிய மேகங்கள் தவழாநிற்கும் தரிசான காட்டிடத்துப் புதுப் புனத்தினையுடைய சிறிய மலையின் பக்கத்திலே ஓடும் கான்யாறு என்று கூட்டுக. புறவின் குறும்பொறை மருங்கிற் கான்யாறு என்று இயையும்.

குன்றி அன்ன கண்ண குரூஉ மயிர் புல் தாள் மோவாய் ஏற்றை வெள் எலி செம்பரல் முரம்பில் சிதர்ந்த பூழி நன்னாள் வேங்கை வீ நன் களம் வரிப்ப - குன்றிமணிபோலும் கண்ணுடையனவாய் நன்னிறம் பொருந்திய மயிரையும் புல்லியகாலையும் தாடியையுமுடைய ஆண் வெள் ளெலிகள் சிவந்த பரல்கள் மிக்க வன்னிலத்திலே கிளறிய புழுதியின் கண்ணே மண நாளாகிய நன்னாளிலே பூக்குமியல்புடைய வேங்கைப்பூ விழுந்து நல்ல வெறியாடும் களம்போல அழகு செய்யாநிற்கக் கார்காலம் தலைமணந்த என்க.

இதல் முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி கொல்புனம் குருந்தொடு கல் அறை தாஅம் (மிளைநாடு) - சிவலின் கால் முள்ளை ஒத்தனவான

வரிமாற் கறிக்கு மடப்பிணைத்
திரிமருப் பிரலைய காடுறங் தோரே.

என்பது: பிரிவிடை யாற்ருளாயினளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

—உறையூர் மருத்துவன் ருமோதரனர்.

## 134. முல்லை

வானம் வாய்ப்பக் கவினிக் கானங்
கமஞ்சூன் மாமழை கார்பயந் திறுத்தென
மணிமருள் பூவை யணிமல ரிடையிடைச்

---

மொட்டு முதிர்ந்த வெட்சிப்பூ கானவா சுட்டு அழித்த தினைப் புனத்துக் குருந்தம் பூவோடு கற்பாறையின்கண் தாவும் மிளைநாடு என்க.

மிளைநாடு என்பது ஒருநாடு; இந்நாட்டினர் மிளைக்கந்தன்; மிளை கிழான் நல்வேட்டன், மிளைவேள்தித்தன் முதலிய பல புலவர்களாவார். இரநாடு என்னும் பாடத்திற்கு அப்பெயரிய நாடு ஒன்று உண்டுபோலும். இளைநாடு என்று கொள்ளலுமாம்.

மோவாய் - தாடி. முரம்பு - வன்னிலம். சிதர்தல் - கிளறுதல். செம்மல் - பூவாடல். இலவமலர், இலமலர் என்று கடைக்குறைந்தது. கலுழ் - வண்டல்நீர் கொல்லை - பயிரின்றித் தரிசாய்க்கிடந்த காடு, இதை - புதுப்புனம்.

இப்பாட்டினை, 'இது பாலைக்கண் இரங்கல் நிகழ்ந்தது' என்பர் நச் (தொல். பொருள். 15.)

பி-ம். 6. பஞ்சினிளமழை. 10. பூங்கலுழ்சிறந்த. 11. வலைதா; வான் கோ லெல்வளை நீர்தரவுண்கு. 16 மிர, மிரை; சுவர்க்.

வானம் வாய்ப்ப கமம் சூல் மாமழை கார் பயந்து இறுத்த என - மழையானது தப்பாமல் வாய்த்தமையாலே நிறைந்த சூலையுடைய கரிய மேகங்கள் கார்காலத்தின் பயன்விளையப் பெய்ததாக; கானம் கவினி - காடுகள் அழகுற்று; மணிமருள் பூவை அணிமலர் இடை இடை செம்

செம்புற மூதாய் பரத்தலி னன்பல
5 முல்லை வீகழ றூஅய் வல்லோன்
செய்கை யன்ன செந்நிலப் புறவின்
வாஅப் பாணி வயங்குதொழிற் கலிமாத்
தாஅத் தாளிணை மெல்ல வொதுங்க
விடிமறந் தேமதி வலவ குவிமுகை
10 வாழை வான்பூ வூழ்று புதிர்ந்த
வொழிகுலை யன்ன திரிமருப் பேற்றொடு
கணைக்கா லம்பிணைக் காமர் புணர்நிலை

---

புற மூதாய் பரத்தலின் - நீலமணியை ஒக்கும் காயாம்பூவின் அழகிய மலர்களின் இடைஇடையே சிவந்த முதுகினையுடைய இந்திரகோபம் என்னும் பூச்சி பரவி ஊர்தலினாலும்; நன்பல முல்லை வீ கழல் தாஅய் - நல்ல பல பல முல்லைப் பூக்கள் கழலின் கொடிக்கண் தாவுதலினாலே யும்; வல்லோன் செய்கை அன்ன செம் நில புறவின் - சித்திரம் எழுத வல்லவன் செய்கையை ஒக்கும் சிவந்த நிலத்தினையுடைய முல்லை நில வழியிலே; வாஅ பாணி வயங்கு தொழில் கலிமா தாஅ இணை தாள் மெல்ல ஒதுங்க இடிமறந்து ஏ மதி வலவ - தாவிச் செல்லுதலினாலே தாளம்விளங்குகின்ற நாட்டியத் தொழில் பயின்ற மனஞ்செருக்கிய குதிரையினுடைய தாவும் இணைஒத்த கால்களால் மெல்ல நடக்கும்படி சாட்டையால் அடித்தலை மறந்து வலவனே கடவுவாயாக; ஏனெனில், ஏற்றொடு புணர்நிலை கணைக்கால் காமர் பிணை கடுமான் தேர் ஒலி கேட்பின் நடுநாள் கூட்டம் ஆகலும் உண்டே - ஏற்றுமானுடன் புணரும் நிலையிலுள்ள திரண்ட கால்களையுடைய அழகிய பிணைமான் விரைந்து செல்லும் குதிரைபூண்ட தேரின் ஒலியைக் கேட்பின் அம்மருட்சியினாலே நடுநாளின்கண் முயக்கம் உண்டாதலும் கூடுமோ? (இல்லை) என்க.

தலைமகளைக் கூட விரைகின்ற தலைமகனாதலால், புணரும் நிலையிலுள்ள மானினங்களின் பிரிவுக்கு அஞ்சினான் என்க. எனவே, தலைவிமாட்டு அவனுக்குள்ள பெருங்காதல் உள்ளப்படும். இடிமறந்து என்பதற்குத் தாற்றுமுள்ளாற் குத்துதலை மறந்து என்றலுமாம்.

ஊழ் உறுபு உதிர்ந்த குவிமுகை வான் பூ ஒழி வாழை குலையன்ன திரி மருபபு (ஏறு) - முறையுற்று மடல் உதிர்ந்த குவிந்த மொட்டாகிய பெரிய பூ ஒழிந்த வாழையின் குலைபோலும் முறுக்குண்ட கொம்பினை

கடுமான் றேரொலி கேட்பி
னடுநாட் கூட்ட மாகலு முண்டே.

என்பது : வினைமுற்றி மீண்ட தலைமகன் பாகற் குரைத்தது.

—சீத்தலைச் சாத்தனார்.

பாலை. **135**

திகலை மாமை தளிர்வனப் பழுங்கப்
புதலிவர் பீரி னெதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலே னாகி
யெழுதெழின் மழைக்கண் கலுழ நோய்கூர்ந்
5 தாதி மந்தியி னறிவுபிறி தாகிப்

---

யுடைய மான் ஏறு என்க. வாய்ப்ப - காரணப்பொருட்டு. பயந்து பயக்க எனவும் தாஅய் - தாவ எனவும் திரிக்கப் பெற்றன. இறுத்தல் - கொடுத்தல். காமர் - அழகு; நன்மையுமாம். பாணி - தாளம்.

"கமஞ்சூன் மாமழை" என்பது "கம நிறைந்தியலும்" என்ற சூ. மேற்கோள். கடுமான் - விரைந்து செல்லுங் குதிரை. (தொல். சொல். 355; 383, சேனா.)

பி - ம். 3. மணிமலர்ப்பூவை. 9. தேகுமதி. 14. ஆகலுமுண்டோ. வினைமுற்றி மறுத்தராநின்ற;

திதலை மாமை தளிர் வனப்பு அழுங்க புதல் இவர் பீரின் எதிர் மலர் கடுப்ப பசலை பாய்ந்த நுதலேன் ஆகி எழுது எழில் மழை கண் கலுழ நோய் கூர்ந்து ஆதிமந்தியின் அறிவு பிறிதாகி பேதுற்றிசின் காதல் தோழீ! காதலர் காடு இறந்தனர்; அவர் தெளிந்த என் நெஞ்சு காமூர்போல கலங்கின்று - தித்தியோடு மாமைநிறமும் தளிர்போன்ற அழகும் கெட, புதல்களிற் பூத்துப் பரவிய பீர்க்கின் செவ்வி மலர் போன்று பசலைநிறம் பாய்ந்த நுதலையுடையேனாகி, சந்தன குங்குமச் சேற்றால் வரிக்கும் அழகினையுடைய குளிர்ந்த கண் அழ, நோய் மிக்கு ஆதிமந்திபோல அறிவு கெட்டு மயக்கமுற்றேன் காதலையுடைய தோழீ! நம்காதலரோ பாலைச் சுரத்திற் சென்றுள்ளார்; அவர் விரையவருவார் என்று தெளிந்திருந்த என்மனம் காமூரைப்போலக் கலங்கிற்று என்று

பேதுற் றிசினே காதலந் தோழி
காய்கதிர் திருகலிற் கனைந்துகால் கடுகி
யாடுதளி ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கி னறைமிசைத் தாஅம்
10 காடிறந் தனரே காதல ரடுபோர்
வீயா விழுப்புகழ் விண்டோய் வியன்குடை
யீரெழு வேளி ரியைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போலக்

---

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க. மாது - அசைநிலை.

காய் கதிர் திருகலின் கால் கனைந்து கடுகி ஆடுதளிர் இருப்பை கூடு குவி வான் பூ கோடு கடை கழங்கின் அறை மிசை தாஅம் (காடு) - எரிக்கின்ற சூரியன் முடுகுதலினாலே காற்று மிக்கு விரைந்து வீச, அதனாலே ஆடும் இயல்புடைய தளிரைக்கொண்ட இருப்பையின் இதழ் குவிந்த பெரிய பூக்கள் சங்கினால் கடையப்பட்ட கழங்குபோலக் கற்பாறை மிசையே தாவும் காடு என்க.

ஈரெழு வேளிர் இயைந்து ஒருங்கு எறிந்த வீயா விழு புகழ் விண் தோய் வியன் குடை கழுவுள் (காமூர்) - பதினான்கு குடி வேளிர் கூடி ஒருங்கு சேர்ந்து எறிந்த கெடாத மிக்க புகழையும் விண்ணை யளாவிய பெரிய குடையையுமுடைய கழுவுளது காமூர்போல என்க.

இக்கழுவுள் இந்நூலுள் 365ஆம் பாடலில் 'வென்வேல்' மாவண் கழுவுள்' என்று பாராட்டப் பெற்றிருத்தலை நோக்கி, 'வீயா விழுப் புகழ் விண்டோய் வியன்குடை' என்ற அடை கழுவுளுக்கு ஏற்றப்பட்டது. ஆதிமந்தி கரிகால் வளவன் மகள். இவள் அறிவு பிறிதாகியது இவள் தன் காதலனாகிய ஆட்டன் அத்தியைக் கெடுத்த காலத்து.

தித்தி - தேமல். மாமையாவது - அழகியமேனி. கனைந்து - மிக்கு. எதிர்மலர் - செவ்விமலர், பேதுறல் - மயக்கமுறுதல். கூடு - உடம்பு; ஈண்டு உடம்பு போன்ற இதழுக்காயிற்று. 'கூடகம்கொண்ட வாழ்நாள்' என்றார் (சிந். 510). கோடு - சங்கு. திருகுதல் - முடுகுதல்.

பி - ம். 13. காமூர். 14. விளிந்தன்று.

கலங்கின்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றது.

—பரணர்.

## 136. மருதம்

மைப்பறப் புழுக்கி னெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி

---

மைப்பு அற நெய்கனி புழுக்கின் வெண்சோறு - குற்றந் தீர நெய் யிடத்துச்கனிந்த இறைச்சியோடு கலந்த வெண்சோற்றை; வரையா வண்மையொடு புரையோர் பேணி - குறையாத வண்மையோடு உயர்ந் தோரைப்பேணி; புள் இனியவாக புணர்ந்து - புள்நிமித்தம் சுபமாகக் கூடி; அங்கண் இருவிசும்பு விளங்கு - அழகிய இடமகன்ற பெரிய விசும் பின்கண் விளங்கும்; அ தெள் ஒளி திங்கள் சகடம் மண்டிய துகள் தீர் கூட்டத்து - அந்தத் தெளிந்த ஒளியுடைய திங்களை உரோகிணி கூடியதனால் எல்லாத் தோஷமுந் தீர்ந்த சுப நாட் சேர்க்கையிலே; கடி நகர் புனைந்து கடவுள் பேணி மணம் படு முழவொடு பருஉப் பணை இமிழ - கலியாண வீட்டை அலங்கரித்துக் கடவுளைப் பேணி மணத்தைத் தோற்றுவிக்கும் மண முழவொடு பெரிய முரசும் ஒலிக்க; வதுவை மண்ணிய மகளிர் பூக்கணும் இமையார் நோக்குபு விதுப்புற்று மறைய - தலைவியை மங்கலஸ்நாநம் செய்வித்த மகளிர் தங்கள் கூரிய கண்களாலும் இமையாராய் நோக்கி விட்டு விரைந்து மறைய ;

பூக்கண்ணும் என்று சிறப்பும்மையாற் கூறினர், ஒருகால் நோக்கிய மாத்திரையே பிறர் அழகெல்லாம் ஒருங்கே காணவல்ல அன்னர் இவளழகினை இமையாது நோக்கியும் முடியக் காணமாட்டாமையை நோக்கி என்க. விரைந்து மறைதல், கண்ணெச்சிற் படாமைக்கு.

மென் பூ புன்புற வாகை கவடு இலை - மெல்லிய பூவையும் புல்லிய புறத்தையுமுடைய வாகையின் கவடுபொருந்திய இலையை; பழங்கன்று

யங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
5 சகட மண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை யிமிழ

கறித்த - முதுகன்று கடித்த; பயம்பு அமல் - குழியிலே நெருங்கி வளர்ந்த; தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு அறுகை ஈன்ற மண்ணுமணியன்ன மாஇதழ் பாவை - ஒலிக்கின்ற குரலையுடைய மழையின் முதற்பெயலால் அறுகு ஈன்றதும் கழுவிய நீலமணிபோலும் கரிய இதழையுடையதும் பாவை போலும் கிழங்கினிடத்துள்ளதுமான ; தண் நறு முகையொடு வெண் நூல்சூட்டி - குளிர்ந்த நறியமொட்டுடன் சேரக்கட்டிய வெள்ளிய நூலைச் சூட்டி ; தூ உடை பொலிந்து - தூய ஆடையாற் பொலியச் செய்து; மே வர துவன்றி - விருப்பம்வர ஒன்று கூடி; மழைபட்ட அன்ன மணன் மலி பந்தர் - மழையொலி உண்டானாற்போல மணவொலி மிக்க பந்தலிலே ; இழை அணி சிறப்பின் - ஆபரணங்கள் அணிவித்த சிறப்பினோடு; பெயர் வியர்ப்பு ஆற்றி - எழுந்த வியர்வையை ஆற்றி; தமர் நமக்கு ஈத்த தலைநாள் இரவின் - தமர்கள் நமக்கு இற்கிழத்தியாகத் தந்த முதல்நாள் இரவின்கண் ;

முருங்கா கலிங்கம் முழுவதும் வளைஇ - புதுத்தன்மை கெடாத புடைவையால் உடம்பு முழுவதும் போர்த்ததனால் ; பெரு புழுக்கு உற்ற நின் பிறை நுதல் பொறி வியர் உறு வளி ஆற்ற சிறு வரை திற என ஆர்வம் நெஞ்சமொடு போர்வை வவ்வலின் - மிகப் புழுக்கத்தை யடைந்த நின் பிறைபோன்ற நுதலிடத்துத் தெறித்த வியர்வையை மிக்க காற்று வீசி ஆற்றும் வண்ணம் சிறிதுபோது திற என்று சொல்லி யாம் அன்புடைய நெஞ்சமொடு அப்போர்வையை வவ்வினதனாலே ; உருவு உறை கழிவாளின் பெயர்ந்து இமைப்ப - வடிவமானது உறையி னின்றும் கழித்த வாள்போல வெளிப்பட்டு விளங்க ; மறை திறன் அறியாள் ஆகி - அவ்வடிவத்தை மறைக்கும் வகையை அறியா ளாகி ; ஒய்யென நாணினள் - சடக்கென்று நாணினாய் ;

பகை பரூஉ ஆம்பல் குரூஉத் தொடை நீவி - இதழ்பகுத்த பெரிய ஆம்பல் மலரின் நிறமழகிய மாலையை அணிந்து; சுரும்பு இமிர் ஆய் மலர் வேய்ந்த - வண்டுகள் ஒலிக்கும் ஆராய்ந்தெடுத்த மலர் சூடிய; இரு பல் கூந்தல் இருள் - பெரிய பலவாகிய கூந்தலின் இருளிடத்தே; மறை ஒளித்து - மறைத்தற்குரிய உறுப்பினை மறைத்து; உவர் நீங்கு

வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணு மிமையார் நோக்குபு மறைய
10 மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை

கற்பின் எம் உயிர் உடம்பு அடுவி - வெறுப்புநீங்கிய கற்பினையுடைய எம் உயிருக்கு உடம்பாக அடுப்பவள்; பேணி இறைஞ்சியோளே - யாம் செய்த இக்குறும்பினை விரும்பிக் கைதொழுது வணங்கினளாயிருந்தாள்; அத்தகையாள் இன்று யான் பலபல சொல்லி உணர்த்தவும் உணராது ஊடுகின்றாளிறே; இவள் யாரளோ நமக்கு என்று தலைமகன் தன் நெஞ்சினுக்குச் சொன்னான் என்க.

சோற்றுப் புரையோரைப் பேணித் திங்கட் சகடம மண்டிய கூட்டத்து நகர்ப்புனைந்து, கடவுட் பேணி, முழவொடு பணை இமிழ, மகளிர் மறைய, தார் வாகையிலையையும் அறுகின் முனையையும் சேர்த்துக் கட்டிய வெண்ணூலைச் சூட்டி, உடையாற் பொலிவித்து, மணப்பந்தலில் துவன்றி, நமக்கு ஆற்றி ஈத்த தலைநாள் இரவின்கண் கலிங்கம் வளைஇப் புழுக்குற்ற நின்வியரை வளி ஆற்றத் திறவென யாம் போர்வை வவ்வலின், உரு இமைப்ப, எம் உயிர் உடம்படுவி மறைதிறன் அறியாளாகி ஒய்யென நாணினளாய்க் கூந்தலிருளில் மறை ஒளித்துப் பேணி இறைஞ்சியோ ளாயிருந்தாள் என்க.

பிள்ளைபெற்ற மகளிர்நால்வர் மணமகளேவைக் குளிப்பாட்டுதல் மரபு. உரோகிணியொடு சேர்ந்த வளர்பிறைச் சந்திரன் உச்சனாதலால் எந்த தோஷமும் நிவர்த்தி என்பார், 'துகடீர் கூட்டம்' என்றார். அறுகின் கிழங்கைப் பாவை என்றார், இஞ்சிப்பாவை என்பது போல.

இப்பாட்டினைக் களவின்வழி நிகழ்ந்த கற்புக்கு உதாரணமாகக் காட்டினர் நச். "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர், ஐயர் யாத்தனர் கரணமென்ப" என்ற சூத்திர உரையில் "பெரும் புழுக்குற்றநின்......திறவென என்பது 'பொறிநுதல் வியர்த்தல்' என்னும் மெய்ப்பாடாகு மென்றும், "இம் மெய்ப்பாடு தலைமகற்கு உரித்தன்று, உட்கும் நாணும் அவற்கு இன்மையின்" என்றும் கூறுவர் பேரா. (தொல். பொருள். 145, 261.) மைப்பு - ஒளிமழுக்கம்

பி - ம். 1. புழுக்கி நெய்க்கனி. 5. சகடம் வேண்டிய. 8. விருப்புற்று. 11. பழங்கன்று கறிக்கும். 15. தோன்றி. 18. ஙீந்த. 21. நுதற்குறு வியர். 29. விருண்மழை.

பழங்கன்று கறித்த பயம்பம லறுகைத்
தழங்குகுரல் வானின் றலைப்பெயற் கீன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
15 தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்த
ரிழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
தமர்நமக் கீத்த தலைநா ளிரவி
னுவர்நீங்கு கற்பினெம் முயிருடம் படுவி
20 முருங்காக் கலிங்க முழுவதும் வளைஇப்
பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவிய
ருறுவளி யாற்றச் சிறுவரை திறவென
வார்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலி
னுறைகழி வாளி னுருவுபெயர்ந் திமைப்ப
25 மறைதிற னறியா ளாகி யொய்யென
நாணின ளிறைஞ்சி யோளே பேணிப்
பருஉப்பகை யாம்பற் குரூஉத்தொடை நீவிச்
சுரும்பிமி ராய்மலர் வேய்ந்த
விரும்பல் கூந்த லிருண்மறை யொளித்தே.

என்பது : உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

இப்பாட்டிற் சகடமென்றது உரோகிணியை.

—விற்றூற்று மூதெயினனார்.

## 137. பாலை

ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத் துண்ட
சிறுபல் கேணிப் பிடியடி நசைஇக்

---

பாலைவழியிற் செல்லும் புதியர் சேற்றைக் கிளைத்து உண்ட சிறிய பலவாகிய கேணிகளைப் பிடியின் அடியென்று கருதி விருப்புற்றுக்

களிறுதொலைஉக் கடக்குங் கான்யாற் றத்தஞ்
சென்றுசேர் பொல்லா ராயினு நினக்கே
5 வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழ
ரின்கடுங் கள்ளி னுறந்தை யாங்கண்
வருபுன னெரிதரு மிகுகரைப் பேரியா
றுருவ வெண்மணன் முருகுநாறு தண்பொழிற்
பங்குனி முயக்கங் கழிந்த வழிநாள்
10 வீயிலை யமன்ற மரம்பயி லிறும்பிற்

---

களிறுகள் தொட்டுத்தொட்டுப் பார்த்து அதினின்மையின் அல்லலுழந்து அதனைக் கடந்துசெல்லும் காட்டாற்றினையுடைய சுரத்திலே நம் தலைவர் சென்று சேர்தலை உடன்படா ராயினும், அவர் பிரிவர் என்று கருதி நினக்கு நுதல் மிகப் பாழடைந்தது; தோளும் பண்டையழகுகள் தொலைந்தன; அதற்கு நான் நோவாநின்றேன் என்று தலைமகன் பிரியு மென்று கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொன்னாள் என்க.

கேணியைக் களிறு தொலைஉக் கடக்கும் அத்தம் (தலைவர்) சேர் பொல்லாராயினும் நினக்கு நுதல் பாழ்கொண்டது; தோளும் தொல் கவின் தொலைந்தன; யான் நோகு என்று கூட்டுக.

வென்று எறி முரசின் விறல் போர் சோழர் கடு இன் கள் ளின் உறந்தை ஆங்கண் - பகைவரை வெல்லும் பொருட்டு எறிகிற வீரமுரசினாலே வெற்றிப் போரினையுடைய சோழரது கடுப்பு இனிய கள்ளையுடைய உறையூரிடத்து; வருபுனல் நெரிதரும் இகுகரைப் பேரியாற்று உருவ வெண்மணல் முருகு நாறு தண் பொழில் - கடுகி வருகின்ற நீர் உடைக்க இடிந்த கரையினையுடைய காவிரிப் பேரி யாற்றின் அழகிய வெண்மணலடுத்த தேன் கமழ்கின்ற குளிர்ந்த பொழிலிலே; பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள் - பங்குனி விழாக் கூட்டம் கழிந்த மறுநாளில்; வீ இலை அமன்ற மரம்பயில் இறும் பில் தீயில் அடுப்பின் அரங்கம் போல (பெரும்பாழ் கொண்டன்று நுதல்) - பூவோடு இலைகளும் நெருங்கிப் பூத்துத் தளிர்த்த மரங்கள் பயின்ற சிறு காட்டின் நடுவேயுள்ள தீயில்லாத அடுப்பினையுடைய திருவரங்கம்போல நுதல் பெரும் பாழ் கொண்டது என்க.

தோளா முத்தின் தெண்கடல் பொருநன் திண்தேர் செழியன் பொருப்பில் கவாஅன் நல் எழில் நெடுவேய் புரையும் (தோள் தொல்

றீயி லடுப்பி னரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே தோளுந்
தோளா முத்திற் றெண்கடற் பொருநன்
றிண்டேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅ
னல்லெழி னெடுவேய் புரையுந்
தொல்கவின் றொலைந்தன நோகோ யானே.

என்பது: தலைமகன் பிரியுமெனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

—உறையூர் முதுகூத்தனார்.

## 138. குறிஞ்சி

இகுளை கேட்டிசிற் காதலந் தோழி
குவளை யுண்கண் டெண்பனி மல்க

---

கவின் றொலைந்தன) - துளையிடாத முத்து விளையும் குளிர்ந்த கடலைத் தனக்கு உரித்தாகவுடைய வீரனாகிய திண்ணிய தேரினையுடைய செழியனது பொதியம் என்னும் மலைப்பக்கத்திலே வளர்ந்த நல்ல அழகுடை நெடிய மூங்கிலை ஒக்கும் தோளும் பண்டை அழகு கெட்டன என்க.

பங்குனித்திங்களில் பௌர்ணிமையோடு உத்திரநாள் கூடிய சுப தினமாதலால் பங்குனிமுயக்கம் என்றார் முயக்கம் - கூட்டம். தீயில் அடுப்பினர் அங்கம்போல எனக்கண்ணழித்து - தீமூட்டி அடுதற்றொழிலைச் செய்யாத அடுப்பினரான விறலிகளின் உறுப்புப்போல என்று கூறலுமாம். விறலியர் அடுப்புத் தொழிற்கு உரியரல்லர் என்பதனைக் 'கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே' என்பதற்கு உரைத்த உரைநோக்கி அறிக. (பதிற் 18.) இவ்விறலியர் முதலியோர் 'சாறுகழி வழிநாள் சோறு நசையுறாது வேறுபுலம் முன்'னுதல் வழக்காதலின், பசியால் வாடிய அவரது உறுப்புத் தலைவியின் பாழடைந்த நுதலுக்கு உவமை கூறப்பட்டது என்க. எறிந்த மாத்திரத்தானே அதன் றொனி கேட்கப்பட்டுப் பகைவர் வெல்லப்படுதலின் வென்றெறி முரசென்றார். வென்று வெல்லவெனத் திரிக்க.

பி - ம். 4. சேர்பொல்வாரா. 10. மாபயிலிறும்பின். (உறையூர் முதுகூற்றனார்).

வறிதியான் வருந்திய செல்லற் கன்னை
பிறிதொன்று கடுத்தன ளாகி வேம்பின்
5 வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி
யுடலுநர்க் கடந்த கடலந் தானைத்

இகுளை காதல் தோழி கேட்டிசின் - காதற் றோழீ ! கேட்பாயாக ; குவளை உண் கண் தெண் பனி மல்க யான் வருந்திய செல்லற்கு அன்னை பிறிதொன்று கடுத்தனளாகி - குவளைபோன்ற மையுண்ட கண்ணில் தெளிந்த நீர் ஒழுக யான் வருந்தின துன்பத்தை நோக்கி அதனைப் பரிகரித்தற்கு அன்னை தெய்வத்தான் வந்தது இவ்வேறுபாடென்று வேறாக ஐயுற்றதனால்; வெறிகொள் வேம்பின் பாசிலை நீலமொடு சூடி - (கட்டுவிச்சியும் வேலனும் கட்டினனும் கழங்கினனும் குறிபார்த்து) வெறி நாற்றமுடைய வேம்பின் பசிய இலையை நீலோற்பல மலரொடு சூடி ; அருவியில் ததும்பு சீர் இன் இயம் கறங்க உருகெழு சிறப்பின் முருகு கைதொழுது மனை தரீஇ கடம்பும் களிறும் பாடி தோடும் தொடலையும் கைகொண்டு அல்கலும் வறிதே நுடங்குபு ஆடினராதல் நன்றோ - அருவிபோல ஒலிக்கும் சீரையுடைய இனிய வாச்சியங்கள் ஒலிக்க உட்குப் பொருந்திய சிறப்பினையுடைய முருகனை கையாற் றொழுது மனையின்கண் வருவித்து அவன் கடம்பையும் களிற்றையும் புகழ்ந்து பாடி, பனந்தோடும் காந்தண் மாலையும் கைக்கொண்டு இரவு முழுவதும் வறிதே அசைந்து ஆடினராதல் நன்றோமோ ? இல்லை. நின்னொடு நீடு தெளித்த நன்மலை நாடன் குறிவரல் அரைநாள் - நின்னோடு நெடுநாளாகப் பிரியேன் என்று தெளிவித்து வந்த நல்ல மலைநாடனாகிய நம் தலைவர் குறியிடத்து வருகின்ற நள்ளிரவில் ; குன்றத்து உச்சி - குன்றின் உச்சியிலே ; நெறி கெட வீழ்ந்த துன் அரும் கூர் இருள் - வழி தெரியாதவாறு தாழ்ந்த அணுகவரிய மிக்க இருளிலே ; திரு மணி உமிழ்ந்த நாகம் கொழுமடல் காந்தள் புதுப்பூ ஊதும் நன்னிறம் தும்பி மருளும் அருவிடர் இன்னா நீள் இடை என் நெஞ்சு நினையும் - தன் முடியிலுள்ள சிறந்த மணியைத் தான் மேய்தல் காரணமாக உமிழ்ந்த நாகமானது கொழுவிய மடலையுடைய காந்தளின் புதுப்பூவை நுகரும் நல்ல நிறத்தைக் கொண்ட தும்பியைத் தன் திருமணி கொல்லோ என்று மருளும் கடத்தற்கரிய வெடிப்புக்களால் இன்னாமையையுடைய நீண்ட வழியை என் நெஞ்சு நினையும் என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

திருந்திலை நெடுவேற் றென்னவன் பொதியி
லருஞ்சிமை யிழிதரு மார்த்துவர லருவியிற்
றதும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழு
10 துருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்
கடம்புங் களிறும் பாடி நுடங்குபு
தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலு

---

தோழி கேட்டிசின்! மலைநாடன் குறிவரல் இன்று நீளிடை என் நெஞ்சு நினையும். அதனால் கண் பனி மல்க யான் வருந்திய செல்லற்கு அன்னை பிறிதொன்று கடுத்தனளாக, கட்டுவிச்சியும் வேலனும் சூடி, இயம் கறங்க, முருகு மனைத்தரீஇ, வறிது பாடி ஆடினராதல் நன்றோ? என்று கூட்டுக.

உடலுநர் கடந்த கடல் தானை திருந்து இலை நெடு வேல் தென்னவன் பொதியில் அருஞ்சிமை இழிதரும் ஆர்த்து வரல் (அருவியில்) - பகைத்தவரை வென்று கடந்த கடல் போன்ற சேனையையும் திருந்திய இலைமுகத்து நெடிய வேலையுமுடைய பாண்டியனது பொதியில் மலையின் ஏறற்கரிய உச்சியினின்றும் இழியும் ஆரவாரித்து வரலையுடைய அருவி போல (இயம் கறங்க) என்க.

காந்தளின் புதுப்பூவை நுகர்ந்ததனால் பெற்ற நல்ல நிறத்தை யுடைய தும்பியைக் கண்டு மணியை உமிழ்ந்த நாகம் மருளுவது போல, தலைமகனொடு இன்ப நுகர்ந்ததனாற் பெற்ற புதுச் செவ்வியையுடைய என்னைக் கண்டு முதுமையால் அறிவிழந்த அன்னை மருளாநின்றாள் என்றாளாம்.

இப்பாட்டினைக் "கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரு, மொட்டியதிறத்தாற் செய்தி" என்ற பகுதிக்கு உதாரணமாகக் கொண்டு, இதன்கண் கட்டென்றுதல் கழங்கென்றுதல் "விதந்து கூறுமையின் இரண்டும்(கட்டுக்காண்டலும் கழங்குக்குறிகாண்டலும்)ஒருங்கு வந்தன" என்றும், "கடம்புங் களிறும்......நன்றே" என்பது தலைவற்கு வெறியாட் டுணர்த்தியது என்றுங் கூறுவர் நச். (தொல். பொருள். 115, 210.)

பி - ம். 11. பாடித்தொடங்குபு. 12.—13. டல்கலும் பாடினளாத. கைக்கொண் டாடின, ளாஅத னன்றோ வன்றே நீடு. (எழும்பன்றி நாகன் குமாரன்)

மாடின ராத னன்றோ நீடு
நின்னொடு தெளித்த நன்மலை நாடன்
15 குறிவர லரைநாட் குன்றத் துச்சி
நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூரிருட்
டிருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட்
கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி
நன்னிற மருளு மருவிட
20 ரின்னா நீளிடை நினையுமென் னெஞ்சே.

என்பது : தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.

—எழுஉப்பன்றி நாகன்குமரனார்.

## 139. பாலை

துஞ்சுவது போல விருளி விண்பக
விமைப்பது போல மின்னி யுறைக்கொண்
டேறுவது போலப் பாடுசிறந் துரைஇ
நிலநெஞ் சுட்க வோவாது சிலைத்தாங்
5 கார்தனி பொழிந்த வார்பெயற் கடைநா

ஆம் கார் - நீரையுடைய மேகம்; துஞ்சுவதுபோல இருளி விண் பக இமைப்பது போல மின்னி உறை கொண்டு ஏறுவது போல பாடு சிறந்து உரைஇ நிலம் நெஞ்சு உட்க ஓவாது சிலைத்து தனி பொழிந்த வார் பெயல் கடை நாள் - சாக்காடு போல இருண்டு, விண்ணைப் பகுக்க இமைப்பது போல மின்னி, நீரைக் கொண்டு எழும்புவது போல ஒலி மிகுத்துப் புடை பெயர்ந்து உலாவி, நிலத்தின் நெஞ்சம் திடுக்கிடும்படி ஓயாது ஒலித்து, நீரை நீடித்துப் பொழிந்த பெயலையுடைய கார் காலத்தின் கடைநாளிலே; ஈன்று நாள் உலந்த வாலா வெண் மழை - மழைபெய்து நாட்சென்ற தூயதல்லாத வெள்ளிய மேகங்கள்; வான் தோய் உயர் வரை ஆடும் வைகறை - வானை அளாவி யுயர்ந்த மலையின் உச்சியில் உலாவும் விடியற்காலையிலே; புதல் ஒளி சிறந்த காண்பு இன் காலை - புதல்கள் ஒளிமிக்குக் காண்டற்கு இனிய காலத்திலே; தண் நறும் படு நீர் மாந்தி பதவு அருந்து வெண் புறக்கு உடைய திரி

ளீன்றுநா ளுலந்த வாலா வெண்மழை
வான்றோ யுயர்வரை யாடும் வைகறைப்
புதலொளி சிறந்த காண்பின் காலைத்
தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து
10 வெண்புறக் குடைய திரிமருப் பிரலை

---

மருப்பு இரலை வார் மணல் ஒரு சிறை பிடவு அவிழ் கொழு நிழல் காமர் துணையொடு எழுற வதிய - குளிர்ந்த நறிய கிணற்றிலுள்ள நீரைக் குடித்துச் செங்கோல் அருகினை அருந்துகின்ற வெள்ளிய முதுகையும் திரிந்த கொம்பையுமுடைய இரலை மான் ஒழுகிய மணலின் ஒரு பக்கத்தே பிடவு விரிகின்ற கொழுவிய நிழலிலே அழகிய பிணையுடன் இன்பமுறத் தங்க; அரக்கு நிற உருவின் ஈயன் மூதாய் பல உடன் பரப்பியவை போல் பாஅய் வார் ஈர் மருங்கின் நீர் அணி திகழ - செவ்வரக்குப் போலும் நிறத்தையும் வடிவழகையுமுடைய இந்திர கோபங்கள் பல ஒருசேரப் பரப்பப்பட்டவைகள் போலப் பரவி, நெடிய ஈரிய வழியில் நீருக்கு அலங்காரமாக விளங்க; இன்னும் காதலர் வாராராயின் - இக்காலத்திலும் நம் காதலர் வாராராயின்; நன்னுதல் - நல்ல நுதலையுடைய தோழீ!; அவர் நிலை யாது கொல் - அவர் நிலைமை என்ன ஆயிற்றோ? அவர் வருதும் என்றது - அவர் மீள்வேம் என்று கூறியது; கருவி கார் இடி இரீஇய பருவம் அன்று மற்று - தொகுதியையுடைய மேகம் இடியைத் தன்பாலே அமைத்துக்கொண்ட கார் காலம் அன்று; பின்னொரு காலம் போலும்; என்று, பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

மற்று - வினைமாற்று.

“கொல்லே-யையம்” என்ற சூ. மேற்கோளாக ‘யாதுகொல் மற்றவர் நிலையே’ என்பதனைக் காட்டி, இப்பாட்டினை இத்துறைக்கே கொண்டு, “இம்மணியிடைபவளத்துப் பாலைக்கண் முன்பனியும் வைகறையும் ஒருங்குவந்தன” என்றும், “கருவிக் காரிடியிரீஇய பருவ மன்றவர் வருதுமென் றதுவே” என்றது கார்குறித்து வருவலென் றலின், அறுதிங்கள் இடையிட்டது என்றும் கூறுவர் நச். (தொல். சொல். 270; பொருள். 12, 189.)

பி - ம். 6. வீன்றுவாளுழந்த. 8. புதலோரணிந்த. 12. துணையோடமர்துயில். 18-19. இரீஇய பருவ மன்னவர்.

வார்மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற்
காமர் துணையொ டேமுற வதிய
வரக்குநிற வுருவி னீயன் மூதாய்
பரப்பி யவைபோற் பாஅய்ப் பலவுட
15 னீர்வார் மருங்கி னீரணி திகழ
வின்னும் வாரா ராயி னன்னுதல்
யாதுகொன் மற்றவர் நிலையே காதலர்
கருவிக் காரிடி யிரீஇய
பருவ மன்றவர் வருதுமென் றதுவே.

என்பது : பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இப்பாட்டுத் தொழிலாற் பாலையாயிற்று.

—இடைக்காடனார்.

## 140. நெய்தல்

பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவ
ரிருங்கழிச் செறுவி னுழாஅது செய்த
வெண்க லுப்பின் கொள்ளை சாற்றி
யென்றூழ் விடர குன்றம் போகுங்
5 கதழ்கோ லுமணர் காதன் மடமகள்

---

பெரு கடல் வேட்டத்து சிறுகுடி பரதவர் இரு கழி செறுவின் உழாது செய்த வெண்கல் உப்பின் என்றூழ் விடர குன்றம் கொள்ளை சாற்றி போகும் கதழ் கோல் உமணர் காதல் மடமகள் - பெரிய கடலிடத்து மீன் பிடி வேட்டத்தைச் செய்கின்ற சிறு குடியில் வாழும் பரதவர்கள் பெரிய உப்பங் கழியாகிய வயலிலே உழாமலே விளைவித்த வெள்ளிய கல்லுப்பினோடு கோடையாற் பிளந்த கன்முழைகளையுடைய குன்ற வழிகளிலே தங்களிற் கூடுதலைச் சாற்றிச் செல்லும் (உப்பு வண்டி இழுக்கும் கடாவினைத் தூண்ட) விரைகின்ற கோலினையுடைய உப்பு வாணிகரது காதலையும் மடப்பத்தையுமுடைய மகள்; கோல் எல் சில் வளை தெளிர்ப்ப வீசி நெல்லின் நேரே வெண்கல் உப்பு என சேரி விலை மாறு கூறலின் மனைய விளி அறி ஞமலி குரைப்ப

சில்கோ லெல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லி னேரே வெண்க லுப்பெனச்
சேரி விலைமாறு கூறலின் மனைய
விளியறி ஞமலி குரைப்ப வெரீஇய
10 மதர்கயன் மலைப்பி னன்ன கண்ணெமக்
கிதைமுயல் புனவன் புகைநிழற் கடுக்கு

---

வெரீஇய மலைப்பின் மதர் கயல் அன்ன கண் - கோற்றொழில் அமைந்த இலங்குகின்ற சிலவாகிய வளைகள் ஒலிப்பத் தன் கையை வீசி, "வெள்ளிய கல்லுப்பு நெல்லினுக்கு ஒத்த அளவே" என்று சேரிகளிலே விலைமாற்றுக் கூறுவதனாலே மனையின் கண்ணுள்ள குரலறியும் நாய் இது வேற்றுக்குரலென்று குரைத்தலால், அதனைக் கண்டு வெருவிய போரிடுமியல்புடைய மதர்த்த கயல்களிரண்டினைப் போன்ற அவள் கண்கள்; எமக்கு வெய்ய உயிர்க்கு நோய் ஆகின்று - எமது விருப்ப மிக்க உயிருக்கு நோய் ஆயிற்று என்று, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் பாங்கற்கு உரைத்தான் என்க.

இதை முயல் புனவன் புகை நிழல் கடுக்கும் மாமூது அள்ளல் அழுந்திய சாகாட்டு எவ்வம் தீர வருந்தி வாங்கும் தந்தை கைபூண் பகட்டின் (நோய் ஆகின்று) - புதுப்புனமாக்கும்பொருட்டு முயல்கின்ற புனமுடையானாகிய குறவன் (பழம்புனத்தைச் சுட்டு எரித்ததனால் உண்டாக்கிய) புகையின் நிழலை ஒக்கும் கரிய பழஞ்சேற்றிலே அழுந்திய உப்பு வண்டியின் துன்பம் நீங்க வருந்தி வலிக்கின்ற தந்தையின் புறத்துப் பூண்ட கடாவின் நோய் போல நோய் ஆயிற்று என்க.

சாகாட்டெவ்வத்தினைப் பகடு தீர வாங்கினாற் போலத் தலைவி பொருட்டு எனக்குண்டான எவ்வத்தினை நீ தீர்த்தற்குரியாய் என்று பாங்கனை அவனிற் கூட்டம் வேண்டினானாகக் கொள்க.

சில் வளை - என்றார், பல் வளையிடும் பெதும்பைப் பருவத்தா ளன்றிச் சில் வளையிடும் பேதைப் பருவத்தாளென்றற்கு. "சின்னிரை வால் வளைப் பொலிந்த பன் மாண் பேதைக்கு ஒழிந்தது என் நெஞ்சே" என்பர் இவரே. (390 ஆம் பாட்டுப் பார்க்க.)

பி - ம். 4. என்றூழ் விடாஅக். 5. ததர்கோலுமணர். 8 கூறி நுவறலின் மனைய 14. நையூண் பகட்டின்.

மாமூ தள்ள லழுந்திய சாகாட்
டெவ்வந் தீர வாங்குந் தந்தை
கைபூண் பகட்டின் வருந்தி
15 வெய்ய வுயிர்க்கு நோயா கின்றே.

என்பது : இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் பாங்கற் குரைத்தது.

—அம்மூவனார்.

## 141. பாலை

அம்ம வாழி தோழி கைம்மிகக்
கனவுங் கங்குறோ றினிய நனவும்
புனைவினை நல்லிற் புள்ளும் பாங்கின
நெஞ்சு நனிபுகன் றுறையு மெஞ்சா

---

அம்ம வாழி தோழி - நான் சொல்வதனைக் கேள் தோழீ! நீ வாழ்வாயாக; கங்குல் தோறு கனவு கைம்மிக இனிய - இரவுதோறும் கனவும் மிக்க இனியவாகின்றன; நனவும் வினை புனை நல் இல் புள்ளும் பாங்கின - நனவிடத்தும் சித்திரத் தொழிலினால் அலங்கரித்த நல்ல இல்லிலே புள்நிமித்தமும் நல்ல விடத்திலுண்டாகின்றன; நெஞ்சும் எஞ்சாது நனிபுகன்று உறையும் - என் நெஞ்சமும் ஒடுங்காது மிகவும் விரும்பி அமைந்திருக்கும்; நாஞ்சில் துஞ்சி உலகு தொழில் உலந்து மழைகால் நீங்கிய மாக விசும்பில் - ஏர்த்தொழில் மடிந்து அதனாலே உலகிலுள்ள மற்றைத் தொழில்களும் கெடும்படி, மழையானது பெய்யும் இடத்தை விட்டு நீங்கிச் சென்ற ஆகாயத்திலே; குறுமுயல் மறுநிறம் கிளர மதி நிறைந்து அறுமீன் சேரும் இருள் அகல் நடுநாள் - சிறுமுயலாகிய மறுவானது தன் மார்பகத்தே விளங்க சந்திரன் பூரணமாகி உரோகிணி தன்னுடன் சேரும் இருள் அகன்ற நடுஇரவில் (அஃதாவது திருக்கார்த்திகைத் திருவிழவின் இரவில்); மறுகுவிளக்கு உறுத்து மாலை தூக்கி பழவிறல் மூதூர் பலருடன் துவன்றிய விழவுடன் அயர - வீதிகளில் விளக்கு வைத்து, மாலைகளை நாற்றி, பழமையைத் தனக்குப் பெருமையாகவுடைய மூதூரில் பலருடன் கலந்து கொண்டாடும் விழா வினை நம்மோடு கூடிக் கொண்டாடும் வண்ணம்; கரிகால் இடையாற் றன்ன நல்லிசை வெறுக்கை தருமார் - கரிகால் வளவனது இடை

5 துலங்குதொழி லுலந்து நாஞ்சி றுஞ்சி
மழைகா ணீங்கிய மாக விசும்பிற்
குறுமுயன் மறுநிறங் கிளர மதிநிறைந்
தறுமீன் சேரு மகவிரு ணடுநாண்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
10 பழவிறன் மூதூர்ப் பலருடன் றுவன்றிய

---

யாற்றைப்போல நல்ல இசையோடு பொருந்திய செல்வத்தை ஈட்டும் பொருட்டு; வேங்கட வைப்பிற் சுரன் இறந்தோர் - வேங்கடக் கோட்டத்தைச் சார்ந்த ஊர்களின்கண் ணுள்ள சுரத்திலே சென்ற நம் தலைவர்; வருகதில் அம்ம - வருவாராக

துவரப் புலர்ந்து தூமலர் கஞலி தகரம் நாறும் தண் நறும் கதுப்பின் புதுமண மகடூஉ - முற்ற உலர்ந்து தூயமலரோடு நெருங்கி மயிர்ச்சாந்து கமழும் குளிர்ந்த நறிய தலைமயிரினையுடைய புதிய மணப்பெண்; அயினிய கடிநகர் பல்கோட்டு அடுப்பில் பால் உலை இரீஇ - உணவு மிகுத்த கலியாண வீட்டிலே பல பக்கங்களையுடைய அடுப்பிலே பாலை உலையாகவைத்து; கூழைக் கூந்தல் குறுதொடி மகளிர் - கூழையாகிய கூந்தலையும் குறிய தொடியினையுமுடைய மகளிரொடு; பெரு செய் நெல்லின் வாங்குகதிர் முறித்து - பெரிய வயலிடத்து விளைந்த நெல்லின் வளைந்த கதிரை முறித்து; பாசு அவல் இடிக்கும் இரு காழ் உலக்கை கடிது இடி வெரீஇய கமம்சூல் வெண்குருகு - பசிய அவலை இடிக்கும் கரிய வயிரமுற்றிய உலக்கையினது விரைந்த இடிக்கு வெருவிய நிறைந்த சூலையுடைய வெள்ளிய குருகு; தீம் குலை வாழை ஓங்கு மடல் இராது நெடுகால் மாத்து குருபறை பயிற்றும் - தீவிய குலையையுடைய வாழையின் ஓங்கிய மடலின்கண் இராது நெடிய காலையுடைய மாவினிடத்துக் குறுமையாகப் பறத்தலைச்செய்து சென்று தங்கும்; செல்குடி நிறுத்த பெரும் பெயர் வெல்போர் (கரிகால்) சோழன் - கெட்டகுடியைக் கைதூக்கி உயர்த்து நிறுவிய பெரிய புகழையும் வெற்றிக்கொள்ளும் போரினையுமுடைய கரிகால் வளவன் என்க.

கல்சேர் வேங்கை பல்பொறி புலிகேழ் உற்ற பூ இடை - கற்பாறையிடையே வளர்ந்த வேங்கையினது பல புள்ளிகளையுடைய புலி நிறத்தைக் கொண்ட பூவினிடையே; பெருசினை நரந்தம்

விழவுட னயர வருகதில் லம்ம
துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்
தகர நாறுந் தண்ணறுங் கதுப்பிற்
புதுமண மகடூஉ வயினிய கடிநகர்ப்
15 பல்கோட் டடுப்பிற் பாலுலை யிரீஇக்
கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்

---

நறும் பூ நாண்மலர் உதிர கலைபாய்ந்து உகளும் - பெரிய கொம்பினை யுடைய நாரத்தையின் நறிய அழகிய அன்று பூத்த மலர் உதிரும் படி முசுக்கலை என்ற ஆண்குரங்குகள் பாய்ந்து துள்ளும்; தேன்கமழ் நெடுவரை பிறங்கிய (வேங்கடவைப்பு) - தேன் இறால்கள் கமழா நிற்கும் நெடிய பக்கமலைகளால் உயர்ந்த வேங்கடக் கோட்டத்தை யடுத்த ஊர்கள் என்க.

தில் - விழைவுப் பொருளில் வந்தது. கனவு கங்குல் தோறும் இனிய ஆதலாலும், கணு முந்துறுதலினை இல்லையாதலாலும், தலைவர் விரைய வருவர் என்று துணிந்து தான் ஆற்றுவல் என்பதுபடத் தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

தோழீ! கனவும் இனிய புள்ளும் பாங்கின, நெஞ்சும் உறையும். சுரன் இறந்தோர் விழவுடன் அயர வருகதில் என்று கூட்டுக.

மழை கால் நீங்கிய விசும்பில் மதி நிறைந்து அறுமீன் சேரும் நாளில் மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப் பலருடன் துவன்றிய விழவினை உடன் அயர வருகதில் என்க.

மணமகடூஉ பாலுலை இரீஇ, மகளிரொடு கதிர்முறித்து அவ விடிக்கும் உலக்கை இடியை வெரீஇய குருகு வாழை மடலிராது மாத் துப் பறை பயிற்றுங் கரிகால் இடையாற்றன்ன வெறுக்கை தருமார் வேங்கட வைப்பிற் சுரன் இறந்தோர் என்க.

பல்பொறிப் புலிக்கேழுற்ற வேங்கைப்பூ என்று கூட்டுக.

பி - ம். 10. துவன்றி விழவுடன். 18. பாசவலிடித்த பெருங்கா. 19. வெரீஇக்கமஞ்சூல். 21. மாத்து. 25. புலிக்கோளுற்ற. 29, வேங்கடவெற்பிற்.

பாசவ லிடிக்கு மிருங்கா ழுலக்கைக்
கடிதிடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
20 தீங்குலை வாழை யோங்குமட லிராது
நெடுங்கான் மாஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழ னிடையாற் றன்ன
நல்லிசை வெறுக்கை தருமார் பல்பொறிப்
25 புலிக்கே ழுற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாண்மலை ருதிரக்
கலைபாய்ந் துகளுங் கல்சேர் வேங்கைத்
தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேங்கட வைப்பிற் சுரனிறந் தோரே.

என்பது : பிரிவிடையாற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

இப்பாட்டினுள் அறுமீன் என்பது உரோகிணி.

—நக்கீரர்.

## 142. குறிஞ்சி

இலமல ரன்ன வஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ள
னிறையருந் தானை வெல்போர் மாந்தரம்
5 பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற

---

இலமலர் அன்ன அம்செம் நாவின் - இலவ மலர்போலும் அழகிய சிவந்த நாவினால் ; புலம் மீக்கூறும் புரையோர் ஏத்த - அறிவால் மேலாகக் கூறப்படும் உயர்ந்தோர்கள் புகழுமாறு; பலர் மேந்தோன்றிய - அரசர் பலருள்ளும் மேம்பட்ட; கவிகை வள்ளல் - கொடுத்தலாற் கவிந்த கையையுடைய வள்ளலும் ; நிறை அரும் தானை வெல் போர் - பகைமேற் செல்லும்போது நிறுத்துதலரிய சேனையையும்

குறையோர் கொள்கலம் போல நன்று
முவவினி வாழிய நெஞ்சே காதலி
முறைபின் வழாஅது ஆற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
10 யூட்டரு மரபி னஞ்சுவரு பேஎய்

வெல்லும் போரையுமுடைய; மாந்தரம் பொறையன் கடுங்கோ பாடி சென்ற கொள்கலம் குறையோர்போல - மாந்தரன் மருகனாகிய பொறையன் கடுங்கோவைப் பாடிச்சென்றதனாற் பெற்றுக்கொண்ட ஆபரணங்களையுடைய வறியவர்போல; நெஞ்சே! இனி நன்றும் உவ வாழிய - நெஞ்சே! இப்போது மிகவும் மகிழ்வாயாக; நீ வாழ்க; ஏனெனில், காதலி வடிப்பு உறு நரம்பில் தீவிய மொழிந்து தொடிக் கண் வடுக்கொள முயங்கினள் - நம் காதலி வடித்தலமைந்த யாழ் நரம்பின் ஒலிபோல இனிய மொழிகளை மொழிந்து தான் தொடி யிட்டவிடத்து வடுவுண்டாக நம்மைப் புணர்ந்தாள் என்று, இரவுக் குறிவந்து நீங்கும் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொன்னான் என்க.

நீர்திரள் கடுக்கும் மாசு இல் வெள்ளி சூர்பபு உறு கோல்வளை செறித்த முன்கை - நீரின் திரட்சியை ஒக்கும் குற்றமற்ற வெள்ளியா லாகிய வளைவு பொருந்திய கோற்றொழிலமைந்த வளை செறித்த முன் கையும்; இடனில் சிறுபுறத்து - இடனின்றிக் குறுகிய முதுகின்கண்; குறை அறல் அன்ன இரு பல் கூந்தல் - குறைந்து வருகின்ற கரு மணலை ஒக்கும் கரிய பலவாகிய கூந்தலும்; இழையொடு - ஆபரணங் களோடு; துயல்வர - அசைய; உருவுகிளர் ஏர் வினை பொலிந்த பாவை இயல்கற்று அன்ன ஒதுக்கினள் - அழகுவிளங்குகின்ற தோற்றப் பொலி வுடைய கம்மியத் தொழிலாற் பொலிந்த பாவை நடை கற்றாற்போன்ற நடையினளாய்; கடல்மீன் துஞ்சும் நள் என் யாமத்து வந்து - கடல் மீன்கள் உறங்கும் 'நள்' என்னும் அநுகரண ஒலியையுடைய நடு யாமத்திலே வந்து (முயங்கினள்) என்க.

முன்கையும் கூந்தலும் இழையும் துயல்வர என்று இயையும்; உருவு கிளர்தலும், ஏருடைமையும் வினைப் பொலிதலும் பாவைக்கு விசேடணங்களாகக் கொள்க.

பெயல் அலை கலங்கிய மலை பூ கோதை - மழை பெய்தலைத்தலினால் கலங்கிய மலைப்பூக்கள் தொடுத்த மாலையினின்றும்; எறி இயல் பொன்

கூட்டெதிர் கொண்ட வாய்மொழி ஞிமிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை யதிகற் கொன்றுவந்
தொள்வா ளமலை யாடிய ஞாட்பிற்
15 பலரறி வுறுத லஞ்சிப் பைப்பய
நீர்த்திரள் கடுக்கு மாசில் வெள்ளிச்

---

னிற் கொங்கு சோர்பு உறைப்ப - கொல்லன் எறிந்த நல்லியல்புடைய பொன்னின் பிதிர் போலத் தேனனது சோர்ந்து துளிக்க வந்து தொடிக் கண் வடுக்கொள முயங்கினள் என்று இயைக்க.

முறையின் வழாது ஆற்றி பெற்ற கறை அடி யானை நன்னன் பாழி - வேள்வியியற்றும் முறையினின்றும் பிழையாது இயற்றி அதனால் பெற்ற கறைபொருந்திய அடியைக்கொண்ட யானையை உடைய நன்னன் என்பானுக்கு உரித்தான பாழிநகரத்திலே; ஊட்டு அரு மரபின் அஞ்சுவரு பேய் கூடு எதிர்கொண்ட வாய்மொழி ஞிமிலி - வர்ணம் ஊட்டுதற்கு அரிய தன்மையினையுடைய அச்சம் வருகின்ற பேய்க்கூட்டினைத் தன்மேல் ஏற்றுக்கொண்ட மெய்ம் மொழியினை யுடைய ஞிமிலி என்பான்; புள்ளிற்கு ஏமமாகிய பெரும் பெயர் வெள்ளம் தானை அதிகன் கொன்று உவந்து ஒள்வாள அமலை ஆடிய ஞாட்பின் பலர் அறிதல் அஞ்சி - பறவைகளுக்கு ரக்ஷை யாகிய பெரிய கீர்த்தியையும் வெள்ளம்போன்ற சேனையையுமுடைய அதிகனைக்கொன்று மகிழ்ந்து, 'ஒள்வாளமலை' என்னும் கூத்தினை ஆடிய பூசலைப்போலப் பலரும் அறிந்து பேரலராதற்கு அஞ்சி ய மத்து வந்து முயங்கினள் என்று கூட்டுக.

காதலி நள்ளென் யாமத்துச் சூர்ப்புறு வளை செறித்த முன்கையும் கூந்தலும் இழையொடு துயல்வரப் பாவை இயல்கற்றன்ன ஒதுக்கின ளாய்க் கோதையினின்றும் கொங்கு சோர்புறைப்பப் பைப்பயக்குறி யிடத்து வந்து, வடுக்கொள முயங்கினள்; ஆதலால், நெஞ்சே! குறை யோர் போல உவ என்று இயைக்க.

குறையோர் கொள்கலம்போல என்றாரேனும், கொள்கலக் குறை யோர்போல எனமாற்றிப் பொருள் கொள்க; "பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின் நிவந்தோங் குயர்கொடிச் சேவலோய்" என்று

ஆர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறையுற லன்ன விரும்பல் கூந்த
லிடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
20 கடன்மீன் றுஞ்சு நள்ளென் யாமத்
துருவுகிள ரேர்வினைப் பொலிந்த பாவை
யியல்கற் றன்ன வொதுக்கினள் வந்து
பெயலலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
யியலெறி பொன்னிற் கொங்குசோர் புறைப்பத்

ரேனும், சேவற் கொடியோய் என்று மாற்றி பொருள் கொண்டாற் போல. (பரிபா. 3 ஆம் பாட்டு, 17 18). "இலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க் கொண்பெருங் கானத்துக் கிழவன், றண்டா ரகலம் நோக்கின மலர்ந்தே" (புறம். 155.) என்றாற் போலக் 'குறையோர் கொள் கலத்தைப் போல உவ' எனினும் அமையும்.

ஊட்டு அருமரபின் அஞ்சுவரு பேய்க்கு ஊட்டு எதிர் கொண்ட என்று கண்ணழித்து, உண்பித்தற்கரிய தன்மையினையுடைய பேய்க்கு உணவூட்டலை மேற்கொண்ட எனலுமாம். கூடு - உடம்பு. புள்ளிற்கு ஏமமாவது - பகைவரைக் கொன்று புட்களை ஊட்டுதல். ஒள்வாளமலை என்பது ஒரு கூத்து (வெண். மாலை. தும்பை. 21). பெயலைக் கலங்கிய என்ற பாடத்திற்கு - ஐகாரத்தைச் சாரியை ஆக்கி, பெயலுக்குக் கலங்கிய என்க. நாவின் புரையோர் என்று இயைக்க. நாவின் வள்ளல் என்றியைத்தலுமாம்.

"உருவுகிளரேர்.........வொதுக்கினள்" என்றக்கால் வடிவுபற்றி உவமங்கொள்ளவே, உயிரில்லாதாள்போல அச்சமின்றி இரவிடை வந்தாளென்னும் பொருள்தோன்றும் என்றும், "தொடிக்கண்வடுக்கொள ......மொழிந்தே" என்பது புணர்ச்சிபற்றிய உவகை; என்னை: இவள் இவ்வாறு முயங்கினமையான் 'உவவினிவாழிய நெஞ்சே' என்றமையின் என்றுங் கூறுவர் பேரா. உருவு - வடிவழகு. (தொல். பொருள். 276, 259, சொல். 24, 302.)

பி - ம். 4 நிறையிருந்தானை மாந்தரன். 7. வாழியென்னெஞ். 8. முறையியன் வழாஅ. 13. அதியற். 23. பெயலைக்கலக்கிய மிலைப் பூங். 24. வியலெறி.

25 தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே.

என்பது : இரவுக்குறிவந்து நீங்கும் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

## 143. பாலை

செய்வினைப் பிரித லெண்ணிக் கைம்மிகக்
காடுகவி னொழியக் கடுங்கதிர் தெறுதலி
னீடுசினை வறிய வாக வொல்லென
வாடுபல் லகலிலை கோடைக் கொய்யுந்
5 தேக்கம லடுக்கத் தாங்கண் மேக்கெழுபு

செய் வினை பிரிதல் எண்ணி - செய்யத்தக்க ஆள்வினையின் பொருட்டுத் தலைவியைப் பிரிதலை எண்ணி ; வெம்மலை அருஞ்சுரம் நீந்தி சேறும் என்ற சிறுசொற்கு - வெவ்விய மலைப்புறத்து அருஞ்சுரத் தினைக் கடந்து ஊறின்றிச் செல்வேம் என்ற நமது புல்லிய சொல் லுக்கு; குதிரைக் கவான் அகல் அறை நெடு சுனை நீலம்போல் அக்கண் இவட்கு பனி கலுழ்ந்தன - குதிரை என்னும் பெயரிய மலைப்பக்கத் திலே அகன்ற கற்பாறை நடுவேயுள்ள நெடிய சுனையிடத்து நீலோற் பலம்போலுகின்ற அத்தகைய கண்களினின்று இவளுக்கு நீரொழுகின; ஐய நோகு யான் - தலைவ! யான் அதன்பொருட்டு நோவாநின்றேன் என்று, பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றாமைகண்டு செலவழுங்குவித்தாள் என்க

காடு கவின் ஒழிய கடுங்கதிர் கைம் மிக தெறுதலின் - காட்டின் அழகுகெட அழலும் சூரியன் வரம்புகடந்து காய்தலினாலே; நீடுசினை வறிய ஆக - நெடிய கொம்புகள் இலையின்றி வறிய ஆகும்படி ; ஆடுபல் அகல் இலை கோடைக்கு ஒல்லென ஒய்யும் தேக்கு அமல் அடுக்கத்து ஆங்கண் - ஆடுகின்ற பலவாகிய அகன்ற இலைகள் மேல்காற்றால் ஒல் என்னும் ஒலியுடையவாக இழுத்துக்கொண்டு போகப்படுகின்ற தேக்கு மரங்கள் நெருங்கிவளர்ந்த பக்கமலையினவ்விடத்து ; முளி அரில் பிறந்த வளி வளர் கூர் எரி சுடர் நிமிர் நெடு கொடி மேக்கு எழுபு விடர்முகை

முளியரிற் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்விமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
வெம்மலை யருஞ்சுர நீந்தி யைய
சேறு மென்ற சிறுசொற் கிவட்கே
10 வசையில் வெம்போர் வானவன் மறவ

முழங்கும் - காய்ந்த தூறுகளிற் பிறந்தனவும் காற்றினால் வளர்க்கப்பட்டனவுமான மிகுதியான தீக்கொழுந்தின் மிகைத்த நெடிய வரிசைகள் மேலுக்கு எழுந்து மலைப்பிளப்பாகிய குகைகளில் முழங்காநிற்கும் வெம்மலை என்று கூட்டுக.

வசையில் வெம்போர் வானவன் மறவன் - பழிசேர்தலில்லாத கொடும்போரினையுடைய சேரன் படைத்தலைவனை; நசையின் வாழ்நர்க்கு நல்கலம் சுரக்கும் வாய்வாள் புனைகழல் பிட்டன் - பரிசில் பெறும் விருப்பத்தோடு வந்து தன்கீழ் வாழ்கின்றவர்க்கு நல்ல அணிகலன்களைக் கொடுக்கும் தப்பாத வாட்படையையும் புனைந்த வீரக்கழலினையுமுடைய பிட்டன் என்பானது; பொய்யா மை தவழ் உயர் சிமை (குதிரை) - பெய்தலிற் பொய்யாத மேகம் தவழ்கின்ற சிகரத்தையுடைய குதிரை மலை என்க.

தூவலையின் மலர்ந்த தண்கமழ் (நீலம்) - மழைத்துவலையால் மலர்ந்த தண்ணிய கமழ்கின்ற நீலம் என்க.

நசையின் வாழ்நர்க்குப் பொய்யாமல் நன்கலம் சுரக்கும் பிட்டன் என்றலுமாம்.

முன்னரே வாடிய தேக்கிளிலையைக் கோடையானது சினை வறியவாக இழுத்துப் போவது போல, நுமது பிரிதற்குறிப்பால் முன்னரே வாடிய தலைவியின் உயிரை நும பிரிவு உடல் பாழாக இழுத்துக் கொண்டு போய் விடும் என்று தோழி குறிப்பாலுணர்த்தினாள் என்க.

கோடை - மேல்காற்று. ஒய்தல் - இழுத்தல். அரில் - தூறு. வளி - காற்று. கொடி - ஒழுங்கு; வரிசை. சிறுசொல் - புல்லிய சொல். நசை - விருப்பம். வாய்வாள் - தப்பாத வாள். மை - மேகம். கவான் - பக்கமலை. அறை - கற்பாறை. கலுழ்தல் - ஒழுகுதல். வசையில் போராவது - படையடம் படாமைப் பொரும் போர்.

பி-ம். 2. காடுகவினழிய. 6. முளரியிற்பிறந். 8. வெம்முனை.

னசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும்
பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்
மைதவ ழுயர்சிமைக் குதிரைக் கவாஅ
னகலறை நெடுஞ்சுனைத் துவலையின் மலர்ந்த
15 தண்கமழ் நீலம் போலக்
கண்பனி கலுழ்ந்தன நோகோ யானே.

என்பது: பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றுமை கண்டு செலவழுங்குவித்தது.

—ஆலம்பேரிசாத்தனார்.

## 144. முல்லை

வருது மென்ற நாளும் பொய்த்தன
வரியே ருண்க ணீரு நில்லா

---

நமர் வருதும் என்ற நாளும் பொய்த்தன - நம் தலைவர் தாம் வருவேம் என்ற நாளும் பொய்யாயின; அரி ஏர் உண் கண் நீரும் நில்லா - செவ்வரி பரந்த அழகிய மையுண்ட கண்ணினிடத்து நீர்த் துளிகளும் நில்லாவாய் விழுகின்றன; தண் கார்க்கு ஈன்ற பை கொடி முல்லை வை வாய் வான் முகை அவிழ்ந்த கோதை பெய் வனப்பு இழந்த கதுப்பும் உள்ளார் - குளிர்ந்த மழைக்குப் பூத்த பசிய கொடியாகிய முல்லையின் கூரிய முகத்தையுடைய வெள்ளிய மொட்டு விரிந்த பூத்தொடுத்த மாலை சூடும் அழகினை இழந்த கூந்தலையும் நினையார் அதுவுமன்றி, அறன் அஞ்சலர் - அறத்துக்கும் அஞ்சினரல்லராய் அருள் கண் மாறல் மாறுக என - அருளை ஒளித்தலைச் செய்யினும் செய்க என்று; ஆய் இழை - ஆராய்ந்த ஆபரணங்கள் பூண்ட நம் தலைவியானவள்; சிறிய சொல்லி பெரிய புலப்பினும் - சிறியவாகச் சொல்லிப் பெரியவாக வெறுத்தாளாயினும்;

ஓர்த்து - (உன்ன நிமித்தம் புள் நிமித்தம் முதலியனவற்றையும், "முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும் படு பயனும்") விசாரித்து; அமர் அட்ட செல்வம் தமர் விரைந்து உரைப்ப கேட்கும் ஞான்று - யாம் அமரிடத்துப் பகைவரை யட்டதனுற் பெற்ற செல்வத்தை நம் தமர் விரைந்து சென்று உரைப்பக் கேட்ட அஞ்ஞான்று;

தண்கார்க் கீன்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான்முகை யவிழ்ந்த கோதை
5 பெய்வனப் பிழந்த கதுப்பு முள்ளா
ரருள்கண் மாறலோ மாறுக வந்தி
லறனஞ் சலரே யாயிழை நமரெனச்
சிறிய சொல்லிப் பெரிய புலப்பினும்
பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு
10 துனிதீர் முயக்கம் பெற்றோள் போல

---

பனி படு நறு தார் குழைய - குளிர்ச்சி பொருந்திய நறிய தார் குழை யும்படி ; நம்மொடு துனி தீர் முயக்கம் பெற்றோள் போல உவக்குவள். நம்மோடுண்டாகிய வெறுப்புத் தீர்தற்குக் காரணமாகிய புணர்ச்சியைப் பெற்றவள் போல உவப்பள் ; ஆதலால், என் நெஞ்சே வாழி - என் மனமே நீ வாழ்க, என்று, வினைமுற்றிய தலைமகன் தன் நெஞ்சிற்கு உரைப்பானாய்த் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

அருள் கண் மாறல் மாறுக என்பதற்கு அருளும் கண்ணோட்டமும் மாறலும் மாறுக என்றலும் பொருந்தும். கண் மாறுதல் - விழித்த கண் இமைக்குமளவிலே மறைதல் என்றார் 'கண்மாறுடவர்' என்புழி நச். (மதுரை. அடி. 642.)

விசும்பின் ஏறு எழுந்து முழங்கினும் மாறு எழுந்து சிலைக்கும் கடா யானை கொட்கும் பாசறை - விசும்பினிடத்துள்ள இடியேறு எழுந்து முழங்கினாலும் அதற்கு மாறாக எழுந்து முழங்கும் ஆண் யானை சூழும் பாசறைக்கண்ணேயுள்ள ; போர் வேட்டு எழுந்த மள்ளர் கையது கூர்வாள் குவி முகம் சிதைய நூறி - போரை விரும்பி எழுந்த வீரர் கையகத்துள்ளதாகிய கூரிய வாளின் குவிந்த முகம் சிதையுமாறு வெட்டி யழித்து ; மான் அடி மருங்கின் பெயர்த்த குருதி - மான்கள் அடி வைத்த விடங்களிலே தேங்குமாறு ஊற்றிய உதிரம் ; வான மீனின் வயின் வயின் இமைப்ப - வானத்திடத்து மீன்போல இடந் தொறும் இடந்தொறும் விட்டு விளங்கும் வண்ணம் (அமர் ஓர்த்து அட்ட செல்வம்) என்க.

ஆயிழை, "நமர் 'வருதும்' என்ற நாளும் பொய்த்தன ; கண் நீரும் நில்லா ; கதுப்பும் உள்ளார்; அறன் அஞ்சலராய் அருள் கண்

வுவக்குவள் வாழிய நெஞ்சே விசும்பி
னேறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்குங்
கடாஅ யானை கொட்கும் பாசறைப்
போர்வேட் டெழுந்த மள்ளர் கையதை
15 கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி
மானடி மருங்கிற் பெயர்த்த குருதி
வான மீனின் வயின்வயி னிமைப்ப
வமரோர்த் தட்ட செல்வந்
தமர்விரைந் துரைப்பக் கேட்கு ஞான்றே.

என்பது : வினைமுற்றிய தலைமகன் தன்னெஞ்சிற் குரைப்பானாய்ப் பாகற்குச் சொல்லியது.

—மதுரை அளக்கர்ஞாழலார்மகனார் மள்ளனார்.

---

மாறலோ மாறுக" எனச் சொல்லிப் புலப்பினும் அமர் அட்ட செல்வம் தமர் உரைப்பக் கேட்கும் ஞான்று முயக்கம் பெற்றோள் போல உவக்குவள்; என் நெஞ்சே! வாழி என்று இயைக்க.

வரி ஏர் உண் கண் என்றலுமாம். வரி - மை எழுதிய வரி; அந்தில் - அசை. அறனுவது, ஸ்த்ரீ விஸனம் பண்ணலாகாதென்றது. சிலைத்தல் - ஒலித்தல். கையதை - ஐகாரம் சாரியை.

ஆயிழை என்பதனை விளியாக்கித் தலைவி தோழிக்கு அவ்வாறு கூறியதனைத் தலைமகன் கொண்டு கூறினான் என்றலுமாம்.

இப்பாட்டினை இத்துறைக்கே கொண்டு, "இம்மணிமிடைபவளத்து வேந்தன் தலைவனுயினவாறும் தான் அமரகத்தட்ட செல்வத்தையே மிக்க செல்வமாகக் கருதுதற்குரியாள் அரச வருணத்திற் றலைவியே என்பதூஉம் உணர்க" என்றார் நச். இனிப் பேரா. 'பொய்யே கோடல்' என்ற பகுதிக்கு உதாரணமாக "வருதுமென்ற நாளும் பொய்த்தன, வரியே ருண்கணீரு நில்லா" என்பதனைக் காட்டினர் (தொல். பொருள். 24; 270.)

பி - ம். 1. வருவே. 2. வரியேயுண்கணீ. 14. கைய. 17. வானக மீனின். 81. வமரொறுத்.

## 145. பாலை

வேர்முழு துலறி நின்ற புழற்காற்
றேர்மணி யிசையிற் சிள்வீ டார்க்கும்
வற்றன் மரத்த பொற்றலை யோதி
வெயிற்கவி னிழந்த வைப்பிற் பையுள்கொள
5 நுண்ணிதி னிவக்கும் வெண்ஞெமை வியன்காட்
டாளி லத்தத் தளிய ளவனொடு

---

வேர் முழுது உலறி நின்ற புழல் கால் - வேர் முதலாக மரம் முழுவதும் வற்றி நின்ற துளைபொருந்திய காலை யுடைய; தேர் மணி இசையில் சிள்வீடு ஆர்க்கும் வற்றல் மரத்த பொன் தலை ஓதி - தேர் மணி ஓசை போலும் சிள்வண்டுகள் ஒலியாநிற்கும் வற்றல் என்னும் பெயரிய மரத்திடத்துள்ள பொன்போலும் தலையையுடைய ஓந்தியானது; பையுள் கொள நுண்ணிதின் நிவக்கும் - துன்பம் கொள்ளச் சிறிதாக உயரவேறும்; வெயில் கவின் இழந்த வைப்பின் வெண் ஞெமை வியன் காட்டு ஆளில் அத்தத்து - வெயிலால் அழகிழந்த ஊர்களிலுள்ள வெள்ளிய ஞெமைமரம் வளர்ந்த பெரிய காட்டகத்துள்ள ஆள்வழக்கற்ற சுரத்துவழியாக; அளியள் - இரங்கத்தக்காளாகிய என் மகள்; அவனொடு அருஞ்சுரம் இறந்தனள் என்ப - தலைவனோடு கூடி கடத்தற்கரிய பாலை வழியிலே சென்றாள் என்று கண்டோர் கூறுப; அமர்க்கண் என் அஞ்ஞையை அலைத்த கை - மாறுபாடு பொருந்திய கண்களையுடைய என்னுடைய அன்னை போன்ற மகளை அடித்த கைகளானவை; கடுநவைப் படீஇயர் - மிக்க குற்றத்தைப் படுவனவாக என்று, மகட்போக்கிய செவிலித்தாய் சொன்னாளென்க.

வாள் வரி பொருத புண் கூர் யானை - வாள் போலும் வளைந்த வரியையுடைய புலியோடு போர்செய்ததனால் புண்மிக்க யானையானது; புகர் சிதை முகத்த குருதி வார உயர் சிமை நெடு கோடு உரும் என முழங்கும் - புள்ளி சிதைந்த முகத்தனவாய்க் குருதி ஒழுக உயர்ந்த மலைச்சிகரங்களின் நெடிய உச்சிக்கண் இடிக்கும் இடிபோல முழங்காநிற்கும் (அருஞ்சுரம்) என்க.

குறுக்கைப் பறந்தலை - குறுக்கை என்னும் பெயரிய போர்க்களத்திலே; பெருஞ்சீர் திதியன் தொல் நிலை முழுமுதல் துமியப்பண்ணிய அன்னி போல - பெரிய சிறப்பினையுடைய

8

வாள்வரி பொருத புண்கூர் யானை
புகர்சிதை முகத்த குருதி வார
வுயர்சிமை நெடுங்கோட் டுருமென முழங்கு
10 மருஞ்சுர மிறந்தன ளென்ப பெருஞ்சீ
ரன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்

---

திதியனது பழைமையான நிலையினையுடையதும் நன்மை வாய்ந்த மெல்லிய பூங்கொத்தினையுடையதுமான புன்னையின் பெரிய முதல் துண்டாகப் பண்ணிய அன்னி போலக் கடுநவைப் படீஇயர் என்க.

களி மயில் குஞ்சர குரல குருகோடு ஆலும் - களிக்குமியல்புடைய மயில்கள் குஞ்சரம் போன்ற குரலவாய்க் குருகினோடு கூவா நிற்கும்; துஞ்சா முழவின் - ஓசையறாத மண முழவினையும்; துய்த்து இயல் வாழ்க்கை - போகம் நுகர்ந்து செல்கின்ற வாழ்க்கையையுமுடைய; கூழ் உடை தந்தை இடன் உடை வரைப்பில் - நெல் வளத்தையுடைய தன் தந்தையின் பரப்பமைந்த மாளிகையில்; ஊழ் அடி ஒதுங்கினும் உயங்கும் - முறையாக அடியை வைத்து நடந்தாலும் மெலியும்; போது - போது போன்ற என் மகளை; ஐம்பால் சிறு பல் கூந்தல் பிடித்து - ஐந்து பகுதியான சிறிய பலவாகிய கூந்தலின்கண் பற்றிக் கொண்டு; அருளாது - அருள்செய்யாது; எறிகோல் சிதைய நூறவும் - அடிக்கும் கோல் சிதையும் வண்ணம் முதுகில் அடிக்கவும்; சிறுபுறம் எனக்கு உரித்து என்னாள் நின்ற - முதுகு எனக்கு உரிமையுடைத்து என்று சொல்லாளாய் அசையாது நின்ற என் அஞ்ஞையை என்க. கூந்தற் போது - கூந்தலுடன் போதைப் பற்றி என்னவுமாம். போது கூந்தற் பிடித்து என்றியைத்துப் பொருள் கோடலுமாம்.

வேர்முழுதும் உலறி நிற்றலும், புழற்காலுடைமையும், சிள்வீடு ஆர்த்தலும் வற்றல் மரத்துக்கு இயல்பு. மயில் ஆலும் வரைப்பு, முழவின் வரைப்பு, தந்தை வரைப்பு என்று இயைக்க.

என் அஞ்ஞை அளியள் அவனொடு ஆளில் அத்தத்து அருஞ்சுரம் இறந்தனள் என்ப; அவனை அலைத்தகை அன்னிபோலக் கடுநவைப் படீஇயர் என்று கூட்டுக.

தந்தை வரைப்பினுள் ஊழடி ஒதுங்கினும் உயங்கும் போதனையாளை கூந்தற்கண் பிடித்து அருளாது கோல் சிதைய நூறவும் சிறுபுறம் எனக்கு உரித்தென்னாள் நின்றமை அஞ்ஞையை என்க.

றென்னிலை முழுமுத றமியப் பண்ணிய
நன்னர் மெல்லிணர்ப் புன்னை போலக்
கடுநவைப் படூஇயர் மாதோ களிமயில்
15 குஞ்சரக் குரல குருகோ டாலுந்
துஞ்சா முழவிற் றுய்த்தியல் வாழ்க்கைக்
கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பி
னூழடி யொதுங்கினு முயங்கு மைம்பாற்
சிறுபல் கூந்தற் போதுபிடித் தருளா
20 தெறிகோல் சிதைய நூறவுஞ் சிறுபுற
மெனக்குரித் தென்று ணின்றவென்
னமர்க்க ணஞ்ஞையை யலைத்த கையே.

என்பது : மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

—கயமனார்.

---

தன் உடம்பு முழுவதும் தலைமகனுக்கு உரித்தாயினமையை உட்கொண்டு "சிறுபுறம் எனக்கு உரித்து" என்றாளாய் நின்ற தலைமகளது அருமைப்பாடு நோக்கித் தன் மகளை 'அன்னை' என்று செவிலி உயர்த்துக் கூறினாள் என்க.

அன்னி துமியப் பண்ணிய புன்னைபோல என்றாரேனும், புன்னை துமியப்பண்ணிய அன்னிபோல என்று மாற்றிப் பொருள் கொள்க. 'குன்றுகெழுநாடு' என்றாரேனும், 'நாடுகெழுகுன்று' என்று மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டாற் போல. முழுமுதல் - பெரிய அரை.

உலறி நின்ற வற்றன் மரத்தினைப்பற்றி ஒந்தியானது சின்வீடு ஆரவாரிப்பப் பையுள்கொள நுண்ணிதின் எறிந்தாற்போல, இளையரை நீங்கித் தனித்தொழிந்த தலைமகனைப் பற்றிக்கொண்டு தலைவி ஆயமும் அயலும் ஆரவாரிப்ப வருந்தி மெல்ல மெல்லச் சுரமிறந்தாள் என்க.

"கூழுடைத்தந்தை............முயங்கும்" என நெல்லுடைமை கூறியவதனானே, வேளாண் வருணமென்பது பெற்றாம் என்பர் நச். (தொல். பொருள். 15.)

பி - ம். 5. நுண்ணிதினிளக்கும்; னுளர்க்கு. 6. லத்தந்தமிய. 14. கடுநவி. 16. துயக்கில் வாழ்க்கை. 22. கண்மஞ்ஞை.

## 146. மருதம்

வலிமிகு முன்பி னண்ணல் லேஏறு
பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி
மடக்க ணெருமை மாணாகு தழீஇப்
படப்பை நண்ணிப் பழனத் தல்குங்
5 கலிமகி ழூர னொலிமணி நெடுந்தே
ரொள்ளிழை மகளிர் சேரிப் பன்னா
ளியங்க லானா தாயின் வயங்கிழை
யார்கொ லளிய டானே யெம்போன்

வலி மிகும் முன்பின் அண்ணல் ஏறு பனி மலர் பொய்கை பகல் செல மறுகி மடக்கண் எருமை மாண் நாகு தழீஇ படப்பை நண்ணி பழனத்து அல்கும் - எல்லா வலியும் மிகுதற்குக் காரணமான உடல் வலிமையும் தலைமையுமுடைய எருமையேறு குளிர்ந்த மலர்ப்பொய்கைக் கண்ணே பகலெல்லாம் கடக்கச் சுழன்று உழக்கி மடப்பம் பொருந்திய கண்ணையுடைய மாட்சிமை பொருந்திய இள எருமையைத் தழுவி, தோட்டக் கூற்றினை யடைந்து பின்னர் வயல்களில் தங்கும் ; கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடு தேர் - ஆரவாரத்தோடு கூடிய மகிழ்ச்சியை யுடைய ஊரனது ஒலிக்கும் மணி பூண்ட நெடிய தேர்; ஒள் இழை மகளிர் சேரி பன்னாள் இயங்கல் ஆனாதாயின் - ஒள்ளிய இழையை யுடைய பரத்தை மகளிர்களது சேரிக்கண்ணே பலநாள் உலாவுதலுக்கு அமையாதாயின் ; மாய பரத்தன் வாய் மொழி எம்போல் நம்பி - மாயஞ் செய்கின்ற பரத்தைமையையுடைய தலைமகன் மொழியினை எம்மைப் போல விரும்பி ; வளிபொர துயல்வரும் தளி பொழி மலரின் - காற்றுப் பொர அசையும் நீர் பொழிகின்ற மலர்போல ; கண் பனி ஆகத்து உறைப்ப கண் பசந்து - கண்ணீர் மார்பிடத்துத் துளிக்கக் கண்பசந்து ; ஆயமும் அயலும் மருள தாய் ஓம்பு ஆய் நலம் வேண்டாதோள் - ஆயமும் அயலாரும் இஃதென்ன புதுமை என்று மருளும் படியாகத் தாயாற் பேணப்பட்ட ஆய்ந்த அழகினை வேண்டாதோள் ; வயங்கிழை யார் கொல் - விளங்குகின்ற இழையையுடைய பரத்தையருள் யாவளோ ? அளியள் - அவள் இரங்கத்தக்காளாவள் ; ஆதலால், பாண ! அவள்பால் நீ வாயில் வேண்டிச் செல் ; அஃது உனக்கு அமையும் என்று, வாயில் வேண்டிய பாணனுக்குத் தலைவி வாயின் மறுத்தாள் என்க.

மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி
10 வளிபொரத் துயல்வருந் தளிபொழி மலரிற்
கண்பனி யாகத் துறைப்பக் கண்பசந்
தாயமு மயலு மருளத்
தாயோம் பாய்நலம் வேண்டா தோரே.

என்பது : வாயில் வேண்டிச்சென்ற பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

—உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார்.

---

ஊரன் தேர் சேரி இயங்கலானுதாயின் நலம் வேண்டாதோள் வயங்கிழை யார் கொல்; அவள் அளியள் என்றிவைத்துப் பாணற்கு வாயின் மறுத்ததாக வுரைக்க.

ஆய் நலமாவது - ஆயத்தாரால் ஆராயப்பட்ட அழகு; ஆயத்தார்க்கு விநோதமான அழகு என்றபடி. தாய் ஓம்பு ஆய் நலம் ஆயமும் அயலும் அருளவேண்டாதோள் என்று கண்ணழித்து, தாயால் ஓம்பப்பட்ட ஆயத்தார்க்கும் அயலார்க்கும் விநோதமான நலத்தினை அவ்வாயமும் அயலும் தர வேண்டாதோள் என்றலுமாம். வயங்கிழையாகிய வேண்டா தோள் யார் என்றலுமாம்.

வலி - உடல் வலியேயன்றி எல்லா வலியுமாம் என்றும், முன்பு - உடல் வலி என்றும் கொள்க. மறுகுதல் - சுழலுதல். படப்பை - தோட்டக்கூறு; நாகு - இளமை.

எருமை ஏறு மலர்ப் பொய்கையிற் பகலெல்லாம் சுழன்று, பின்னர் இள எருமையைத் தழுவிப் படப்பையை அடைந்து அதன் பின்னர்ப் பழனத்தின்கண் தங்கினாற் போல, தலைமகன் பரத்தையர் சேரிக்கண் பன்னாள் தங்கி அவர்களை நுகர்ந்து, பின்னர்த் தான் ஆதரித்துக்கொண்ட இளையளாகிய பரத்தை யொருத்தியொடு காவு தொறும் திரிந்து ஆடிப் பின்னர்ச் சேறு மிகுத்த பழனம் போன்று இழிந்த எம்மில்லிலே தங்கு தன் மாத்திரைக்கு வந்தான் என்றவாறு.

பி - ம். 2. பகைசெல. 3. மடநாகு. 4. படப்பைநண்ணிய. 5. கலிகேழூரன். 8. யார்கொல ளியர் தாமே. 9. பரத்தை.

## 147. பாலை

ஓங்குமலைச் சிலம்பிற் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
வூன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுட னீன்ற முடங்கர் நிழத்த
5 துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்
பொறிகிளர் உழுவைப் போழ்வா யேற்றை

ஓங்குமலை சிலம்பில் பிடவுடன் மலர்ந்த வேங்கை வெறிதழை வேறு வகுத்த அன்ன - ஓங்கிய மலையை அடுத்த சாரலிலே பிடவு டனே மலர்ந்த வேங்கையின் வெறிகமழும் தழையை வேறாக வகுத்தா லன்ன; ஊன் பொதி அவிழா கோட்டு உகிர் குருளை மூன்று - தசை யின் மூட்டம் விரியாத வளைந்த நகத்தையுடைய குட்டிகள் மூன்றை; முடங்கர் துறுகல் விடர் அளை உடன் ஈன்ற நிழத்த பிணவு பசிகூர்ந்தென - முடக்கமான விடத்திலுள்ள பொற்றைக்கற் பிளப்பாகிய குகையிலே ஒருசேர ஈன்றதனால் ஓய்ந்த பெண்புலி பசிமிக்கதென்று; பொறிகிளர் பேழ்வாய் உழுவை ஏற்றை - புள்ளிவிளங்கும் பெரிய வாயையுடைய ஆண்புலி; அறுகோட்டு ஆண் உழைமான் குரல் ஓர்க்கும் - அறும்கோட் டையுடைய ஆண் உழைமானின் குரலை உற்றுக் கேளாநிற்கும்; நெறி படு கவலைய நிரம்பா நீள்இடை-முடக்கமமைந்த கவலைகளாகிய ஒடுங்கிய நீண்டவழியிலே;

பிரிந்தோர் பெயர்வுக்கு நாளும் இரங்கி - பிரிந்த தலைவரது பிரி வுக்குத் தினமும் இரங்கி; வெள்ளி வீதியைப் போல நன்றும் செலவு அயர்ந்திசின் யான்-வெள்ளி வீதியைப்போலச் செல்லப்பெரிதும் விரும் பின யான்; உண்ணு உயக்கமொடு உயிர் செல சாஅய் தோறும் தொல் கவின் தொலைய பலபுலந்து இருந்து பிறிது மருந்து இன்மையின் வினை இலன் - புலந்து உண்ணுத வருத்தமொடு உயிர்செல்ல ஓய்ந்து தோளும் பண்டையழகு கெட பலவற்றிற்கும் இருந்தும் பிறிது மருந்து இன்மை யின் செயலற்றேன் என்று, செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னுள் என்க.

நிழத்த - ஓய்ந்த. நெறி - முடங்குதல். துறுகல் - பொற்றைக்கல். நன்றும் - மிகுதியும். பிறிது - மரணம்; சாதல். பிறிது மருந்து - பிறி தாதற்கு உபகரணமான மருந்து; அஃதாவது நஞ்சு என்றபடி. பொறி கிளர் உழுவை, பேழ் வாயுழுவை என்க.

யறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கு
நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
10 செலவயர்ந் திசினால் யானே பலபுலந்
துண்ணா வுயக்கமொ டுயிர்செலச் சாஅய்த்
தோளுந் தொல்கவின் றொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி
மருந்துபிறி தின்மையி னிருந்துவினை யிலனே.

என்பது : செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—ஔவையார்.

---

நாளும் பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்த் தோளும் தொல்கவின் தொலையப் பல புலந்திருந்து பிறிது மருந்து இன்மையின் வினையிலளாகிய யான் உழுவை யேற்றை யானது ஆண் உழை மான் குரலை ஓர்க்கும் கவலைய நிரம்பா நீளிடை வெள்ளி வீதியைப் போலச் செலவயர்ந்திசின் என்றியைத்துப் பொருள் கோடலு மமையும்.

பிணவின் பசிக்கு இரங்கி உழைமானின் குரலை ஓர்க்கும் ஏற்றை உழுவையையுடைய நீளிடையிலே சென்றவராதலால், நம் தலைவர் நம் நோய்க்கு இரங்கி விரைய வருவர் என்னும் கருத்தால் வெள்ளி வீதியைப் போலச் செல்லத் துணிந்திலேன் என்று தலைவி குறிப்பா லுணர்த்தினா ளென்றவாறு.

இதனுள் வெள்ளிவீதியைப் போலச் செல்லத் துணிந்து, யான் பலவற்றிற்கும் புலந்திருந்து, பிரிந்தோர் பெயர்வுக்குத் தோணலந் தொலைய உயிர்செலச் சாஅய் இரங்கிப், பிறிதுமருந்தின் மையின், செயலற்றேன் என மிகவும் இரங்கியவாறு மெய்ப்பாடுபெற்றி உணர்க. 'மக்கணுதலிய வகனைந்திணையுஞ் சுட்டி யொருவர்ப் பெயர் கொளப் பெறார்' என்ற சூத்திரத்துள் 'வெள்ளி வீதியைப்போல...... யானே' என்ற அடிகளைக்காட்டி, 'இதன்கட் பெயர் கொண்டது அகத் திணைக்கண் சார்த்துவகையான் வந்ததன்றித் தலைமைவகையால் வந்திலது என்றார் நச். (தொல். பொருள். 15, 54.)

## 148. குறிஞ்சி

பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கைக்
கொலைச்சினந் தவிரா மதனுடை முன்பின் ..
வண்டுபடு கடாஅத் துயர்மருப் பியானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி

திரள் பனையன்ன பரு ஏர் எறுழ் தடம் கை கொலை சினம் தவிரா மதன் உடை முன்பின் வண்டுபடு கடாஅத்து உயர்மருப்பு யானை - திரண்ட பனைபோலப் பருத்த அழகிய வலிய வளைந்த கையையும், கொலை செய்ததனால் உண்டான சினம் நீங்காத மனவெழுச்சியுடைய வலிமையையும், வண்டு வீழ்கின்ற கடாத்தையும், ஏந்திய மருப்பினையுமுடைய யானை; தண்கமழ் சிலம்பின் மரம்பட தொலைச்சி உறு புலி உாற குத்தி விறல் கடிந்து சிறு தினை பெரு புனம் வவ்வும் நாட - குளிர்ந்த மணம் கமழ்கின்ற மலைச்சாரலின்கண்ணுள்ள மர முறியச்சாடி, பகையாகவுற்ற புலிமுழங்கக் கோட்டாற் குத்தி அதன் வெற்றியை நீக்கி, சிறு தானியமான தினையின் பெரும்புனத்தைக் கவர்ந்து உண்ணும் நாடனே! சோலை மூளைமேய் பெரு களிறு வழங்கும் மலைமுதல் அடுக்கத்த சிறுகல் ஆறு மாலை வருதல் வேண்டும் - சோலைக்கண்ணேயுள்ள மூங்கிலின் முளையை மேய்கின்ற பெருங்களிறு சஞ்சரிக்கும் மலையின் சாரலிடத்துள்ள சிறுகற்பாறை வழியாக மாலைக்காலத்து வருதல் வேண்டும்; ஏனெனில்,

கடும்பரி குதிரை ஆய் எயினன் நெடுந்தேர் மிஞிலியொடு பொருது களம் பட்டென - விரைந்த செலவினையுடைய குதிரையையுடைய ஆய் எயினன் என்பான் நெடியதேரையுடைய மிஞிலி என்பானோடு பொருது களத்தே பட்டனனாக அஃதறிந்து; காணிய செல்லா கூகை நாணி கடும் பகல் வழங்காத ஆங்கு - பகற்குருடாதலால் அவனைக் காணமாட்டாத கூகையானது நாணி விளக்கமான பகலிலே சஞ்சரிக்க மாட்டாதவாறு போல; இவட்கு இடும்பை பெரிது - தலைவியாகிய இவளுக்கும் பகற்பொழுதிற் றுன்பம் பெரிதாயிராநின்றது. அதனால் நாட! மாலைவருதல் வேண்டும் என்று தோழி தலைமகனைப் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்த வாய்பாட்டால் அதுவும் மறுத்து வரைவு கடாயினாள் என்க.

அவள் இரவுக்குறி மறுத்தவாறு என்னை எனின் : களிறு வழங்கும் மலைமுதல் அடுக்கத்த சிறுகல் ஆறு என்று ஆற்றின்னாமை கூறி மறுத்

5 புறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வு நாட
கடும்பரிக் குதிரை யாஅ யெயின
னெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
10 கடும்பகல் வழங்கா தாஅங் கிடும்பை
பெரிதா லம்ம விவட்கே யதனான்
மாலை வருதல் வேண்டுஞ் சோலை
முளைமேய் பெருங்களிறு வழங்கு
மலைமுத லடுக்கத்த சிறுக லாறே.

என்பது : பகல் வருவானை இரவு வருகென்றது.

—பரணர்.

## 149. பாலை

சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த
நெடுஞ்செம் புற்றத் தொடுங்கிரை முனையிற்
புல்லரை யிருப்பைத் தொள்ளை வான்பூப்
பெருங்கை யெண்கி னிருங்கிளை கவரு
5 மத்த நீளிடைப் போகி நன்று
மரிதுசெய் விழுப்பொரு ளெளிதினிற் பெறினும்
வாரேன் வாழிய நெஞ்சே சேரலர் .

தாளாம். அவள் வரைவு கடாயவாறு என்னை எனின் : தினை நுகர வந்த யானை உரறு புலியைக் குத்தித் தினைப்புனம் வவ்வினாற்போல நீ வரைவொடு புகின் அம்பற் பெண்டிரை வாயடக்கித் தலைவியை மணந்து போவாய் என்றாளாம்.

அடுக்கத்து ஆறு, சிறுகல் ஆறு என்க. அடுக்கம் - மலைச்சாரல். மலைமுதல், மலையிடம். கடும்பகல் - விளக்கமான பகல். (தொல். சொல். 383.)

பி - ம். 6. வவ்வுநாட்டுக். 10. தாஅங்கு மிடும்பை.

சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
10 பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி யார்ப்பெழ வளைஇ
யருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய

---

என் நெஞ்சே! சிறு புன் சிதலை முயன்று நெடு சேண் எடுத்த செம் புற்றத்து ஒடுங்கு இரை பெரு கை எண்கின் இரு கிளை முனையின் புல் அரை இருப்பை தொள்ளை வான் பூ கவரும் அத்தம் நீள் இடை போகி அரிது செய் விழு பொருள் எளிதினிற் பெறினும் இவள் அரி மதர் மழை கண் தெண் பனி கொள வாரேன் வாழி - என் நெஞ்சே! சிறிய புல்லிய கறையான் முயன்று மிகவும் உயரமாக எடுத்த சிவந்த புற்றினிடத்து உள்ளே ஒடுங்கிய புற்றாம்பழஞ் சோறாகிய தம் இரையைப் பெரிய கையையுடைய கரடியின் பெருங் கூட்டம் வெறுக்குமாயின் புல்லிய அரையையுடைய இருப்பையின் துளை பொருந்திய வெள்ளிய பூவைக் கவராநிற்கும் சுரத்து நீண்ட வழியே சென்று அரிதாக ஈட்டத் தக்க சிறந்த பொருளை எளிதாக யான் பெறினும், இத்தலைவியின் அரி பரந்த மதர்த்த குளிர்ந்த கண்களானவை தெளிந்த நீர் ததும்பிக் கலுழுமாறு யான் வாரேன்; நீ போய் உன் வினையை முடித்து வாழ்வாயாக என்று, தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

யவனர் தந்த வினை மாண் நன்கலம் - யவனர்களால் செலுத்தி வரப்பட்ட வேலைப்பாடு சிறந்த நல்ல மரக்கலங்கள்; சேரலர் சுள்ளி பேர் யாற்று வெண் நுரை கலங்க பொன்னொடு வந்து கறியொடு பெயரும் வளம் கெழு முசிறி - சேரலர்க்கு உரித்தான சுள்ளி என்னும் பெயரிய யாற்றின் வெள்ளிய நுரை கலங்கும் வண்ணம் பொன்னோடு வந்து மிளகொடு திரும்பிப் போகும் வளம் பொருந்திய முசிறிப் பட்டினத்தை; ஆர்ப்பு எழ வளைஇ அரு சமம் கடந்து படிமம் வவ்விய நெடு நல் யானை அடு போர் செழியன் - ஆரவாரம் உண்டாக வளைத்து அரிய போரைக் கடந்து படிமத்தைக் கவர்ந்து சென்ற நெடிய நல்ல யானைப் படையால் பகைவரை அடுகின்ற போரையுடைய செழியனது; கொடி நுடங்கும் மறுகிற் கூடல் குடாது - கொடிகள் அசையாநிற்கும் வீதிகளையுடைய கூடல் நகரத்திற்கு மேல்பாலுள்ள; பல் பொறி மஞ்ஞை வெல் கொடி உயரிய - பல புள்ளிகளையுடைய மயிலின் வெல்லுங் கொடி

நெடுநல் யானை யடுபோர்ச் செழியன்
கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
15 பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
வொடியா விழவி னெடியோன் குன்றத்து
வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்
தெதிர்மலர்ப் பிணைய லன்னவிவ
ளரிமதர் மழைக்கண் டெண்பனி கொளவே.

என்பது : தலைமகன் றன்னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

—எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்.

---

உயர்த்த; ஒடியா விழவின் நெடியோன் குன்றத்து - தவிராத விழவினை யுடைய நெடியோனாகிய முருகன் குன்றமான திருப்பரங்குன்றத்து; வண்டு பட நீடிய குண்டு சுனை நீலத்து எதிர் மலர்ப் பிணையல் அன்ன இவள் அரி மதர் மழைக்கண் - வண்டு வீழும்படி நெடிய ஆழமான சுனையிடத்துப் பூத்த நீலோற்பலத்தின் இணையொத்த மலர்களிரண்டின் பிணையல் போன்ற இத்தலைவியின் அரி பரந்த மதர்த்த மழைக் கண் பனிகொள்ள என்க.

வண்டுபட நீடிய நீலத்து எதிர் மலர்ப் பிணையல் என்பதற்கு வண்டு வந்து வீழும்படியாகச் சிறப்புற்ற நீலோற்பலத்தின் இணை ஒத்த மலரினாலாகிய மாலை என்றலுமாம். நீடுதல் - உயர்தல், மேலாதல்; நீடுநீர். (சிந். 2418) என்புழிப் போல.

சேரலர் சுள்ளி யாற்று நுரை கலங்க யவனர் கலம் வந்து பெயரும் முசிறி என்க. முசிறி வளைஇச் சமம் கடந்து படிமம் வவ்விய செழியன் என்க. செழியன் கூடற் குடாது குன்றத்துச் சுனை நீலத்துப் பிணைய லன்ன கண் என்க.

மஞ்ஞைக் கொடி உயரிய விழவின் நெடியோன் என்க. வீரப் பாட்டுக்குரித்தாகாத மஞ்ஞைக்கு வெற்றி கூறியது அது செவ்வேள் ஊர்ந்ததாதலின் என்க.

படிமம் - பாவை. ஒடியாவிழவு—தவிராவிழவு. (சிந். 76.)

பி - ம். 12, பெருஞ்சமம். (எர்க்காட்டூர்.)

## 150. நெய்தல்

*பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென*
*வாகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்*
*கண்ணுருத் தெழுதரு முலையு நோக்கி*

---

பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன் என ஆகத்து அரும்பிய சுணங்கும் வம்பு விட கண் உருத்து எழு தரும் முலையும் நோக்கி பெரிது எல்லினை என பல் மாண் கூறி பெரு தோள் அடைய முயங்கி நீடு நினைந்து அரு கடி படுத்தனள் ஆய் - பின்னுதல் விட்டதனால் முடக்கமமைந்த கூந்தலையும் பொன் போல மார்பிலே பொறித்த சுணங்கினையும் கச்சு இற்று விடும்படியாக முகந் தோற்றி விம்முகின்ற முலையையும் நோக்கி மிகுதியும் அழகுடையாய் எனப் பல மாண்புகளையும் கூறிப் பெரிய தோளை முற்றும் முயங்கி நெடிதாக நினைந்து என் தோழியை அரிய காவலிற் படுத்தனள் ஆய்; தாரார் மார்ப நீ தணந்த ஞான்று பல புலந்து வாரார் கொல் என பருவரும் - மாலை நிறைந்த மார்பனே! நீ நீங்கியபோது என் தலைவி பலவாக வெறுத்து, 'நம் தலைவர் இனி வாரார் போலும்' என வருந்தும்; ஆதலால் நீ விரைய வரைவொடு புகுதுக என்று பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத் தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயினாள் என்க.

கடு செலல் வாட் சுறா வழங்கும் வளை மேய் பெரு துறை - விரைந்த செலவையுடைய கொடிய சுறா மீன் சஞ்சரிக்கும் சங்குகள் மேய்கின்ற பெரிய துறைக்கண்ணே: கனைத்த நெய்தல் கண் போல் மாமலர் மணி இதழ் மாலை கூம்ப காலை நனைத்த செருந்தி போது வாயவிழ கண் நாறு காவியொடு கண் என மலரும் - இதழ் செறிந்த நெய்தலது கண்போலுகின்ற பெரிய மலரின் நீலமணிபோலும் இதழ் மாலையிலே கூம்பக் காலையில் பனியால் நனைக்கப்பட்ட செருந்திப்போது வாய் விரியத் திசையெல்லாம் மணக்கும் காவியும் கண் மலர்வதுபோல மலராநிற்கும்; கழியும் கானலும் காண்டொறும் - கழியையும் கானலையும் காணுந்தோறும் புலந்து பருவரும் என்க.

கண் - முலையின் முகம். கண்ணுக்குத் தோற்றி விம்மும் என்றலுமாம். பிற உறுப்பெல்லாம் கண்ணுக்குத் தோற்றாதொழிய இஃதொன்றே தோற்றினமை கூறினார், 'வார் குலாம் முலை வைத்த கண்

யெல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்
5 பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள் யாயே கடுஞ்செலல்
வாட்சுறு வழங்கும் வளைமேய் பெருந்துறைக்
கனைத்த நெய்தற் கண்போன் மாமலர்
நனைத்த செருந்திப் போதுவா யவிழ
10 மாலை மணியிதழ் கூம்பக் காலைக்
கண்ணுறு காவியொடு கண்ணென மலருங்
கழியுங் கானலுங் காண்டொறும் பலபுலந்து

---

வாங்கிடப் பேர்கிலாது பிறங்கும்' அதன் சிறப்பு நோக்கி என்க. உருத்தெழுதல் - கோபித்தெழுதலுமாம்; 'வேளை வென்ற முகத்தியர் வெம்முலை ஆளை நின்று முனிந்திடும்' என்பதும் இக்கருத்ததென்க.

'கனைத்த நெய்தற் கண்போன் மாமலர் மணியிதழ் மாலைக் கூம்ப' என்று கூறிப் பின் அம்மலர் 'கண்ணுறு காவியொடு கண்ணெனக் காலை மலரும்' என்றமையால், காவியும் அந்நெய்தலொடு மாலைக் கூம்பினமை கூறினாம். இம்மலர்களின் இவ்வியல்பினைக், 'கழியே, சிறு குரல் நெய்தலொடு காவி கூம்ப' (அகம். 350) என்பதனால் அறிக. செருந்தியும் காலைப் பொழுதில் மலருமியல்புடையதென்பது அகம். 240 ஆம் பாடலால் அறியப்படும். நனைத்த - கொத்தான என்றலுமாம்.

கழியிடத்துச் சுறு வழங்குதல் இயல்பு. இது 'கழிச்சுறு வெறிந்த புட்டாளத்திரி' என்பதனாலும் தெளியப்படும்.

'அளவுமிகத் தோன்றினும்' என்னும் பகுதியினுள் "இது தோழி கொண்டுகூறியது" என்பர் நச். இனிப் பேரா. "வாரார்............ ஞான்றே" என்பதனை ஏதமாய்தற்கும், "நனைத்தசெருந்தி" என்பதனை "இலையேமுறியே" என்ற சூத்திரத்திற்கும் உதாரணமாகக் காட்டினர். அளவுமிகத் தோன்றலாவது : 'கண்ணும் தோளும் முலையும் பிறவும் புணர்ச்சியாற் கதிர்த்துக் காரிகை நிரவாய்த் தலைவியிடத்து அளவை மிகக் காட்டல்'. ஏதமாய்தலாவது : 'கூட்டத்திற்கு வரும் இடையூறு உண்டென்று பலவும் ஆராய்தல். அது நொதுமலர் வரையக் கருதுவர் கொல்லெனவும், பிரிந்தோர் மறந்து இனி வாரார் கொல்லெனவும் தோன்றும் உள்ள நிகழ்ச்சி' (தொல். பொருள். 115, 270, 642.)

பி - ம், 2, வம்புடை. 4. எல்லிவள். 11. தண்ணெனமலருங்.

வாராஅர் கொல்லெனப் பருவருந்
தாரார் மார்பநீ தணந்த ஞான்றே.

என்பது : பகற்குறிவந்து கண்ணுற்று நீங்குந் தலைமகனைத் தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து, செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

—குறுவழுதியார்.

## 151. பாலை

தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாநயந்
தின்னமர் கேளிரொ டேமுறக் கெழீஇ
நகுத லாற்றார் நல்கூர்ந் தோரென
மிகுபொரு ணினையு நெஞ்சமொ டருள்பிறி

---

கணிவாய் பல்லிய காடு இறந்தோர் - சோதிடங் கூறும் வாயை யுடைய பல்லி வாழும் காட்டிலே சென்ற நம் தலைவர்; தம் நயந்து உறைவோர் தாங்கி தாம் நயந்து இன் அமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ நகுதல் ஆற்றார் நல்கூர்ந்தோர் என மிகு பொருள் நினையும் நெஞ்சமொடு அருள் பிறிது ஆப - தம்மை விரும்பி உறைவோரைக் காத்துத் தாம் விரும்பி இனிமையாக மேவிய நட்பினரோடு இன்பமுறக் கலந்து மகிழமாட்டாதவராவர் வறியோர் எனச் சொல்லி மிக்க பொருளை ஈட்ட நினையும் நெஞ்சமொடு நம்மேல் அருளொழிவர்; வாழி - அவர் வாழ்வாராக என்று, தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

பொருளினை நினைந்து நம்மீது அருள் பிறிதாகிச் சென்ற காதலர் அதனை ஈட்டினராய் மீளுங்காலத்தே நமது இறந்துபாட்டை அறிந்து ஸ்த்ரீ விஸனம் பண்ணலாகாதென்பதை மறந்துவிட்டோமேயென்று கழிவிரக்கங் கோடற்குரியாரென்பது எஞ்சி நிற்றலின் மன் ஒழியிசைக்கண் வந்தது. நம்மை அறனின்றித் துறத்தலின் தலைவர்க்குத் தீங்குறும் என்று தலைவி அஞ்சலின் 'வாழி' என்று வாழ்த்தினாள் என்க. தோழியை வாழி என்றாளாயின், செலவழுங்குவித்தற்குரிய அவள் அது செய்யாமைக்கு அவளொடு புலந்தாள் என்க.

கால் விரிபு உறு வளி எறிதொறும் கலங்கிய உழுஞ்சில் - திசையெல்லாம் விரிந்து மிக்க காற்று வீசுதொறும் கலங்கிய உழுஞ்சில் என்க.

5 தாபமன் வாழி தோழி கால்விரி
புறுவளி யெறிதொறுங் கலங்கிய பொறிவரிக்
கலைமான் றலையின் முதன்முதற் கவர்த்த

---

*பொறி வரி கலைமான் தலையின் முதன் முதல் கவர்த்த கோடல் அம் கவட்ட குறுங்கால் - புள்ளியையும் வரியையுமுடைய கலைமானுடைய தலையிலே முதன் முதலாக கவர்த்தவாகிய கோடு போன்ற கோணலான அழகிய கவட்டினையும் குறுகிய காலினையுமுடைய; உழுஞ்சில் சினை விளைந்த தாறு நெற்று ஆடு மகள் அரிகோல் பறையின் ஐ என ஒலிக்கும் - உழுஞ்சிலின் கிளையிடத்து முற்றிய குலையான நெற்றானது ஆடும் கூத்தியாது அரிக்கோற்பறைபோல வியப்புற ஒலியாநிற்கும்; பதுக்கை தாய - பதுக்கைகளையுடைய; செதுக்கை நீழல் கள்ளி மூள் அரை பொருந்தி - பொல்லாத நிழலையுடைய கள்ளியின் முள்ளுள்ள அரையினைப் பொருந்தியிருந்து ; செல்லுநர்க்கு உறுவது கூறும் சிறு செந்நாவின் பல்லிய காடு இறந்தோர் - அவ்வழியே செல்லுவார்க்குப் பின் வருவனவற்றை முன்னதாக அறிந்து கூறவல்ல சிறிய செவ்விய நாவினையுடைய பல்லி வாழுங் காட்டில் இறந்தோர் என்க.*

*மணி ஓர்த்தன்ன தெண் குரல் பல்லி - மணியோசையைக் கேட்டாற் போன்ற தெளிந்த குரலையுடைய பல்லி என்க.*

*கவர்த்த வினையாலணையும் பெயர் ; கவர்த்தனவாகிய கொம்புகள் என்றபடி. கோடு கவட்ட என்றுகொண்டு அல்லும் அம்மும் அல்வழிச் சாரியை எனலுமாம் ; 'கூம்பலங்கை' என்புழிப் போல (கோவை. 11). அலங்கு கவடு, அலங்கவடென்று விகாரப்பட்டது என்றலுமாம், பிறங்கு கல் பிறங்கல் என்றாயினவாறு போல. பொறியைக் கலையின் உடற் பொறியாகவும், வரியை அதன் கோட்டு வரியாகவும் கொள்க.*

*பதுக்கைத்தாய காடு என்றியையும். பதுக்கைத்தாய செதுக்கை நீழற் காடு என்றியைத்து - பதுக்கையினின்றும் தாவிச் சாய்ந்த பொல்லாத நிழலையுடைய காடு என்றலுமாம். ஐயெனவொலிக்குங்காடு எனஇயையும்.*

*அரிக்கோற் பறையாவது - கோல் கொண்டு அரித்து ஓசை யெழுப்பும் பறை. உழுஞ்சில், வாகை ; உன்னமுமாம்.*

*பி - ம். 14. மணிபெயர்த், திண்குரல். (காவன்முல்லை யழக்கரத்தனார்; காவன்முல்லைப் பூக்கரத்தனார் ; காவன்முல்லைப் பூச்சாத்தனார்.)*

கோடலங் கவட்ட குறுங்கா லுழுஞ்சிற்
றுறுசினை விளைந்த நெற்று மாடுமக
10 ளரிக்கோற் பறையி னையென வொலிக்கும்
பதுக்கைத் தாய செதுக்கை நீழற்
கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்
குறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்
மணியோர்த் தன்ன தெண்குரற்
15 கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.

—காவன்முல்லைப் பூதரத்தனார்.

## 152. குறிஞ்சி

நெஞ்சுநடுங் கரும்படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறூ ராங்கட்
செலீஇய பெயர்வோள் வணர்சுரி யைம்பா
னுண்கோ லகவுநர்ப் புரந்த பேரிசைச்

---

நெஞ்சு நடுங்கு அரும்படர் தீர வந்து குன்று உழை நண்ணிய சிறு ஊர் ஆங்கண் செலீஇய பெயர்வோள் வணர் சுரி ஐம்பால் - என் நெஞ்சம் நடுங்குதற்குக் காரணமான அரிய துன்பமானது நீங்குமாறு என்பால் வந்து முயங்கிவிட்டு குன்றிடத்துப் பொருந்திய சிறிய ஊரின்கண் திருப்பிச் செல்லும் பொருட்டுப் போகின்ற தலைவியினுடைய நெறிந்து கடைகுழன்ற ஐந்து பகுதியான கூந்தலானது ; சிறு வெள் இறவின் குப்பை அன்ன - முடக்கமுடைமையான் சிறிய வெளிய இறு மீன்களின் தொகுதி போன்று கற்றையாகி; நன்னன் ஏழில் நெடு வரை பாழி சிலம்பின் களி மயில் கலாவத்து அன்ன - நன்னனுக்கு உரித்தான ஏழில் என்னப்படும் நெடிய மலையைச் சார்ந்த பாழி என்னும் பக்க மலையிடத்துள்ள களிக்கும் இயல்புடைய மயிலின் கலாவத்தை ஒவ்வாநிற்கும்;

'சிறு வெள் இறவின் குப்பையன்ன' என்று இறவினை ஐம்பாற்கு உவமை கூறுமிடத்து வெண்மையென்னும் அடை இறவின் அளவிற் சென்று, ஐம்பாற்குச் செல்லாதொழிந்தது; அது 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' என்புழிப் போல.

5 சினங்கெழு தானைத் தித்தன் வெளிய
னிரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்குஞ்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
வுறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்ட
10 னுண்முர ணுடையக் கடந்த வென்வே

---

தோளே - அத்தலைமகளின் தோள்களானவை; நள்ளி சோலையடுக்கத்து சுரும்பு உண விரிந்த கடவுட் காந்தள் உள்ளும் இறும்பூது கஞலிய ஆய் மலர் பலவுடன் நாறி - நள்ளி என்பானுடைய சோலைகள் *மிக்க மலைச்சாரலிடத்து வண்டுகள் உண்ணுவதனால் மலர்ந்த கடவுட்கு உரிய பூவாகிய காந்தள் மலர்களுள்ளும் இவ்வாறுஞ் சில மலருண்டு கொல் என்று வியப்புப் பொருந்திய ஆராய்ந்த மலர்கள் பல ஒன்று சேர்ந்து மணம் கமழ்ந்து; நெடுங்குழி மால் யானை ஆய் கானத்து தலையாற்று நிலைஇய பிறங்கல் வேய் அமை கண் இடை புரை இ சேய ஆயினும் நடுங்கு துயர் தரும் - நெடிய குழியிடத்துக்கொண்ட பெருமை பொருந்திய யானைகளையுடைய ஆய் என்பானது கானத்தாற் சிறந்த தலையாறு என்னும் ஊரில் நிலைத்த மலை சூடிய மூங்கிற் கண்ணின் இடைப்பகுதியை ஒத்துச் சேய்மைக்கண்ணவாயினும், நடுங்குதற்கு ஏதுவான துயரைத் தாராநின்றது என்று, இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

நடுங்கு துயர் தருதல் பின்னுமொரு கால் இத்தகைய கூட்டம் கூடுங்கொல்லோ வென்றும், சான்றோரை முன்னிட்டுக் கொண்டு அருங்கலத்தோடு வந்து வரைவொடு புகின் தந்தை உடன்படுவான் கொல்லோ வென்றும் உளதாய ஐயத்தால் என்க. துயர் ஈண்டு காமத்தாலாகிய துயர்.

இரு முடங்கிய வடிவுடையதென்பதனை 'முடங்கிறுத் தெறிக்கும்' என்றும் 'இறவுக் கலித்துப் பூட்டறு வலி வில்லிற் கூட்டு முதற் றெறிக்கும்' என்றும் பயின்றுள்ளமை கொண்டு தெரியப்படும்.

நுண்கோல் அகவுநர் புரந்த பேர் இசை சினம் கெழு தானை தித்தன் வெளியன் இரங்கு நீர் பரப்பின் கானலம்பெருந்துறை தனம் தரும் நன்கலம் சிதைய தாக்கும் இறவு - நுண்ணிய தலைக்கோலையுடைய சூதர்களைக் காத்த பெரிய புகழையும் சினம் மிக்க படையையுமுடைய வெளியம் என்னு மூருக்குரியனாகிய தித்தனது ஒலிக்கின்ற

விசைநல் லீகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவ னார நன்னன்
ஏழி னெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத் தன்ன தோளே
15 வல்வில் லிளையர் பெருமக னள்ளி
சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த

---

கடலின் கரையிலுள்ள கானலம்பெருந்துறை என்னும் பட்டினத்தே தனத்தைத் தருகின்ற நல்ல மரக்கலம் சிதையுமாறு தாக்குகின்ற இரு மீன் போல என்க.

நெய்தலங்கானல், நெய்தலஞ்செறு எனப் பெயரிய ஊர்கள் போல கானலம் பெருந்துறை ஒரூர் போலும்.

மொய் மூசு உறுபகை தரூஉம் பிண்டன் நுண் முரண் உடைய கடந்த வென் வேல் இசை நல் ஈகை களிறு வீசு வண் மகிழ் பாரத்து தலைவன் ஆரம் நன்னன் - போரில் மொய்த்த மிக்க பகையை வெல்லும் பிண்டன் என்பானது நுண்ணிய மாறுபாடு சிதைய வென்ற வெற்றி வேலையும் இசை பரந்த நல்ல கொடையையும், களிற்றுப் பரிசிலீதற் கேதுவான வளவிய மதுவுண்டலையுமுடைய பாரம் என்னுமூர்க்குத் தலைவனான மணியாரம் பூண்ட நன்னன் என்க. ஆரம் - சந்தனப் பூச்சுமாம்.

வல் வில் இளையர் பெருமகன் நள்ளி சோலை அடுக்கத்து சுரும்பு உண விரிந்த கடவுட் காந்தள் - வலிய வில்லையுடைய படைவீரர் தலைவனான நள்ளி என்பானது சோலைகள் மிக்க பக்க மலையிடத்து வண்டு உண்ண மலர்ந்த கடவுட்குரிய பூவாகிய காந்தள் என்க.

வல்லினும் வல்லாராயினும் சென்றோர்க்கு சால் அவிழ் நிறைய வீசும் ஆய் - பாட வல்லவராயினும் மாட்டாதவராயினும் தம்பால் பரிசில் பெறச் சென்றோர்க்கு அமைந்த சோற்றுப் பருக்கையை நிறையக் கொடுக்கும் ஆய் என்க.

இப்பாட்டினைத் திருமகட் புணர்ந்தவன் சேறற்கு உதாரணமாகக் காட்டுவர் அகப்பொருள்விளக்க உரைகாரர். (சூ. 158.)

பி - ம். 1. நடுக்கரும்படர். 2. குன்றுறைநண். 6. னிலங்குநீர். 7. கனந்தரு. 10. முனைமுரணுடைப்ப. 23. கடுப்ப.

கடவுட் காந்த ளுள்ளும் பலவுட
னிறும்பூது கஞலிய வாய்மலர் நாறி
வல்லினும் வல்லா ராயினுஞ் சென்றோர்க்குச்
20 சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசு
மாஅல் யானை யாஅய் கானத்துத்
தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேயமைக் கண்ணிடை புரைஇச்
சேய வாயினு நடுங்குதுயர் தருமே.

என்பது : இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

## 153. பாலை

நோகோ யானே நோதகு முள்ள
மந்தீங் கிளவி யாயமொடு கெழீஇப்

---

அளியள் அம் தீம் கிளவி ஆயமொடு கெழீஇ பந்து வழி படர்குவள் ஆயினும் நனி நொந்து வெம்பும் - இரங்கத்தக்காளாகிய என் மகள் அழகிய தீவிய சொற்களையுடைய ஆயத்தாரோடு கலந்து பந்தாட்டத்தினிடத்தே சென்று வருவாளாயினும் மிக நொந்து வாடும்; மன் - அது கழிந்தது.

இனி வன்கணாளன் மார்பு உற வளைஇ இன்சொல் பிணிப்ப நம்பீ நம் கண் உறு தரு விழுமம் உள்ளாள் நல் அடிக்கு அமைந்த அல்ல மாமலை விலங்கிய சுரன் வைது அறு சிமைய பயம் நீங்கு ஆரிடை ஓய்யென மெல்லியல் வல்லுநள் கொல்லோ - இப்போது வன்கணாளன் தலைமகன் தன் மார்பிலே முற்ற வளைத்து இனிய சொல்லாற் பிணிப்ப, அதனை விரும்பி ஏற்று, நம்மிடத்துண்டாகும் துன்பத்தைக் கருதாளாய், நன்மை வாய்ந்த அடிக்குப் பொருத்த முள்ளனவல்லாததும் மேகந் தோய்ந்த கரிய மலையாற் றடுக்கப்பட்டது மான சுரத்திடையேயுள்ள ஈரமற்ற மலைச்சிகரங்களாற் பயனொழிந்த அரிய வழியை விரைய நடத்தலை என் மெல்லியல் மாட்டுவள் போலும் என்க.

நோகோ யான் நோதகும் உள்ளம்-இதற்கு யான் நோவாநின்றேன்; என் நெஞ்சமும் நோவத்தக்கதே என்று மகட்போக்கிய செவிலித் தாய் சொன்னாள் என்க. நல்லடி - நற்கருமஞ் செய்தோராது அடி என்றலுமாம்.

பந்துவழிப் படர்குவ ளாயினு நொந்துநனி
வெம்பும னளிய டானே யினியே
5 வன்க ணாளன் மார்புற வளைஇ
யின்சொற் பிணிப்ப நம்பி நங்க
ணுறுதரு விழும முள்ளா ளொய்யெனத்
தெறுகதி ருலைஇய வேனில் வெங்காட்

---

ஆயமொடு கெழீஇப் பந்துவழிப் படர்குவளாயினும் அளியள் முன் வெம்பும் மன்; இனி, நல்லடிக்கு அமைந்த வல்ல மலை விலங்கிய சுரத்துப் பயனீங்கு ஆரிடையும் மெல்லியல் வல்லுநள் கொல்; நோகு யான் நோதகும் உள்ளம் என்றியைக்க.

நோகோ என்புழி நின்ற ஓகாரம், ஒழியிசை; யான் நோதலே யன்றி என் நெஞ்சமும் நோவத்தக்கதாகும் என்று ஒழிந்த பொருளை இசைத்தலின்.

தலைமகனை வன்கணாளனென்றாள், அவன் மெல்லியலை மயக்கி அரிய சுரத்து உடன்கொண்டு சேறலின்.

ஓங்கு வரை அடுக்கத்து உயர்ந்த சென்னி கோங்கின் தேம் பாய்ந்து ஆர்க்கும் தெரி இணர் எல்லி மீனொடு பொலிந்த வானில் தோன்றி கால் உற கண் கழன்ற கமழ் பனி மலர் கைவிடு சுடரின் தோன்றும் மைபடு மாமலை விலங்கிய சுரன் - ஓங்கிய மலைச்சாரலிடத்து உயர்ந்த சிகரத்திலேயுள்ள கோங்கினது மதுப்பாய்ந்து வண்டுகளால் ஆரவாரிக்கப் பெற்ற தெரிந்த இணரானது இரவிலே மீனொடு பொலிந்த வானத்தைப் போலத் தோன்றிப் பின்னர்க் காற்றடிக்கையினாலே காம்பிடத்துக் கழன்ற மணங்கமழும் புதிய மலர் கையினின்று விடப்பட்ட சுடர் போலத் தோன்றாநிற்கும் மேகம் தோய்ந்த கரிய மலையால் தடுக்கப்பட்ட சுரத்திலே என்க.

வேனில் தெறு கதிர் உலைஇய வெம் காட்டு உறு வளி ஒலி கழை கண் உறுபு தீண்டலின் பொறி பிதிர்பு எடுத்த பொங்கு எழு கூர் எரி பைது அறு சிமைய ஆரிடை - வேனிற் காலத்தே காய்கின்ற சூரியன் அழித்த வெவ்விய காட்டிலேயுள்ள மிக்க காற்று தழைத்த மூங்கிலின் கணுக்களைப் பொருந்தி அடித்தலின் தீப்பொறி சிந்தியதனால் எழுப்பப் பெற்ற பொங்கி எழுகின்ற மிக்க எரியினாலே ஈரமற்ற சிகரங்களையுடைய அரிய வழி என்க.

டுறுவளி யொலிகழைக் கண்ணுறுபு தீண்டலிற்
10 பொறிபிதிர் பெடுத்த பொங்கெழு கூரெரிப்
பைதறு சிமையப் பயநீங் காரிடை
நல்லடிக் கமைந்த வல்ல மெல்லியல்
வல்லுநள் கொல்லோ தானே யெல்லி
யோங்குவரை யடுக்கத் துயர்ந்த சென்னி
15 மீனொடு பொலிந்த வானிற் றோன்றித்
தேம்பாய்ந் தார்க்குந் தெரியிணர்க் கோங்கின்
காலுறக் கழன்ற கண்கமழ் புதுமலர்
கைவிடு சுடரிற் றோன்று
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

என்பது : மகட்போக்கிய செவிலித்தாய் சொற்றது.

—சேரமா னிளங்குட்டுவன்.

பனிமலர் என்ற பாடத்திற்குக் குளிர்ச்சி பொருந்திய மலர் என்க.

காற்று வீச இணரினின்றும் கழன்று விழுந்த புதுமலர் சுடர் போல ஒளிவிட்டாற் போல, 'நாணினும் கற்புச் சிறந்தன்று' என்று, முதுக்குறையும் பருவத்திற்கு முன்னரே முதுக்குறைந்து, தனது பிறந்த இல்லினை நீங்கித் தலைமகனுடன் சென்ற தலைமகளின் செயல் புகழற் குரிய சிறந்த கற்பொழுக்கமாயிற்றென்று செவிலி தேறினளாகக் கொள்க.

பி - ம். 17. தண்கமழ்: பனி மலர்.

## 154. முல்லை

படுமழை பொழிந்த பயமிகு புறவி
னெடுநீ ரவல பகுவாய்த் தேரை
சிறுபல் லியத்தி னெடுநெறிக் கறங்கக்
குறும்புதற் பிடவி னெடுங்கா லலரி
5 செந்நில மருங்கி னுண்ணயிர் வரிப்ப
வெஞ்சினை வாவின் பையணந் தன்ன
தண்கமழ் கோட றுதுபிணி யவிழத்
திரிமருப் பிரலை தெள்ளறல் பருகிக்

காமர் துணையொ டேமுற வதியக்
10 காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி
யோடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்
தாடாழ் தார்மணி தயங்குபு வியம்ப
வூர்மதி வலவ தேரே சீர்மிகுபு
நம்வயிற் புரிந்த கொள்கை
15 யம்மா வரிவையைத் துன்னுகம் விரைந்தே.

என்பது : வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—போதும்பிற் புல்லாளங் கண்ணியார்.

படு மழை பொழிந்த பயம் மிகு புறவின் நெடு நீர் அவல பகு வாய் தேரை நெடு நெறி சிறு பல் இயத்தின் சுறங்க குறும் புதல் பிடவின் நெடும் கால் அலரி செம் நிலம் மருங்கின் நுண் அயிர் வரிப்ப வெம் சின அரவின் பை அணந்தன்ன தண் கமழ் கோடல் தாது பிணி அவிழ திரி மருப்பு இரலை தெள் அறல் பருகி காமர் துணை யொடு ஏமுற வதிய காடு கவின் பெற்ற தண் பத பெருவழி ஓடு பரி மெலியா கொய் சுவல் புரவி தாள் தாழ் தார் மணி தயங்குபு இயம்ப - மிக்க மழை பொழிந்ததனாலே பயம் மிகுகின்ற புறவிலே நெடிய தன்மையையுடைய பள்ளங்களிலேயுள்ள திறந்த வாயையுடைய தேரைகள் நெடிய நெறிகள்தோறும் சிறிய பலவாகிய வாச்சியம் போல ஒலியாநிற்கவும், குறிய புதலாகிய பிடவினது நெடிய் காலையுடைய பூக்கள் சிவந்த நிலத்திடையேயுள்ள நுண்ணிய அயிரிடத்தே உதிர்ந்து அழகு செய்யவும், வெவ்விய சினத்தையுடைய அரவின் படம் மேனோக் கினாற்போலத் தண்ணிதாகக் கமழ்கின்ற கோடல் தாதின் முறுக்கு அவிழ்ந்து விரியவும், திரிந்த மருப்பினையுடைய இரலை தெள்ளிய அறலைப் பருகி அழகிய பிணைமானுடன் இன்பமுறத் தங்கவும் காடு அழகு பெற்ற குளிர்ந்த செவ்வியையுடைய பெரிய வழியிலே ஓடுகின்ற செலவினால் மெலியாத கொய்யப்பட்ட சுவலையுடைய புரவியின் தாள் வரையிற் றூழ்கின்ற சதங்கைத் தண்டை விளங்கி ஒலிப்ப;

தேர் சீர் மிகுபு விரைந்து ஊர் மதி வலவ - தேரைச் சீர் மிகுமாறு விரைந்து ஊர்வாயாக பாகனே! ஊரின், நம் வயிற் புரிந்த கொள்கை அரிவையை துன்னுகம் - நம்மிடத்து விரும்பிய கோட்பாட்டினையுடைய தலைவியை யாம் அணுகுவோம்; அம்ம - நான் சொல்வதனைக் கேள் என்று, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

படுமழை - ஒலித்தலையுடைய மழை எனலுமாம். தார்மணி, இது சதங்கைத் தண்டை என்றும், குதிரையின் கழுத்திற் கட்டும் அணி விசேடம் என்றும் கூறுவர் நச். (கலி. 96, அடி. 15). தோடார் தார்மணி என்னும் பாடத்திற்குத் தொகுதி கொண்ட சதங்கைத் தண்டை என்க. அம்மா, வியப்பிடைச் சொல்லுமாம்.

பி - ம். 6. டையணர்த்தன்ன 9. காமர்பிணையோ 12. தயங்குபியம்ப. 14. பரிந்த கொள்கை.

## 155. பாலை

அறன்கடைப் படாஅ வாழ்க்கையு மென்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமு மிரண்டும்
பொருளி னாகும் புனையிழை யென்றநம்
மிருளே ரைம்பா னீவி யோரே
5 நோய்நா முழக்குவ மாயினுந் தாந்தஞ்
செய்வினை முடிக்க தோழி பல்வயிற்
பயநிரை சேர்ந்த பாணாட் டாங்க
ணெடுவிளிக் கோவலர் கூவற் றோண்டிய
கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி
10 நீர்காய் வருத்தமொடு சேர்விடம் பெறாது
பெருங்களிறு மிதித்த வடியகத் திரும்புலி
யொதுங்குவன கழிந்த செதும்ப லீர்வழிச்
செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை
மண்ணார் முழவின் கண்ணகத் திசைத்த
15 விரலூன் றடுவிற் றோன்று
மரல்வாடு மருங்கின் மலையிறந் தோரே.

என்பது : தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

தோழீ! என்றும் அறன்கடை படாஅ வாழ்க்கையும் பிறன்கடை செலாஅ செல்வமும் இரண்டும் பொருளின் ஆகும் புனை இழை என்று நம் இருள் ஏர் ஐம்பால் நீவியோர் நோய் நாம் உழக்குவம் ஆயினும் மரல் வாடு மருங்கின் மலை இறந்தோர் தாம் தம் செய்வினை முடிக்க - தோழீ!

'எக்காலத்தும் பாவத்திடத்துப் படாத வாழ்வும், பிறன் கடை வாயிலிற் சென்றிரவாத செல்வமுமாகிய இவ்விரண்டும் பொருளுடைமையால் ஆகும் புனைந்த இழையினையுடையாய்' என்று கூறி, தமது போக்கிற்கு நம்மை உடம்படுத்தற்பொருட்டு நமது இருண்ட அழகிய ஐம்பாலை நீவியோராகிய நம் தலைவர் தமது பிரிவால் நாம் நோய் உழக்குவமாயினும், மரல் வாடுகின்ற விடத்திலுள்ள மலையைக் கடந்து சென்றவராய், தாம் மேற்கொண்ட ஆள்வினையை முடிப்பாராக என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொன்னாள் என்க.

பயம் நிரை சேர்ந்த பாண் நாட்டு பல்வயின் ஆங்கண் நெடு விளி கோவலர் தோண்டிய கூவற் சிறு குழி கொடுவாய் பத்தல் வார்ந்து உகு நீர் தூய் வருத்தமொடு சேர்வு இடம் பெறாது பெரு களிறு மிதித்த அடி அகத்து இரும் புலி ஒதுங்குவன கழிந்த செதும்பல் ஈர் வழி செயிர் தீர் நாவின் வயிரியர் பின்றை அசைத்த மண் ஆர் முழவின் கண் அகத்து விரல் ஊன்று வடுவில் தோன்றும் மரல் வாடு மருங்கின் மலை - பாற் பசுவினம் சேர்ந்த பாணனது நாட்டின் பலவிடங்களிலும் நீண்ட சீழ்க்கை விளியையுடைய கோவலர் தோண்டிய கிணறாகிய சிறுகுழியிலே வளைந்த வாயையுடைய பத்தலினின்றும் வார்ந்து ஒழுகும் நீர்காய்ந்ததனாலுண்டான வருத்தத்தினோடு தனக்குற்ற நீர் வேட்கையைத் தீர்த்துக் கோடற்குச் சேரத்தக்க விடம்பெறாது பெரிய களிறு மிதித்த அடியினகத்திலே பெரிய புலி அடிவைத்து நடந்து சென்ற சேற்றோடு கூடிய ஈரிய வழியானது குற்றமற்ற நாவினையுடைய கூத்தரது பின்புறத்துக் கட்டப்பட்ட மார்ச்சனை பூசிய முழவின் கண்ணினிடையே விரலாலூன்றப்பட்ட வடுவைப் போலத் தோன்றாநிற்கும் மரல் வாடுகின்றவிடத்தினையுடைய மலைஎன்க.

அறத்தின் நீக்கப்பட்டமையின் 'அறன்கடை' என்பதற்குப் பாவம் என்று பொருள் கொண்டார் பரிமே. (குறள். 142.) அறன்கடை - அறத்தின் இறுதி என்பர் பரிப்பெருமாள்.

'அறன்கடைப்படாஅ வாழ்க்கையும்' என்றது முதல் 'புனையிழை' என்றது ஈறாக நின்றன தலைமகன் கூற்று; அதனைத் தலைமகள் கொண்டு கூறினாள். பாண் - பாணன்; 'யாணிழைக்கு வயலூரன், பாண் வரவு பாங்கி மொழிந்தன்று' என்புழிப் போல. பாணன், ஒரு வீரன்.

மரல் வாடுதல் - விலங்கு சுவைத்தலாலென்க; 'மரையா மரல்கவர' என்றாராதலின். செதும்பு - சேறு; அல், சாரியை; 'செருத்தல் தீம்பால் செதும்புபடப் பிலிற்றி' என்றார் கதையினும். சின்னீர் என்றலுமாம்.

நீர் காய்ந்த கூவற் சிறு குழியினை மதித்த களிறு தன் சேற்றுக் காலோடு வைத்த அடியகத்துப் புலி நடந்ததனால் உண்டான வடு மண்ணார் முழவினகத்து வயிரியர் ஊன்றிய விரலின் வடுப்போலும் என்றார் என்க.

நாம் ஈண்டு நோயுழத்தலின், தலைவர் முன்னிய பொருட்கூட்டம் கூடாதொழியுங்கொல் என்னும் கருத்தால், 'நாம் நோயுழக்குவமாயினும் தாம் தம் செய்வினை முடிக்க' என்று தலைமகனை வாழ்த்தினள் என்க.

தலைவர் அடைந்த மருங்கிலுள்ள யானையின் அடிமீது வைத்த புலி யடி ஆறு செல்லும் வம்பலர்க்கு முழவினகத்து வைத்த விரலூன்று வடுப்போல விநோதமாகக் காணப்பட்டாற்போல அவர் பிரிந்த மருங்கிலுள்ள நம் வேறுபட்ட மேனி அம்பற் பெண்டிர்க்கு அலர் கூறி மகிழுமாறு விநோதமாயிருந்தது என்றாளாம்

பி - ம். 5. நாளுழக்குவ. 7. பாழ்நாட்.

## 156. மருதம்

முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் சேயரி புனிற்றுக்
கதிர்முதி றின்ற லஞ்சிக் காவலர்
5 பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்குந்
தீம்புன லூர திறவ தாகக்
குவளை யுண்க ணிவளும் யானுங்
கழனி யாம்பன் முழுநெறிப் பைந்தழை
10 காயா ஞாயிற் றாகத் தலைப்பப்
பொய்த லாடிப் பொலிகென வந்து
நின்னகாப் பிழைத்த தவறோ பெரும
கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
15 நிலைத்துறைக் கடவுட் குளப்பட வோச்சித்
தணிமருங் கறியா ளாயழ
மணிமருண் மேனி பொன்னிறங் கொளலே.

என்பது : தலைமகளை இடத்துய்த்துவந்த தோழி தலைமகனை வரைவு கடாயது.

இப்பாட்டு மருதத்துக்களவு.

இப்பாட்டின் கருத்து ஒன்று சிந்தைய ஒன்று செய்வான் என்றவாறு.

—ஆலூர் மூலங்கிழார்.

முரசுடை செல்வர் புரவி சூட்டு மூட்டு உறு கவரி தூக்கி அன்ன செழும் செய் நெல்லின் கதிர் முதல் சேய் அரி புனிற்று ஆ தின்றல் அஞ்சி காவலர் கரும்பு அருத்தி பாகல் ஆய் கொடி பகன்றையொடு பரீஇ காஞ்சியின் அகத்து யாக்கும் தீம்புனல் ஊர - வெற்றி, தியாகம், வீரம் எனப்படும் மூன்று முரசத்தினையுமுடைய செல்வரது குதிரையின் தலையிலுள்ள சூட்டிடத்து மூட்டப்பெறும் கவரியை உயர்த்தினாற் போலுகின்ற செழித்த செய்யிடத்து நெல்லின் கதிர்த்தலையையுடைய சிவந்த அரியை ஈன்றணிமை பொருந்திய ஆ தின்றலை அஞ்சி அதன் பசிக்குக் காவலர் கரும்பினை உண்பித்துப் பின்னர் பாகலொடு நுண்ணிய கொடியையுடைய பகன்றையையும் அறுத்துக் காஞ்சி மரத்தின் அகத்தே அதனைக் கட்டி வைக்கும் தீவிய புனலையுடைய ஊரனே!

கள்ளும் கண்ணியும் நிலைக்கோட்டு நால்செவி வெள்ளை கிடாஅய் உளப்படக் கையுறையாக துறை நிலை கடவுட்கு ஒச்சி தணி மருங்கு அறியாள் யாய் அழ மணி மருள் மேனி பொன் நிறம் கொளல் - கள்ளும், காந்தட் கண்ணியும், அற்று விழாமை நிலைத்திருக்கும் கோட்டினையும் தொங்கும் செவியினையுமுடைய வெள்ளாட்டுக் கிடாயுமுள்படக் கையுறையாக வைத்து நீர்த்துறைக்கண்ணே நிற்றலையுடைய கடவுளுக்குப் பலியிட்டும் தணியும் வழியைக் காணளாய் யாய் அழுமாறு தலைவியது நீலமணி போலும் மேனி பசலை பூத்துப் பொன்னிறம் கொள்கையானது;

கழனி ஆம்பல் முழு நெறி பைத்தழை ஆகத்து அலைப்ப காயா ஞாயிற்று பொய்தல் ஆடி பொலிக என குவளை உண்கண் இவளும் யானும் வந்து நின் நகா திறவதாக பிழைத்த தவறே பெரும-கழனியிலுள்ள ஆம்பலின் புறவிதழொடிந்த முழுப்பூவினுடைய அரவின் பைபோலும் தழையானது ஆகத்து மோதக் காயாத ஞாயிற்றுப்போதில் நீவிர் பொய்தல் ஆடிப் பொலிவீராக என யாய் கூறி விட, குவளை போலும் மையுண்ட கண்ணையுடைய இவளும் யானும் ஆடிடத்து வந்து நின்னை எள்ளாமல்

நின்னோடு மகிழ்ந்து வைகியதாகிய பிழையை நன்றாகச் செய்த தவறே போலும் பெருமானே! என்று, தலைமகளை இடத்து உய்த்து வந்த தோழி தலைமகனை வரைவு கடாயினள் என்க.

ஊர! யாயழ மேனி பொன் நிறம் கொளல் நின் நகாப் பிழைத்த தவறோ பெரும என்றியைக்க.

'முழுநெறிக் குவளை' (சிலப். 2: 14) என்பதற்கு இதழ் ஒடிக்கப் படாத குவளை என்று அடியார்க்கு நல்லாரும், 'குவளைக் கூம்பவிழ் முழுநெறி' (புறம். 116) என்பதற்கு 'செங்கழுநீரினது முகையவிழ்ந்த புறவிதழ் ஒடித்த முழுப்பூ' என்று புறப்பாட்டுரைகாரரும் கூறுவதனால், புறவிதழ் ஒடிந்ததும் அகவிதழ் ஒடிக்கப்படாததும் ஆன ஆம்பலின் முழுப்பூ என்று கொள்க.

மான் கொம்பு போலன்றி யாட்டுக்கிடாயின் கொம்பு முளைத்த நாள் தொட்டு அறாது நிலையாக நிற்றலின் நிலைக்கோடு எனப்பட்டது. மான் கோடு 'அறுகோடு' எனப்படுதலும் காண்க. நிலைக்கு ஒட்டு வெள்ளைக்கிடாய் என்று கண்ணழித்துப் போரிலே தன்னை எதிரேற்ற கிடாயை அதன் நிலையினின்றும் ஓட்டும் வெள்ளைக்கிடாய் எனினுமாம். குவ்வுருபு ஈண்டு ஐந்தனுருபின்கண் வந்தது. ஒச்சியும் என்புழி நின்ற சிறப்பு உம்மை விகாரத்தாற் றொக்கது. பொய்தல் - மகளிர் விளையாட்டு.

புனிற்றுக் கதிர் மூதா தின்றலஞ்சி என்ற பாடத்திற்கு முதிய ஆ புனிற்றுக் கதிரைத் தின்றலை யஞ்சி என்க.

கழுநீர் ஆம்பல் முழுநெறிப் பகைத்தழை காமர் ஞாயிற்றாகத் தலைப்பெய என்னும் பாடத்திற்கு, கழுநீர் ஆம்பல் காமர் முழுநெறித் தழை ஞாயிற்றுப் பகையாகத் தலைப்பெய என்று மாறி, செங்கழுநீர் ஆம்பல் என்ற இவற்றின் அகவிதழ் ஒடிக்கப்படாத முழுப்பூவின் தழை கள் ஞாயிற்றின் வெம்மைக்குப் பகையாகத் தலையிலே செருகி என்று பொருள் கூறுக. 'தாயர்' என்பது பாடமாயின், தாயர் தலைப்பெய என்க. யாய் பொய்தல் ஆடிப் பொலிக என, இவளும் யானும் வந்து எனக் கூறுக.

உழுநர் நெற்கதிரைக் காக்கச்செய்த காரியத்தாற் பாகலும் பகன்றை யும் கரும்பும் சிதைந்தாற்போலக் களவொழுக்கத்தைத் துறவாது அதனை நீ நீட்டித்து ஒழுகி வருங் காரியத்தால் யாட்டுக்கிடாய் பலியிடப் பெறுமாறு ஆயிற்று என்றுளாம்.

இப்பாட்டுத் "திணை மயக்குறுதலும் கடிநிலை யிலவே" என்ற விதிபற்றி மருதத்துக் களவு நிகழ்ந்தது. இப்பாட்டினை இத்துறைக்கே

கொள்வர் நச். "மோத்தையும் தகரும் உதளும் அப்பரும், யாத்த வென்ப யாட்டின் பெயரே" என்ற சூத்திரத்து 'யாத்த' வென்பதனால் கடா வென்பதனையும் யாட்டிற்குப் பெயராகக் கொள்க என்று கூறி, 'நிலைக் கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்' என்பதனை உதாரணமாகக் காட்டுவர் பேரா. (தொல். பொருள். 12, 2, 602).

பி-ம். 1 புரவிச்சூட்டு. 3—4. சேயரிப் புனிற்றுக் கதா மூதாதன்ற. 3. செங்நெல் 6. பருகி; யார்க்குந். 9. கழுநீராம்ப; பைந்தழை. 10. காமர் ஞாயிற் றுசுத்தலைப்பெய; 12. நின்னெதிர்ப்பட்ட. 15. புலைத் துறைக். 16. தருமருந்தறி; தணிமருந்தறி.

## 157. பாலை

அரியற் பெண்டி னல்குற் கொண்ட
பகுவாய்ப் பானைக் குவிமுலை சுரந்த
வரிநிறக் கலுழி யார மாந்திச்
செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணாடவர்
5 வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கி
னெல்லி மலர்ந்த பைங்கொடி யதிரல்
பெரும்புலர் வைகறை யரும்பொடு வாங்கிக்
கான யானை கவளங் கொள்ளு
மஞ்சுவரு நெறியிடைத் தமியர் சென்மார்
10 நெஞ்சுண மொழிப மன்னே தோழி
முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையி னுலறி
மனையொழிந் திருத்தல் வல்லு வோர்க்கே.

என்பது: பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—வேம்பற்றூர்க் குமரனார்.

அரியல் பெண்டின் அல்குல் கொண்ட பகுவாய் பானை குவி முலை சுரந்த அரிநிற கலுழி ஆர மாந்தி செரு வேட்டு சிலைக்கும் செங்கண் ஆடவர் வில் இட வீழ்ந்தோர் பதுக்கை கோங்கின் பைங்கொடி அதிரல் எல்லி மலர்ந்த அரும்பொடு வாங்கி கான யானை பெரு புலர் வைகறை கவளம் கொள்ளும் அஞ்சுவரு நெறியிடை - கள்விலை மகளின் அல்கு

விடத்துக் கொண்ட விரிந்த வாயையுடைய பாளையாகிய குவிந்த முலைசுரந்த, பன்னுடையால் அரித்த, நிறமுடைய கள்ளின் வண்டலை நிறையக் குடித்துவிட்டுப் போரை விரும்பி ஆரவாரிக்கும் சிவந்த கண்ணுடைய வீரர் அம்பெய்ய, அதனால் இறந்து பட்டோரது பதுக்கைப்புறத்துள்ள கோங்க மரத்தின்மீது படர்ந்தேறிய பசிய அதிரற் கொடியிடத்து இரவிலே மலர்ந்த அரும்பினை அக் கொடியொடு பற்றி இழுத்துக் காட்டியானையானது பெரிய இருள் புலர்கின்ற விடியற் காலையிலே கவளங்கொள்ளாநின்ற அச்சம் வருகின்ற வழியிடத்தே ;

தமியர் சென்மார் முனை புலம் பெயர்த்த புல் என் மன்றத்து பெயல் உற நெகிழ்ந்து வெயில் உற சாஅய் வினை அழி பாவையின் உலறி மனை ஆழிந்து இருத்தல் வல்லுவோர்க்கு தோழீ ! நெஞ்சு உண மொழிப - தமியாராகச் செல்லுகின்ற தலைவர் போர் முனையானது குடிகளைத் தம்மிடத்தினின்றும் பெயர்த்ததனால் புற்கென்று நின்ற மன்றத்தே பெயல் மிகுதலினாலே நெகிழ்ந்தும், வெயில் மிகுதலினாலே நுணுகியும் ஓவிய வேலைப்பாடு அழிந்த பாவைபோல வற்றி, மனையின்கண் உயிரோடு தனித்திருத்தலை மாட்டுவோர்க்குத் தோழீ ! நெஞ்சு விரும்பி உட்கொள்ளும்படி சொல்லுவார். மன் - யான் அவ்வாறு தனித்திருத்தலை மாட்டுகிலேன், இறந்துபடுவேன், என்று, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

அஞ்சவரு நெறியிடைத் தமியர் சென்மார் மனை ஒழிந்திருத்தல் வல்லுவோர்க்கு நெஞ்சுண மொழிப ; மன் என்றியைக்க.

யான் ஆற்றாது இறந்துபடுதல் திண்ணமாதலின் அவர் என் நெஞ்சுண மொழியவல்லராகார் என்றலின், மன் ஒழியிசைக்கண் வந்தது. சென்மார், செல்லவேண்டி என்றலுமாம்.

அல்கிற் கொண்ட என்னும் பாடத்திற்கு, அரியற்பெண்டிர் தாம் தங்கிய மனையிலே கொண்ட என்க.

கோங்க மரத்தினைப் பற்றுக்கோடாகவுடைய அதிரற்கொடியினை யானை சிதைத் துண்ணுவதுபோலத், தலைவரைப் பற்றுக் கோடாகவுடைய நம்மை அவர் பிரிவு உயிர் செகுத்து உண்டுவிடும் என்றாளாம்.

பி.-ம். 2. பகுவாயானைக் ; குறுகுலை தந்த. 11. புலம் பெயர்ந்த. 14, தலாற்றுவோர்க்கே.

## 158. குறிஞ்சி

உருமுரா றுகருவிய பெருமழை தலைஇப்
பெயலான் றவிந்த தூங்கிரு ணடுநாண்
மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப்
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
5 வரையிழி மயிலி னொல்குவன ளொதுங்கி
மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
வலையல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்
சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே
10 நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்ட லுமுண்டே யிவடான்
சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவா
மன்ற மராஅத்த கூகை குழறினு
நெஞ்சழிந் தரணஞ் சேரு மதன்றலைப்
15 புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு
முருக னன்ன சீற்றத்துக் கடுந்திற
லெந்தையு மில்ல னாக
வஞ்சுவ ளல்லளோ விவளிது செயலே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

— கபிலர்.

உருமு உரறு கருவிய பெருமழை தலைஇ பெயல் ஆன்று அவிந்த தூங்கு இருள் நடுநாள் மின்னு நிமிர்ந்தன்ன கனம் குழை இமைப்ப பின்னுவிடு நெறியின் கிளைஇய கூந்தலள் வரை இழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி மிடை ஊர்பு இழிய கண்டனென் இவள் என அலையல் வாழி அன்னை வேண்டு - இடி முழங்குகின்ற தொகுதியையுடைய பெருமழை சொரிந்துவிட்டுப் பெயல் ஒழிந்து ஒலிய விந்த செறிந்த இருளையுடைய பாதியிராத்திரியிலே மின்னு நுடங்கினாற்போலக் கனவிய தன் குழை இமைப்ப, பின்னுவிடுதலினாலே நெறிப்போடு கிளைத்த கூந்தலளாய், வரையினின்று இழியும் மயிலைப் போலத் தளர்ந்து நடந்து, பரணில் ஏறி இறங்கக் கண்டேன்

இவளை என்று சொல்லி, இத்தலைவியை வருத்தாதேகொள் அன்னாய்! நீ வாழ்வாயாக! நான் சொல்வதனை விரும்பிக் கேள்;

சூர் உடை சிலம்பின் நம் படப்பை சுடர் பூ வேய்ந்து தாம் வேண்டு உருவின் அணங்கும் வரும் - தெய்வங்களுறையும் மலைச் சாரலிலுள்ள நம் தோட்டத்திலே கோங்கு முதலிய ஒளியுள்ள பூவைச் சூடி அணங்கும் தாம் வேண்டிய உருவினோடு தனக்கிட்ட பலியை உண்டற்கு வரும்;

மார் அசை; ஆரவருமே என்பது பாடமாகக் கொண்டு பொருளுரைப்பினும் அமையும்.

'கோங்கின்......புதுமலர் கைவிடு சுடரிற் றோன்றும்' என்று கீழ் 153-ஆம் பாடலில் வந்தமையின், சுடர்ப்பூ என்றற்குக்கோங்கு முதலிய பூ என்று கூறப்பட்டது. சுடர்ப்பூ - சூரியகாந்திப்பூவுமாம்.

நனவின் வாயே போலக் கனவு துஞ்சுநர் ஆண்டு மருட்டலும் உண்டு - விழிப்பினிடத்துப் போலக் கனவானது தூங்குவார்களை அக் கனவின்கண் மருட்டுதலும் உண்டு;

இவள் தான் - இவளோவெனில்;

"சுடர் இன்று தமியளும் பனிக்கும்" - விளக்கில்லாமல் தனியளாயிருத்தலையும் நடுங்கும் இயல்பினள்;

இன்று, இன்றி என்னும் குறிப்பு வினையெச்சம் ஈறு திரிந்து நின்றது, செய்யுளாதலின்; 'உப்பின்று புற்கை உண்கமா கொற்கையோனே' என்புழிப் போல. பின்னும்;

மன்ற மராத்த கூகை குழறினும் நெஞ்சு அழிந்து அரணம் சேரும் - மன்றத்திடத்துள்ள மராமரத்து வாழ்வனவான கூகை குழறினாலும் இவள் நெஞ்சமழிந்து அரணிற் புகும்;

அதன்தலை புலி கணத்து அன்ன நாய் தொடர் விட்டும் முருகன் அன்ன சீற்றத்து கடு திறல் எந்தை இல்லன் ஆகவும் இவள் இது செயல் அஞ்சுவள் அல்லளோ - அதற்கு மேலேயும், புலிக்கூட்டம் போன்ற நாயின் தொடர்ச்சியை விட்டும் முருகன் போலும் சீற்றத்தையும் மிக்க வலியையுமுடைய என் தந்தை இல்லத்திடத்தானாகவும் இத்தலைவி இது செய்தலை அஞ்சுவளல்

லளோ என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித் தாய்க்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொன்னாள் என்க.

எந்தையும் என்புழி நின்ற உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. வேட்டையிடத்துத் தந்தைக்கு உற்ற சினம் அதனை ஒழிந்து இற்கண் வந்து தன் தவமகளை நோக்கியுங்கூட ஆறுமையின், 'நாய் தொடர் விட்டும்..............சீற்றத்துக் கடுந்திறல் எந்தை' என்றாள். நீ இல்லிடத்தையாதலோடு எந்தையும் இல்லிடத்தானாக என்றாள் என்று, எச்சவும்மையாக்கலுமாம்.

அன்னையும் அத்தனும் பிறரும் இல்லிடை இல்லாதபோழ்து இரவிற் குறியிடத்துத் தலைவி போதல் உலக வழக்கொடு புலனெறி வழக்குமாகுமேயன்றி நீவிரெல்லீரும் இல்லத்திருக்க, இச் செயல் தலைவியால் செய்யவரிதென்று அன்னையை வஞ்சித்துக் கூறினாள் என்க.

மழை தலைஇப் பெயல் அவிந்த நடுநாள் குழையிமைப்பக் கூந்தலளாய் ஒதுங்கி மிடையூர்பிழியக் கண்டனென் இவளென அலையல் அன்னை வாழி வேண்டு; நம் படப்பைக்கண் அணங்கும் சுடர்ப்பூ வேய்ந்து தாம் வேண்டு உருவின் வரும்; நனவின்வாயே போலக் கனவு மருட்டலுமுண்டு; இவள் சுடர் இன்று தமியளும் பனிக்கும்; கூகை குழறினும் அரணம் சேரும்; அதன்தலை எந்தையும் இல்லனாக இவள் இது செயல் அஞ்சுவள் அல்லளோ எனக் கூட்டுக.

இது மிடையேறி இழிந்தாளென்றது காரணமாக ஐயுற்ற தாயைக் கனவுமருட்டலு முண்டென்றது முதலாகப் பொய்யென மாற்றி, அணங்கும் வருமென மெய்வழிக் கொடுத்தது. இது சிறைப்புறமாகக் கூறி வரைவுகடாதல் என்றும், தலைவி புறத்துப் போகக்கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டு கூறினாள் என்றும், கூறுவர் நச்.

'உருமுரறு கருவிய பெருமழை தலைஇய' என்ற அடியினை உருட்டு வண்ணத்திற்கு உதாரணமாக் கொள்வர் பேரா. (தொல். பொருள். 114, 115, 321, 544.)

பி - ம். 3. மின்னுமிளிர்ந்தன்ன. 13. மாத்த. 16 முருகி. 17. மில்லாகை. 18. விவளது.

## 159. பாலை

தெண்கழி விளைந்த வெண்க லுப்பின்
கொள்ளை சாற்றிய கொடுநுக வொழுகை
யுரனுடைச் சுவல பகடுபல பரப்பி
யுமணுயிர்த் திறந்த வொழிக லடுப்பின்
5 வடியுறு பகழிக் கொடுவி லாடவ
ரணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்
பல்லா னெடுநிரை தழீஇக் கல்லென
வருமுனை யலைத்த பெரும்புகல் வலத்தர்
கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி
10 யுவலைக் கண்ணிய ருன்புழுக் கயருங்
கவலைக் காதல ரிறந்தன ரெனநனி
யவலங் கொள்ளன்மா காதலந் தோழி
விசும்பி னல்லேறு சிலைக்குஞ் சேட்சிமை
நறும்பூஞ் சாரற் குறும்பொறைக் குணஅது
15 வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்
மிஞிறுமூசு கவுள சிறுகண் யானைத்
தொடியுடைத் தடமருப் பொடிய நூறிக்
கொடுமுடி காக்குங் குரூஉக்க ணெடுமதிற்
சேண்விளங்கு சிறப்பி னாமூ ரெய்தினு
20 யாண்டமைந் துறையுந ரல்லர்நின்
பூண்டாங் காகம் பொருந்துதன் மறந்தே.

என்பது: பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

— ஆமூர்க் கவுதமன் சாதேவனார்.

தெள் கழி விளைந்த வெண் கல் உப்பின் கொள்ளை சாற்றிய உமண் கொடு நுக ஒழுகை உரன் உடை சுவல பகடு பல பரப்பி உயிர்த்து இறந்த கல் ஒழி அடுப்பின் - தெளிந்த கழியிடத்து விளைந்த வெள்ளிய கல்லுப்பின் கொள்ளும் விலையைச் சாற்றிய உமணர் தமது வளைந்த நுகத்தினையுடைய உப்பு வண்டியினின்றும் வலி

பொருந்திய பிடரையுடைய பகடுகள் பலவற்றையும் பாரந்து மேயும் படி அவிழ்த்து விட்டு, உப்புப் பாரத்தையும் சொரிந்திறக்கிப் பின்னர்ச் சோறாக்கி உண்டுவிட்டுக் கழிந்த கல்லிடுந்த அடுப்பிலே;

வடி உறு பகழி கொடுவில் ஆடவர் அணங்கு உடை நோன் சிலை வணங்க வாங்கி - வடித்தலுற்ற அம்பினையும் கோடிய வில்லையுமுடைய வீரர்; பகைவர்க்கு நோயினைச் செய்யும் வலிய தமது சிலையை வணங்குமாறு வளைத்து,

பல ஆன் நெடு நிரை தழீஇ வருமுனை - பலவாகிய நெடிய ஆனிரையைக் கவர்ந்துவந்த வெட்சி வீரர் போர் முனையை;

கல் என அலைத்த பெரு புகல் வலத்தர் - கல்லென்னும் ஒலியுடன் தாக்கிக் கெடுத்த பெரிய மனச்செருக்கினையும் வெற்றியையுமுடையராய்; இவர் கரந்தைவீரர் என்க.

ஆடவராகிய வலத்தர் என இயையும். 'நெடுநிரை தழீஇ... வருமுனை' என்றதனால் வெட்சிமறவர் என்பது பெற்றாம்.

கனை குரல் கடு துடிப்பாணி தூங்கி உவலை கண்ணியர் ஊன் புழுக்கு அயரும் கவலை - மிக்க குரலையுடைய துடியின் விரைந்த தாளத்தே ஆடித் தழையாலாகிய கண்ணியராய் ஊன் புழுக்கினை உண்டு மகிழும் கவலையிலே;

காதலர் இறந்தனர் என நனி அவலம் கொள்ளல் காதல் தோழி - காதலர் சென்றாரென்று மிகவும் துயரத்தைக் கொள்ளாதே கொள் காதற் றோழி;

மா, வியங்கோட்கண் அசை.

ஆரமர் எய்தினும் நின் பூண் தாங்கு ஆகம் பொருந்துதல் மறந்து ஆண்டு அமைந்து உறையுநர் அல்லர் - அவர் ஆரமரைப் பெற்றாராயினும் நினது பூணணிந்த ஆகத்தைப் பொருந்துதலை மறந்து ஆண்டு அமைந்து உறைவாரல்லர், என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தினள் என்க.

உமணரது கல் அடுப்பிலே வடித்த பகழியையுடைய ஆடவர் தம் சிலையைவணங்க வாங்கி, நிரையைத் தழீஇ வருமுனையை அலைத்த வலத்தராய்த் துடிப்பாணி தூங்கிக் கண்ணியராய்ப் புழுக்கயரும் கவலையிடத்துக் காதலர் இறந்தனர் என அவலம்

கொள்ளல் தோழீ; ஆமூர் எய்தினும் அவர் நின் ஆகம் பொருந்துதல் மறந்து ஆண்டு அமைந்து உறையுநர் அல்லர் என்றியைக்க.

நல்லேறு சிலைக்கும் விசும்பின் சேண் சிமை நறு பூ சாரல் குறும் பொறை குணஅது - நல்ல இடியேறு ஒலிக்கின்ற விசும்பி னிடத்து உயர்ந்த சிகரத்தையும் நறிய பூமணக்கும் சாரலையுமுடைய குறும்பொறை மலைக்குக் கீழ்ப்பாலுள்ள ;

குரூஉக்கண் நெடுமதில் சேண் விளங்கு சிறப்பின் ஆமூர் - செறிந்த எப்புழைகளையுடைய நெடிய மதிலையும் உயர்வாக விளங் கிய சிறப்பினையுமுடைய ஆமூர் என்க.

வானவன் யானை மருப்பு ஒடிய நூறி கொடிமுடி காக்கும் ஆமூர் - வானவனுடைய யானையின்கண் மருப்பு ஒடியுமாறு அழித் துக் கொடுமுடி என்பான் காக்கின்ற ஆமூர் என்க.

மிஞிறு மூசு கவுள சிறு கண் யானை - வண்டு மொய்க்கும் கவுளையும் சிறிய கண்ணையுமுடைய யானை என்க.

தொடி உடை தடம் மருப்பு - கிம்புரி பொருந்திய வளைந்த மருப்பு என்க. பருத்த மருப்புமாம்.

குறும்பொறைக்குக் கீழ்ப்பாலுள்ளதும், வானவனுடைய யானையின்கண் மருப்பு ஒடியுமாறு அழித்துக் கொடுமுடி என்பா னூற் காக்கப்பெற்றதும், நெடிய மதிலாற் சேண் விளங்கிய சிறப் பினையுடையதுமான ஆமூர் என்க. காக்கும் என்றது 'யாம் பண்டு விளையாடுங் கா இது' என்புழிப் போல இயல்பு தோற்றி நின்றது.

'ஒழுக்கல் அடுப்பு' என்ற பாடத்திற்குச் சமைக்கின்ற ஒழுக் கம் நீங்கிய அடுப்பு என்க.

வெற்றி பெற்ற காந்தையார் மகிழ்ச்சியுடன் புழுக்கயரும் கவலை யிடத்து இறந்த காதலர் அவர் கலிமகிழிருக்கையினைக் காண்பாராத வின், பொருண்முற்றிய தாமும் விரைய வந்து நின்னோடு இல் லறம் நிகழ்த்தி மகிழ்வர்காண் என்று தலைவிக்கு இறைச்சியிற் சுட்டினளாம்.

இஃது, "அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டலும், வன்புறை யாகும் வருந்தியபொழுதே" என்ற விதிபற்றி யமைந்தது.

பு-ம். 11. கவலைகாதல். 18. தாக்குங் (ஆவூர்)

## 160. நெய்தல்

ஒடுங்கீ ரோதி நினக்கு மற்றே
நடுங்கின் றளித்தெ னிறையி னெஞ்ச
மடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணற் பக்கஞ் சேர்த்தி
5 நிறைச்சூல் யாமை மறைத்தீன்று புதைத்த
கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டைப்
பார்ப்பிட னாகு மளவைப் பகுவாய்க்
கணவ னோம்புங் கானலஞ் சேர்ப்பன்
முள்ளுறிற் சிறத்த லஞ்சி மெல்ல
10 வாவுடை மையின் வள்பிற் காட்டி
யேத்தொழி னவின்ற வெழினடைப் புரவி
செழுநீர்த் தண்கழி நீந்தலி னாழி
நுதிமுகங் குறைந்த பொதிமுகிழ் நெய்தல்
பாம்புயர் தலையிற் சாம்புவன நிவப்ப
15 விரவந் தன்றாற் றிண்டேர் கரவா
தொல்லென வொலிக்கு மிளையரொடு வல்வா
யரவச் சீறூர் காணப்
பகல்வந் தன்றாற் பாய்பரி சிறந்தே.

என்பது: தோழி வரைவு மலிந்து சொல்லியது.

— குமுழிஞாழலார் நப்பசலையார்.

கானலம் சேர்ப்பன் திண் தேர் ஏ தொழில் நவின்ற எழில் நடை புரவி வா உடைமையின் முள் உறின் சிறத்தல் அஞ்சி வள் பின் காட்டி மெல்ல இரா வந்தன்று - கடற்கரைச் சோலையையுடைய சேர்ப்பனது திண்ணிய தோானது தன்னிடத்துப் பூட்டப்பெற்ற அம்புபோலப் பாயுந் தொழிலிற் பழகிய அழகிய நடையையுடைய குதிரைகள் தாவிச் செல்லுதலை இயல்பாக வுடைமையின், தாற்று முள்ளாற் குத்தப்பெறின் பரிசிறத்தலை அஞ்சிக் கடிவாள வாரினாற் காட்டப்பெற்று இளையரை ஒழிந்து சீறூர் காணுமைக்கரந்து பரி சிறவாது இதுகாறும் மெல்ல இரவில் வந்து கொண்டிருந்தது; இப்போழ்தோ,

ஒல்லென ஒலிக்கும் இளையரொடு வல்வாய் அரவம் சிறு ஊர் காண கரவாது பாய் பரி சிறந்து செழு நீர் தண் கழி நீந்தலின் ஆழி நுதி முகம் குறைந்த பொதி முகிழ் நெய்தல் பாம்பு உயர் தலையின் சாம்புவன நிவப்ப பகல் வந்தன்று-ஒல்லென்னும் அநுகரண ஓசையுடன் ஒலிக்கும் இளையரொடு கூடி, வலிய வாயையும் அம்பல் அரவத்தை யுமுடைய சிறிய ஊர்ப்பெண்டிர் காண, ஒளியாமல் பாயும் செலவு சிறந்து செழிய நீர்நிரம்பிய தண்ணிய கழியை நீந்தலினாலே தேரா ழியின் நுனிதாக்கி முகம் பிளந்த இதழ் பொதிந்த நெய்தல் மொட் டானவை பாம்பின் உயர்த்தப்பட்ட தலைகள்போல வாடுவனவாய் அலைமீது எழாநிற்கப் பகற்போதிலே வரைவு வேண்டி வந்தது. இது நோக்க.

என் நிறை இல் நெஞ்சம் நடுங்கின்று அளித்து - என்னுடைய நிறையழிந்த நெஞ்சம் நடுங்கிற்று, அது இரங்கத்தக்கது;

ஒடுங்கு ஈர் ஓதி நினக்கும் அற்றோ - ஒடுங்கிய ஈரிய கூந்தலை யுடைய தோழீ! நினக்கும் அவ்வாறோ? என்று. தோழி வரைவு மலிந்து சொன்னாள் என்க.

இளையரொடென்றும், கரவாதென்றும் சீறூர்காணவென்றும் பரிசிறந்தென்றும் மேல் வந்ததற்கியைய, இளையரை ஒழித்து என் றும் சீறூர்காணாமைக் கரந்தென்றும் பரிசிறவாது என்றும் வருவித் துரைக்கப்பட்டன.

அடும்பு கொடி சிதைய வாங்கி கொடு கழிகு ப்பை வெண் மணல் பக்கம் சேர்த்தி நிறை சூல் யாமை ஈன்று மறைத்து புதை த்த கோடு வட்டு உருவின் புலவு நாறு முட்டை பார்ப்பு இடன் ஆகும் அளவை பகுவாய் கணவன் ஓம்பும் சேர்ப்பன் திண்டேர் பகல் வந்தன்று - அடும்பின் கொடியைச் சிதையுமாறு வலித்து, வளைந்த கழியிடத்து மிக்க வெண் மணலின் பக்கத்தே சேர்த்து, நிறைவினையுடைய சூற்கொண்ட யாமையானது முட்டையீன்று அதன்கண் மறைத்துப் புதைத்த வளைவையுடைய வட்டுக்காயின் வடிவினையுடைய புலால் நாறும் முட்டையிடத்து உண்டாகிய குஞ்சு பெரிதாகுமளவும் ஆண் யாமை காத்தோம்பும் சேர்ப்பனது திண் ணிய தேரானது பகற்போதில் வந்தது என்க.

பாம்பு உயிர் தலையில் என்னும் பாடத்திற்கு உயிர் பாம்பு தலை
யில் என்று மாறிச் சீறுகின்ற பாம்பின் தலைபோல என்க.

நிரைச்சூல்யாமையைக் காமம் நிறைந்த தலைவியாகவும், அது
அடும்புகொடியை யறுத்து அதனை வெண்மணற்பக்கத்தே சேர்த்
தது, தலைவி தன் தாயர்தன்னையர்பாலுள்ள அற்புத்தளையை யறுத்து
அவ்வன்பைத் தலைவன் பக்கலிலே சேர்த்ததன்மையாகவும், அது
தான் ஈன்றமுட்டையை மறைத்துப் புதைத்தது, தலைவி தான் ஒழு
கிய களவொழுக்கத்தைப் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்து
வைத்த தன்மையாகவும், அம்முட்டை புலவுநாறியது, அக்களவு
வெளிப்பட்டு அலரெழுந்ததன்மையாகவும், அம்முட்டையைக் கண
வன் பார்ப்பாகுமளவும் ஓம்பியது அக்களவொழுக்கத்தைத் தலை
மகன் வரையவந்து மாட்சிமைப்படுத்துந்துணையும் இடையீடின்றிக்
குறிவழிஒழுகித் தலைமகளை ஓம்பின தன்மையாகவும் உள்ளுறை
யுவமங்கொள்க.

தாய் யாமை தானீன்ற முட்டையை மணலினுள்ளே கிடந்தழி
யும்படி கையறவிடுமென்பதும், ஆண்யாமை அம்முட்டையைப்
பார்ப்பாகும்வரை காக்கும் என்பதுமாகிய இவ்விரண்டு அரியசெய்தி
களும் அடியில்வரும்,

"தாயின் முட்டை போல உட்கிடந்து
சாயி னல்லது பிறிதெவ னுடைத்தோ
யாமைப் பார்ப்பி னன்ன
காமம் காதலர் கையற விடினே"

என்னும் குறுந்தொகைப்பாடலாலும் அறியப்படும். அஃதாவது,
யாமையினது பார்ப்பினை ஒத்த காமமானது தலைவர் பேணாராயின்
(அன்பர் அறவே கைவிடுவாராயின்) தன் தாயீன்ற முட்டையைப்
போல் உள்ளே கிடந்து கெடும் என்பது.

மற்றும், பரத்தையர் மனைக்கண்ணே பன்னாட்டங்கித் தன்
மனைக்கண்ணேவந்த தலைமகற்குத் தோழிகூறுந் துறையாக எழுந்த,

"தீம்பெரும் பொய்கை யாமையிளம் பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்

கதுவே யையநின் மார்வே
யறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே"

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலுக்குப் பழையஉரைகாரர் "நின் மார்பாற்கொள்ளும் பயனின்றிக் காட்சியெய்தவும் பெறுகின்றிலன் எனப் புலந்து கூறியவாறு அறிக" என்று விசேடவுரை கூறியவதனால், யாமையிளம்பார்ப்புத் தாய்ப்பாலுண்டலைப் பெறுமையேயன்றித் தாயின் காட்சியெய்தலையும் பெறுவதின்றுஎன அறியப்படுதலாலும் யாமை தன்முட்டையை மணலிற் புதைத்துவிட்டுப்போதல் துணியப்படும்.

தோழியினால் முகம் குறைக்கப்பெற்ற நெய்தல் முகையானது சாம்புவனவாய் அலையெழுதோறும் அதனோடு நிவந்தாற்போல, வரைவு கருதிய நம் தலைவரது வரவால் அலர்வா யடங்கிய அம்பற் பெண்டிர் செருக்கடங்கிய முகத்தினராய் நம் சுற்றத்தார் கலிக்குந்தோறும் தாமும் உடன்கலியாநிற்பர் என்றும் உள்ளுறை கொள்ளலாகும்.

## 161. பாலை

வினைவயிற் பிரிதல் யாவது வணர்சுரி
வடியாப் பித்தை வன்க ணாடவ
ரடியமை பகழி யார வாங்கி
வம்பலர்ச் செகுத்த வஞ்சுவரு கவலைப்
5 படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி
யெருவைச் சேவ லீண்டுகிளை பயிரும்
வெருவரு கான நீந்திப் பொருள்புரிந்
திறப்ப வெண்ணினி ரென்பது சிறப்பக்
கேட்டன ளென்பது தானே தொட்டாழ்பு
10 சுரும்புண வொலிவரு மிரும்பல் கூந்த
லம்மா மேனி யரயிழைக் குறுமகள்
சுணங்குசூ ழாகத் தணங்கென வுருத்த
நல்வர லிளமுலை நனையப்
பல்லிதழ் மழைக்கண் பாந்தன பனிப்ப.

என்பது: பிரிவுணர்த்திய தோழி தலைமகளது வேறுபாடுகண்டு முன்னமே யுணர்ந்தா ணம்பெருமாட்டியென்று தலைமகனைச் செலவு விலக்கியது.

—மதுரைப் புல்லங்கண்ணனார்

பி - ம்: 5. வாழ்நட்செ. 13. எண்ணினி. 14. பல்வீதழ்மழைக்கண்.

### 162. குறிஞ்சி

கொளக்குறைபடாஅக் கோடுவளர் குட்டத்
தளப்பரி தாகிய குவையிருந் தோன்றல
கடல்கண் டன்ன மாக விசும்பி
னழற்கொடி யன்ன மின்னுவசிபு நுடங்க
5 கடிதிடி யுருமொடு கதழுறை சிதறி
விளிவிட னறியா வானுமிழ் நடுநா
ளருங்கடிக் காவல ரிகழ்பத நோக்கிப்
பனிமயங் கசைவளி யலைப்பத் தந்தை
நெடுநக ரொருசிறை நின்றனெ னாக
10 வறலென வவிர்வருங் கூந்தன் மலரென
வாண்முகத் தலமரு மாயிதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்ப
னகைமாண் டிலங்கு நலங்கெழு துவர்வாய்க்
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
15 காலுறு தளிரி னடுங்கி யானுது
நோயசா வீட முயங்கினள் வாய்மொழி
நல்லிசை தருஉ மிரவலர்க் குள்ளிய
நசைபிழைப் பறியாக் கழறொடி யதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
20 வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர
வொளிறுவன விழிதரு முயர்ந்துதோன் றருவி
நேர்கொ ணெடுவரைக் கவாஅற்
25 சூரர மகளிரிற் பெறற்கரி யோளே.

என்பது: இரவுக்குறிக்கட் டலைமகளைக்கண்ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

பி-ம்: 18. அதியன்; அதகன்.

163. பாலை

விண்ணதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்
தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்
எமியம் ஆகத் துனியுளங் கூரச்
சென்றோ ருள்ளிச் சில்வளை நெகிழப்
5 பெருநகை யுள்ளமொடு வருத்தைசை நோக்கி
விளிவு மெவ்வமொ டளிய தொன்றது
களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை
முளரி கரியு முன்பனிப் பானாட்
குன்றுநெகிழ்ப் பன்ன குளிர்கொள் வாடை
10 யெனக்கே வந்தனை போறி புனற்கா
லயிரிடு குப்பையி னெஞ்சுநெகிழ்ந் தவிழக்
கொடியோர் சென்ற தேஎத்து மடியா
தினையை யாகிச் சென்மதி
வினைவிதுப் புறுநர் உள்ளலு முண்டே.

என்பது: பிரிவின்கண் வற்புறுக்குந்தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.

—கழார்க்கீரனெயிற்றியார்.

பி - ம்: 6. விளியாவெ.

164. முல்லை

* கதிர்கை யாக வாங்கி ஞாயிறு
பைதறத் தெறுதலிற் பயங்கரந்து மாறி

* "இது பிரிதற்பகுதியாகிய பாசறைப்புலம்பல் எனினும் நிலம் பற்றி முல்லையாயிற்று." (தொல் பொருள். 24. இளம்பூ.)

விடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலங்
காடுகவி னெதிரக் கனைபெயல் பொழிதலிற்
5 பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுட
னறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
வெறியேன் றன்றே வீகமழ் கான
மெவன்கொன் மற்றவர் நிலையென மயங்கி
யிகுபனி யுறைக்குங் கண்ணொ டினைபாங்
10 கின்னா துறைவி தொன்னலம் பெறூஉ
மிதுநற் காலங் காண்டிசிற் பகைவர்
மதின்முக முருக்கிய தொடிசிதை மருப்பிற்
கந்துகா லொசிக்கும் யானை
வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே.

என்பது: பாசறைக்கணிருந்த தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—மதுரைத் தமிழ்க்கூத்தன் நாகன்றேவனார்.

பி-ம்: 7. வெறிவென்றன்றே. 9-10. டினையா வின்னாது; 12. மதின்மூடு கதவ முருக்கிய.

165. பாலை

* கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ
யொய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதூ ராங்க
5 ணெருமை நல்லான் பெற்றுமுலை மாந்து
நாடுபல விறந்த நன்ன ராட்டிக்

* இம்மணியிடைபவளத்துத் தாய்நிலையும் ஆயத்துநிலையும் கண்டோர் கூறியவாறுணர்க என்றும், "தருமணற்கிடந்த...... அழுமே" என்பது நற்றாய் மணற்பாவையைப் பெண்பாலாகக் கூறித் தழீஇக்கொண்டழுதலிற் பால்கெழுகிளவியாயிற்று என்றுங் கூறுவர், நச். (தொல். பொருள். 36; 199.)

காயமு மணியிழந் தழுங்கின் றாயு
மின்றோ டாரா யிற்றிஇயரென் னுயிரெனக்
கண்ணு நுதலு நீவித் தண்ணெனத்
10 தடவுநிலை நொச்சி வரிநிழ லசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்
தருமணற் கிடந்த பாவையென்
னருமக ளேயென முயங்கின ளழுமே.

என்பது: மகட்போக்கிய தாயது நிலைமை கண்டார் சொல்லியது.

பி - ம்: 8. இன்றோட்டாராய். 11. சூடி. 12-13. யெ, னருமக.

## 166. மருதம்

* நன்மரங் குழீஇய நனைமுதிர் சாடி
பன்னா ளரித்த † கோஒ யுடைப்பின்
மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்
பழம்ப னெல்லின் வேளூர் வாயி
5 னறுவிரை தெளித்த நாறிணர் மாலைப்
பொறிவரி யினவண் டூதல கழியு
முயர்பலி பெறூஉ முருகெழு தெய்வம்
புனையிருங் கதுப்பி னீவெய் யோள்வயி
னனையே னாயி னணங்குக வென்னென
10 மனையோட் டேற்று மகிழ்ந னாயின்
யார்கொல் வாழி தோழி நெருநற்
றார்பூண் களிற்றிற் றலைப்புணை தழீஇ
வதுவை யீரணிப் பொலிந்த நம்மொடு
புதுவது வந்த காவிரிக்
15 கோடுதோய் மலிர்நிறை யாடி யோரே.

---

* இப்பாட்டினை "இல்லோர் செய்வினை யிகழ்ச்சிக்கண்" என்னுந்துறைக்கு உதாரணமாகக் கொண்டு, இது பரத்தை பிறர்அலர் கூறியவழிக் காமஞ்சிறந்து புலந்தவாறு என்பர், நச். (தொல். பொருள். 151, 164.) † கோஒய் - கள்முகக்கும்பாத்திரம்.

என்பது: பரத்தையொடு புனலாடிய தலைமகன் தலைமகளிடைப் புக்கு, யானாடிற்றில னென்று சூளுற்றானென்பதுகேட்ட பரத்தை † தன்பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

—இடையனெடுங்கீரனார்.

பி - ம்: 2. தோயுடையுப்பின்; கோதுடை வைப்பின். 4. பேஞர். 8. நீசடுத்தோள். 15. தோநிதோய். † பாங்கிக்குச்சொற்றது.

## 167. பாலை

* வயங்குமணி பொருத வகையமை வனப்பிற்
பசுங்காழ் அல்குல் மாஅ யோளொடு
வினைவனப் பெய்திய புனைபூஞ் சேக்கை
விண்பொரு நெடுநகர்த் தங்கி யின்றே
5 யினிதுடன் கழிந்தன்று மன்னே நாளைப்
பொருந்தாக் கண்ணேம் புலம்புவந் துறுதரச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே சாத்தெறிந்
ததர்கூட் டுண்ணு மணங்குடைப் பகழிக்
கொடுவி லாடவர் படுபகை வெரீஇ
10 யூரெழுந் துலறிய பீரெழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிநோங்கு சிறுபுற முரிஞ வொல்கி
யிட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தெனை
மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்
15 தெழுதணி கடவுள் போகலிற் புல்லென்
றொழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணைப்
பாணாய் துள்ளிய பறைக்கட் சீறிற்
குயில்காழ் சிதைய மண்டி யயில்வாய்க்
கூர்முகச் சிதலை வேய்ந்த
20 போர்மடி நல்லிறைப் பொதியி லானே.

* இஃது ஆரமர்ஓட்டல் என்னுந்துறையில் சாத்தெறிதலுட வந்ததற்கு உதாரணமாகு மென்றும், நெஞ்சினாற் பிரியக்கருதி வருட திக்கூறியது என்றும் கூறுவர், நச். (தொல். பொருள். 60, 146.)

என்பது: தலைமகன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

—கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

இப்பாட்டினுட் பாணுயதுள்ளிய பறைக்கட் சீறில் என்பது தொகுபொருண்மறை.

பி - ம்: 14. மாடக் கெழுதணி. 17. பாணுய்துள்ளிப் பறைகட்.

## 168. குறிஞ்சி

யாமே நும்மொடு கழிப்பி நோய்மிகப்
பனிவார் கண்ணேம் வைகுது மினியே
யான்றல் வேண்டும் வான்றோய் வெற்ப
பல்லான் குன்றிற் படுநிழற் சேர்ந்த
5 நல்லான் பரப்பிற் குழூஉ ராங்கட்
கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சி
னுதிய னட்டில் போல வொலியெழுந்
தருவி யார்க்கும் பெருவரைச் சிலம்பி
னீன்றணி யிரும்பிடி தழீஇக் களிறுதன்
10 றூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப
வொடுங்களை புலம்பப் போகிக் கடுங்கண்
வாள்வரி வயப்புலி கன்முழை யுரறக்
கானவர் மடிந்த கங்குன்
மானதர்ச் சிறுநெறி வருத னீயே.

என்பது: இரவுக்குறிவந்த தலைமகனை இரவுக்குறிவிலக்கி வரைவு கடாயது.

—கோட்டம்பலத்துத்துஞ்சிய சேரமான்.

பி - ம்: 4. வல்லாண் குன்றிற்.

## 166. பாலை

மரந்தலை கரிந்து நிலம்பயம் வாட
வலங்குகதிர் வேய்ந்த வழறிகழ் நனந்தலைப்
புலிதொலைத் துண்ட பெருங்களிற் றொழியூன்

கலிகெழு மறவர் காழ்க்கோத் தொழிந்ததை
5 ஞெலிகோற் சிறுதீ மாட்டி யொலிதிரைக்
கடல்விளை யமிழ்தின் கணஞ்சா லுமணர்
சுனைகொ டீநீர்ச் சோற்றுலைக் கூட்டுஞ்
சுரம்பல கடந்த நம்வயிற் படர்ந்துநனி
பசலை பாய்ந்த மேனிய ணெடிதுநினைந்து
10 செல்கதிர் மழுகிய புலம்புகொண் மாலை
மெல்விரல் சேர்த்திய நுதலண் மல்கிக்
கயலுமிழ் நீரிற் கண்பனி வாரப்
பெருந்தோ ணெகிழ்ந்த செல்லலொடு
வருந்துமா லளிய டிருந்திழை தானே.

என்பது: தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—† தொண்டியாமூர்ச்சாத்தனார்.

பி - ம்: 2. வயங்கு, விலங்கு. 10. செல்சுடர்மழுங்கிய. 11. நுதலினள். 13. ணெகிழ்த்த. † தொண்டிமாமூர்.

## 170. நெய்தல்

* கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா

* இது நெய்தல் ஒழுக்கத்திற்கு நெய்தனிலம் உரியதாயிற்று என்றும், இவ்வகப்பாட்டு இரங்கலுரிப்பொருட்டாயிற்று என்றும், இது சொல்லாமரபின் சொல்லுவனவாக அழுகை பற்றிக் கூறியது என்றும், இவை உயர்திணையுமாயிற்று என்றும் கூறுவர் நச். இனிப் பேரா."கின்னுறுவிழுங்...வெனவே"என்பது 'துன்பத்துப் புலம்பல்' என்னுந்துறைக்கு உதாரணமாகு மென்றும், "கானலுங்கழறாது...ரலவ" என்புழிக்கூறப்பட்டனவெல்லாம் தூதாகலின் தூதுவிடுதலை வெறுத்தன்மைகூறியதாம் இப்பாட்டு என்றும் கூறுவர். (தொல். பொருள். 5, 14, 196., 270., 271.) "தூது முனிவின்மை" என்னுந்துறைக்கு இப்பாட்டு உதாரணமாகும் என்பர், நச். (சிந். 996.)

தொருநின் னல்லது பிறிதியாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
5 கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
பறைஇ தளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமோ ரலவ பல்காற்
கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅக்
10 கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிறாக் கனவு நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோ
ளின்னுறு விழும நீந்துமோ வெனவே.

என்பது: தலைமகள் காமமிக்க கழிபடர்கிளவியாற் சொற்றது.

—மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார்.

பி - ம். 3. தொருநீய 7. கிளருந். 8. வேண்டுமோலலவ.

### 171. பாலை

நுதலு நுண்பசப் பிவருந் தோளு
மகன்மலை யிறும்பி னெய்ந்துகொண் டறுத்த
பணையெழி லழிய வாடு நாளு
நினைவன் மாதவர் பண்பென் றோவா
5 தினையல் வாழி தோழி புணர்வ
ரிலங்குகோ லாய்தொடி நெகிழப் பொருள்புரிந்
தலந்தலை ஞெமையத் ததரடைந் திருந்த
மால்வரைச் சீறூர் மருள்பன் மாக்கள்
கோள்வ லேற்றை யோசை யோர்மார்
10 திருத்திக் கொண்ட வம்பினர் நோன்சிலை
யெருத்தத் திரீஇ யிடந்தொறும் படர்தலிற்
கீழ்ப்படு தார முண்ணு மேற்சிலைப்
பழம்போழ் சேற்ற தீம்புழ லுணீஇய

கருங்கோட் டிருப்பை யூரும்
16 பெருங்கை யெண்கின் சுரனிறந் தோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

—கல்லாடனார்.

பா-ம்: 4. வினையுமாக.

## 172. குறிஞ்சி

வாரண முரறு நீர்திகழ் சிலம்பிற்
பிரசமொடு விரைஇய வயங்குவெள் ளருவி
யின்னிசை யிமிழியங் கடுப்ப விம்மெனக்
கன்முகை விடரகஞ் சிலம்ப வீழுங்
5 காம்புதலை மணந்த வோங்குமலைச் சார
லிரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்
விரிமலர் மராஅம் பொருந்திக் கோறெரிந்து
வரிநுதல் யானை யருநிறத் தழுத்தி
யிகலடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்
10 புல்வேய் குரம்பை புலர வூன்றி
முன்றி னீடிய முழவுறழ் பலவிற்
பிழிமகி ழுவகையன் கிளையொடு கலிசிறந்து
சாந்த ஞெகிழியி னூன்புழுக் கயருங்
குன்ற நாடநீ யன்பிலை யாகுத
லறியேன் யானஃ தறிந்தனெ னாயி
15 னணியிழை யுண்க ணொயிதழ்க் குறுமகள்
மணியேர் மாணலஞ் சிதையப்
பொன்னேர் பசலை பாவின்று மன்னே.

என்பது: தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை வரைவுகடாயது.

—மதுரைப்பாலாசிரியர் நப்பாலனார்

பா-ம்: 8. அணிநுதல். 10. புதல்போற் குரம்பை. 11. முழவு முதற் பலவின். 17. பாயின்று.

## 173. பாலை

* அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலு நாளும்
வருந்தா வுள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதல்
5 மையீ ரோதி யரும்பட ருழத்தல்
சின்னாட் டாங்கல் வேண்டு மென்றநின்
னன்மா ணெல்வளை திருத்தின ராயின்
வருவர் வாழி தோழி பலபுரி
வார்கயிற் றொழுகை நோன்சுவற் கொளீஇப்
10 பகடுதுறை யேற்றத் துமண்விளி வெரீஇ
யுழைமா னம்பிணை யினனிரிந் தோடக்
காடுகவி னழிய வுரைஇக் கோடை
நின்றுதின விளிந்த வம்பணை நெடுவேய்க்
கண்விடத் தெறிக்கு மண்ணா முத்தங்
15 கழங்குறழ் தோன்றல பழங்குழித் தாஅ
மின்களி நறவி னியந்தோர் நன்னன்
விண்பொரு நெடுவரைக் கவாஅற்
பொன்படு மருங்கின் மலையிறந் தோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

—† முள்ளியூர்ப் பூதியார்.

பி - ம்: † முன்னியூர் வழுதியார்.

## 174. முல்லை

* இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத்
தொருபடை கொண்டு வருபடை பெயர்க்குஞ்

* இது, மீள்வான் நெஞ்சிற் குரைத்தது என்றும், "இதனுள் பூக்கோளேய தண்ணுமை விலக்கிச்செல்வேமென்றலின் அரசனாற் சிறப்புப்பெற்ற தலைவனாயிற்று" என்றும் "ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்" என்னும் பகுதிக்கு உதாரணமாம் என்றுங் கூறுவர், நச். (தொல். பொருள், 24, 41.) சேர்கால்-உயரிய கால்.

செல்வ முடையோர்க்கு நின்றன்று விறலெனப்
பூக்கோ ளேய தண்ணுமை விலக்கிச்
5 செல்வே மாத லறியாண் முல்லை
நேர்கான் முதுகொடி குழைப்ப நீர்சொரிந்து
காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ
முழங்குதொறுங் கையற் றொடுங்கிநப் புலந்து
பழங்கண் கொண்ட பசலை மேனியள்
10 யாங்கா குவள்கொ றனே வேங்கை
யூழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள
வாகத் தரும்பிய மாசறு சுணங்கின
னைன்மணல் வியலிடை நடந்த
சின்மெல் லொதுக்கின் மாஅ யோளே.

என்பது: பாசறைக்கட் டலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லி யது.

—மதுரை அளக்கர்ஞாழார்மகனார் மள்ளனார்.

பி - ம்: 8. கையற்றிரங்கி. 11. யூழுறு கிளர்வீ.

## 175. பாலை

வீங்குவிளிம் புரீஇய விசையமை நோன்சிலை
வாங்குதொடை பிழையா வன்க ணாடவர்
விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி
யாறுசெல் வம்பல ருயிர்செலப் பெயர்ப்பிற்
5 பாறுகிளை பயிர்ந்து பாமுடை கவரும்
வெஞ்சுர மிறந்த காதலர் நெஞ்சுணர
வரிய வஞ்சினஞ் சொல்லியும் பன்மாண்
டெரிவளை முன்கை பற்றியும் வினைமுடித்து
வருது மென்றன ரன்றே தோழி
10 காலிய னெடுந்தேர்க் கைவண் செழிய
னாலங் கானத் தமர்கடந் துயர்த்த
வேலினும் பல்லூழ் மின்னி முரசென

மாயிரு விசும்பிற் கடியிடி பயிற்றி
நேர்கதிர் நிரைத்த நேமியஞ் செல்வன்
15 போரடங் ககலம் பொருந்திய தார்போற்
றிருவி றேளத்துக் குலைஇ யுருகெழு
மண்பயம் பூப்பப் பாஅய்த்
தண்பெய லெழிலி தாழ்ந்த போழ்தே.

என்பது: பிரிவின்கண் வற்புறுக்குந்தோழிக்குத் தலைமகள்சொல் லியது. தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்; பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றதூஉமாம்.

—ஆலம்பேரி சாத்தனார்.

பி - ம்: 14. நிறைந்த.

## 176. மருதம்

* கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பி
னிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்காற்
களிற்றுச்செவி யன்ன பாசடை மருங்கிற்

---

* இப்பாட்டு "புகன்றவுள்ளமொடு......ஈரத்து மருங்கினும்" என்னும் பகுதிக்கு உதாரணமாம் என்பர், நச். இனிப் பேரா. "எழு தெழில்.........சென்மே" என்பது பரத்தையை நீஎள்ளினையென்று அழுது வருகின்றாள் என்று தலைமகற்குச் சொல்லியதாகலின் இது தன்கட்டோன்றிய இளிவரல்பொருளாக அவலச்சுவை பிறந் தது என்றும், "வேப்புநனை......மூர" என்புழித் தலைமகன் வாயில் வேண்டிச்சென்றானைப் பிறர்கூறும்பழிக்கு வந்தாயென்றமையின் இஃது உள்ளது உவர்த்தலாயிற்று என்றும், "எம்போற், புல்லுளை ...மற்றே" என்புழிப் புதல்வற்பயந்து நின்னின்றுறையவும் கடத்தி னம்யாம் என்றமையின், இஃது அன்புதொக நிற்றலாயிற்று என் றும், "உயர்ந்ததன்மேற்றே யுள்ளுங்காலை" என்ற சூத்திரத்திற்குக் "கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்"என்ற அடியை உதாரணங் காட்டியுஞ் செல்வர். (தொல். பொருள் 147., 253., 272., 278.)

5 கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவன் முகத்திற் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரைப் புள்ளிமிழ் பழனத்து
வேப்புநனை யன்ன நெடுங்க ணீர்ஞெண்
டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல
10 தொலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற்
றிதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்
னீர்மலி மண்ணளைச் செறியு மூர
மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி
யரிமல ராம்பலொ டார்தழை தைஇ
16 விழவாடு மகளிரொடு தழூஉவணிப் பொலிந்து
மலரே ருண்கண் மாணிழை முன்கைக்
குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்த
துடன்றனள் போலுநின் காதலி யெம்போற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
20 நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
வென்ன கடத்தளோ மற்றே தன்முகத்
தெழுதெழில் சிதைய வழுதன ளேங்கி
யடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு
25 கூர்நுனை மழுகிய வெயிற்ற
ளூர்முழுது நுவலுநிற் காணிய சென்மே.

என்பது: தோழி தலைமகனை வாயின்மறுத்தது.

—† மருதம்பாடிய இளங்கடுங்கோ.

இப்பாட்டின்கருத்துப் பிறர்சொல்லும் பழிக்கு வருவான் என்ற வாறு.

பி - ம்: 10. தொலிந்த. 13. மனைநடு. 20. நின்னின்றுடையா ளென்ன. 21. மற்பிற. † நெடுங்கோ.

## 177. பாலை

தொன்னலஞ் சிதையச் சாஅ யல்கலு
மின்னும் வாரா ரினியெவன் செய்கெனப்
பெரும்புலம் புறுத லோம்புமதி சிறுகண்
ணிரும்பிடித் தடக்கை மான நெய்பருந்
5 தொருங்குபிணித் தியன்ற வெறிகொ ளரீப்பாந்
தேங்கமழ் வெறிமலர் பெய்ம்மார் காண்பின்
கழையமல் சிலம்பின் வழைதலை வாடக்
கதிர்கதங் கற்ற வேக னெறியிடைப்
பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்
10 கான மஞ்ஞைக் கமஞ்சூன் மாப்பெடை
யயிரியாற் றடைகரை வயிரி னரலுங்
காடிறந் தகன்றோர் நீடின ராயினும்
வல்லே வருவர் போலும் வெண்வே
லிலைநிறம் பெயர வோச்சி மாற்றோர்
15 மலைமருள் யானை மண்டம ரொழித்த
கழற்காற் பண்ணன் காவிரி வடவயி
னிழற்கயந் தழீஇய நெடுங்கான் மாவின்
றளிரே ராகந் தகைபெற முகைந்த
வணங்குடை வனமுலைத் தாஅயநின்
20 சுணங்கடை வரித்த தொய்யிலை நினைந்தே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

—† செயலூர் இளம்பொன்சாத்தன் கொற்றனார்.

பி-ம்: 6. காம்பின். 8. னெடியிடை. 19—20. தாஅய சுணங்கிடை விரிந்தநின் றொய்யிலை நினைந்தே. † செல்லூர் இளம்பொன்சாத்தன் கொற்றன்; உறையூர் இளம்பொன்வாணிகன் சாத்தன்கொற்றன்

## 178. குறிஞ்சி

வயிரத் தன்ன வைவேந்து மருப்பின்
வெதிர்வே ரன்ன பரூஉமயிர்ப் பன்றி

பறைக்க ணன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன வகலிலைச் சேம்பின்
5 பிண்ட மன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கண்மிசை யூழிழி
பொறிசேர்ந் தன்ன வூறுநீர்ப் படாஅர்ப்
பைம்புத லளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்
10 தலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளையமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து
கண்ணினிது படுக்கு நன்மலை நாடனொ
டுணர்ந்தனை புணர்ந்த நீயு நின்றோட்
15 பணைக்கவி னழியாது துணைப்புணர்ந் தென்றுந்
தவலி லுலகத் துறைஇயரோ தோழி
யெல்லையு மிரவு மென்றூழ் கல்லெனக்
கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்
தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதெனக்
20 கனவினும் பிரிவறி யலனே யதன்றலை
முற்றூன் கண்ட ஞான்றினும்
பிற்பெரி தளிக்குந்தன் பண்பி னானே.

என்பது: தோழி வரைவுமலிந்து சொல்லியது.

—பரணர்.

இப்பாட்டின்கருத்துக் கருதிற்றினை முடிக்கும் நாடன் என்ற வாறு.

பி-ம்: 8. களிசினை. 10. தீண்டி விளைகர். 18. கொண்டல்வளம் பொழிந்த குளிர்கொள் வைகறை. 20. பிரிபறி யலரே.

## 179. பாலை

விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
வெண்டே ரோடுங் கடங்காய் மருங்கிற்

றனையெரி பரந்த துன்னரும் வியன்காட்டுச்
சிறுகண் யானை நெடுங்கை நீட்டி
5 வான்வாய் திறந்தும் வண்புனல் பெறாஅது
கான்புலந்து கழியுங் கண்ணகன் பரப்பின்
விடுவாய்ச் செங்கணைக் கொடுவி லாடவர்
நன்னிலை பொறித்த கன்னிலை யதர
விரும்புகொள் பூசல் களையுநர்க் காணுச்
10 சுரஞ்செல விரும்பினி ராயி னின்னகை [வாய்க்
முருந்தெனத் திரண்ட முள்ளெயிற்றுத் துவர்
குவளை நாண்மலர் புரையு முண்கணிம்
மதியேர் வாணுதல் புலம்பப்
பதிபெயர்ந் துறைத லொல்லுமோ நுமக்கே.

என்பது: பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச் சொல்லியது.

—கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனர்.

பி-ம்: 5. வறள்வாய். 9. வரம்புகொள். 12. புனையு முள்கணிம். 13. வாண்முகம். 14. பதிபெயர்த்துறை.

## 180. நெய்தல்

நகைநனி யுடைத்தாற் றோழி தகைமிகக்
கோதை யாயமொடு குவவுமணை லேறி
வீததை கானல் வண்ட லயரக்
கதழ்பரித் திண்டேர் கடைஇ வந்து
5 தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை
யரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி
பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி
நல்வர விளமுலை நோக்கி நெடிதுநினைந்து
நில்லாது பெயர்ந்தன னொருவ னதற்கே
10 புலவுநா றிருங்கழி துழைஇப் பலவுடன்
புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்

தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்
படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்
பொன்னேர் நுண்டாது நோக்கி
15 யென்னு நோக்குமிவ் வழுங்க லூரே.

என்பது: இரந்து பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக்கூறியது தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

—கருவூர்க் கண்ணம்பாளனார்.

பி - ம்: 11. முன்னிடை. கருவூர்க்கண்ணம்பாளனார்; கண்ணன் பரணனார்.

181. பாலை

துன்னருங் கானமுந் துணிதலாற்றாய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயி
னென்னிலை யுரையோ நெஞ்சே யொன்னா
ரோம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
5 யடுபோர் மிஞிலி செருவிற் கூடி
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
வண்மை யெயினன் வீழ்ந்தென ஞாயிற்
றொண்கதி ருருப்பம் புதைய வோராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
10 விசும்பிடை தூர வாடி மொசிந்துடன்
பூவிரி யகன்றுறைக் கணைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேரியாற் றயிர்கொண் டீண்டி
யெக்க ரிட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்
15 ஞால நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூன் முக்கட் செல்வ
னால முற்றங் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழின்மனை மகளிர்

கைசெய் பாவைத் துறைக்க ணிறுக்கு
20 மகர நெற்றி வான்றோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்ட நாறும் வண்டட ரைம்பாற்
பணைத்தகைத் தடைஇய காண்பின் மென்றோ
25 ளணங்குசா லரிவை யிருந்த
மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே.

என்பது: இடைச்சுரத்து ஒழியக்கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

பி - ம்: 5. செருவேல்கடைஇ. 7. ஆஅயெயினன். 12. அயிர் கொடீண்டி. 14. வெற்பின். 16. நால்வகை. 17. தைஇப். 18 பொழின்மணமகளிர். 22. பகர்வர். 23. வண்டாடைம்பா.

## 182. குறிஞ்சி

பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து
வாங்கமை நோன்சிலை பெருக்கத் திரிஇத்
திம்பிழிப் பலவின் சுளைவிளை தேறல்
வீளை யம்பி னிளையரொடு மாந்தி
5 ஓட்டியல் பிழையா வயநாய் பிற்பட
வேட்டம் போகிய குறவன் காட்ட
குளவித் தண்புதல் குருத்தொடு துயல்வர
முளவுமாத் தொலைச்சுங் குன்ற நாட
அரவெறி யுருமோ டொன்றிக் கால்வீழ்த்
10 துரவுமழை பொழிந்த பானாட் கங்குற்
றனியை வந்த வாறுநினைந் தல்கலும்
பனியொடு கலுழுமிவள் கண்ணே யதனாற்
கடும்பகல் வருதல் வேண்டுந் தெய்ய
வதிர்குரன் முதுகலை கறிமுறி முனைஇ

16 யுயர்சிமை நெடுங்கோட் டுகள வுக்க
கடபூத்த பூலரி தாஅய் வேலன்
வெறியயர் வியன்களங் கடுக்கும்
பெருவரை நண்ணிய சார லானே.

என்பது: தோழி இராவருவானைப் பகல்வா வென்றது.

—கபிலர்.

பி-ம்: 1. மலைத்து. 4. விளையாகாவி. 9. டன்றி. 10. இரவு மழை.

## 183. பாலை

குவளை யுண்கண் கலுழவுந் திருந்திழைத்
திதலை யல்கு லவ்வரி வாடவு
மத்தமா ரழுவ நத்துறந் தருளார்
சென்றுசே ணிடைய ராயினு நன்று
5 நீடல ரென்றி தோழி பாடான்று
பனித்துறைப் பெருங்கட லிறந்துநீர் பருகிக்
குவவுத்திரை யருந்து கொள்ளைய குடக்கேர்பு
வயவுப்பிடி யினத்தின் வயின்வயிற் றோன்றி
யிருங்கிளைக் கொண்மூ வொருங்குடன் றுவன்றிக்
10 காலை வந்தன்றாற் காரே மாலைக்
குளிர்கொள் பிடவின் கூர்முகை யலரி
வண்டுவாய் திறக்குந் தண்டா நாற்றங்
கூதி ரற்சிரத் தூதை தூற்றப்
பனியலைக் கலங்கிய நெஞ்சமொடு
16 வருந்துவ மல்லமோ பிரிந்திசினோர் திறத்தே.

என்பது: தலைமகன் குறித்த பருவவரவு கண்டு தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

—கருவூர்க் கலிங்கத்தார்.

பி - ம்: 6. பெருங்கடல்; விரைந்துநீர்.

### 184. முல்லை

கடவுட் கற்பொடு குடிக்குவிளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பி
னன்ன ராட்டிக் கன்றியு மெனக்கு
மினிதா கின்றாற் சிறக்கநின் னாயு
5 ளருந்தொழில் முடித்த செம்ம லுள்ளமொடு
சுரும்பிமிர் மலர கானம் பிற்பட
வெண்பிட வவிழ்ந்த வீகமழ் புறவிற்
குண்டைக் கோட்ட குறுமுட் கள்ளிப்
புன்றலை புதைத்த கொழுங்கொடி முல்லை
10 யார்கழல் புதுப்பூ வுயிர்ப்பி னீக்கித்
தெள்ளறல் பருகிய திரிமருப் பெழிற்கலை
புள்ளியம் பிணையொடு வதியு மாங்கட்
கோடுடைக் கையர் துளரெறி வினைஞ
ரரிய லார்கையர் விளைமகிழ் தூங்கச்
15 செல்கதிர் மழுகிய வுருவ ஞாயிற்றுச்
செக்கர் வானஞ் சென்ற பொழுதிற்
கற்பா லருவியி னொலிக்கு நற்றேர்த்
தார்மணி பலவுட னியம்பச்
சீர்மிகு குரிசினீ வந்துநின் றதுவே.

என்பது: தலைமகன் வினைவயிற்பிரிந்துவந்து எய்தியவிடத்துத் தோழி புல்லுமகிழ்வுரைத்தது.

—மதுரை மருதனிளநாகனார்.

பி-ம்: 2. புதல்வர்ப்பயந்த. 13. கோடுடைத்தலை.

### 185. பாலை

எல்வளை ஞெகிழச் சாஅ யாயிழை
நல்லெழிற் பணைத்தோ ளிருங்கவி னழியப்
பெருங்கை யற்ற நெஞ்சமொடு நத்துறந்
திரும்பி னின்னுயி ருடையோர் போல

5 வலித்து வல்லினர். காதலர். வாட
லொலிகழை நிவந்த நெல்லுடை நெடுவெதிர்
நலிகொண் மள்ளர் வில்விசையி னுடையப்
பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்
வேனி லத்தந் தாங்கண் வானுலந்
10 தருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுட
னிலையில மலர்ந்த விலவமொடு
நிலையுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி - ம்: 5. வலித்துவல்லினரே. 8. கல்பொரி பாம்பின்.

### 186. மருதம்

வானம் வேண்டா வறனில் வாழ்க்கை
நோன்ஞாண் வினைஞர் கோளறிந் தீர்க்கு
மீன்முதி ரிலஞ்சிக் கலித்த தாமரை
நீர்மிசை நிவந்த நெடுந்தா ளகலிலை
5 யிருங்கயந் துளங்கக் காலுறு தோறும்
பெருங்களிற்றுச் செவியி னலைக்கு மூரனொ
டெழுந்த கௌவையோ பெரிதே நட்பே
கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்
புனலாடு கேண்மை யனைத்தே யவனே
10 யொண்டொடி மகளிர் பண்டையாழ் பாட
வீர்ந்தண் முழவி னெறிகுணில் விதிர்ப்பத்
தண்ணறுஞ் சாந்தங் கமழுந் தோண்மணந்
தின்னும் பிறர்வயி னானே மனையோ
ளெம்மொடு புலக்கு மென்ப வென்னோற்
15 மாரி யம்பின் மழைத்தோற் பழையன்
காவிரி வைப்பிற் போஒ ரன்னவென்

செறிவளை யுடைத்தலோ விலனே யுரிதினின்
யாந்தன் பகையே மல்லேஞ் சேர்ந்தோர்
திருநுதல் பசப்ப நீங்குங்
20 கொழுநனுஞ் சாலுந்தன் னுடனுறை பகையே.

என்பது: தலைமகட்குப்பாங்காயினுர் கேட்ப இல்லிடைப்பரத்தை சொல்லிநெருங்கியது.

—பரணர்.

பி-ம்: 5. இருங்கயந்தயங்க. 7. டெழுந்த கேண்மை. 10. மண்டை பாழ்பட. 14. வெல்பரி. 17-18. யுரிதினினயர்ந்த; யுரிதினிஞர்ந்து.

187. பாலை

தோள்புலம் புகலத் துஞ்சி நம்மொடு
நாள்பல நீடிய கரந்துறை புணர்ச்சி
நாணுடை மையி னீங்கிச் சேய்நாட்
டரும்பொருள் வலித்த நெஞ்சமொ டேகி
5 நம்முயர் வுள்ளினர் காதலர் கறுத்தோர்
தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி
வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் றலைநா ளன்ன
தருமணன் * ஞெமிரிய திருநகர் முற்றம்
10 புலம்புறுங் கொல்லோ தோழி சேணோங்
கலந்தலை ஞெமையத் தாளி லாங்கட்
கலைசேர் பிருந்த சில்குடிப் பாக்கத்
தெல்விருந் தயர வேமத் தல்கி
மனையுறை கோழி யணற்றும் பன்ன
15 கவையொண் டளிர கருங்கால் யாஅத்து
வேனில் வெற்பிற் கானலங் காய
முனையெழுந் தோடிய கெடுநாட் டாரிடைப்
பனைவெளி றருந்து பைங்கண் யானை
யொண்சுடர் முதிரா விளங்கதி ரமையத்துக்

* ஞெமிர்தல் - பரத்தல் (தொல். சொல். 361.)

20 கண்படு பாயற் கையொடுங் கசைநிலை
வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள்வேட் டெழுந்த நயனில் பரதவர்
வைகுகட லம்பியிற் றோன்று
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

என்பது: பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. தலைமகன்பிரிவின்கண் தலைமகட்குத் தோழி சொல்லியதூஉமாம்.

—மாமூலனார்.

பி - ம். 10 - 11. சேய்நாட் டலந்தலை. 16. வேனில் வைப்பிற்கா ணிலங் காய. 17. நெடுநோட் டாரிடை. 19. விளங்குகதிர்.

## 188. குறிஞ்சி

† பெருங்கடன் முகந்த விருங்கிளைக் கொண்மூ
விருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்
போர்ப்புறு முரசி னிரங்கி முறைபுரிந்
தறனெறி பிழையாத் திறனறி மன்ன
5 ரருஞ்சமத் தெதிர்ந்த பெருஞ்செ யாடவர்
கழித்தெறி வாளி னளிப்பன விளங்கு
மின்னுடைக் கருவியை யாகி நாளுங்
கொன்னே செய்தியோ அரவம் பொன்னென
மலர்ந்த வேங்கை மலிதொட ரடைச்சிப்
10 பொலிந்த வாயமொடு காண்டக வியலித்
தழலை வாங்கியுந் தட்டை யோப்பியு
மழலேர் செயலை யந்தழை யசைஇயுங்

---

† இதனுள் "கொன்னே செய்தியோ அரவம்" என்பதனால் பயனின்றி அலர்விளைத்தியோ எனவுங்கூறி, எனற்புறமும் தருதி யோ என்பதனால் வரைந்துகொள்வையோ எனவுங்கூறித் தலைவனை மழைமேல்வைத்துக் கூறலின் சுட்டாயிற்று. கொன்னே செய் தியோ என்றதனால் வழுவாயினும் வரைதல்வேட்கையாற் கூறினமையின், அமைந்தது என்பர் நச். (தொல். பொருள். 242.)

குறமகள் காக்கு மேனற்
புறமுந் தருதியோ வாழிய மழையே.

என்பது : இரவிற் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

—வீரைவெளியன் தித்தனார்.

பி - ம்: 1. பல்கிளைக் கொண்மூ. 5. பெருஞ்சேய். 11. யோச்சிய.
12. தையுங்.

189. பாலை

பசும்பழப் பலவின் கானம் வெம்பி
விசும்புகண் ணழிய வேனி னீடிக்
கயங்கண் ணற்ற கல்லோங்கு வைப்பி
னுறுயிர் மடப்பிடி தழீஇ வேறுநாட்டு
5 விழவுப்படர் மள்ளரின் முழவெடுத் துயரிக்
களிறதர்ப் படுத்த கல்லுயர் கவாஅன்
வெவ்வரை யத்தஞ் சுட்டிப் பையென
வயலையம் பிணையல் வார்ந்த கவாஅற்
றிதலை யல்குற் குறுமக ளவனொடு
10 சென்று பிறளாகிய வளவை யென்றும்
படர்மலி யெவ்வமொடு மாதிரந் துழைஇ
மனைமருண் டிருந்த வென்னினு நனைமகிழ்
நன்ன ராளர் கூடுகொ ளின்னியந்
தேரூர் தெருவிற் றதும்பு
15 மூரிழுந் தன்றுதன் வீழ்வுறு பொருளே.

என்பது: மகட்போக்கிய செவிலி சொல்லியது.

—கயமனார்.

பி - ம்: 11. யுள்ளமொடு.

190. நெய்தல்

திரையுழந் தசைஇய நிரைவளை யாயமொ
டுப்பின் குப்பை யேறி யெற்பட

வருதிமி லெண்ணுந் துறைவனொ டூரே
யொருதன் கொடுமையி னலர்பா டும்மே
5 யலமரன் மழைக்க ணமர்ந்து நோக்கா
ளலையல் வாழிவேண் டன்னை யுயர்சிமைப்
பொதும்பிற் புன்னைச் சினைசேர் பிருந்த
வம்ப நாரை யிரிய வொருநாட்
பொங்குவர லூதையொடு புணரி யலைப்பவு
10 முழைக்கடல் வழங்கலு முரிய னதன்றலை
யிருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச்சுறு வெறிந்தன வலவ னழிப்ப
வெழில்பயங் குன்றிய சிறையழி தொழில
நிரைமணிப் புரவி விரைநடை தவிர
15 விழுமென் கானல் விழுமணலசைஇ
யாய்ந்த பரியன் வந்திவண்
மான்ற மாலைச் சேர்ந்தன்றோ விலனே.

என்பது: தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடுநின்றது.

—உலோச்சனார்.

பி-ம்: 6. னலையல்; யுயர்மிசை. 10. வெய்ய.

## 191. பாலை

அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
யெரியிதழ் மலரியொ டிடைபட விரைஇ
வண்டோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல்புதை சிரற்றடிக் கோலுடை யுமண
5 ரூர்கண் டன்ன வாரம் வாங்கி
யருஞ்சுர மிவர்ந்த வசைவி னோன்றாட்
டிருந்துபகட் டியம்புங் கொடுமணி புரிந்தவர்
மடிவிடு வீளையொடு கடிதெதி ரோடி
யோமையம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்
10 கேமஞ் செப்பு மென்றூழ் நீளிடை

யரும்பொரு ணசைஇப் பிரிந்துறை வல்லி
சென்றுவினை யெண்ணுதி யாயி னன்று
முரைத்திசின் வாழியென் னெஞ்சே நிரைமுகை
முல்லை யருந்து மெல்லிய வாகி
15 யறலென விரிந்த வுறலின் சாய
லொலியிருங் கூந்த றேறுமென
வலிய கூறவும் வல்லையோ மற்றே.

என்பது: தலைமகன் தன்னெஞ்சிற்குச்சொல்லிச் செலவழுங்கியது.

—†ஒரோடோகத்துக் கந்தரத்தனார்.

இப்பாட்டிற் சிரற்றடி என்றது பொல்லா அடியை.

பி - ம்: 3. வெண்டோட்டு. 6. நோன்சுவல் வன்றுட். 11. வல்வி. 13. உரையினி. 14. மெல்லியல் வாக்க. † உரோடோகக் கவுணியன் சேந்தன்.

## 192. குறிஞ்சி

மதியிருப் பன்ன மாசறு சுடர்நுதல்
பொன்னேர் வண்ணங் கொண்டன் றன்றே
யாங்கா குவள்கொ றோனே விசும்பி
னெய்யா வரிவி லன்ன பைந்தார்ச்
5 செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கிப்
பொறைமெலிந் திட்ட பின்புறப் பெருங்குரல்
வளைசிறை வாரணங் கிளையொடு கவர
வேனலு மிறங்குபொறை யுயிர்த்தன பானு
ணீவந் தளிக்குவை யெனினே மால்வரை
10 மைபடு விடரகந் துழைஇ யொய்யென
வருவி தந்த வரவுமிழ் திருமணி
பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலி
னிரவு மிழந்தன ளளிய ளுரவுப்பெய
லுருமிறை கொண்ட வுயர்சிமைப்
10 பெருமலை நாடநின் மலர்ந்த மார்பே.

என்பது: தோழி தலைமகனைச் *செறிப்பறிவுறீஇ இரவுக்குறிமறுத்தது.

—† போதும்பில்கிழான் வெண்கண்ணனார்.

பி - ம்: 1. மதியுரும் பன்ன மாசறு சுடர்நுதல். 8. இறங்குகுரலிறுத்தன; இறங்குபொறை யிறுத்தன. 10. வியலகம். 11. கருமணி. * செறிப்பறிவுறீஇ வரைவுகடாது. † வெங்கண்ணன்.

## 193. பாலை

கானுயர் மருங்கியற் கவலை யல்லது
வானம் வேண்டா வில்லே ருழவர்
பெருநாள் வேட்டங் கிளையெழ வாய்த்த
பொருகளத் தொழிந்த குருதிச் செவ்வாய்ப்
5 பொறித்த போலும் வானிற வெருத்தி
னணிந்த போலுஞ் செஞ்செவி யெருவை
குறும்பொறை யெழுந்த நெடுந்தாள் யாஅத்
தருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்க ணூன்றடி
10 கொல்பசி முதுநரி வல்சி யாகுஞ்
சுரனமக் கெளிய மன்னே நன்மனைப்
பன்மாண் டங்கிய சாய லின்மொழி
முருந்தேர் முறுவ லிளையோள்
பெருந்தோ ளின்றுயில் கைவிடு கலனே.

என்பது: பொருள்வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவழுங்கியது.

—மதுரை மருதனிளநாகனார்.

பி - ம்: 4. பொருகளந் துழந்த. 6. செஞ்செவிச் சேவல். 7. பொறையடைந் தெழுந்த, 7-8யாஅக் கருங்கவட். 10. தொல்பசி முதுநரி வல்சி யாகும். 12. பன்மாண் டடங்கிய.

## 194. முல்லை

பேருறை தலைஇப பெரும்புலர் வைகறை
யேரிடம் படுத்த விருமறுப் பூழிப்

புறமாறு பெற்ற பூவ லீரத்
தூன்கிழித் தன்ன செஞ்சுவ னெடுஞ்சால்
5 வித்திய மருங்கின் விதைபல நாறி
யிரலை நன்மா னினம்பரந் தவைபோற்
கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்
கறங்குபறைச் சீரி னிரங்க வாங்கிக்
களைகால் கழீஇய பெரும்புன வரகின்
10 கவைக்கதி ரிரும்புறங் கதூஉ வுண்ட
குடுமி நெற்றி நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி யேமுறக்
கொல்லை யுழவர் காடுழ வொழித்த
வல்லிலைக் குருந்தின் வாங்குசினை யிருந்து
15 கிளிகடி மகளிரின் விளிபடப் பயிருங்
கார்ம னிதுவாற் றோழி போர்மிகக்
கொடுஞ்சி நெடுந்தேர் பூண்ட கடும்பரி
விரியுளை நன்மான் கடைஇ
வருது மென்றவர் தெளித்த போழ்தே.

என்பது: பருவங்கண்டு ஆற்றுமைமீதூரத் தலைமகள் சொல்லியது.

இப்பாட்டின் பயன் தோழிகேட்பின் தூதுவிடுவது; அன்றெனின் சொல்லியாற்றுவது.

—இடைக்காடனார்.

பி-ம்:9. களைக்கால் கழீஇய. 13. கூழ்நிழ லொழித்த. 14. பல்லிலைக் குருந்தின். 16. கார்ம னிகுளை தோழி.

### 195. பாலை.

* அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே

* இது தெய்வத்தொடுபடுத்துப் புலம்பியது என்றும், "எம்மனை......குறிப்பே" என்றாற்போல்வன கற்பினுக்கத்துக் கருத்து நிகழ்தல் என்றும், வெளிப்படுவதன்முன்னர் கொண்டுதலைக்கழிக்

புனைமா ணிஞ்சி பூவ லூட்டி
மனைமணை லடுத்து மாலை நாற்றி
5 யுவந்தினி தயரு மென்ப யானு
மான்பிணை நோக்கின் மடநல் லாளை
யீன்ற நட்பிற் கருளா னாயினு
மின்னகை முறுவ லேழையைப் பன்னாட்
கூந்தல் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய
10 நலம்புனை யுதவியோ வுடையன் மன்னே
யஃதறி கிற்பினோ நன்றுமற் றில்ல
வறுவை தோயு மொருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோ
லாகுவ தறியு முதுவாய் வேல
15 கூறுக மாதோநின் கழங்கின் றிட்ப
மாறா வருபனி கலுழுங் கங்குலி
லானாது துயருமென் கண்ணினிது படீஇய
ரெம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே.

என்பது: மகட்போக்கிய நற்றாய் சொல்லியது.

இப்பாட்டிற் பூவலூட்டி என்றது சுவரைப் புதுக்கோலஞ் செய்து என்றவாறு. பூவல் - சிவப்பு.

—கயமனார்.

பி-ம்: 10. நலம்புனை யுதவியு முடையன். 11. அஃதறி கற்பி னன்றுமற் றில்ல.

---

துழிக் கொடுப்போரின்றியும் கரணம் நிகழ்ந்தமையின், அதுவும் வெளிப்படாமல் வரைந்ததாம் என்றும் கூறுவர், நச். இனிப் பேரா. இதனை மறைவெளிப்பாடு என்பர். இனி, நக்கீரர், "மகள் வருகின்றாளெனக் கேட்ட தாய் நம் நெடுநகர்க்கே வருமோ, தன்கடிமனைக்கே கொண்டுபோமோ வென அவன் குறிப்பறிதற்கு வேலனை வினாவும்" என்பர். (தொல். பொருள். 36., 116., 140., 143., 499.) (இறை. களவு. 23,)

## 196. மருதம்

நெடுங்கொடி நுடங்கு நறவுமலி பாக்கத்து
நாட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅற்
றடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி
வேட்டமறந்து துஞ்சுங் கொழுநர்க்குப் பாட்டி
5 யாம்ப லகலிலை யமலைவெஞ் சோறு
தீம்புளிப் பிரம்பின் றிரள்கனி பெய்து
* விடியல் வைகறை யிடூஉ மூர
தொடுகலங் குறுக வாரா றந்தை
கண்கவி னழித்ததன் றப்பற் றெறுவர [கிய
10 வொன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போ
கடுந்தேர்த் திதிய னழுந்தைக் கொடுங்குழை
யன்னி மிஞிலியி னியலு
நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே.

என்பது: பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்திசொல்லியது.

—பரணர்.

பி-ம்: 7. யிடூஉமூதூர. 9. னழித்ததன்றவற் றெறுவர. 11. னரந்தை.

## 197. பாலை

மாமலர் வண்ண மிழந்த கண்ணும்
பூநெகி புணையிற் சாஅய தோளும்
நன்னர் மாக்கள் விழைவன ராய்ந்த
தொன்னல மிழந்து துயரமொ டென்னதூஉ
5 மினையல் வாழி தோழி முனையெழ
முன்னுவ ரோட்டிய முரண்மிகு திருவின்

---

* "விடியல் வைகறை யிடூஉ மூர" என்றது விடியற்கு முன்னர்த்தாகிய வைகறையென உருபுதொக்கு முன்மொழிநிலையலாயிற்று" என்பர், நச். (தொல். பொருள். 8,)

மறமிகு தானைக் கண்ண னெழினி
தேமுது குன்ற மிறந்தன ராயினு
நீடலர் யாழநின் னிரைவளை நெகிழத்
10 தோடார்ந் திருளிய குவையிருங் கூந்தன்
மடவோட் டழீஇய விறலோன் மார்பிற்
புன்றலைப் புதல்வ னூர்பிழிந் தாங்குக்
கடுஞ்சூன் மடப்பிடி தழீஇய வெண்கோட்
டினஞ்சால் வேழங் கன்றூர் பிழிதரப்
15 பள்ளி கொள்ளும் பனிச்சுர நீந்தி
யொள்ளிணர்க் கொன்றை யோங்குமலை யத்தம்
வினைவலி யுறாஉ நெஞ்சமொ
டினைய ராகிப் பிரிந்திசி னோரே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

—மாமூலனார்.

பி-ம்: 6. முன்னூநர். 7. மாமிகு. 8. தேமுதிர்குன்ற.

## 198. குறிஞ்சி

* கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி †
யரைநாள் யாமத்து விழுமழை கரந்து
5 கார்விரை கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பி
னிளமழை சூழ்ந்த மடமயில் போல

* இஃது இரவுக்குறிக்கண் அவட்பெற்று மலிந்தது என்றும், "அஞ்சிலம் பொடுக்கி.........பெயர்வோள்" என்றது "மனையோர் கிளவிகேட்கும் வழியது" என்றும் கூறுவர், நச். (தொல். பொருள். 103. 131.) † நம்பு-நசை. (தொல். சொல். நச். சேனா. 329.)

வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூ
10 லஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோ
ளான்ற கற்பிற் சான்ற பெரிய
ளம்மா வரிவையோ வல்ல டெனாஅ
தாஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
15 கவிரம் பெயரிய வுருகெழு கவாஅ
னேர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகண் மாதோ வென்னுமென் னெஞ்சே.

என்பது: புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்குநோக்கிய தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

பி-ம்: 5. கார்மலர் கமழும். 7. ஞெமழை. 13. வம்மா. 15. கவுரியம்; பேரிய. 16. நிறைச்சுனை.

## 199. பாலை

கரைபாய் வெண்டிரை கடுப்பப் பலவுட
னிரைகா லொற்றலிற் கல்சேர் புதிரும்
வரைசேர் மராஅத் தூழ்மலர் பெயல்செத்
துயங்கல் யானை நீர்நசைக் கலமரச்
5 சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்ற
லலங்க லுலவை யரிநிழ லசைஇத்
திரங்குமரற் கவ்விய கையறு தொகுநிலை
யரந்தி றாசித் திருந்தி யன்ன
திண்ணிலை யெயிற்ற செந்நா யெடுத்தலின்
10 வளிமுனைப் பூளையி னொய்யென் றலறிய
கெடுமா னினப்பிணை தரீஇய கலையே
கதிர்மாய் மாலை யாண்குரல் விளிக்குங்
கடல்போற் கானம் பிற்படப் பிறர்போற்

செல்வே மாயினெஞ் செலவுநன் றென்னு
15 மாசை யுள்ள மசைவின்று துரப்ப
நீசெலற் குரிமை நெஞ்சே வேய்போற்
றடையின மன்னுந் தண்ணிய திரண்ட
பெருந்தோ ளரிவை யொழியக் குடாஅது
திரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவிற்
20 பொலம்பூ ணன்னன் பொருதுகளத் தொழிய
வலம்படு கொற்றந் தந்த வாய்வாட்
* களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
லிழந்த நாடுதந் தன்ன
வளம்பெரிது பெறினும் வாரலெ னியானே.

என்பது: பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

—கல்லாடனார்.

பி - ம்: 7. தொகையிலை. 10. ஞெய்யென வலறிய. 11. தேரிய. 20. பொருகளத் தொழிய. 22. நாண்முடிச் சேரல்.

## 200. நெய்தல்

† நிலாவி னிலங்கு மணன்மலி மறுகிற்
புலாலஞ் சேரிப் ‡ புல்வேய் குரம்பை
யூரென வுணராச் சிறுமையொடு நீருடுத்
தின்னா வுறையுட் டாயினு மின்ப
5 மொருநா ளுறைந்திசி னோர்க்கும் வழிநாட்
டம்பதி மறக்கும் பண்பி னெம்பதி

* "களங்காய்க்கண்ணி...........யானே" என்பது வன்புறை குறித்துச் செலவழுங்குதலின் பாலையாயிற்று என்பர் நச். (தொல். பொருள். 185.)

† இப்பாட்டினை "தன்னையும் பெற்றுழி நயம்புரி யிடத்தினும்" என்ற பகுதிக்கு உதாரணமாகக் காட்டுவர், நச். (தொல். பொருள். 114.) ‡ இங்குப் புல் என்பது பனையோலை.

வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப
பொம்மற் படுதிரை கம்மென வுடைதரு
மரனோங் கொருசிறை பலபா ராட்டி
10 யெல்லை யெம்மொடு கழிப்பி யெல்லுற
நற்றேர் பூட்டலு முரியீ ரற்றன்று
சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமு
மெம்வரை யளவையிற் பெட்குவ
நும்மொப் பதுவோ வுரைத்திசி னெமக்கே.

என்பது: தலைமகள்குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறை நயப்பக் கூறியது.

—†உலோச்சனார்.

பி - ம்: 4. இன்னுவளையுட்டா. 9. சிறைப்பல. 13. பெட்குவோ மது; பெட்குவெ நும்மொப்பது. 14. விரித்திசி. † நக்கீரர்.

201. பாலை

அம்ம வாழி தோழி பொன்னி
னவிரெழி னுடங்கு மணிகிளர் ரோடை
வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை
5 யவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து
நவையயவரிப் பொலிந்த கோடேந் தல்குற்
பழையர் மகளிர் பணித்துறை பரவப்
பகலோன் மறைந்த வந்தி யாரிடை
யுருகெழு பெருங்கட லுவவுக் கிளர்ந்தாங்
10 கலரு மன்றுபட் டன்றே யன்னையும்
பொருந்தாக் கண்ணள் வெய்ய வுயிர்க்குமென்
றெவன்கை யற்றனை யிகுளை சோழர்
வெண்ணெல் வைப்பி னன்னாடு பெறினு
மாண்டமைந் துறைந ரல்லர் முனாஅது
15 வான்பொரு தலைய குன்றத்துக் கவாஅற்

பெருங்கை யெண்கின் பேழ்வா யேற்றை
யிருடுணிந் தன்ன குவவுமயிர்க் குருளைத்
தோன்றுதலைப் பிணவொடு திளைக்கும்
வேனி னீடிய சுரனிறந் தோரே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

—மாமூலனார்.

இப்பாட்டிற் பழையர் மகளிர் என்பார் * உழத்தியர்.

பி - ம்: 10. மான்று. 17. இருடணிந்தன்ன. 18. பிணவொடு.

## 202. குறிஞ்சி

வயங்குவெள் ளருவிய குன்றத்துக் கவாஅற்
கயந்தலை மடப்பிடி யினனே மார்ப்பப்
புலிப்பகை வென்ற புண்கூர் யானை
கல்லகச் சிலம்பிற் கையெடுத் துயிர்ப்பி
5 னல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
சிறுபல் மின்மினி போலப் பலவுடன்
மணிநிற விரும்புறந் தாவு நாட.
யாமே யன்றியு முளர்கொல் பானா
10 ளுத்தி யரவின் பைத்தலை துமிய
வுரவுரு முரறு முட்குவரு நனந்தலைத்
தவிர்வி லுள்ளமொ டெஃகுதுணை யாகக்
கனையிருள் பரந்த கல்லதர்ச் சிறுநெறி
தேராது வருஉ நின்வயி
15 னாரஞ ரரும்படர் நீந்து வோரே.

என்பது: இரவுக்குறிக்கண் வந்துநீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவுகடாயது.

—† ஆவூர்கிழார்மகனார் கண்ணனார்.

---

* மூத்தியார் என்றும் பாடம்; பழையர் - கள்விற்பார்.

பி - ம்: 2. இனனே ரார்ப்ப. 13. கல்லகச். 14. நும்வயி. †ஆலூர் கிழார் மள்ளனுகனர்.

## 203. பாலை

உவக்குந ளாயினு முடலுந ளாயினும்
யாயறிந் துணர வென்னார் தீவா
யலர்வினை மேவ லம்பற் பெண்டி
ரின்ன ளினையணின் மகளெனப் பன்னு
5 வெனக்குவந் துரைப்பவுந் தனக்குரைப் பறியே
னுனுவ ளிவளென நனிகரந் துறையும்
யானிவ் வறுமனை யொழியத் தானே
யன்னை யறியி னிவணுறை வாழ்க்கை
யெனக்கெளி தாக லில்லெனக் கழற்கால்
10 மின்னொளிர் நெடுவே லிளையோன் முன்னுறப்
பன்மலை யருஞ்சுரம் போகிய தனக்கியா
னன்னை யன்மை நன்வா யாக
மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
வெய்திடை யுறாஅ தெய்தி முன்னர்ப்
15 புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்
செல்விருந் தாற்றித் துச்சி லிருத்த
நுனைகுழைத் தலமரு நொச்சி
மனைகெழு பெண்டியா னாகுக மன்னே.

என்பது: மகட்போக்கிய †தாய் சொல்லியது.

—கபிலர்.

பி - ம்: தாயறிந். 16. துச்சிலிருந்த. 18. னுகு மன்னே. † செவிலி.

## 204. முல்லை

உலகுட னிழற்றிய தொலையா வெண்குடைக்
கடல்போ றானைக் கலிமா வழுதி
வென்றம ருழந்த வியன்பெரும் பாசறைச்
சென்றவினை முடித்தன மாயி னின்றே

5 கார்ப்பெயற் கெதிரிய காண்டகு புறவிற்
கணங்கொள் வண்டி னஞ்சிறைத் தொழுதி
மணங்கமழ் முல்லை மாலை யார்ப்ப
வுதுக்காண் வந்தன்று பொழுதே வல்விரைந்து
செல்க பாகநின் னல்வினை நெடுந்தேர்
10 வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை
பன்மலர்ப் பொய்கைப் படுபுள் ளோப்புந்
காய்நெற் படப்பை வாணன் சிறுகுடித்
தண்டலை கமழுங் கூந்த
லொண்டொடி மடந்தை தோளிணை பெறவே.

என்பது: வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார்.

பி-ம்: 3. வேத்தம ருழந்த. 12. ப் பண்ணன்.

## 205. பாலை

உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பிற்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போலத்
தைய னின்வயிற் பிரியலம் யாமெனப்
பொய்வ லுள்ளமொடு புரிவுணக் கூறித்
5 துணிவில் கொள்கைய ராகி யினியே
நோய்மலி வருத்தமொடு நுதல்பசப் பூர
நாமழத் துறந்தன ராயினுந் தாமே
வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
10 நிலங்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி
பூவிரி நெடுங்கழி நாப்பட் பெரும்பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன
செழுநகர் நல்விருந் தயர்மா ரேமுற
விழுநிதி யெளிதினி னெய்துக தில்ல
15 மழைதா லற்சிரத்து மாவிரு ளீர்ந்தி

நீடமை நிவந்த நிழல்படு சிலம்பிற்
கடாஅ யானைக் கவுண்மருங் குறழ
வாழூர் பிழிதரு காமர் சென்னிப்
புலியுரி வரியதள் கடுப்பக் கலிசிறந்து
20 நாட்பூ வேங்கை நறுமல ருதிர
மேக்கெழு பெருஞ்சினை யேறிக் கணக்கலை
கூப்பிடூஉ வுகளுங் குன்றகச் சிறுநெறிக்
கற்பிறங் காரிடை விலங்கிய
சொற்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் வேறுபட்டதலைவி வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.

—நக்கீரர்.

பி - ம்: 5. துனியில். 18. வாழூர்பிழியுங். 22. குன்றச்சிறு நெறி.

## 206. மருதம்

என்னெனப் படுங்கொ றோழி நன்மகிழ்ப்
பேடிப் பெண்கொண் டாடுகை கடுப்ப
நகுவரப் பணைத்த திரிமருப் பெருமை
மயிர்க்கவின் கொண்ட மாத்தோ லிரும்புறஞ்
5 சிறுதொழின் மகாஅ ரேறிச் சேணோர்க்குத்
துறுகண் மந்தியிற் றோன்று மூரன்
மாரி யீங்கை மாத்தளி ரன்ன
வம்மா மேனி யாயிழை மகளி
ராரந் தாங்கிய வலர்முலை யாகத்
10 தாராக் காதலொடு தாரிடை குழைய
முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்
வதுவை மேவல னாகலி னதுபுலந்
தடுபோர் வேளிர் வீரை முன்றுறை
நெடுவெள் ளருவியின் னிரம்பாக் குப்பை

15 பெரும்பெயற் குருகி யாஅங்குத்
திருந்திழை நெகிழ்ந்தன தடமென் றோளே.

என்பது: வாயில்வேண்டிச்சென்ற விறலிக்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

—மதுரை மருதனிளநாகனார்.

பி-ம்: 3. நகுவரப்படைத்த. 4. மயிர்கவின். 5. சேணார்க்குர்.

## 207. பாலை

அணங்குடை முந்நீர் பரந்த செறுவி
னுணங்குதிறம் பெயர்ந்த வெண்க லமிழ்தங்
குடபுல மருங்கி னுய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செ யாடவர்
5 நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்
குறைக்குளம் புதைத்த கற்பிற ழியவின்
வெஞ்சுரம் போழ்ந்த வஞ்சுவரு கவலை
மிஞிறார் கடாஅங் காந்துவிடு கவுள
வெயிறினை வருந்திய நீடமருப் பொருத்தல்
10 பிணரழி பெருங்கை புரண்ட கூவற்
றெண்க ணுவரிக் குறைக்குட முகவை
யறனி லாளன் றோண்ட வெய்துயிர்த்துப்
பிறைநுதல் வியர்ப்ப வுண்டனள் கொல்லோ
தேங்கலந் தளைஇய தீம்பா லேந்திக்
15 கூழை யுளர்ந்து மொழிமை கூறவு
மறுத்த சொல்ல ளாகி
வெறுத்த வுள்ளமொ டுண்ணு தோளே.

என்பது: மகட்போக்கிய *தாய்சொல்லியது.

—மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார்.

பி-ம்: 15. மோழைமை. 16. சொல்லாளாகி. *செவிலி.

## 208. குறிஞ்சி

யாம விரவி னெடுங்கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடு
நுண்கோ லகவுநர் வேண்டின் வெண்கோட
டண்ணல் யானை யீயும் வண்மகிழ்
5 வெளியன் வேண்மா னாஅ யெயின
னளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
யிழையணி யானை யியறேர் மிஞிலியொடு
நண்பக லுற்ற செருவிற் புண்கூர்ந்
தொள்வாண் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்
10 கங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்
றொண்கதிர் தெறாமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்
துருவினை நன்ன னருளான் கரப்பப்
15 பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தா ரருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
யகுதை களைதந் தாங்கு மிகுபெய
லுப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
20 நாணுவரை நில்லாக் காம நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே யோரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறு
மேர்நுண் ணோதி மாஅ யோளே.

என்பது: புணர்ந்துநீங்குந் தலைமகன் றன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

பி-ம்: 11. தெருமரற்சிறக. 12. காணேனச் சினைஇ. 16 தாராக்கிய. 17. வசைவிட. 20. நாணுவரையில்லா.

## 209. பாலை

* தோளுந் தொல்கவின் றொலைந்தன நாளு
மன்னையு மருந்துய ருற்றன ளலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமா
னெழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழிய
னேரா வெழுவ ரடிப்படக் கடந்த
வாலங் கானத் தார்ப்பினும் பெரிதே
வாழல் வாழி தோழி யவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்ப
ரறையிறந் தகன்றன ராயினு நிறையிறந்
துள்ளா ராதலோ வரிதே செவ்வேன்
முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
லோரிக் கொன்று சேரலர்க் கீத்த
15 செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை யன்னநின் னலனே.

என்பது: பிரிவிடை *வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

—கல்லாடனார்.

பி - ம். 14. சேரலற்கீ. *வற்புறுத்தும் தோழி சொல்லியது.

## 210. நெய்தல்

குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவ
ரெறியுளி பொருத வேமுறு பெருமீன்
புண்ணுமிழ் குருதி புலவுக்கடன் மறுப்பட
விசும்பணி வில்லிற் போகிப் பசும்பிசிர்த்

* "என்புநெகப் பிரிந்தோள்.........வன்புறைக் கண்ணும்" என்னும் பகுதிக்கு இப்பாட்டினை உதாரணமாகக் காட்டுவர், நச். (தொல். பொருள். 114.)

5 திரைபயி லழுவ முழக்கி யுரனழிந்து
நிரைதிமின் மருங்கிற் படர்தருந் துறைவன்
பானா ளிரவினம் பணைத்தோ ளுள்ளித்
தானிவண் வந்த காலை நம்மூர்க்
கானலம் பெருந்துறைக் கவின்பா ராட்டி
10 யானுது புகழ்ந்திசி னோனே யினித்தன்
சாயன் மார்பிற் பாயன் மாற்றிக்
கைதையம் படுசினைக் கடுந்தேர் விலங்கச்
செலவரி தென்னு மென்பது
பலகேட் டனமாற் றோழி நாமே.

என்பது: தோழி தலைமகன்சிறைப்புறமாகத் தலைமகட்குச்சொல்லு வாளாய்ச் சொல்லியது,

இப்பாட்டின்கருத்து எம்மை இறந்துபடவிக்கு நாடனென்பது.

—உலோச்சனார்.

பி - ம்: 4. பசும்பிதிர். 6. படருந்துறைவன்.

211. பாலை

கேளா யெல்ல தோழி வாலிய
சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்
பறைகண் டன்ன பாவடி நோன்றாட்
டிண்ணிலை மருப்பின் வயக்களி றுரிஞுதொறுந்
5 தண்மழை யாலியிற் றாஅ யுழவர்
வெண்ணெல் வித்தி னறைமிசை யுணங்கும்
பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினு நல்குவர்
குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை
10 பிடிபடு பூசலி னெய்தா தொழியக்
கடுஞ்சின வேந்த னேவலி னெய்தி
நெடுஞ்சே ணாட்டிற் றலைத்தார்ப் பட்ட
கல்லா வெழினி பல்லெறிந் தழுத்திய

வன்கட் கதவின் வெண்மணி வாயில்
15 மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
நீரொலித் தன்ன *பேஎ
ரலர்நமக் கொழிய வழப்பிரிந் தோரே.

என்பது: பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு தோழி சொல்லியது.

— மாமூலனார்.

பி - ம்: 2. சுரை. 8. தேஎத்த வெண்ப வல்கலும். 14. வ்கன்கட். 16-17. பாஅ, ரலர்.

## 212. குறிஞ்சி

† தாவி னன்பொன் றைஇய பாவை
விண்டவ ழிளவெயிற் கொண்டுநின் றன்ன
மிகுகவி னெய்திய தொகுகுர லைம்பாற்
கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற
5 முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன் றைவருஞ் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன வின்றீங் கிளவி
யணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற்
றினம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
10 பெறலருங் குரைய ளென்னாய் வைகலு
மின்னா வருஞ்சுர நீந்தி நீயே
யென்னை யின்னற் படுத்தனை மின்னுமிழ்
புரவுக்கார் கடிப்பட மறலி மைந்துற்று
விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
15 படையிலா விலங்குங் கடன்மரு டானை
மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன்

*"அம்பலும்...கிழவனுக்கும்" என்ற சூ. மேற்கோள் இவ்வடிகள்

† இப்பாட்டினை இத்துறைக்கே உதாரணமாகக் காட்டினார், நச். (தொல். பொருள். 134; 139.)

பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
யோங்குதிரைப் பௌவ நீங்க வோட்டிய
20 நீர்மா ணெஃக நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மத னழியரோ நெஞ்சே யானே
தெளிய லல்லோட் கருதி
விளியா வெவ்வந் தலைத்தந் தோயே.

என்பது: அல்லகுறிப்பட்டுநீங்குந் தலைமகன் தன்னெஞ்சினை *நெருங்கிச் சொல்லியது.

—பரணர்.

பி - ம்: 14. மொழிக்கட்டேர்; மொழிக்தசட்டேர். 17. விலங்கியசினஞ். 18. முன்னர்முற்றி. 22. லல்லோட்கு வருந்தி. *நோக்கி.

## 213. பாலை

வினைநவில் யானை விறற்போர்த் தொண்டைய
ரினமழை தவழு மேற்றரு நெடுங்கோட்
டோங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்க்
கொய்குழை யதிரல் வைகுபுல ரலரி
5 சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி
யிகன்முனைத் தரீஇய வேறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவி னாட்பலி கொடுக்கும்
வானிணப் புகவின் வடுகர் தேஎத்து
நிழற்கவி னிழந்த நீரி னீளிடை
10 யழலவி ரருஞ்சுர நெடிய வென்னா
தகற லாய்ந்தன ராயினும் பகல்செலப்
பல்கதிர் வாங்கிய படுசுட ரமையத்துப்
பெருமரங் கொன்ற கால்புகு வியன்புனத்
தெரிமருள் கதிர திருமணி யிமைக்கும்
15 வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை
வேய்பொழுக் கன்ன சாயிறைப் பணைத்தோட்

பெருங்கவின் சிதைய நீங்கி யான்றோ
ரரும்பெற லுலக மமிழ்தொடு பெறினுஞ்
சென்றுதா நீடலோ விலரே யென்றுங்
20 கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கை
வலம்படு வென்றி வாய்வாட் சோழ
ரிலங்குநீர்க் காவிரி யிழிபுனல் வரித்த
வறலென நெறிந்த கூந்த
லுறலின் சாயலொ டொன்றுதன் மறந்தே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

—†தாயங்கண்ணனார்.

பி - ம்: 1. வினைநல். 2. இளமழை. 14. தெரிமருள் கதிர்மணி யிமைக்கு மத்தம். † தையங்கண்ணனார்; இதையங்கண் ணனார்.

## 214. முல்லை

அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
பகலுடன் கரந்த பல்கதிர் வான
மிருங்களிற் றினநிரை குளிர்ப்ப வீசிப்
பெரும்பெய லழிதுளி பொழித லானாது
5 வேந்தனும் வெம்பகை முரணி யேந்திலை
விடுகதிர் நெடுவேல் இமைக்கும் பாசறை
யடுபுகழ் மேவலொடு கண்படை யிலனே
யமரு நம்வயி னதுவே நமரென
நம்மறிவு தெளிந்த பொம்ம லோதி
10 யாங்கா குவள்கொ றானே யோங்குவிடைப்
படுசுவற் கொண்ட பகுவாய்த் தெண்மணி
யாபெயர் கோவல ராம்பலொ டளைஇப்
பையு ணல்யாழ் செவ்வழி வகுப்ப

வாருயி ரணங்குந் தெள்ளிசை
15 மாரி மாலையுந் தமியள் கேட்டே†.

என்பது: பாசறைக்கட் டலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்.

பி - ம்: 7. அடுபுகழ்வேலொடு. 9. நம்மறிவுதெளித்த.

## 215. பாலை

‡ விலங்கிருஞ் சிமையக் குன்றத் தும்பர்
வேறுபன் மொழிய தேஎ முன்னி
வினைநசைஇப் பரிக்கு முரன்மிகு நெஞ்சமொடு
புனைமா ணெஃகம் வலவயி னேந்திச்
5 செலன்மாண் புற்ற நும்வயின் வல்லே
வலனா கென்றலு நன்றுமற் றில்ல
கடுத்தது பிழைக்குவ தாயிற் றொடுத்த
கைவிரற் கவ்வுங் கல்லாக் காட்சிக்
கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
10 வடிநவி லம்பி னேவ லாடவ
ராளழித் துயர்த்த வஞ்சுவரு பதுக்கைக்
கூர்நுதிச் செவ்வாய் பெருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
மல்லன் மொசிவிர லொற்றி மணிகொண்டு
15 வல்வாய்ப் பேடைக்குச் சொரியு மாங்கட்
கழிந்தோர்க் கிரங்கு நெஞ்சமொ
டொழிந்திவ ணுறைத லாற்றா வோர்க்கே.

† இப்பாட்டுப் பொருள்நோக்கினால் தலைவன் குறுநில மன்னனாதல்வேண்டுமென்றும் தூதுகண்டு வருந்திக் கூறியதாம் என்றும் கூறுவர், நச். (தொல். பொருள். 24)

‡ "விலங்கிருஞ்...........செலன்மாண்புற்ற" என்புழி வேறுபன் மொழிய தேஎத்தைக் கொள்ளக்கருதிப் போர்த்தொழிலைச் செலுத்தும் உரன்மிக்க நெஞ்சமென்றலின் இது குறுநிலமன்னன் தன் பகைவயின் நாடுகொள்ளச் சென்றதாம், வேந்தனெனப் பெயர் கூறாமையின் என்பர், நச். (தொல். பொருள். 32.)

என்பது: செலவுணர்த்திய தோழி தலைமகள்குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்குவித்தது.

—இறங்குகுடிக் குன்றநாடன்.

பி - ம்: 2. தேய முன்னி. 3. முரண்மலி; முரன்மலி.

## 216. மருதம்

நாண்கொளுண் கோலின் மீன்கொள் பாண்மக
டான்புன லடைகரைப் படுத்த வராஅ
லுரரி நறவுண் டிருந்த தந்தைக்கு
வஞ்சி விறகிற் சுட்டுவா யுறுக்குந்
5 தண்டுறை யூரன் பெண்டி ரெம்மைப்
பெட்டாங்கு மொழிப வென்ப வவ்வலர்ப்
பட்டன மாயி னினியெவ னாகியர்
கடலாடு மகளிர் கொய்த ஞாழலுங்
கழனி யுழவர் குற்ற குவளையுங்
10 கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரு
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமா
னெறிவிடத் தலையாச் செறிசுரை வெள்வே
லாத னெழினி யருநிறத் தழுத்திய
15 பெருங்களிற் றெவ்வம் போல
வருந்துவர் மாதவர் சேரியாஞ் செலினே.

என்பது: தலைமகட்குப்பாங்காயினார் கேட்பத் தனக்குப்பாங்காயினார்க்குப் பரத்தை சொல்லியது.

—ஐயூர் முடவனார்.

இப்பாட்டின் கருத்துப் பிறராலும் இன்பம் பெறுவான் என்றவாறு.

பி - ம்: 1. ஞாண்கொளுண் கோனன் மீன்கொள். 2. டண்புன.

## 217. பாலை

பெய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை
யெஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன

துவலை தூவல் கழிய வகல்வய
னீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
5 கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப்
பாசிலை பொதுளிய புதறொறும் பகன்றை
நீலுண் பச்சை நிறமறைத் தடைச்சிய
தோலெறி பாண்டிலின் வாலிய மலரக்
கோழிலை யவரைக் கொழுமுகை யவிழ
10 ஆழுறு தோன்றி யொண்பூத் தளைவிடப்
புலந்தொறுங் குருகின நரலக் கல்லென
வகன்றுறை மகளி ரணிதுறந்து நடுங்க
வற்சிரம் வந்தன் றமைந்தன் றிதுவென
வெப்பொருள் பெறினும் பிரியன்மி னோவெனச்
15 செப்புவல் வாழியோ துணையுடை யீர்க்கே
நல்காக் காதலர் நலனுண்டு துறந்த
பாழ்படு மேனி நோக்கி நோய்பொர
விணரிறு புடையு நெஞ்சமொடு புணர்வுவேட்
டெயிறுதீப் பிறப்பத் திருகி
20 நடுங்குதும் பிரியின்யாங் கடும்பனி யுழந்தே.

என்பது: பிரிவுணர்த்தியதோழிக்குத் தலைமகள் ஆற்றுமைமீதூரச் சொல்லியது.

—கழார்க் கீரனெயிற்றியார்.

இப்பாட்டு எதிர்காலம் நோக்கிற்று.

பி - ம்: 1. பெய்துபுறந்தந்த. 2. பஞ்சிற்றுய். 8. கோலெறி; வாலி தின். 9. கொழுமுகையுடைய. 11. குருகினுரல; குயினு நரல. 18. ிறுபுடைபு. 19. பரப்ப.

## 218. குறிஞ்சி

* கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு
முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த

* இப்பாட்டினை இத்துறைக்கே கொண்டு "இம்மணிமிடைபவளத்துட் குறிஞ்சிக்கு முதலும் கருவும்வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது" என்பர்; நச். (தொல். பொருள். 3.)

வானிறை யுருவி னொளிறுபு மின்னிப்
பருஉவுறைப் பஃறுளி சிதறிவா னவின்று
5 பெருவரை நளிர்சிமை யதிர வட்டித்துப்
புயலே றுரைஇய வியலிரு ணடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்
றடைஇத் திரண்டநின் றோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயு
10 மிருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்
பெருமலை விடரகம் வரவரி தென்னாய்
வரவெளி தாக வெண்ணுதி யதனா
னுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
15 தண்ணிது கமழு நின்மார் பொருநா
ளடைய முயங்கே மாயின் யாமும்
விறலிழை நெகிழச் சாஅய்து மதுவே
யன்னை யறியினு மறிக வலர்வா
யம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க
20 வண்டிறை கொண்ட வெரிமரு டோன்றியொ
டொண்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே.

என்பது: தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து பகற்குறி நேர்ந்த வாய்பாட்டாற் றலைமகனை வரைவுகடாயது.

—கபிலர்.

பி - ம்: 2. குளகருந்த. 4. பருவுறை. 12. வரவரிதென்றாய்.
20-21. டோன்றல பொன்பூ; டோன்ற லொண்பூ.

219. பாலை

சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக வியலி
யோரை யாயமொடு பந்துசிறி தெறியினும்
வாரா யோவென் றேத்திப் பேரிலைப்
பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோற்

5 பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி
யென்பா டுண்டனை யாயி னொருகா
லுந்தை பாடு முண்ணென் றூட்டிப்
பிறந்ததற் கொண்டுஞ் சிறந்தவை செய்தியா
னலம்புனைந் தெடுத்தவென் பொலந்தொடிக்
10 ளறனி லாளனொ டிறந்தன ளினியென [குறுமக
மறந்தமைந் திராஅ நெஞ்சமொ டேவன்
பொன்வார்ந் தன்ன வைவா லெயிற்றுச்
செந்நாய் வெரீஇய புகருழை யொருத்தல்
பொரியரை விளவின் புன்புற விளைபுழ
15 லழலெறி கோடை தூக்கலிற் கோவலர்
குழலென நினையு நீரி னீளிடை
மடத்தகை மெலியச் சாஅய்
நடக்குங் கொல்லென நோவல் யானே.

என்பது: மகட்போக்கிய தாய் சொல்லியது.

—கயமனார்.

9 - ம். 8. பிறந்ததற் கொண்டுஞ் சிறந்தவை செய்தியா.

## 220. நெய்தல்

ஊருஞ் சேரியு முடனியைந் தலரெழத்
தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியுங்
கெடாஅத் தீயி னுருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் குழூஉச்சமந் ததைய
5 மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பி
னருங்கடி நெடுந்தூண் போல யாவருங்
காண லாகா மாணெழி லாக
10 முள்ளுதொறும் பனிக்கு நெஞ்சினை நீயே
நெடும்புற நிலையினை வருந்தினை யாயின்

முழங்குகட லோதங் காலைக் கொட்கும்
பழம்ப னெல்லி னூணூ ராங்க
ணேலா விரும்புட் போல நெஞ்சமர்ந்து
15 காதன் மாறாக் காமர் புணர்ச்சியி
னிருங்கழி முகந்த செங்கோ லவ்வலை
முடங்குபுற விறவோ டினமீன் செறிக்கு
நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து
யாணர்த் தண்பணை யுறுமெனக் கானா
20 லாய மாய்ந்த சாயிறைப் பணைத்தோ
ணல்லெழில் சிதையா வேமஞ்
சொல்லினித் தெய்யயாந் தெளியு மாறே.

என்பது: இரவுக்குறிவந்து மீளுந் தலைமகனை யெதிர்ப்பட்டுத் தோழி சொல்லியது.

—மதுரை மருதனிளநாகனார்.

பி - ம்: 4. குரூஉச்சமம். 11. நிலையின் வருந்தினை. 14. இருபுள்.

## 221. பாலை

நனைவிளை நறவின் றேறன் மாந்திப்
புனைவினை நல்லிற் றருமணற் குவைஇப்
பொம்ம லோதி யெம்மகண் மணனென
வதுவை யயர்ந்தனர் நமரே யதனாற்
5 புதுவது புனைந்த செயலை வெள்வேன்
மதியுடம் பட்ட மையணற் காளை
வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்
தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டுநின்
றண்ணறு முச்சி புனைய வவனொடு
10 கழைகவின் போகிய மழையுயர் நனந்தலைக்
களிற்றிரை பிழைத்தலிற் கயவாய் வேங்கை
காய்சினஞ் சிறந்து குழுமலின் வெரீஇ
யிரும்பிடி யிரியுஞ் சோலை
யருஞ்சுரஞ் சேற லயர்ந்தனென் யானே.

என்பது: தலைமகற்குப் போக்குடன்பட்டதோழி தலைமகட்குப்போக்குடன்படச் சொல்லியது.

—கயமனார்.

பி - ம்: 3. யென்மகண். 7. வாங்குசினைக் கொய்த: 8. தேம்பாய் தளிரொடு மெல்லிணர் கொண்டு.

## 222. குறிஞ்சி

வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாட னறீஇய நோய்க்கென்
மேனி யாய்நலந் தொலைதலின் மொழிவென்
முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கட்
5 கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடு
மீட்டெழிற் பொலிந்த வேந்துகுவவு மொய்ம்பி
னாட்ட னத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
10 வாதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னா
ளுரவுரு மேறொடு மயங்கி
15 யிரவுப்பெயல் பொழிந்த வீர்ந்த ணாறே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

—பரணர்.

பி - ம்: 9. மருண்டிட ருழந்த. 10. காதலிற் காட்டி. 11. பாடுசால். 12. மரதியன்ன.

## 223. பாலை

பிரிதல் * வல்லிய ரிதுநத் துறந்தோர்
மறந்து மமைகுவர் கொல்லென் றெண்ணி

---

* வல்லியர் - வல்லாராய் (தொல். சொல். 463.)

யாழல் வாழி தோழி கேழல்
வளைமருப் புறழு முளைநெடும் பெருங்காய்
5 நனைமுதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்
காய்சினக் கடுவளி யெடுத்தலின் வெங்காட்
டழல்பொழி யானையி னையெனத் தோன்று
நிழலி லோமை நீரி னீளிடை
யிறந்தன ராயினுங் காதலர் நம்வயின்
10 மறந்துகண் படுதல் யாவது புறந்தாழ்
பம்பணை நெடுந்தோட் டங்கித் தும்பி
யரியினங் கடிக்குஞ் சரிவண ரைம்பா
னுண்கே ழடங்க வாரிப் பையுள்கெட
நன்முகை யதிரற் போதொடு குவளைத்
15 தண்ணறுங் கமழ்தொடை வேய்ந்தநின்
மண்ணார் கூந்தன் மரீஇய துயிலே.

என்பது: பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தி யது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி - ம்: 1. வல்லிய ரதுநத். 4. நெடும் பொங்கர். 6. வெங்கட். 13. னுண்டுகெ ளடங்க. பையுள்கெடு. 15. கமழ்தொடர்.

## 224. முல்லை

செல்க பாக வெல்லின்று பொழுதே
வல்லோ னடங்குகயி றமைப்பக் கொல்லன்
விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய வுயிராக்
கொடுநுகத் தியாத்த தலைய கடுநடைக்
5 காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி
பால்கடை நுரையின் பரூஉமிதப் பன்ன
வால்வெண் டெவிட்டல் வழிவார் நுணக்கஞ்
சிலம்பி நூலி னுணங்குவன பாறிச்
சாந்துபுல ரகல மறைப்பக் காண்டகப்
10 புதுநலம் பெற்ற வெய்துமிங்கு புறவிற்

றெறிநடை மரைக்கண மிரிய மனையோ
ளோதுணங்கு வல்சி பெய்துமுறுக் குறுத்த
திரிமரக் குரலிசை கடுப்ப வரிமண
லலங்குகதிர்த் திகிரி யாழி போழ
15 வருங்கொ ரேழுநம் மின்னுயிர்த் துணையெனச்
சில்கோ லெல்வளை யொடுக்கிப் பல்கா
லருங்கடி வியனகர் நோக்கி
வருந்துமா லளிய டிருந்திழை தானே.

என்பது: வினைமுற்றியதலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—†ஆவூர்மூலங்கிழார்மகனார் பெருந்தலைச்சாத்தனார்.

பி - ம்: 7. வால்வெணீ டெவிட்டல். †ஆவூர்க்கிழார்மகன் பெருஞ்சாத்தன்.

225. பாலை

* அன்பு மடனுஞ் சாயலு மியல்பு
மென்பு நெகிழ்க்குங் கிளவியும் பிறவு
மொன்றுபடு கொள்கையொ டோராங்கு முயங்கி
யின்றே யிவண மாகி நாளைப்
5 புதலிவ ராடமைத் தும்பி குயின்ற
வகலா வந்துளை கோடை முகத்தலி
னீர்க்கியங் கினநிரைப் பின்றை வார்கோ
லாய்க்குழற் பாணியி னேதுவங் திசைக்குந்
தேக்கமல் சோலைக் கடறோங் கருஞ்சுரத்
10 தியாத்த தூணித் தலைதிறந் தவைபோற்
பூத்த விருப்பைக் குழைபொதி குவியிணர்
கழறுளை முத்திற் செந்நிலத் துதிர
மழைதுளி மறந்த வங்குடிச் சீறூர்ச்

* இது நெஞ்சினாற் பிரியக்கருதி வருந்திக்கூறியது என்பர் நச். (தொல். பொருள். 146.)

சேக்குவங் கொல்லோ நெஞ்சே பூப்புனை
15 புயலென வொலிவருந் தாழிருங் கூந்தற்
செறிதொடி முன்கைநங் காதலி
யறிவனர் நோக்கமும் புலவியு நினைந்தே.

என்பது: பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

—எயினந்தை மகனார் இளங்கீரனார்.

இப்பாட்டினுள் தூணித்தலை திறத்த லென்பது உறைகழித்த லென்றவாறு.

## 226. மருதம்

உணர்குவெ னல்லெ னுரையனின் மாய
நாணிலை மன்ற யாணர் ஊர
வகலு ளாங்க ணம்பகை மடிநைக்
குறுந்தொடி மகளிர் குரூஉப்புனன் முனையிற்
பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்
வல்வி லெறுழ்த்தோட் பரதவர் கோமான்
பல்வேன் மத்தி கழாஅர் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
10 விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடியணி முன்கை நீவெய் யோளொடு
முன்னா ளாடிய கவ்வை யிந்நாள்
வலிமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளிய னுறந்தை நாளவைப்
15 பாடின் றெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய வார்ப்பினும் பெரிதே.

என்பது: தலைமகற்குத் தோழி வாயின்மறுத்தது.

—பரணர்.

இப்பாட்டினுள் மடிவையென்றது தழையை.

227. பாலை

நுதல்பசந் தன்றே தோள்சா யினவே
திதலை யல்குல் வரியும் வாடின
வொண்ணு ருவள்கொ லிவளெனப் பன்மா
ணீர்மலி கண்ணொடு நெடிதுநினைந் தொற்றி
5 யினையல் வாழி தோழி நனைகவுட்
காய்சினஞ் சிறந்த வாய்புகு கடாத்தொடு
முன்னிலை பொறாஅது முரணிப் பொன்னிணர்ப்
புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப
முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்
10 செந்நிலப் படுநீ றாடிச் செருமலைந்து
களங்கொண் மள்ளரின் முழங்கு மத்தம்
பலவிறந் தகன்றன ராயினு நிலைஇ
* நோயில ராகநங் காதலர் வாய்வாட்
டமிழகப் படுத்த விமிழிசை முரசின்
15 வருநர் வரையாப் பெருநா ளிருக்கைத்
தூங்கல் பாடிய வோங்குபெரு நல்லிசைப்
பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் ததும்பன்
கடிமதில் வரைப்பி னூணூ ருப்பர்
விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநக
20 ரிருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்
தெல்லுமி ழாவணத் தன்ன
கல்லென் கம்பலை செய்தகன் றோரே.

---

* 'மங்கலமொழியும்' என்னுஞ்சூத்திரத்து இவ்வடியினைக் காட்டி "நம்மையகன்றிருந்துறத்தலின் தீங்குவருமென்றஞ்சி வாழ்த்தியது; நம்பொருட்டுத்தீங்குவருமென நினைத்தலின், வழுவாயமைந்தது" என்பர் நச். (தொல். பொருள். 244.)

என்பது: தலைமகன் பிரிவின்கண்வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. பிரிவின்கண் வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

—நக்கீரர்.

பி-ம்: 3.-4. பன்றூ ணீர்மலி. 17. பிடிமகி ழுறுதுணைப். 19. விழவுறு திருநகர்; வீழ்வுறு. 21. தெல்லிமிழ்.

## 228. குறிஞ்சி

பிரசப் பல்கிளை யார்ப்பக் கல்லென
வரையிழி யருவி யாரந் தீண்டித்
தண்ணென நனைக்கு நளிமலைச் சிலம்பிற்
கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளை
5 கன்முகை நெடுஞ்சுனை நம்மொ டாடிப்
பகலே யினிதுடன் கழிப்பி யிரவே
செல்வ ராயினு நன்றுமற் றில்ல
வான்கண் விரிந்த பகன்மரு ணிலவிற்
சூரன் மிளைஇய சார லாராற்
10 றேங்கண் மிசைய வேங்கை யொள்வீப்
புலிப்பொறி கடுப்பத் தோன்றலிற் கயவா
யிரும்பிடி யிரியுஞ் சோலைப்
பெருங்கல் யாணர்த்தஞ் சிறுகுடி யானே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. இப்பாட்டு, பகலே சிறைப்புறம்.

—அண்டர்மகன் குறுவழுதியார்.

பி - ம். அண்டர்முன் குறுவழுதியார்.

## 229. பாலை.

பகல்செய் பல்கதிர்ப் பருதியஞ் செல்வ
னகல்வாய் வானத் தாழி போழ்ந்தென

நீரறு வறந்த நிரம்பா நீளிடைக்
கயந்தலைக் குழவிக் கவியுகிர் மடப்பிடி
5 குளகுமறுத் துயங்கிய மருங்குல் பலவுடன்
பாழூர்க் குரம்பையிற் றோன்று மாங்க
ணெடுஞ்சே ணிடைய குன்றம் போகிய
பொய்வ லாளர் முயன்றுசெய் பெரும்பொரு
ணம்மின் றாயினு முடிக வல்லெனப்
10 பெருந்துனி மேவ னல்கூர் குறுமக
ணோய்மலிந் துகுத்த நொசிவரற் சின்னீர்
பல்லிதழ் மழைக்கட் பாவை மாய்ப்பப்
பொன்னேர் பசலை யூர்தரப் பொறிவரி
நன்மா மேனி தொலைத னோக்கி
15 யினைய லென்றி தோழி சினைய
பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவிழ் மலரி கொழுதித் தாதருந்
தந்தளிர் மாஅத் தலங்கன் மீமிசைச்
செங்க ணிருங்குயி னயவரக் கூஉ
20 மின்னிள வேனிலும் வாரா
ரின்னே வருது மெனத்தெளித் தோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்டதலைமகளை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறையெதிரழிந்து சொல்லியது.

—மதுரைக்கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்.

பி - ம்: 10. மேவநல்கூர். 18. மராஅத்.

## 230. நெய்தல்

*உறுகழி மருங்கி னோதமொடு மலர்ந்த
சிறுகரு நெய்தற் கண்போன் மாமலர்ப்

* "கைப்பட்டுக்கலங்கினும்" என்னுந் துறைக்கு இப்பாட்டினை உதாரணமாகக் கொண்டு, இதனைத் தலைவன் கூறியது என்பர் நச். (தொல். பொருள். 102; 111.)

பெருந்தண் மாத்தழை யிருந்த வல்குல்
ஐய வரும்பிய சுணங்கின் வையெயிற்று
5 மையீ ரோதி வாணுதற் குறுமகள்
விளையாட் டாயமொடு வெண்மண லுதிர்த்த
புன்னை நுண்டாது பொன்னி ஞெண்டு
மனைபுறந் தருதி யாயி னெனையதூஉ
மிம்மனைக் கிழமை யெம்மொடு புணரிற்
10 றீது முண்டோ மாத ராயெனக்
கடும்பரி நன்மான் கொடிஞ்சி நெடுந்தேர்
கைவல் பாகன் பையென வியக்க
யாந்தற் குறுகின மாக வேந்தெழி
லரிவே யுண்கண் பனிவர லொடுக்கிச்
15 சிறிய விறைஞ்சின டலையே
பெரிய வெவ்வம் யாமிவ ணுறற்கே.

என்பது: தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகன் றன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.

பி - ம்: 3.—4. தழையருந்த வல்குலை, யையவரும்பிய; வல்குலை யரும்பிய சுணங்கி னைய வையெயிற்று. 9. யில்லுடைக்.

231. பாலை

செறுவோர் செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க்
குறுமிடத் துவக்கு முதவி யாண்மையு
மில்லிருந் தமைவோர்க் கில்லென் றெண்ணி
நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்
5 கொடுவிற் கானவர் கணையிடத் தொலைந்தோர்
படுகளத் துயர்த்த மயிர்த்தலைப் பதுக்கைக்
கள்ளியம் பறந்தலைக் களர்தொறுங் குழீஇ
யுள்ளுநர்ப் பனிக்கு மூக்கருங் கடத்திடை
வெஞ்சுர மிறந்தன ராயினு நெஞ்சுருக
10 வருவர் வாழி தோழி பொருவர்

செல்சமங் கடந் செல்லா நல்லிசை
விசும்பிவர் வெண்குடைப் பசும்பூட் பாண்டியன்
பாடுபெறு சிறப்பிற் கூட லன்னநின்
றொடிவண் டாற்று முச்சித்
15 தோடார் கூந்தன் மரீஇ யோரே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

—மதுரை ஈழத்துப் பூதன்றேவனார்.

பி - ம்: 3. இல்லென வெண்ணி. 15. தோடார் மென்றேண்.

## 232. குறிஞ்சி

காணினி வாழி தோழி பானாண்
மழைமுழுங் கரவங் கேட்ட கழைதின்
மாஅல் யானை புலிசெத்து வெரீஇ
யிருங்கல் விடரகஞ் சிலம்பப் பெயரும்
5 பெருங்க னாடன் கேண்மை யினியே
குன்ற வேலிச் சிறுகுடி யாங்கண்
மன்ற வேங்கை மணநாட் பூத்த
மணியே ரரும்பிற் பொன்வீ தாஅய்
வியலறை வரிக்கு முன்றிற் குறவர்
10 மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கு
மார்கலி விழவுக்களங் கடுப்ப நாளும்
விரவுப்பூம் பலியொடு விரைஇ யன்னை
கடியுடை வியனகர்க் காவல் கண்ணி
முருகென வேலற் றரூஉம்
15 பருவ மாகப் பயந்தன்றா னமக்கே.

என்பது: தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

—கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.

பி - ம்: 4. பிடிபடமெருங்கி.

## 233. பாலை

அலமரன் மழைக்கண் மல்குபனி வாரநின்
னலர்முலை நனைய வழாஅ றோழி
யெரிகவர் புண்ட கரிபுறப் பெருநிலைப்
பீடுகெழு மருங்கி னோடுமழை துறந்தென
5 வூனில் யானை யுயங்கும் வேனின்
மறப்படைக் குதிரை மாறா மைந்திற்
றுறக்க மெய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய வுதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை யிரும்பல்
10 கூளிச் சுற்றங் குழீஇ யிருந் தாங்குக்
குறியவு நெடியவுங் குன்றுதலை மணந்த
சுரனிறந் தகன்றன ராயினு மிகநனி
மடங்கா வுள்ளமொடு மதிமயக் குறாஅப்
பொருள்வயி னீடலோ விலர்நின்
15 னிருளோங் கூந்த லின்றுயின் மறந்தே.

என்பது: பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

—மாமூலனார்.

இப்பாட்டில் தொய்யா வென்றது கெடாத வென்றவாறு.

## 234. முல்லை

கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை
நுண்ணயிர் பரந்த தண்ணய மருங்கி
னிரைபறை யன்னத் தன்ன விரைபரிப்
புல்லுளைக் கலிமா மெல்லிதிற் கொளீஇய
5 வள்பொருங் கமையப் பற்றி மூழ்கிய
பல்கதி ராழி மெல்வழி யறுப்பக்
காலென மருள வேறி நூலியற்
கண்ணோக் கொளிக்கும் பண்ணமை நெடுந்தேர்

வல்விரைந் தூர்மதி நல்வலம் பெறுந
10 ததர்தழை முணைஇய தெறிநடை மடப்பிணை
யேறுபுணர்ந் துவகைய வூறில வுகள
வஞ்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி
முல்லை நறுமலர்த் தாதுநயந் தூத
வெல்லை போகிய புல்லென் மாலைப்
15 புறவடைந் திருந்த வுறைவி னல்லூர்க்
கழிபடர் ருழந்த பனிவா ருண்க
ணன்னிறம் பரந்த பசலையள்
மின்னே ரோதிப் பின்னுப்பிணி விடவே.

என்பது: தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—†பேயனார்.

பி - ம்: 1. கார்ப்பயன். 4. கொளீஇ. 8. கொழிக்கும் 10. ததர்நனே.
†கழார்க் கீரனெயிற்றியார்.

## 235. பாலை

அம்ம வாழி தோழி பொருள்புரிந்
துள்ளார் கொல்லோ காதல ருள்ளியுஞ்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ
பயனிலங் குழைய வீசிப் பெயன்முனிந்து
5 விண்டு முன்னிய கொண்டன் மாமழை
மங்கு லற்கமொடு பொங்குபு துளிப்ப
வாடையொடு நிவந்த வாயிதழ்த் தோன்றி
சுடர்கொ ளகலிற் சுருங்குபிணி யவிழச்
சுரிமுகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ
10 விசும்பணி மீனிற் பசும்புத லணியக்
கள்வன் மண்ணளைச் செறிய வகல்வயற்
கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ
மாரியங் குருகி னீரிய குரங்க
நனிகடுஞ் சிவப்பொடு நாமந் தோற்றிப்

15 பனிகடி கொண்ட பண்பில் வாடை
மருளின் மாலையொ டருளின்றி நலிய
நுதலிறை கொண்ட வயலறி பசலையொடு
தொன்னலஞ் சிதையச் சாஅய்
யென்னள்கொ லளிய ளென்னா தோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்டதலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.

—கழார்க் கீரனெயிற்றியார்.

பி-ம்: 11. களவன்;வகல்வயிற். 14. நாமந்தோன்றி. 16. டருளின்று.

## 236. மருதம்

மணிமருண் மலர முள்ளி யமன்ற
துணிநீ ரிலஞ்சிக் கொண்ட பெருமீ
னரிநிறக் கொழுங்குறை வௌவினர் மாந்தி
வெண்ணெ லரிநர் பெயர்நிலைப் பின்றை
5 யிடைநில நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு சாய்ப்புறம் பரிப்பக் கழனிக்
கருங்கோட்டு மாஅத் தலங்குசினைப் பொதும்பர்
மயங்குமழைத் துவலையிற் றாஅ மூரன்
காமம் பெருமை யறியே னன்று
10 முய்ந்தனென் வாழி தோழி யல்கல்
* லணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரி னொடுங்கிய விருக்கை
யறியா மையி னழிந்த நெஞ்சி
னேற்றிய லெழினடைப் பொலிந்த மொய்ம்பிற்
15 றோட்டிருஞ் சுரியன் மணந்த பித்தை
யாட்ட னத்தியைக் காணீ ரோவெனா
நாட்டி னாட்டி னூரி னூரிற்

* இது புலவிப் பொருளாக அச்சம்பிறந்தது என்பர் பேரா. (தொல். பொருள். 256.)

கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெ
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த [னக்
20 ஆதி மந்தி போல†
பேதுற் றலமரக் கெடுக தில்ல

என்பது: ஆற்றாமைவாயிலாகப் புக்க தலைமகனீக்கத்துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

இப்பாட்டின் கருத்து, ஒன்று ஒன்றாய்த்தோன்று மூரனுதலால், நல்லார்போலத் துக்கத்தினைச் செய்வான் என்றவாறு.

—பரணர்.

பி - ம்: 3. வெவ்விளர். 5. யிடனில. 7. மாஅத்த வஞ்சினைப். 18. புனலொழித்.

237. பாலை

புன்காற் பாதிரி யரிநிறத் திரள்வீ
நுண்கொடி யதிரலொடு நுணங்கறல் வரிப்ப
வரவெயிற் றன்ன வரும்புமுதிர் குரவின்
றேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்
15 குயில்குரல் கற்ற வேனிலுந் துயிறுறந்
தின்னு கழியுங் கங்கு லென்றுநின்
னன்மா மேனி யணிநலம் புலம்ப
வினைத லான்றிசி னாயிழை கனைதிறற்
செந்தீ யணங்கிய செழுநிணக் கொழுங்குறை
10 மென்றினைப் புன்க முதிர்த்த மண்டையொ
டிருங்கதி ரலமருங் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த வந்தீஞ் சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவற் பகுக்கும்

† ஆதிமந்தி தன்பெயராலும், காதலனாகிய ஆட்டனத்தி பெயராலும் கூறிற் காஞ்சிப்பாற்படும். "ஆதி மந்தி போல......துறலே" என அகத்திணைக்கண் சார்த்துவகையான் வந்தன என்பர், நச். (தொல். பொருள். 54.)

புனல்பொரு புதவி னுறந்தை யெய்தினும்
15 வினைபொரு ளாகத் தவிர்விலர் கடைசிவந்
தைய வமர்த்த வுண்கணின்
வையேர் வாலெயி றூறிய நீரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

—தாயங்கண்ணனார்.

பி-ம்: 10. புன்க முயர்ந்த. 15. தவிரலர்.

## 238. குறிஞ்சி

மான்றமை யறியா மரம்பயி லிறும்பி
னீன்றிளைப் பட்ட வயவுப்பிணைப் பசித்தென
மடமான் வல்சி தரீஇய நடுநா
ளிருண்முகைச் சிலம்பி னிரைவேட் டெழுந்த
5 பனைமரு ளொருத்தற் பல்வரி யிரும்போத்து
மடக்க ணுமான் மாதிரத் தலறத்
தடக்கோட் டாமா னண்ண லேறு
நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி
யிருங்கல் வியலறை சிவப்ப வீர்க்கும்
10 பெருங்க னாடன் பிரிதி யாயின்
மருந்து முடையையோ மற்றே யிரப்போர்க்
கிழையணி நெடுந்தேர் களிறொடு மென்று
மழைசுரந் தன்ன வீகை வண்மகிழ்க்
கழறொடித் தடக்கைக் கலிமா னள்ளி
15 நளிமுகை யுடைந்த நறுங்கா ரடுக்கத்துப்
போந்தை முழுமுத னிலைஇய காந்தண்
மென்பிணி முகையவிழ்ந் தலர்ந்த
தண்கமழ் புதுமலர் நாறுநறு நுதற்கே.

என்பது: இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

இப்பாட்டின் கருத்து, யாதனுணுயினும் நச்சப்படும் நாடன் என்ற வாறு.

—கபிலர்.

பி - ம்: 4. இருமுகை. 5. பணைமரு. 9. வசிப்ப. 14. கமொனள்ளி. 15. நளிமுகை யுடைத்த.

## 239. பாலை

அளிதோ தானே யெவனு வதுகொன்
மன்றுந் தோன்றுது மரனு மாயும்
புலியென வுலம்புஞ் செங்க ணடவர்
ஞெலியொடு பிடித்த வார்கோ லம்பின
5 ரெல்லூ ரெறிந்து பல்லாத் தழீஇய
விளிபடு பூசல் வெஞ்சுரத் திரட்டும்
வேறுபஃ றேஎத் தாறுபல நீந்திப்
புள்ளித் தொய்யிற் பொறிபடு சுணங்கி
னொள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம்
10 புல்லென் மாலை யாமிவ ணொழிய
வீட்டருங் (குரைய) பொருள்வயிற் செலினே
நீட்டுவி ரல்லிரோ நெடுந்தகை யீரெனக்
குறுநெடும் புலவி கூறி நம்மொடு
நெருநலுந் தீம்பல மொழிந்த
15 சிறுநல் லொருத்தி பெருநல் லூரே.

என்பது: பொருள்வயிற் பிரிந்துபோகாநின்ற தலைமகன் தன்னெஞ் சிற்குச் சொல்லியது.

—எயினந்தைமக னிளங்கீரனுர்.

பி-ம்: 1. அணிதோதானே எவனுகுவங்கொன். 14. நெருநையு.

## 240. நெய்தல்

* செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினைத்
தணிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தன் மாக்கழி நிவப்ப
வினிப்புலம் பின்றே கானலு நளிகடற்
5 றிரைச்சுர முழந்த திண்டிமில் விளக்கிற்
பன்மீன் கூட்ட மென்னையர்க் காட்டிய
வெந்தையுஞ் செல்லுமா ரிரவே யந்தி
† லணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமோ டயரு நீயுந்
10 தேம்பா யோதி திருநுத னீவிக்
கோங்குமுகைத் தன்ன குவிமுலை யாகத்
தின்றுயி லமர்ந்தனை யாயின் வண்டுபட
விரிந்த செருந்தி வெண்மண லுடுக்கர்ப்
‡ பூவேய் புன்னையந் தண்பொழில்
15 வாவே தெய்ய மணந்தனை செலற்கே.

என்பது: தோழி இரவுக்குறிவந்த தலைமகற்குப் பகற்குறி நேர்ந்தது.

—எழூஉப்பன்றி நாகன்குமரனார்.

பி-ம்: 1. கோட் டஞ்சினை.

## 241. பாலை

*துனியின் றியைந்த துவரா நட்பி
னினிய ரம்ம வவரென முனியாது
நல்குவர் நல்ல கூறினு மல்கலும்

---

* இப்பாட்டு, தோழி களஞ்சுட்டியது என்றும், † நுளையர்க்கு வலைவளந்தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டுப் பரவுக்கடன்கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படும் என்று கொண்டு, ‡ "பகற்புணர் களனே புறனென மொழிப" என்ற சூத்திரத்திற்கு இவ்வடிகளை உதாரணங்காட்டியுஞ் செல்வர், நச். (தொல். பொருள். 5, 121, 132.)

பிரியாக் காதலொ டுழைய ராகிய
5 நமர்மன் வாழி தோழி யுயர்மிசை
மூங்கி லிளமுளை திரங்கக் காம்பின்
கழைநரல் வியலகம் வெம்ப மழைமறந்
தருவி யான்ற வெருவரு நனந்தலைப்
பேஎய் வெண்டேர்ப் பெயல்செத் தோடித்
10 தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை
புலம்பெயர்ந் துறைதல் செல்லா தலங்குதலை
விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகு
மத்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
வட்டக் கழங்கிற் றாஅய்த் துய்த்தலைச்
15 செம்முக மந்தி யாடு
நன்மர மருங்கின் மலையிறந் தோரே.

என்பது: பிரிவிடை வேறுபட்டதலைமகள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

—காவன்முல்லைப் பூதனார்.

பி-ம்: 2. னீயா' ரம்ம; னினியா ரம்ம. 11. தலங்கு நிலை. 16. நீண்மர.

## 242. குறிஞ்சி

அரும்புமுதிர் வேங்கை யலங்கன் மென்சினைச்
சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்டாது
மணிமருள் கலவத் துறைப்ப வணிமிக்
கவிர்பொறி மஞ்ஞை யாடுஞ் சோலைப்
5 பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனஞ்
செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்
பண்புதர வந்தமை யறியா துண்கேழ்
முறிபுரை யெழினலத் தென்மக டுயர்மருங்
கறிதல் வேண்டுமெனப் பல்பிரப் பிரீஇ
10 யறியா வேலற் றரீஇ யன்னை
வெறியயர் வியன்களம் பொலிய வேத்தி

மறியுயிர் வழங்கா வளவைச் சென்றியாஞ்
செலவரத் துணிந்த சேண்விளங் கெல்லை
நெகிழ்ந்த முன்கை நேரிறைப் பணைத்தோ
15 ணல்லெழி லழிவிற் றொல்கவின் பெறீஇய
முகிழ்த்துவர விளமுலை மூழ்கப் பல்லூழ்
முயங்க லியைவது மன்னோ தோழி
நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பிற்
பெருமலை விடரக நீடிய சிறியிலைச்
20 சாந்த மென்சினை தீண்டி மேலது
பிரசந் தூங்கு சேட்சிமை
வரையக வெற்பன் மணந்த மார்பே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

—பேரிசாத்தனார்.

பி-ம்: 10. றரீஇ யென்னை. 18. நளிமுகை. 22. வரைநகு; மலர்ந்த.

## 243. பாலை

அவரை யாய்மல ருதிரத் துவரின
வாங்குதுளைத் துகிரி னீங்கை பூப்ப
விறங்குபோ தவிழ்ந்த வீர்ம்புதற் பகன்றைக்
கறங்குநுண் டுவலையி னாருறை யணியப்
5 பெயனீர் புதுவர றவிரச் சினைநேர்பு
பீள்விரிந் திறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி
நெல்லொலி பாசவ றுழைஇக் கல்லெனக்
கடிதுவந் திறுத்த கண்ணில் வாடை
நெடிதுவந் தனையென நில்லா தேங்கிப்
10 பலபுலந் துறையுந் துணையில் வாழ்க்கை
நம்வலத் தன்மை கூறி யவர்நிலை
யறியுந மாயி னன்றுமற் றில்லை
பனிவார் கண்ணே மாகி யினியது

நமக்கே யெவ்வ மாகின்
15 றனைத்தாற் றோழிநந் தொல்வினைப் பயனே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றேனென்பதுபடச் சொல்லியது.

—†கோடியூர்கிழார்மகனார் நெய்தற்றத்தனார்.

பி-ம்: 1-2. தவிரின், வாங்குதுளைத் துகளி னீங்கை. 3. வீங்கு போதவிழ். 4. னாருளே. 8. கன்னிவாடை. 11. வலித்தன்மை. 15. தொழில்வினைப் பயனே. †குடிக்கிழார்மகனார் நெய்தற்றத்தனார்.

## 244. முல்லை.

* பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன
சேயுயர் சினைய மாச்சிறைப் பறவை
பகலுறை முதுமரம் புலம்பப் போகி
முகைவாய் திறந்த நகைவாய் முல்லை
5 கடிமகள் கதுப்பி னாறிக் கொடிமிசை
வண்டினந் தவிர்க்குந் தண்பதக் காலை
வரினும் வாரா ராயினு மாண்டவர்க்
கினிதுகொல் வாழி தோழி யெனத்தன்
பல்லிதழ் மழைக்க ணல்லகஞ் சிவப்ப
10 வருந்துய ருடைய ளிவளென விரும்பிப்
பாணன் வந்தனன் றூதே நீயும்
புல்லார் புரவி வல்விரைந்து பூட்டி
நெடுந்தே ரூர்மதி வலவ
முடிந்தன் றம்மநா முன்னிய வினையே.

* இப்பாட்டினுள் "முடிந்தன் றம்மநாம் முன்னிய வினையே" என்றலின், தானே குறுநிலமன்னன் சென்றதாம் என்பர் நச், (தொல். பொருள். 32.)

என்பது: வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—மதுரை...மள்ளனார்.

பி - ம்: 1. பகைபடு பச்சை நெய்தோற் றொழிந்தென. 10. வருந்து வளவனென. 13. நெடுந்தே ரேவுமதி.

## 245. பாலை

உயிரினுஞ் சிறந்த வொண்பொரு டருமார்
நன்றுபுரி காட்சியர் சென்றன ரவரென
மனைவலித் தொழியு மதுகைய மாக
னீநற் கறிந்தனை யாயி னீங்கி
5 மழைபெயன் மறந்த கழைதிரங் கியவிற்
செல்சாத் தெறியும் பண்பில் வாழ்க்கை
வல்வி லிளையர் தலைவ ரெல்லுற
வரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை
யரிய லாட்டிய வல்குனா வரைப்பின்
10 மகிழ்நொடை பெறாஅ ராகி நனைகவுட்
கான யானை வெண்கோடு சுட்டி
மன்றோடு புதல்வன் புன்றலை நீவு
மருமுனைப் பாக்கத் தல்கி வைகுறு
நிழல்படக் கவின்ற நீளரை யிலவத்
15 தழலகைந் தன்ன வலங்குசினை யொண்பூக்
குழலிசைத் தும்பி யார்க்கு மாங்கட்
குறும்பொறை யுணங்குந் ததர்வெள் ளென்பு
கடுங்கா லொட்டகத் தல்குபசி தீர்க்குங்
கன்னெடுங் கவலைய கான நீந்தி
20 யம்மா வரிவை யொழியச்
சென்மோ நெஞ்சம் வாரலென் யானே.

என்பது: பொருள்கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறித் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.

—மதுரை மருதனிளநாகனார்.

பி - ம்: 5. மழையென. 6. செல்சமத் தெறியு மன்பில். 11. கோடு கட்டி. 18. கடுங்கால் வேட்டத் தல்குபசி.

## 246. மருதம்

* பிணர்மோட்டு நந்தின் பேழ்வா யேற்றை
கதிர்மூக் காரல் களவ னாக
நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரு
மலிநீ ரகல்வயல் யாண ரூர
5 போதார் கூந்தல் நீவெய் யோளொடு
தாதார் காஞ்சித் தண்பொழி லகல்யா
றாடினை யென்ப நெருநை யலரே
காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகா
லார்கலி நறவின் வெண்ணி வாயிற்
10 சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பி
னிமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா வழுந்தூ ரார்ப்பினும் பெரிதே.

என்பது: தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.

—பரணர்.

இப்பாட்டினுள் களவனென்றது தரியனை.

பி - ம்: 5. கூந்த னல்லவ ளோடு. 8. சினமுன்பிற்.

## 257. பாலை

மண்ணா முத்த மொழுக்கிய வனமுலை
நன்மா ணாகம் புலம்பத் துறந்தோ

* 'ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம், ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப' என்றசூத்திரக்கருத்திறனே 'பிணர் மோட்டு நந்தின் பேழ்வாயேற்றை என்று கூறினர்' என்பர் பேரா. (தொல். பொருள். 604.)

மருளிலர் வாழி தோழி பொருள்புரிந்
திருங்கிளை யெண்கி னழல்வா யேற்றை
5 கருங்கோட் டிருப்பை வெண்பூ முனையிற்
பெருஞ்செம் புற்றி னிருந்தலை யிடக்கு
மரிய கான மென்னார் பகைபட
முனைபாழ் பட்ட வாங்க ணாட்பார்த்துக்
கொலைவல் யானை சுரங்கடி கொள்ளு
10 மூறுபடு கவலைய வாறுபல நீந்திப்
படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்திற்
பாறுகிளை சேக்குஞ் சேட்சிமைக்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

என்பது: தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—†மதுரை மருதங்கிழார்மகனார் பெருங்கண்ணனார்.

பி - ம்: 2. புலம்பத் துறந்தவ. 6. யிடிக்கு. †வெண்ணாகனார்.

## 248. குறிஞ்சி

*நகைநீ கேளாய் தோழி யல்கல்
வயநா யெறிந்து வன்பறழ் தழீஇ
யிளைய ரெய்துதன் மடக்கிளை யொடு

* இது, வந்தோன் செவிலியை எதிர்ந்துழிக் கூறியது என்பர் நச். இனிப் பேரா. "நகைநீ கேளாய் தோழி" என்பது தன் பேதைமை பொருளாக நகைபிறந்தது; என்னை? "தான்செய்த தவற்றிற்குத் தாய் தன்னை வெகுண்டது தனக்கு நகையாகக் கொண்டமையின்" என்றும், "நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே" என்பது பிறர் எள்ளியது பொருளாகத் தன்கண் நகை பிறந்தது; என்னை? தன் மகள் தன்னை மதியாது இகழ்ந்தாளென நக்கவாறு; இது வெகுளிப் பொருளாக நக்கதன்றோ வெனின் அது வீரர்க்கே உரித்தாகல்வேண்டும். இவள் அவளை வெகுண்டு தண்டஞ் செய்வாளல்லள், அதற்கே உவப்பினல்லது: என்றுங் கூறுவர். (தொல். பொருள். 112, 252.)

நான்முலைப் பிணவல் சொலிய கானொழிந்
5 தரும்புழை முடுக்க ராட்குறித்து நின்ற
தறுகட் பன்றி நோக்கிக் கானவன்
குறுகினன் றொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலன் முன்பிற்றன் படைசெலச் செல்லா
தருவழி விலக்குமெம் பெருவிறல் போன்மென
10 வெய்யாது பெயருங் குன்ற நாடன்
செறியரி றுடக்கலிற் பரீஇப் புரியவிழ்ந்
தேந்துகுவவு மொய்ம்பிற் பூச்சோர் மாலை
யேற்றிமில் கயிற்றி னொழில்வந்து துயல்வர
வில்வந்து நின்றோற் கண்டன ளன்னை
15 வல்லே யென்முக நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே.

என்பது: இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லு வாளாய்த் தலைமகன் கேட்பத் தோழி சொல்லியது.

—கபிலர்.

பி-ம்: 2. வலநாயெறி. 8-,9. செலாஅ தருவழி. 16. நல்லண் மன்றங் கூய்ப்பெயர்ந் தோளே; நல்லோண் மன்ற நகூஉப்பெயர்ந்.

## 249. பாலை

அம்ம வாழி தோழி பன்னா
ளிவ்வூ ரம்ப லெவனோ வள்வார்
விசிபிணித் தியாத்த வரிகோற் றண்கிணை
யின்குர லகவுந ரிரப்பி னொடோறும்
5 பொன்கோட்டுச் செறித்துப் பொலந்தார் பூட்டிச்
சாந்தம் புதைத்த வேந்துதுளங் கெழிலிமி
லேறுமுந் துறுத்துச் சால்பதங் குவைஇ
நெடுந்தேர் களிறொடு சுரக்குங் கொடும்பூட்
பல்வேன் முருகண் ணடை மேம்பி யன்னவென்
10 னல்லெழி லிளநலந் தொலையினு நல்கார்

பல்பூங் கானத் தல்குநிழ லசைஇத்
தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்
நாகா வீழ்த்துத் திற்றி தின்ற
புலவுக்களந் துழைஇய துகள்வாய்க் கோடை
15 நீள்வரைச் சிலம்பி னிரைமேட் டெழுந்த
வாள்வரி வயப்புலி நீண்மடிய விளிசெத்து
வேறுவேறு கவலைய வாறுபரிந் தலறி
யுழைமா னினநிரை போகுங்
கழைமாய் பிறங்கல் மலையிறந் தோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

— நக்கீரனார்.

பி-ம்: 6. வேந்துதுமாங் கிமிலெழில். 14. துகள்வாய்க் கொண்டை.

## 250. நெய்தல்

எவன்கொல் வாழி தோழி மயங்குபிசிர்
மல்குதிரை யுழந்த வொல்குநிலைப் புன்னை
வண்டிமி ரிணர நுண்டாது வரிப்ப
மணங்கம ழிளமண லெக்கர்க் காண்வர
5 கணங்கொ ளாயமொடு புணர்ந்துவிளை யாடக்
கொடுஞ்சி நெடுந்தே ரிளையரொடு நீக்கித்
தாரன் கண்ணியன் சேரவந் தொருவன்
வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவது
மறுமொழி பெறாஅன் பெயர்ந்தன னதற்கொண்
10 டரும்பட ரெவ்வமொடு பெருந்தோள் சாஅய்
யவ்வலைப் பரதவர் கானலஞ் சிறுகுடி
வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையிற் கலங்கி
யிறைவளை நெகிழ்ந்த நம்மொடு
துறையுந் துஞ்சாது கங்கு லானே.

என்பது: தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

—செல்லூர்கிழார்மகனார் பெரும்பூதங்கோற்றனார்.

பி - ம்: 1. பிதிர்.

251. பாலை

தூதுஞ் சென்றன தோளுஞ் செற்று
மோதி யொண்ணுதற் பசலையு மாயும்
வீங்கிறை நெகிழச் சாஅய்ச் செல்லலொடு
நாம்படர் கூரு மருந்துயர் கேட்பி
5 னந்தன் வெறுக்கை யெய்தினு மற்றவட்
டங்கலர் வாழி தோழி வெல்கொடித்
துனைகா லன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியி
லின்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
10 தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி யுருளிய குறைத்த
விலங்குவெள் ளருவிய வறைவா யும்பர்
15 மாசில் வெண்கோட் டண்ணல் யானை
வாயுட் டப்பிய வருங்கேழ் வயப்புலி
மாநில நெளியக் குத்திப் புகலொடு
காப்பில் வைகுந் தேக்கமல் சோலை
நிரம்பா நீளிடைப் போகி
20 யரம்போ ழவ்வளை நிலைநெகிழ்த் தோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு தோழி சொல்லியது.

—மாமூலனார்.

பி - ம்: 4. கூடுந் துயர்கேட் டின்னு. 5. நக்கர். 8. கரும்பினை. 9-10. கடிப்பிகுத் தியம்பொரத் தெம்முனை. 14. வரைவா யும்பர். 17. குத்திய புகலொடு. 18. காம்பில்.

## 252. குறிஞ்சி

இடம்படு பறியா வலம்படு வேட்டத்து
வாள்வரி நடுங்கப் புகல்வந் தாளி
யுயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி
வெண்கோடு புய்க்குந் தண்கமழ் சோலைப்
5 பெருவரை யடுக்கத் தொருவே லேந்தித்
தனியன் வருத லவனு மஞ்சான்
பனிவார் கண்ணே னாகி நோயட
வெமியே னிருத்தலை யானு மாற்றேன்
யாங்குச் செய்வாங்கொ றோழி யீங்கைத்
10 துய்யவிழ் பனிமல ருதிர வீசித்
தொழின்மழை பொழிந்த பானாட் கங்கு
லெறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்
பெருங்குளங் காவலன் போல
வருங்கடி யன்னையுந் துயின்மறந் தனளே.

என்பது: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.

—†நக்கண்ணையார்.

பி-ம்: 6. தனியயன். 8. எளியே. 11. தொழிமழை. †இவர்பெயர் கோழிக்காவிதிமகன் கண்ணனார்; நக்கண்ணன்.

## 253. பாலை

வைகறோறும் பசலை பாயவென்
மெய்யும் பெரும்பிறி தாகின் றொய்யென
வன்னையு மமரா முகத்தின ளலரே
வாடாப் பூவிற் கொங்க ரோட்டி
5 நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்

பொன்மலி நெடுநகர்க் கூட லாடிய
வின்னிசை யார்ப்பினும் பெரிதே யீங்கியான்
சிலநா ளுய்யலென் போன்மெனப் பலநினைந்
தாழல் வாழி தோழி வடாஅ
10 தாரிரு ணெடுநா ளோரா வுய்யப்
பகைமுனை யறுத்துப் பல்லினஞ் சாஅய்க்
கணஞ்சால் கோவலர் நெடுவிளிப் பயிரறிந்
தினந்தலைத் தரூஉந் துளங்கிமி னல்லேற்றுத்
தழூஉப்பிணை ரெருத்தந் தாழப் பூட்டிய
15 வந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர் தொழுவறை வெளவிக்
கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉ
நேரா வன்றோள் வடுகர் பெருமகன்
பேரிசை யெருமை நன்னாட் டுள்ளதை
20 யயிரியா றிறந்தன ராயினு மயரிறந்
துள்ளுப தில்ல தாமே பணைத்தோட்
குரும்பை மென்முலை யரும்பிய சுணங்கி
னுசுப்பழித் தொலிவருந் தாழிருங் கூந்தன்
மாக விசும்பிற் றிலகமொடு பதித்த
25 திங்க ளன்னநின் றிருமுகத்
தொண்சூட் டவிர்குழை மலைந்த நோக்கே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

—நக்கீரர்.

பி-ம்: 6. நெடுமெதிற் கூடல். 10. ளோராயு.

## 254. முல்லை

நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முது செவிலியர் பலபா ராட்டப்
பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி

மணன்மலி முற்றத்து நிலம்வடுக் கொளாஅ
5 மனையுறை புறவின் செங்காற் சேவ
றுணையொடு குறும்பறை பயிற்றி மேற்செல
வினையா டாயத் திளையோர்க் காண்டொறு
நம்வயி னினையு நன்னுத லரிவை
புலம்பொடு வதியுங் கலங்கஞ ரகல
10 வேந்துறு தொழிலொடு வேறுபுலத் தல்கி
வந்துவினை முடித்தன மாயி னீயும்
பணைநிலை முனைஇய வினைநவில் புரவி
யிழையணி நெடுந்தே ராழி யுறுப்ப
நுண்கொடி மின்னிற் பைம்பயிர் துமியத்
15 தளவ முல்லையொடு தலைஇத் தண்ணென
வெறிகமழ் கொண்ட வீததை புறவி
னெடியிடை பின்படக் கடவுமதி யென்றியான்
சொல்லிய வளவை நீடாது வல்லெனத்
தார்மணி மாவறி வுறாஅ
20 வூர்நணித் தந்தனை யுவகையாம் பெறவே.

என்பது: வினைமுற்றிவந்தெய்திய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—† மதுரை அறுவைவாணிக னிளவேட்டனார்.

பி-ம்: 2. பலர்பா ராட்ட. 11. மாயி னினிய. 15. முல்லையொடு தோன்றி தோன்ற. 18. சொல்லிய வளவையி னீடாது. † கபிலர்.

## 255. பாலை

* உலகுகிளர்ந் தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடைப் போழ
விரவு மெல்லையு மசைவின் றாகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்

* கலத்திற்பிரிவு தலைமகளைஒழியப் பிரிந்தமைக்கு உதாரண மாக இப்பாட்டினைக் கொண்டார் இளம்பூரணவடிகள். இது தோழி தூது விடுவது காரணமாக உரைத்தது; இம்மணிமிடைபவளத்துப்

5 கோடியர் திணிமணை லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வாள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல
கழியா மையே யழிபட ரகல
வருவர் மன்னாற் றோழி தண்பணைப்
10 பொருபுனல் வைப்பி னம்மூ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றை
பெருவன மலர வல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க
15 வறனின் றலைக்கு மாறு வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசித்
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாய
நிரைவளை யூருந் தோளென
வுரையொடு செல்லு மன்பினர்ப் பெறினே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகள் ஆற்றுமைமீதூரத் தோழிக்குச் சொல்லியது.

—மதுரை மருதனிளநாகனார்.

இப்பாட்டு தொழிலாற் பாலை.

பி-ம்: 7. வினைப்புரிந்த. 8. கழியா மையி னழிபட. 12. பெருவள. 14. கூழை. 16. கங்குல் வீச.

## 256. மருதம்

பிணங்கரில் வள்ளை நீடிலைப் பொதும்பின்
மடிதுயின் முனைஇய வள்ளுகிர் யாமை
நொடிவிடு கல்லிற் போகி யகன்றுறைப்

பின்பனி வந்தவாறும், நண்பகல் கூறுமையும், அவர் குறித்த காலம் இஃதென்பது தோன்றியவாறுங் காண்க என்றும், "உலகுகிளர்ந் தன்ன" என்னும் அகப்பாட்டுள் வணிகன் தலைவனாகவும் கொள்ளக் கிடத்தலின், தலைவியும் அவ்வருணத் தலைவியாமென்றுணர்க என்றுங் கூறுவர் நச். (தொல். பொருள். 36, 11, 24.)

பகுவாய் நிறைய நுங்கிற் கள்ளி
5 னுகுவா ரருந்து மகிழ்பியங்கு நடையொடு
தீம்பெரும் பழன முழக்கி யயல
தாம்பன் மெல்லடை யொடுங்கு மூர
பொய்யா லறிவெனின் மாய மதுவே
கையகப் பட்டமை யறியாய் நெருநை
10 மையெழி லுண்கண் மடந்தையொடு வையை
யேர்தரு புதுப்புன லுரிதினி னுகர்ந்து
பரத்தை யாயங் கரப்பவு மொல்லாது
கவ்வையா கின்றாற் பெரிதே காண்டகத்
தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக்
15 கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்
திருநுதற் குறுமக ளணிநலம் வவ்விய
வறனி லாள னறியே னென்று
திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
20 நீறுதலைப் பெய்த ஞான்றை
வீறுசா லவையத் தார்ப்பினும் பெரிதே.

என்பது: தோழி தலைமகற்கு வாயின்மறுத்தது.

—மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன்மள்ளனார்.

இப்பாட்டின் ...............யவனென்றவாறு.

பி-ம்: 5. னுகர்வா ருந்து. 8. பொய்யா னறிவ. 15. கரும்பயல்.

## 257. பாலை

* வேனிற் பாதிரிக் கூனி மாமலர்
நறைவாய் வாட னாறு நாட்கர
மரியார் சிலம்பிற் சீறடி சிவப்ப
வெம்மொடொ ராறு படஇயர் யாழநின்

* இது கொண்டுதலைக்கழிதற்கண் தலைவன் நடையை வியந்தது என்பர் நச். (தொல். பொருள். 15.)

5 பொம்ம லோதி பொதுள வாரி
யரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்துச்
சுரும்புசூ ழலரி தைஇ வேய்ந்தநின்
றேம்மாய் கூந்தற் குறும்பல மொசிக்கும்
வண்டுகடிந் தோம்ப றேற்று யணிகொள
10 நுண்கோ லெல்வளை தெளிர்க்கு முன்கை
மெல்லிறைப் பணைத்தோள் விளங்க வீசி
வல்லுவை மன்னு னடையே கள்வர்
பகைமிகு கவலைச் சென்னெறி காண்மார்
மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து
15 நாரரை மருங்கி னீர்வரப் பொழித்துக்
களிறுசுவைத் திட்ட கோதுடைத் ததரல்
கல்லா வுமணர்க்குத் தீமூட் டாகுந்
துன்புறு தகுந வாங்கட் புன்கோட்
டரிலிவர் புற்றத் தல்கிரை நசைஇ
20 வெள்ளரா மிளிர வாங்கும்
பிள்ளை யெண்கின் மலைவயி னானே.

என்பது: உடன்போகாநின்ற தலைமகட்குத் தலைமகன்சொல்லியது.

—உறையூர் மருத்துவன்றாமோதரனார்.

பி-ம்: 8. குறும்பலோதிக்கும்.

## 258. குறிஞ்சி

* நன்னன் னுதிய னருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளி ரோம்பினர் வைத்த
பொன்னினு மருமைநற் கறிந்து மன்னோட்
டின்னல மாதோ வெனினுமஃ தொல்லாய்
5 தண்மழை தவழுந் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற் றெடுக்கு நெடும்பெருங் குன்றத்து

* இப்பாட்டு நெஞ்சினை இரவுவிலக்கியது என்பர் நச் (தொல். பொருள். 102.)

மாய விருளளி மாய்கற் போல
யாய்கதில் வாழிய நெஞ்சே நாளும்
மெல்லியற் குறுமக ணல்லக நசைஇ
10 யரவிரை தேரு மஞ்சுவரு சிறுநெறி
யிரவி னெய்தியும் பெறாஅ யருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்
துள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமங் கைம்மிக வுறுதர
15 வானா வரும்படர் தலைத்தந் தோயே.

என்பது: † அல்லகுறிப்பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன் தன்னெஞ்
சிற்குச் சொல்லியது.

—பரணர்.

பி-ம்: 8. வாழியென் னெஞ்சே. † அல்லகுறிப்பட்டு தலைமகன்.

## 259. பாலை

* வேலும் விளங்கின வினையரு மியன்றனர்
தாருந் தையின தழையுந் தொடுத்தன
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇ யுலவையிலை நீத்துக்
5 குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
றேம்படப் பொதுளின பொழிலே கானமு
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்
10 போதுவந் தன்று தூதே நீயுங்
கலங்கா மனத்தை யாகி யென்சொ
னயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி
தெற்றி யுலறினும் வயலை வாடினு

* இவ்வகப்பாட்டுப் போக்குதற்கண் முயங்கிக் கூறியது
என்பர் நச். (தொல். பொருள். 39.)

நொச்சி மென்சினை வணர்குரல் சாயினு
15 நின்னினு மடவ ளணிநின் னயந்த
வன்னை யல்ல றூங்கி நின்னையர்
புலிமருள் செம்ம லோக்கி
வலியா யின்னுந் தோய்கநின் முலையே.

என்பது: * உடன்போக்குநேர்ந்ததோழி தலைமகட்குச்சொல்லியது.

— † கயமனார்.

பி - ம்: 12. நயந்தனை கேண்மோ. * தலைமகட்கு உடன்போக்குச் சொல்லியது. † கையனார்.

## 260. நெய்தல்

* மண்டில மழுக மலைநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்பத்
திரைபா டவியத் திமிலொழுகின் மறப்பக்
5 கரையா டலவ னளைவயிற் செறியச்
செக்கர் தோன்றத் துணைபுண ரன்றி
லெக்கர்ப் பெண்ணை யகமடல் சேரக்
கழிமலர் கமழ்முகங் கரப்பப் பொழின்மனைப்
புன்னை நறுவீ பொன்னிறங் கொளாஅ
10 வெல்லை பைப்பயக் கழிப்பி யெல்லுற
யாங்காகு வல்கொல் யானே நீங்காது
முதுமரத் துறையு முரவுவாய் முதுபுட்
கதுமெனக் குழூஉறுங் கழுதுவழங் கரைநா

---

* "எழுத்து முதலா வீண்டிய அடியிற், குறித்த பொருளை முடிய நாட்டின், யாப்பென மொழிப" என்ற சூத்திரத்துள் இருசீரானும் முச்சீரானும் நாற்சீரானும் குறித்தபொருளை முடிய நாட்டியதற்கு "மண்டில .....மொலிப்ப"என்ற மூன்றடியினையும் உதாரணமாகக்காட்டுவர் பேரா. (தொல். பொருள். 390.) "திரைபாடவிய" (4) என்னுமிடத்து 'அவிதல்' குறைதலை உணர்த்திற்று. (சிந். 289.)

ணெஞ்சுநெகிழ் பருவரல் செய்த
15 வன்பி லாள னறிவுநயந் தேனே.

என்பது: இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியது.

—மோசிக்கரையனார்.

பி-ம்: 2. மலர்பரந் தூத மிசைய. 4-5. மறப்பத் துனை. 11. யர்ங்காகு வன்கொல் யானே, யாங்கா குவள்கொறானே.

### 261. பாலை

* கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேனி லதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்த லழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅ மடைச்சி வான்கோ
5 லிலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்
சின்மெல் லொதுக்கமொடு மென்மெல வியலிநின்
னணிமாண் சிறுபுறங் காண்கஞ் சிறுநனி
யேகென வேக னாணி யொய்யென
மாகொ ணோக்கமொடு மடங்கொளச் சாஅய்
10 நின்றுதலை யிறைஞ்சி யோளே யதுகண்
டியாமுந் துறுதல் செல்லே மாயிடை
யருஞ்சுரத் தல்கி யேமே யிரும்புலி
களிறட்டுக் குழுமு மோசையுங் களிபட்டு
வில்லோர் குறும்பிற் றதும்பும்
15 வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே.

என்பது: புணர்ந்துடன் போயினகாலை இடைச்சுரத்துப்பட்டதனை மீண்டுவந்தகாலத்துத் தோழிக்குத் தலைமகன்சொல்லியது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி-ம்: 7. சிறுபுறங் காண்குதுஞ்.

---

* இது மீண்டுவந்தோன் தோழிக்குரைத்தது என்பர் நச், (தொல். பொருள். 45.)

## 262. குறிஞ்சி

முதைபடு பசுங்காட் டரிப்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட வுழவுறு செஞ்செ
யிடுமுறை நிரம்பி யாகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறா புக்கென
5 வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்து முண்ணாள் வாலிது முடாஅள்
சினத்திற் கொண்ட படிவ மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
10 செருவிய னன்மான் றிதியற் குரைத்தவ
ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
வன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்
தானா வுவகையே மாயினெம் பூமலிந்
தருவி யார்க்கு மயந்திகழ் சிலம்பி
15 னுண்பஃ றுவலை புதன்மிசை நனைக்கும்
வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
கொண்டகன் மாமலை நாறி
யந்தீங் கிளவி வந்த மாறே.

என்பது: இரவுக்குறிக்கட் டலைமகளைப்புணர்ந்துநீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—பரணர்.

பி-ம்: 3. யாடுவினை. 4. பயறுழ்புக். 18. வந்தவாறே.

## 263. பாலை

தயங்குதிரைப் பெருங்கட லுலகுதொழத் தோன்றி
வயங்குகதிர் விரிந்த வுருகெழு மண்டிலங்
கயங்கண் வறப்பப் பாஅய் நன்னிலம்
பயங்கெடத் திருகிய பைதறு காலை
5 வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்

டாறுசெல் வம்பலர் வருதிறங் காண்மார்
வில்வ லாடவர் மேலா ளொற்றி
நீடுநிலை யாஅத்துக் கோடுகொ ளருஞ்சுரங்
கொண்டனன் கழிந்த வன்கட் காளைக்
50 கவவுநனி வறிந்தனெ னாயி னன்றே
வொளிறுவேற் கோதை யோம்பிக் காக்கும்
வஞ்சி யன்னவென் வளநகர் விளங்க
வினிதினிற் புணர்க்குவென் மன்னே துனியின்று
திருநுதற் பொலிந்தவென் பேதை
15 வருமுலை முற்றத் தேமுறு துயிலே.

என்பது: மகட்போக்கிய தாய் சொல்லியது.

—கருவூர்க் கண்ணம்பாளனார்.

பி - ம்: 8. மாஅத். 15. முற்றத் தெளிதுறு துயிலே.

## 264. முல்லை

மழையில் வான மீனணிந் தன்ன
குழையமன் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோற் கோவல
5 ரெல்லுப்பெய லுழந்த பல்லா னிரையொடு
நீர்திகழ் கண்ணிய ரூர்வயிற் பெயர்தர
நனிசேட் பட்ட மாரி தளிசிறந்
தேர்தரு கடுநீர் தெருவுதொ றொழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
10 கூதிர்நின் றன்றாற் பொழுதே காதலர்

* இது தோழிக்குத் தலைவிகூறியது என்றும், இம்மணிமிடை பவளத்துள் முல்லையுட் கூதிர்வந்தது என்றும், இது தலைவன் பாசறைப்புலம்பினமை ; கூறக்கேட்ட தலைவி "நந்நிலையறியா ராயினும்" எனக் கூறினாள் என்றுங் கூறுவர் நச், (தொல், பொருள். 12. 44.)

நந்நிலை யறியா ராயினுந் தந்நிலை
யறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக்
காப்பின யானை கங்குற் சூழ
வஞ்சுவர விறுத்த தானை
15 வெஞ்சின வேந்தன் பாசறை யோரே.

என்பது: பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

—* உம்பற்காட் விளங்கண்ணனார்.

பி-ம்: 3. விரிவெண்கோடல். 6. கண்ணியர் காவயிற். * உம்பர்க் காட்டி.

### 265. பாலை.

புகையிற் பொங்கி வியல்விசும் புகந்து
பனியூ ரழற்கொடி கடுப்பத் தோன்று
மிமயச் செவ்வரை மானுங் கொல்லோ
பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
5 சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ
வெவன்கொல் வாழி தோழி வயங்கொளி
நிழற்பா லறலி னெறித்த கூந்தற்
குழற்குரற் பாவை யிரங்க நத்துறந்
10 தொண்டொடி நெகிழச் சாஅய்ச் செல்லலொடு
கண்பனி கலுழ்ந்தியா மொழியப் பொறையடைந்
தின்சிலை யெழாலேறு கெண்டிப் புரைய
நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்தெடுத்
தணங்கரு மரபிற் பேஎய் போல
15 விளரூன் றின்ற வேட்கை நீங்கத்
துகளற விளைந்த தோப்பி பருகிக்
குலாஅ வல்விற் கொடுநோக் காடவர்
புலாஅற் கையர் பூசா வாயர்

றோராஅ வுருட்டுங் குடுமிக் குராலொடு
20 மராஅஞ் சீறூர் மருங்கிற் றூங்குஞ்
செந்நுதல் யானை வேங்கடந் தழீஇ
வெம்முனை யருஞ்சுர மிறந்தோர்
நம்மினும் வலிதாத் தூக்கிய பொருளே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.

—மாமூலனார்.

பி - ம்: 1. விசும்புகுந்து 5. பாடலிற்குழீஇ. 12. கொண்டிப்பனைய 16. துகளறவிரைந்த. 13. புலராக்கையர். 20. பராஅஞ்சீறூர்.

## 266. மருதம்

* கோடுற நிவந்த நீடிரும் பரப்பி
னந்திப் பாஅயப் புதுப்புன னெருநை
டைந்துயலி களிற்றிற் றலைப்புணை தழீஇ
நரந்த நாறுங் குவையிருங் கூந்த
5 லிளந்துணை மகளிரொ டோரணிக் கலைஇ
நீர்பெயர்ந் தாடிய வேற்றெழின் மழைக்க
ணோக்குதொறு நோக்குதொறுந் தவிர்விலை யாகிக்
காமங் கைம்மிகச் சிறத்தலி னாணிழந்
தாடினை யென்ப மகிழ்ந வதுவே
10 யாழிசை மறுகி னீடூர் கிழவோன்
வாய்வா ளெவ்வி யேவன் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்த
லரிமண வாயி லுறத்தூ ராங்கட்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி ழன்ன

* "சூள்நயத் திறத்தாற் சோர்வுகண் டழியினும்" என்னும் பகுதிக்கு இப்பாட்டினை உதாரணமாகக் கொண்டு, இதனைத் தோழி கூற்றாகக் காட்டுவாருமுளர் என்பர் நச். (தொல். பொருள். 150.)

15 கவ்வை யாகின்றாற் பெரிதே யினியஃ
தவல மன்றும னமக்கே யயல
கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
யணங்குடை வரைப்பகம் பொலியவந் திறுக்குந்
20 திருமணி விளக்கி னலைவாய்ச்
செருமிகு சேஎயொ டுற்ற சூளே.

என்பது: பரத்தையிற் பிரிந்துவந்து கூடிய தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

—பரணர்.

பி - ம்: 3. மைந்துமலை களிற். 12. பெரும்பூட் பொருந்தில. 16. வயலர். 19. திருக்குந்.

267. பாலை

நெஞ்சு நெகிழ்தகுந கூறி யன்புகலந்
தறாஅ வஞ்சினஞ் செய்தோர் வினைபுரிந்து
திறம்வே றாக லெற்றென் றொற்றி
யினைத லான்றிசி னீயே சினைபாய்ந்
5 துதிர்த்த கோட்டை யுட்குவரு கடத்திடை
*வெருக்கடி யன்ன குவிமுகி ழிருப்பை
மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கா லெண்கி னீரினங் கவர
*மைபட் டன்ன மாமுக முசுவினம்
10 பைதறு நெடுங்கழை பாய்தலி னொய்யென
வெதிர்படு வெண்ணெல் வெவ்வறைத் தாஅ
யுகிர்நெரி யோசையிற் பொங்குவன பொரியு
மோங்கல் வெற்பிற் சுரம்பல விறந்தோர்
தாம்பழி யுடைய ரல்லர் நாளு
15 நயந்தோர்ப் பிணித்த றேற்றா வயங்குவினை
வாளே ரெல்வளை நெகிழ்த்த
தோளே தோழி தவறுடை யவ்வே.

என்பது: பிரிவிடைவேறுபட்ட தலைமகளது ஆற்றாமைகண்டு ஆற்றா ளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி-ம்: 1. நெஞ்சுநெகிழ்க்குந. 4. புளைதலான்றிசி; 7. கொள்ளை வறட்பூ. 9. மூசக்கலை. 12. புதிர்வன வோசை. புதிர்நெறி. 16. நெகிழ்ந்த.

## 268. குறிஞ்சி

† அறியாய் வாழி தோழி பொறிவரிப்
பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த
குருதிச் செங்களம் புலவுற வேங்கை
யுருகெழு நாற்றங் குளவியொடு விலங்கு
5 மாமலை நாடனொடு மறுவின் றாகிய
காமங் கலந்த காத லுண்டெனி
னன்றுமன் னதுநீ நாடாய் கூறுதி
நாணு நட்பு மில்லோர்த் தேரின்
யானல தில்லையிவ் வுலகத் தானே
10 யின்னுயி ரன்ன நின்னொடுஞ் சூழாது
முளையணி மூங்கிலிற் கிளையொடு பொலிந்த
பெரும்பெய ரெந்தை யருங்கடி நீவிச்
செய்துபின் னிரங்கா வினையொடு
மெய்யல பெரும்பழி யெய்தி னேனே.

என்பது: குறைவேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

—வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்.

பி-ம்: 2. பகைநுதல்யானை. 3. பொலிவுற. 7. னதுநீ. 14. எ.

† இப்பாட்டினுள் அறியாய் என்றது "காமங்கலந்த காதலுண் டெனின், நன்றுமன் அது நீநாடாய் கூறுதி" என்றதனோடு இயை யுங்கால், அவனொடு கூட்டமுண்டெனின் அதுமிகநன்று, அதனை நீ ஆராயாமல் கூறுகின்றாய்; அதனை நின்மனத்தான் ஆராய்ந்து பாராய் என வேண்டிக்கோடற்பொருள்தந்து முன்னிலையேவலுடம்பாடாய் நின்றது. (தொல். சொல். 450.)

## 269. பாலை

தொடிதோ ளிவர்க வெவ்வமுந் தீர்க
நெறியிருங் கதுப்பிற் கோதையும் புனைக
வேறுடை யினநிரை பெயரப் பெயராது
செறிசுரை வெள்வேல் மழவர்த் தாங்கிய
5 தறுக ணாளர் நல்லிசை நிறுமார்
பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கி
னட்ட போலு நடாஅ நெடுங்க
லகலிடங் குயின்ற பல்பெயர் மண்ணி
நறுவரை மஞ்ச ளீர்ம்புறம் பொலிய
10 வம்புகொண் டிறுத்த வரிநா ருரிவையிற்
செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி
வரிவண் டார்ப்பச் சூட்டிக் கழற்கா
லிளையர்பதிப் பெயரு மருஞ்சுர மிறந்தோர்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாட்
15 பொலங்காசு நிரைத்த கோடேந் தல்கு
லலங்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்
பாரேர் பெழுதரும் பகுவாய் மண்டிலத்து
வயிரிடைப் பட்ட தெள்விளி யியம்ப
வண்டற் பாவை யுண்டுறைத் தரீஇத்
20 திருநுதன் மகளிர் குரவை யயரும்
பெருநீர்க் கான றழீஇய விருக்கை
வாணன் சிறுகுடி வணங்குகதிர் நெல்லின்
யாணர்த் தண்பணைப் போதுவா யவிழ்ந்த
வொண்செங் கழுநீ ரன்னநின்
25 கண்பனி துடைமார் வந்தனர் விரைந்தே.

என்பது: பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தி யது.

—மதுரை மருதனிளநாகனார்.

இப்பாட்டு எதிர்காலம் நோக்கிற்று.

பி - ம்: 9. மஞ்சணீர்ப்பு. 21. பெருநிழற் கான றழீஇய.

## 270. நெய்தல்

இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்
தினமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையு
மெல்லம் புலம்ப நெகிழ்ந்த தோளே
5 சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை
பராஅரைப் புன்னை வாங்குசினைத் தோயுங்
கானலம் பெருந்துறை நோக்கி யிவளே
கொய்சுவற் புரவிக் கைவண் கோமா
னற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன
10 வம்மா மேனி தொன்னலந் தொலையத்
துஞ்சாக் கண்ண ளலமரு நோயே
கடவுண் மரத்த முண்மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை
யின்னா துயங்குங் கங்குலு
15 நும்மூ ருள்ளுதிர் நோகோ யானே.

என்பது: பகற்குறிக்கண் வந்துநீங்குந் தலைமகனைத் தோழி வரைவு கடாயது.

—சாகலாசனார்

இப்பாட்டிற் பேடையென்பது அன்றில்.

பி-ம்: 1-2. நீலங் கயற்புலான் மறுகிற்; நீல முண்புலான்மறுகிற்; புகஅர் மறுகிற். 5. சேயிறா முகந்த. 6. சினைத்தொடுக்க. 10 தொன்னலஞ்சிதைய. 14. துயவுங். 15. நும்மூ ருள்ளுவை.

## 271. பாலை

பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்
சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி
யரிமண லியவிற் பரற்றேர்ந் துண்டு

வரிமரல் வாடிய வானீங்கு நனந்தலைக்
5 குறும்பொறை மருங்கிற் கோட்சுர நீந்தி
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்
பல்கா யஞ்சினை யகவு மத்தஞ்
சென்றுநீ ரவணி ராகி நின்றுதரு
10 நிலையரும் பொருட்பிணி நினைந்தனி ரெனினே
வல்வ தாகநுஞ் செய்வினை யிவட்கே
களிமலி கள்ளி னற்றே ரவிய
ஞுடிய விளமழை சூடித் தோன்றும்
பழந்தூங்கு விடரகத் தெழுந்த காம்பின்
15 கண்ணிடை புரையு நெடுமென் பணைத்தோட்
டிருந்துகோ லாய்தொடி ஞெகிழின்
மருந்து முண்டோ பிரிந்துறை நாட்டே.

என்பது: *செலவுணர்த்தியதோழி தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது.

—காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்.

பி-ம்: 9. நீர்வணிகரா. 11. வாய்வதாக. 12. அவையன். *பிரிவுணர்த்திய.

## 272. குறிஞ்சி

※ இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்கு
லருவி தந்த வணங்குடை நெடுங்கோட்
டஞ்சுவரு விடர்முகை யாரிருளகற்றிய
5 மின்னொளி ரவிரொளிக் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து பணியலை முனியா

* இம் மணிமிடைபவளத்துத் தலைவனைச் செவிலிகண்டு முருகெனப் பராவினமை தோழி கொண்டுகூறினாள் என்பர் நச். (தொல் பொருள். 115.)

நீரிழி மருங்கி னாரிடத் தமன்ற
குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
யசையா நாற்ற மசைவளி பகரத்
10 துறுக னண்ணிய கறியிவர் படப்பைக்
குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரு
மெய்ம்மலி யுவகைய னந்நிலை கண்டு
முருகென வுணர்ந்து முகமன் கூறி
யுருவச் செந்தினை நீரொடு தூஉய்
15 நெடுவேட் பரவு மன்னை யன்னோ
வென்னா வதுகொ றானே பொன்னென
மலர்ந்த வேங்கை யலங்குசினை பொருந்திய
மணிநிற மஞ்ஞை யகவு
மணிமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே.

என்பது: இரவுக்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழிசொல்லியது.

—மதுரை அறுவைவாணிக னிளவேட்டனார்.

பி-ம்: 2. நுதலகமுழக். 6. பனியலை.

## 273. பாலை

விசும்பு விசைத்தெழுந்த கூதளங் கோதையிற்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ
யார்கலி வளவயிற் போதொடு பரப்பப்
புலம்புனிறு தீர்ந்த புதுவர லற்சிர
5 நலங்கவர் பசலை நலியவு நந்துய
ரறியார் கொல்லோ தாமே யறியினு
நம்மனத் தன்ன மென்மை யின்மையி
னம்முடை யுலக முள்ளார் கொல்லோ
யாங்கென வுணர்கோ யானே வீங்குபு
10 தலைவரம் பறியாத் தகைவரல் வாடையொடு
முலையிடைத் தோன்றிய நோய்வள ரிளமுளை

யசைவுடை நெஞ்சத் துயவுத்திர ணீடி
யூரோ ரெடுத்த வம்ப லஞ்சிலோ
யாராக் காத லவிர்தளிர் பரப்பிப்
* 15 புலவர் புகழ்ந்த நாரில் பெருமர (ணி)
நிலவரை யெல்லா நிழற்றி
யலரரும் பூழ்ப்பவும் வாரா தோரே.

என்பது: பிரிவின்கண் தலைமகள் அறிவுமயங்கிச் சொல்லியது.

—ஔவையார்.

பி-ம்: 1. விசைத்தெறிந்த. 7. தன்மையன்மையி. 10. நிலவரம் பறியா. 11. தோய்வர விளமுலை. 12.உயவுத்திற ணீடி.

274. முல்லை

இருவிசும் பதிர முழங்கி யரசுலின்
திருபெய லழிதுளி தலைஇ வானம்
பருவஞ் செய்த பானாட் கங்கு
லாடுதலைத் துருவின் றோடே மார்பகக்
5 கடைகோற் சிறுதீ யடைய மாட்டித்
திண்கா லுறியன் பானைய னதள
னுண்பலி றுவலை யொருதிற னணப்பத்
தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன்
மடிவிடு வீளை கடிதுசென் றிசைப்பத்
10 தெறிமறி பார்க்குங் குறுநரி வெரீஇ
முள்ளுடைக் குறுந்தூ றிரியப் போகுந்
தண்ணறும் புறவி னதுவே நறுமலர்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியற் குறுமக ளுறைவி னூரே.

என்பது: தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

—†இடைக்காடனார்.

பி-ம்: 1. யிரகலின்; வானவின்று. 3. பெருவளஞ். 6. னதல. 8. தண்கோலூன்றிய. 11. பெயருக். †கல்லாடனார்.

## 275. பாலை

ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்திக்
குடையடை நீரின் மடையின ளெடுத்த
பந்தர் வயலைப் பந்தெறிந் தாடி
யிளமைத் தகைமையை வளமனைக் கிழத்தி
5 பிதிர்வை நீரை வெண்ணீ றாகென
யாந்தற் கழறுங் காலைத் தான்றன்
மழலை யின்சொற் கழற லின்றி
யின்னுயிர் கலப்பக் கூறி நன்னுதல்
பெருஞ்சோற் றில்லத் தொருங்கிவ ணிராஅ
10 ளேதி லாளன் காத னம்பித்
திரளரை யிருப்பைத் தொள்ளை வான்பூக்
குருளை யெண்கி னிரினங் கவரும்
* வெம்மலை யருஞ்சுர நம்மிவ ணொழிய
விருநில னுயிர்க்கு மின்னாக் கான
15 நெருநைப் போகிய பெருமடத் தகுவி
யைதக லல்குற் றழையணிக் கூட்டுங்
கூழை நொச்சிக் கீழ தென்மகள்
செம்புடைச் சிறுவிரல் வரித்த
வண்டலுங் காண்டிரோ கண்ணுடை யீரே.

என்பது: மகட்போக்கிய *தாய் சொல்லியது.

— கயமனார்.

பி-ம்: 3. பாந்த வயலைப் பந்தெறிந் தாடி. 4. வளமனைகழிப்பி. 7. கழறலையின்றி. 12. யெண்கினிருங்கிளை. 13. வெம்முனையருஞ். *செவிலிசொல்லியது.

---

* "வெம்மலை யருஞ்சுர ..காண்டிரோ கண்ணுடையீரே" என்பது வண்டலைக் காணார்தேஎத்து நின்று காணில் ஆற்றீரெனக் கூறினமையின், ஆயத்தினை அகன்று இற்புறஞ்சென்று சேரியோர்க்குந் தாய் உரைத்ததாயிற்று என்பர் நச். (தொல். பொருள். 37.)

## 276. மருதம்

* நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
னடியறி வுறாத லஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
5 சாஅ யொதுங்குந் துறைகே ழூரனொ
டாவ தாக வினிநா ணுண்டோ
† வருகதில் லம்மவெஞ் சேரி சேர
அரிவே யுண்க ணவன்பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி யாரியர்
*.10 பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயி னார்வுற்
றிரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
15 வருந்துக தில்லயா யோம்பிய நலனே.

என்பது: தலைமகட்குப்பாங்காயினார்கேட்பப் பரத்தைசொல்லியது.

—பரணர்.

இப்பாட்டின் கருத்து, ஒளித்துப் பிறரை நாடுவான் என்றவாறு.

பி-ம்: 3. பையென. 4. கடியில் புகூஉம்; கடியிலன்பு கூஉம்.

## 277. பாலை

தண்கதிர் மண்டில மவிரறச் சாஅய்ப்
பகலழி தோற்றம் போலப் பையென

* "இவற்றுள்ளும் பிறவும் கண்ணிய காமக் கிழத்தியர் மனை" என்ற பகுதியுள் பிறவும் என்றதனால், சேரிப்பரத்தையரொடு காமக்கிழத்தி புலந்துரைப்பதும் கொள்க என்று கூறி, இப்பாட்டினுள் "பரந்து வெளிப்படா தாகி வருந்துக" என்நலன் என்றமையிற் சேரிப்பரத்தையைப் புலந்து கூறுதன் முதலியனவும் கொள்க என்பர் நச். (தொல். பொருள். 151.) † 'விழைவே கால மொழியினைக் கிளவி

நுதலொளி கரப்பவு மாள்வினை தருமார்
தவலி லுள்ளமொ டெஃகுதுணை யாகக்
5 கடையலங் குரல வாள்வரி யுழுவை
பேழ்வாய்ப் பிணவின் விழுப்பசி நோனு
திரும்பனஞ் செறும்பி னன்ன பருஉமயிர்ச்
சிறுகட் பன்றி வருதிறம் பார்க்கு
மத்தமா ரழுவத் தாங்க ணனைந்தலைப்
10 பொத்துடை மரத்த புகர்படு நீழ
ராறுசெல் வம்பல ரசைவின ரிருக்கு
'ரமில் வெஞ்சுர மிறந்தோர் நம்வயின்
வாரா வளவை யாயிழை கூர்வா
யழலகைந் தன்ன காமர் துதைமயிர்
15 மணையுறை கோழி மறனுடைச் சேவற்
போர்புரி யெருத்தம் போலக் கஞலிய
பொங்கழல் முருக்கி னொண்குரன் மாந்திச்
சிதர்சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்
வந்தன் றம்ம தானே
20 வாரார் தோழிநங் காத லோரே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் தலைமகள் தோழிக்குப் பருவங் கண்டழிந்து சொல்லியது.

—கருவூர் நன்மார்பன்.

பி - ம்: 7. செறும்பினனைய. 11. ரசையுநரிருக்கும். 17. புன்கான் முருக்கின்.

## 278. குறிஞ்சி

குணகடன் முகந்த கொள்ளை வானம்
பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்
தோணிரைத் தனைய வாகி வலனேர்பு

---

யென், றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே" என்ற சூத்திரத்து ஒழியிசைப் பொருளில் 'தில்' வந்ததற்கு இவ்வடியினை உதாரணங் காட்டி, "வந்தக்கால் இன்னது செய்வல்" என்பது பொருள் என்பர் எல்லா ஆசிரியரும். (தொல். சொல். சூ. 255.)

கோளிமிர் கொடியின் வசிபட மின்னி
5 யுருமுரா றதிர்குர றலைஇப் பாஅட்
பெருமலை மீமிசை முற்றின வாயின்
வாளிலங் கருவி தாஅய் நாளை
யிருவெதி ரங்கழை யொசியத் தீண்டி
வருவது மாதோ வண்பரி யுந்தி
10 நனிபெரும் பரப்பி னம்மூர் முன்றுறைப்
பனிபொரு மழைக்கண் சிவப்பப் பானாண்
முனிபட ரகல மூழ்குவங் கொல்லோ
மணிமருண் மேனி யாய்நலந் தொலையத்
தணிவருந் துயரஞ் செய்தோ
15 னணிகிளர் நெடுவரை யாடிய நீரே.

என்பது: இரவுக்குறிக்கட் டலைமகன்சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

—கபிலர்.

பி - ம்: 6. பெருவரை. 11. சிவப்பப் பன்னாண்.

## 279. பாலை

நட்டோ ரின்மையுங் கேளிர் துன்பமு
மொட்டா துறையுநர் பெருக்கமுங் காணூஉ
வொருபதி வாழ்தல் லாற்றுப திலல
பொன்னவிர் சுணங்கொடு செறிய வீங்கிய
5 மென்முலை முற்றங் கடவா தோரென
நன்னுதல் கங்குலும் பகலு மியைந்தியைந்
துள்ளம் பொத்திய வுரஞ்சுடு கூரெரி
யாள்வினை மாரியி னவியா நாளுங்
கடறுழந் திவணா மாகப் படருழந்
10 தியாங்கா குவள்கொ றானே தீந்தொடை
விளரி நரம்பி னயவரு சீறியாழ்
மலிபூம் பொங்கர் மகிழ்குரற் குயிலொடு
புணர்துயி லெடுப்பும் புனறெளி காலை

நம்முடை மதுகைய ளாகி யணிநடை
15 யன்னமாண் பெடையின் மென்மெல வியலிக்
கையறு நெஞ்சின ளடைதரு
மையீ ரோதி மாஅ யோளே.

என்பது: பொருள்வயிற்பிரிந்துபோகாநின்றதலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—†இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார்.

பி - ம்: 8. மாரியின்வீயா. 12. நறைமலி பொரங்கர். †இருங்கோக் கண்ணனார்.

## 280. நெய்தல்

* பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதைய
டிணிமணல் அடைகரை யலவ னாட்டி
யசையின ளிருந்த வாய்தொடிக் குறுமக [பினும்
5 ணலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்
பெறலருங் குரைய ளாயி னறந்தெரிந்து
நாமுறை தேஎ மரூஉப்பெயர்ந் தவனொ
டிருநீர்ச் சேர்ப்பி னுப்புட னுழூஉம்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
10 படித்தனம் பணித்தன மடுத்தன மிருப்பிற்
றருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரண் முத்தங் கொண்டு ஞாங்கர்த்
தேனிமி ரகன்கரைப் பகுக்குங்
கானலம் பெருந்துறைப் பரதவன் மகளே.

என்பது: தலைமகளைக் கண்ணுற்றுநீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. அல்லகுறிப்பட்டுப் போகாநின்றவன் சொல்லியதூஉமாம்.

—அம்மூவனார்.

---

* இதனுள் ஈண்டுள்ள பொருள் கொடுத்தால் பெறலரிய ளாயின் தன்னை வழிபட்டால் தந்தை தருவானோ, அது நமக்கு அரிதாகலின் இன்னும் பொருள் நாம் மிகத்தேடிவந்து வரைதுமெனப்

பி - ம்: 4—5. குறுமகளஞ்சொல்விழுப்பொருள். 6. ளாயினந்தில் 10. மடுத்தனம் விரும்பிற் 13. தேளிமிர் தண்கரை. 14. பரதவனமக்கே.

## 281. பாலை

செய்வது தெரிந்திசிற் றோழி யல்கலு
மகலு ளாண்மை யச்சுறக் கூறிய
சொற்பழு தாகு மென்று மஞ்சா
தொல்கியன் மடமயி லொழித்த பீலி
5 வான்போழ் வல்விற் சுற்றி நோன்சிலை
யவ்வார் விளிம்பிற் கமைந்த நொவ்வியற்
கணைகுர லிசைக்கும் விரைசெலற் கடுங்கணை
முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு
10 விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத்
தொண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த
வறையிறந் தவரோ சென்றனர்
பறையறைந் தன்ன வலர்நமக் கொழித்தே.

என்பது: தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்ருளாய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

—மாமூலனர்.

பி ம்: 1. செல்வது. 2. மகலுநாண்மை. 5. விற்கட்டி. 6. யவ்வரா விளிம்பிற்.

## 282. குறிஞ்சி

*பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
செறிமடை யம்பின் வல்விற் கானவன்

பொருள் வயிற்பிரியக் கருதியவாறு காண்க என்பர் நச். (தொல். பொருள். 141.)

* இதனுள் "தேள் பாராட்டி யாயு மவனே என்னும்" என்று யாய்தெய்வம் பராயினுளென்பது படக்கூறி, யாம் அத்தெய்வத்திற்குப் பலிகொடுக்குதும் என்றவாறு காண்க" என்பர் நச். (தொல். பொருள். 115.)

பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பி னன்பொன் னகழ்வோன்
5 கண்பொரு திமைக்குந் திண்மணி கிளர்ப்ப
வைந்துதி வான்மருப் பொடிய வுக்க
தெண்ணீ ராலி கடுக்கு முத்தமொடு
மூவேறு தாரமு மொருங்குடன் சாற்றிச்
சாந்தம் பெறைமர மாக நறைநார்
10 வேங்கைக் கண்ணிய னிழிதரு நாடற்
கின்றீம் பலவி னேர்கெழு செல்வத்
தெந்தையு மெதிர்ந்தனன் கொடையே யலர்வா
யம்ப லூரு மவனொடு மொழியுஞ்
சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி
15 யாயு மவனே யென்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாளென
நல்லிறை மெல்விரல் கூப்பி
யில்லுறை கடவுட் காக்குதும் பலியே.

என்பது: இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

—தோல்கபிலன்.

பி-ம்: 5. திருமணிகிளர. 8. மொருங்குடன் கொண்டு.

## 283. பாலை

நன்னெடுங் கதுப்பொடு பெருந்தோ ணீவி
நின்னிவ ணொழித லஞ்சிய வென்னினுஞ்
செலவுதலைக் கொண்ட பெருவிதுப் புறவி
பல்கவர் மருப்பின் முதுமான் போக்கிச்
5 சில்லுணாத் தந்த சீறூர்ப் பெண்டிர்
திரிவயிற் றெவுட்டுஞ் சேட்புலக் குடிஞைப்

பைதன் மென்குர லைதுவர் திசைத்தொறும்
போகுநர் புலம்பு மாறே யேகுதற்
கரிய வாகுமென் ஞமைக் கரிமரங்
10 கண்ணகை யிளங்குழை கான்முதற் கவினி
விசும்புட னிருண்டு வெம்மை நீங்கப்
பசுங்கண் வானம் பாய்தளி பொழிந்தெனப்
புன்னுகும் பெடுத்த நன்னெடுங் கானத்
தூட்டு பஞ்சிப் பிசிர்பரந் தன்ன
15 வண்ணு மூதாய் தண்ணிலம் வரிப்ப
வினிய வாகுக தணிந்தே
யின்னு நீப்பி னின்னொடு செலற்கே.

என்பது: உடன்போக்குவலித்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

—மதுரை மருதனிளநாகனார்.

பி - ம்: 1. தோணீவிய. 8. யேகு நர்க்கு. 15. பரிப்ப.

### 284. முல்லை.

சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்
முடந்தை வரகின் வீங்குபீ ளருந்துபு
குடந்தையஞ் செவிய கோட்பவ ரொடுங்கி
5 யின்றுயி லெழுந்து துணையொடு போகி
முன்றிற் சிறுநிறை நீர்கண் டுண்ணும்
புன்புலந் தழீஇய பொறைமுதற் சிறுகுடித்
தினைக்கள் ளுண்ட தெறிகோன் மறவர்
விசைத்த வில்லர் வேட்டம் போகி
10 முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டுங்
காமர் புறவி னதுவே காமம்
நம்மினுந் தான்றலை மயங்கிய
ம்மா வரிவை யுறைவி னூரே.

என்பது: வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது; தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

—இடைக்காடனார்.

பி - ம்: 8. தெறிகொண்மறவர்.

## 285. பாலை

ஒழியச் சென்மார் செல்ப வென்றுநா
மழிபட ருழக்கு மவல நெஞ்சத்
தெவ்வ மிகந்துசே ணகல வையெயிற்
றானசைப் பிணவி னுறுபசி களைஇயர்
5 காடுதேர் மடப்பிணை யலறக் கலையின்
னேடுகுறங் கறுத்த செந்நா யேற்றை
வெயில்புலந் திளைக்கும் வெம்மைய பயில்வரி
யிருட்புலி வேங்கைக் கருந்தோ லன்ன
கல்லெடுத் தெறிந்த பல்கிழி யுடுக்கை
10 யுலறுகுடை வம்பல ருயர்மர மேறி
யேறுவேட் டெழுந்த வினந்தீ ரொருத்தலை
யாடுசெவி நோக்கு மத்தம் பணைத்தோட்
குவளை யுண்க ணிவளு நம்மொடு
வருஉ மென்றனரே காதலர்
15 வாராய் தோழி முயங்குகம் பலவே.

என்பது: * உடன்போக்குடன்படுவித்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

—காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

பி - ம்: 3. தெவ்வமிகுந்து, தெவ்வமிகழ்ந்து. உடன் போக்கமைந்த.

## 286. மருதம்

*வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க

---

* "கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்" என்றபகுதிக்கு, "விழையாவுள்ளம் ..தெரியுங்காலை" என்ற அடிகளை உதாரணமா

மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழற் றமர்வளம் பாடி
5 யூர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
வராஅ லருந்திய சிறுசிரன் மருதின்
றாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர
விழையா வுள்ளம் விழையு மாயினும்
என்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
10 கறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்

கக்காட்டியும், "பெரியோ ரொழுக்கம் பெரிதெனக்கிளந்து,பெறுதகை யில்லாப்பிழைப்பின்கண்" தோழிக்குக்கூற்று நிகழும் என்பதற்கு இப் பாட்டினைக்காட்டி,இப்பாட்டினுள் அறனென்றது இல்லறத்தை; "தற் றகவுடைமை நோக்கி" என்றது, தன்னால் அவ்வறனும் பொருளும் தகுதிப்பாடுடையவாம் தன்மையை நோக்கி என்றவாறும்; "முன்னி யது" என்றது, புறத்தொழுக்கத்தை; "பெரியோர் ஒழுக்கம்அனைய" பெரியோர் ஒழுக்கம் பெரிய என்றவாறு; இது முன்னர் நிகழ்ந்த பொய்ச்சூள்பற்றி; நும்மனோர் மாட்டும் இன்ன பொய்ச்சூள் பிறக்கு மாயின் இவ்வுலகத்து மெய்ச்சூள் இனிஇன்றாம் ;அதனாற் பெரியோ ரைத்தமது ஒழுக்கத்தைத் தேருங்காலை அரியவாயிருந்தனவெனத் தலைவனை நோக்கித் தோழிகூறலின், அவனை வழிபாடுதப்பினளா யிற்றுஎன்றும் கூறினர் நச். (தொல். பொருள். 76. 150.)இனி நக்கீ ரனார் "செறிப்பறிவுறுக்கப்பட்ட தலைமகன் தெருள்வானாயின் இந் நாள் வரைவல், அத்துணையும் இவளை ஆற்றுவித்துக்கொண்டிரு; நினக்கு அடைக்கலமெனக் கைப்பற்றும். கைப்பற்றியதனைத் தோழி சூளுறவாகக் கருதினாள். உலகத்துச்சூளுறுவார் பசுவையும் பார்ப்பாரையும் பெண்டிரையும் தொட்டுச் சூளுறுவாராகலாற் சூளுறவாற்றாரென்பது நினைந்து, 'நீவரைவல் என்றதே அமை யாதோ, சூளுறல்வேண்டுமோ? பொய்த்தலும் வாய்த்தலும் உடையா ரன்றே சூளுறுவார்; மெய்யல்லது சொல்லாதார்க்குச் சூளுறவு வேண் டுமோ? நின்கண்ணும் பொய்யுண்டாகில் மெய்யென்பது இவ்வுல கத்து நிலைபெற்றவழி இல்லையாகாதே' என்னும்; அதற்குச் செய்யுள், என்று உரைத்து, இப்பாட்டினை உதாரணங் காட்டுவர். (இறை. களவு. 18.)

பின்னு கும்மே முன்னியது முடித்த
லனைய பெரியோ ரொழுக்க மதனை
லரிய பெரியோர்த் தெரியுங் காலை
15 நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே.

என்பது : வரைந்தெய்துவலென்று நீங்குந்தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டிருத்தல் வேண்டுமென்று தோழியைக் கைப்பற்றினற்குக் கைப்பற்றியது தன்னைத் தொட்டுச் சூளுறுவானாகக்கருதித் தோழி சொல்லியது.

— ஓரம்போகியார்.

இப்பாட்டின் கருத்து ஒன்று பிழைப்பினும் ஒன்று பிழையாதென் றவாறு.

பி - ம்: 5. வளர்க்கோமகளிர். 8. விழையாவுள்ளம் விழைவதாயினும். 9. தோட்டியாக வேட்டாங்.

## 287. பாலை

தொடியணி முன்கைத் தொகுவிரற் குவித்துப்
படிவ நெஞ்சமொடு பகறுணை யாக
நோங்கொ லளிய டானே தூங்குகுலை
மரையேறு சொறிந்த மாத்தாட் கந்தின்
5 சுரைபிவர் பொதியி லங்குடிச் சீறூர்
நாட்பலி மறந்த நரைக்க ணிட்டிகைப்
புரிசை மூழ்கிய பொரியரை யாலத்
தொருதனி நெடுவீ ழுதைத்த கோடை
துணைப்புறு விரிக்குந் தூய்மழை நனந்தலைக்
10 கணைக்கா லம்பிணை யேறுபுற நக்க
வொல்குநிலை யாஅத் தோங்குசினை பயந்த
வல்குறு வரிநிழ லசையின நோக்க
வரம்புவந் தலைக்கு மாலை
நிரம்பா நீளிடை வருந்துதும் யாமே.

என்பது : பிரிந்துபோகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துநின்று தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

—குடவாயிற் கீரத்தனார்.

இப்பாட்டினுள் * நரைக்கணிட்டிகை என்பது பலிபீடம்.

பி - ம். 9. துணைப்புறவிருக்கும் * அரைக்கணிட்டிகை.

## 288. குறிஞ்சி

சென்மதி சிறக்கநின் னுள்ள நின்மலை
யார நீவிய வம்பகட்டு மார்பினை
சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ
முருகுமுரண் கொள்ளு முருவக் கண்ணியை
5 யெரிதின் கொல்லை யிறைஞ்சிய வேன
லெவ்வங் கூறிய வைகலும் வருவோய்
கனிமுதி ரடுக்கத்தெந் தனிமை காண்டலி
னெண்மை செய்தனை யாகுவை நண்ணிக்
கொடியோர் குறுகு நெடியிருங் குன்றத்
10 திட்டா திரங்கும் விட்டொளி ரருவி
யருவரை யிழிதரும் வெருவரு படாஅர்க்
கயந்தலை மந்தி யுயங்குபசி களைஇயர்
* பார்ப்பின் றந்தை பழச்சுளை தொடினு
நனிநோ யேய்க்கும் பனிகூ ரடுக்கத்து
15 மகவுநிர் மாங்காட் டற்றே துகளறக்
கொந்தோ டுதிர்த்த கதுப்பி
னந்நீங் கிளவித் தந்தை காப்பே.

என்பது: பகற்குறிக்கட்டோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

—†விற்றூற்று மூதெயினனார்.

பி - ம்: 13. பழச்சினை. 14. நனிநோயெய்க் 15. மகளிரரங்காட். 16. கொங்கோடுதிர்த்தகதுப்பின். † முத்தூற்றமூதெயினனார்.

* "மாவும்...பார்ப்பும் - அப்பாலான" என்ற விதிப்படி மந்தியார்ப்பு 'எனப்பட்டது. (தொல். பொருள். 569.)

## 289. பாலை

சிலையே றட்ட கணைவீழ் வம்பல
ருயர்பதுக் கிவர்ந்த ததர்கொடி யதிரல்
நெடுநிலை நடுக ணாட்பலிக் கூட்டுஞ்
சுரனிடை விலங்கிய மரனோங் கியவின்
5 வந்துவினை வலித்த நம்வயி னென்றாந்
தெருமர லுள்ளமொடு வருந்த லானாது
நெகிழா மென்பிணி வீங்கிய கைசிறி
தவிழினு முயவு மாய்மடத் தகுவி
சேணுறை புலம்பி னாண்முறை யிழைத்த
10 திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி
நெகிழ்நூன் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப
மையற விரிந்த படையமை சேக்கை
யைமென் றூவி யணைசேர் பசைஇ
மையல் கொண்ட மதனழி யிருக்கையள்
15 பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறென நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொ றானே.

என்பது: பிரிந்துபோகாநின்றதலைமகன் தன் நெஞ்சிற்குச்சொல்லியது.

—எயினந்தைமக னிளங்கீரனார்.

பி - ம்: 3. நிரைநிலை நடுகல்.

## 290. நெய்தல்

குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை
யிருஞ்சேற் றள்ள லாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅர்
நுண்ஞா ணவ்வலைச் சேவல் பட்டென
5 வல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது
பைதற் பிள்ளை தழீஇ யொய்யென

வங்கட் பெண்ணை யன்புற நாளுஞ்
சிறுபல் றொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்
கழிசேர் புன்னை யழிபூங் கானற்
10 றணவா நெஞ்சமொடு தமியன் வந்துநம்
மணவா முன்னு மெவனோ தோழி
வெண்கோட் டியானை விறற்போர்க் குட்டுவன்
றெண்டிரைப் பரப்பிற் றொண்டி முன்றுறைச்
சுரும்புண மலர்ந்த பெருந்த ணெய்தன்
15 மணியேர் மாணல மொரீஇப்
பொன்னேர் வண்ணங் கொண்டவென் கண்ணே.

என்பது: இரவுக்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச்சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

—நக்கீரர்.

பி - ம்: 15. மலரேர்மாணல.

291. பாலை

வானம் பெயல்வளங் கரப்பக் கான
முலறி யிலையில வாகப் பலவுட
னேறுடை யாயத் தினம்பசி தெறப்பக்
கயனற் வறந்த கோடையொடு நயனறப்
5 பெருவரை நிவந்த மருங்கிற் கொடுவரிப்
புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோ
டிரவுக்களி றொதுங்கிய மருங்கிற் பருஉப்பரல்
சிறுபன் மின்மினி கடுப்ப வெவ்வாயு
நிறைவன விமைக்கு நிரம்பா நீளிடை
10 யெருவை யிருஞ்சிறை யிரீஇய விரியிணர்
தாதுண் டும்பி முரலிசை கடுப்பப்
பரியினை துயிர்க்கு மம்பினர் வெருவா
வுவலை சூடிய தலையர் கவலை
யார்த்தூட னரும்பொருள் வவ்வலின் யாவதுஞ்
15 சாத்திடை வழங்காச் சேட்சிமை யதா

சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்கா
யுதிர்வன தாஅ மத்தந் தவிர்வின்று
புள்ளி யம்பிணை யுணீஇய வுள்ளி
யறுமருப் பொழித்த தலைய தோல்பொதி
20 மறுமருப் பிளங்கோ டதிரக் கூஉஞ்
சுடர்தெற வருந்திய வருஞ்சுர மிறந்தாங்
குள்ளினை வாழிய நெஞ்சே போதெனப்
புலங்கமழ் நாற்றத் திரும்பல் கூந்த
னல்லெழின் மழைக்கணங் காதலி
25 மெல்லிறைப் பணைத்தோள் விளங்குமாண் கவினே.

என்பது: பொருள்வயிற்போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பி - ம்: 4. நயன்றகப். 6. இனந்தணிந். 7. களிறுநெருங்கு. 10. வரி யிணர். 15. சாத்திடை விலங்கா. 16. செறியிலை. 19. மருப் பொழிந்த. 20. மறுமருப்பினங்.

## 292. குறிஞ்சி

கூறாய் செய்வது தோழி வேறுணர்ந்
தன்னையும் பொருளுகுத் தலமரு மென்முறிச்
சிறுகுள கருந்து தாய்முலை பெறாஅ
மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி
5 யேதில் வேலன் கோதை துயல்வரத்
தூங்கு மாயி னதூஉ நாணுவ
லிலங்குவளை நெகிழ்ந்த செல்லல் புலம்படர்ந்
திரவின் மேயன் மருஉம் யானைக்
கால்வ லியக்க மொற்றி நடுநாள்
10 வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்
கடுவிசைக் கவணி னெறிந்த சிறுகு
லுடுவுறு கணையிற் போகிச் சாரல்

வேங்கை விரியிணர் சிதறித்தேன் சிதையூஉப்
பலவின் பழத்துட் டங்கு
15 மலைகெழு நாடன் மணவாக் காலே.

என்பது: வெறியச்சுறீஇத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

—கபிலர்.

இதன்கருத்து இன்பத்தலைமகன் என்றவாறு.

பி - ம்: 8. மேயமரூஉ; மேயல மரூஉ மோங்கல். 9. காவல ரியக்க மொற்றி; காவலியக்க. 10. வன்கட்கானவன். 14. பல விளம்பழத்துட்.

## 293. பாலை

இலையொழித் துலறியற் புன்றலை யுலவை
வலைவலந் தனைய வாகப் பலவுடன்
சிலம்பி சூழ்ந்த புலங்கெடு வைப்பிற்
றுகிலாய் செய்கைப் பாவிரிந் தன்ன
5 வெயிலவிர்பு நுடங்கும் வேல்வெங் களரிக்
குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி
மணிக்கா சன்ன மாநிற விருங்கனி
யுகாஅ மென்சினை யுதிர்வன கழியும்
வேனில் வெஞ்சுரம் தமியர் தாமே
10 செல்ப வென்ப தோழி யாமே
பண்பில் கோவலர் தாய்பிரித் தியாத்த
நெஞ்சமர் குழவி போல நொந்துநொந்
தின்னு மொழிது மென்ப
வென்மயங் கினர்கொனங் காத லோரே.

என்பது: பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன்குறிப்பறிந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தலைமகனுற் பிரிவுணர்த் தப்பட்ட தோழி தலைமகட்குச் சொல்லியதூவுமாம்.

—காவன்முல்லைப் பூதனார்.

பி - ம்: 1. இலையொழிந் துலறிய புன்றலை. 4. துகிலாளெய்கை. 5. வெவ்வெங்களரிக். 10. செல்ப 'வென்னுநர். 14. வென் மயங்கினர்நங்.

## 294. முல்லை

மங்குன் மாமழை விண்ணதிர்பு முழங்கித்
துள்ளுப்பெயல் கழிந்த பின்றைப் புகையுறப்
புள்ளி நுண் டுவலை பூவக நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
5 நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்
துய்த்தலைப் பூவின் புதலிவ ரீங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளி
ரிருவகி ரிருளி னீரிய துயல்வர
வவரைப் பைம்பூப் பயில வகல்வயற்
10 கதிர்வார் காய்நெல் கட்கினி திறைஞ்சச்
சிதர்சினை தூங்கு மற்சிர வரைநாட்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோ யறியா வறனி லாள
ரிந்நிலை களைய வருகுவர் கொல்லென
15 வானு தெறிதரும் வாடையொடு
நோனேன் றோழியென் றனிமை யானே.

என்பது: பருவவரவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. *

—கழார்க்கீரனெயிற்றியார்.

பி-ம்: 2. பொழிந்தபின்றை. 9. வகல்வயிற். 16. றனிமையினுனே.

## 295. பாலை.

நிலநீ ரற்று நீள்சுனை வறப்பக்
குன்றுகோ டகையக் கடுங்கதிர் தெறுதலி

* இப்பாட்டினை இத்துறைக்கே கொண்டு, இம்மணியிடை பவளத்து முல்லையுள் முன்பனிவந்தது; நிலமுங்கருவு மயங்கிற்று என்பர் நச். (தொல். பொருள். 12.)

